ஸ்ரீ

# நன்னூல்

# காண்டிகையுரை


திருவல்லிக்கேணி.

வை. மு. சடகோபராமாநுஜாசாரியராலும்,

சே. கிருஷ்ணமாசாரியராலும்


நன்கு விளக்கி

பல விஷயங்களை சேர்த்தும்

அரிய உதாரணங்கட்குப் பொருளெழுதியும்

புதுப்பித்துப்

பதிப்பிக்கப்பட்டது.


[பதினான்காம் பதிப்பு.

சென்னை:

ஆர். ஜீ. அச்சுக்கூடம்

1 9 3 9.

# இப்புத்தகத்தில் அடங்கியவை.







ஸ்ரீ:

கடவுள் துணை

# முகவுரை.

அருவுரு வாகிய வமலன் தடியிணை
யொருமையோ டேத்து மொழிபெறற் பொருட்டே.

அருந்தமிழறிந்த அன்பர்களே!

செந்தமிழிலக்கணங்களுட் சிறந்து விளங்குகின்ற நன்னூலென்னும் இந்நூல், பவணந்தி என்னும் ஜைநமுனிவரால் தொல்காப்பியத்தையும், அதன் உரைகளையும் பெரும்பாலுந் தழுவிச் செய்யப்பட்டது.

இந்நூலிற்கு ஜைநவித்துவான்களுள் ஒருவர் எழுதிய பழையவுரை ஒன்று உண்டு, அது அருமையாக வழங்குகின்றது. சங்கர நமச்சிவாயப்புலவரால் செய்யப்பட்டுச் சிவஞானமுனிவரால் திருத்தப்பட்ட விருத்தியுரையும், விசாகப்பெருமாளையர் செய்த காண்டிகையுரையும், இராமாநுசகவிராயர் இயற்றிய காண்டிகைவிருத்தியுரையும் முதலிய உரைகள் பிற்காலத்திற் பெரும்பாலும் வழங்கலாயின.

அவ்வுரைகளெல்லாவற்றுள்ளும் பரீக்ஷைக்குப்படிக்கும் மாணாக்கர்க்குப் பெரிதும் பயன்படாத பல விஷயங்களை நீக்கியும், மற்றையவற்றை நன்கு விளக்கியும், இன்றியமையாத பலவிஷயங்களைப் புதிதாகச்சேர்த்தும், தெளிவாகப் பொருள் விளங்குமாறு மிகஎளிய நடையில் எமதுசிற்றறிவுக்கு இயன்றவளவு ஒரு காண்டிகையுரை எழுதி, உதாரணங்களை ஒழுங்குபடுத்தி, அவசியமான வினாக்களை இறுதியிற் கூட்டிப் பதிப்பித்து நாற்பத்துமூன்று வருஷங்களின் முன் வெளியிட்டோம். இது, அதன் பதினான்காம் பதிப்பு.

தமிழிலக்கணவகை ஐந்தனுள் இந்நூலிற் கூறப்பட்டுள்ள எழுத்தும் சொல்லும் நீங்கலான மூன்றின் இலக்கணங்களுள் முக்கியமான சிலவிஷயங்கள் மாணாக்கர் அவசியம் தெரிந்துகொள்ள வேண்டியனவா யிருத்தலினால், அவையும் அவற்றின்போக்கும் சுருக்கமாகவும் தெளிவாகவும் விளங்குமாறு பொருளிலக்கணச்சுருக்கம் யாப்பிலக்கணச்சுருக்கம், அணியிலக்கணச்சுருக்கம் என்ற மூன்றையும் (வேண்டிய இடங்களில் உதாரணங்களுடன்) சேர்த்திருக்கின்றோம். அணியிலக்கணத்தில் அவ்வவ்வணிகளுக்கு உரிய வடமொழிப்பெயர்களும் ஆங்காங்குக் குறிக்கப்பட்டுள்ளன.

அன்றியும், இந்நூலிலுள்ள பொருள்கள் தொகுதியாக விளங்குமாறு விஷயசூசிகை யொன்று முதலிற் சேர்த்ததோடு, இந்நூலிலுள்ள முக்கியமான இலக்கண வகைகளைக் கலக்கமின்றி மாணாக்கர்

உணருமாறு தனித்தனி சில படங்களாக அமைத்துத் தெளிவு செய்து விளக்கியுமிருக்கின்றோம்.

இவையல்லாமலும், காலநடையை அனுசரித்துத் தமிழிலக்கணக்குறிகளுக்குள்ள இங்கிலீஷ்பெயர்களையும் காட்டுவது நல்லமென்று சில கனவான்கள் கூறியதனால், அவர்கொள்கையை மேற்கொண்டு, அவற்றிற்கு ஒரு தொகுப்பு அமைத்துக்காட்டியுமிருக்கின்றோம். (இந்த இங்கிலீஷ்பெயர்களை அந்தந்தச் சூத்திரத்தின் தலைப்பாக அமைக்குமாறு சிலர் கருதினராயினும், அங்ஙனம் புத்தகத்தினிடையே அமைத்தல் தமிழிலக்கணத்தைத் தமிழ்வழியினாலேயே கற்கவும் கற்பிக்கவும் பிரியமுடைய பலர்க்கு வேண்டாவாதலாலும், சர்வகலாசாலைப் பரீக்ஷைகட்குப் படிப்பவர்களுக்கு மாத்திரமேயன்றித் தமிழிலக்கணங்கற்கப்புகும் அனைவர்க்கும் ஒருங்கொக்க இவ்வுரை பயன்படவேண்டுமென்பது எமது உத்தேசமாதலாலும், அவை ஆங்காங்கு அமைக்கப்படாமல் தனியே ஒப்புமைவிளங்கக் காட்டப்பட்டன.)

அரிதுணர்பொருளனவான உதாரணங்களை எளிதுணர்பொருளனவாக மாற்றியும், அங்ஙனம்மாற்றாதவற்றுள்ள அரியசொற்களுக்கெல்லாம் பொருள் விளக்கியும், அரிய உதாரணச்செய்யுள்களுள் அவசியமானவற்றிற்கெல்லாம் பொருளெழுதியும் சேர்த்திருக்கின்றோம்.

நன்னூலின் பழையவுரையிலிருந்து சாரமான விஷயங்கள் சில இதில் ஆங்காங்குச் சேர்க்கப்பட்டுள்ளன.

இந்நூல் (பி-ஏ) முதலிய பட்டப்பரீக்ஷைகளுக்கு முழுவதும் உபயோகமாவதாதலால், இந்நூலில் (எப்-ஏ) பரீட்சைக்கு உபயோகமாகத்தக்க முக்கியமான சூத்திரங்களுக்கு † இக்குறியும், (எப்-ஏ, மெட்ரிக்குலேஷன்) இவ்விரண்டுபரீக்ஷைகளுக்கும் உபயோகப்படத்தக்க மிகவும் முக்கியமான சூத்திரங்களுக்கு ‡ இக்குறியும் அந்தந்த சூத்திரத்தின் முதலில் இடப்பட்டிருக்கின்றன.

இந்தப் பதிப்பிலுள்ள குற்றங்குறைகளையாயினும், எமது சிற்றறிவிற்குப் புலப்படாத அரிய பெரிய வேறுபல விஷயங்களையாயினும், இன்னும் விளக்கமாக அமைக்கத்தக்க வேறுவகையையாயினும், எடுத்து எவராயினும் எமக்குத் தெரிவிப்பாராயின், அவரைப் பேருதவிசெய்தவராக நன்குமதித்து மகிழ்வோடு அவர்பக்கல் நன்றி பாராட்டுவதுடன், அவ்விஷயங்களை மறுபதிப்பிற் பிரசுரப்படுத்திப் பலர்க்கும் பயன்படும்படி செய்யவும் சித்தராயிருக்கின்றோம்.

எமது புத்தகங்களைத் தம்தம் கல்விச்சாலைகளில் உபயோகித்தும், உபயோகிப்பதாக உறுதிமொழியுரைத்தும் எமக்கு ஊக்கத்தை விளைத்துவருகிற மகான்கள்திறத்தில் என்றும் நன்றிபாராட்டக் கடமைப்பட்டிருக்கின்றோம்.

# விஷய சூசிகை.



[முக்கியமானவை மாத்திரம். எண்கள், பக்கத்தைக் குறிப்பன.]

ஸ்ரீ

# நன்னூல்

## காண்டிகையுரை.

### நூலாசிரியர் வரலாறு.*

இந்நூலாசிரியராகிய பவணந்திமுனிவர், இந்தத் தொண்டைமண்டலத்தில் † சனகாபுரத்தில் பிராமண வருணத்தில் சன்மதி முனிவர் செய்த தவப்பயனால் அவர் குமாரராய்த் தோன்றி, இளமைப்பருவத்திலேயே தொல்காப்பியங்களிலும் தொல்காப்பியத்திலும் பல்காற் பயின்று, வடமொழி வியாகரணம் முதலியவற்றிலும் வல்லவராய், தாம்பிறந்துள்ள அருகசமயத்தில் முத்திபெறுதற்குக் காரணமாகிய ஞானநூல்களை ஓதி, அவற்றின் பொருளைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்துகொண்டு, அன்பு அருள் அடக்கம் ஒழுக்கம் வாய்மை முதலிய நற்குண நற்செய்கைகளில் மிக்கச் சிறந்தவராய், துறவறங்கொண்டு ஒழுகுவாராயினர்.

---

* இது, பெரும்பாலும் இந்நூற் சிறப்புப்பாயிரத்தையே பிரதான ஆதாரமாகக் கொண்டும், சிறுபான்மை மற்றுஞ் சில ஆதாரங்களால் வேறு சில விஷயங்களைச் சோதித்தும் ஒருவாறு சுருக்கமாக எழுதப்பட்டது.

† "தன்னூராச் சனகையிற் சன்மதி மாமுனி தந்த மைந்தன்
நன்னூ லுரைத்த பவணந்தி மாமுனி நற்பதியும்
(சின்னூ லுரைத்த குணவீர பண்டிதன் சோபதியும்
மன்னூபுரத் திருவன்ன மின்னே) தொண்டை மண்டலமே"

என்று படிக்காசுப்புலவர் தொண்டைமண்டலசதகத்திற் கூறியிருத்தலால், பவணந்திமுனிவர் பிறந்த ஊர் தொண்டைநாட்டி லுள்ளதென்று தெரிகின்றது.

"மேற்குப் பவளமலை வேங்கடம் நேர்வடக்காம்
ஆர்க்கு முவரி யணிகிழக்குப்—பார்க்குளுயர்
தெற்குப் பிணாகி திகழிருப தின்காதம்
நற்றொண்டை நாடெனவே நாட்டு"

இத்தனிப்பாடலினால், தொண்டைநாட்டின் எல்லையை அறிக.

அங்ஙனமிருக்கும் நாட்களில் ஒருநாள், கல்வி அறிவு ஒழுக்கங்களாலும் செல்வம் அதிகாரம் முதலிய நலங்களாலும் குறைவின்றி மிகச்சிறப்புற்று விளங்கியிருந்த சீயகங்கன்' என்னும் செங்கோல்மன்னன், பவணந்திமுனிவரை நோக்கி 'தொல்காப்பியம் முதலிய பழைய இலக்கண நூல்கள் பேரறிவினார்க்கே புலப்படுந் தன்மையனவா யிருத்தலின், இயற்றமிழின் பாகுபாடான எழுத்து, சொல், பொருள், யாப்பு அணி யிலக்கணங்களின் பயிற்சி குன்றிப்போவதனால் தமிழாராய்ச்சியால் வலியோரேயன்றி எளியோரும் ஓதியுணரும்படி, நீவிர் ஓர் இலக்கண நூலை இயற்றித்தரல்வேண்டும்' என்று வேண்டினன். பவணந்திமுனிவர், தமிழ்நாடனைத்துக்கும் பேருபகாரமாமென்று எண்ணி, அங்ஙனமே இயற்றத் துணிந்து, தாம்கற்ற இலக்கிய இலக்கணங்களில் இலைமறைகாய்போல் மறைந்துகிடந்த அரிய பெரிய விதிகளையெல்லாம் தமது நுண்ணுணர்வினால் விளங்க எடுத்துத் திரட்டி, முற்காலத்து வழங்கிய இலக்கணங்களுள்ளே பிற்காலத்து வழங்காதொழிந்தனவற்றை நீக்கி, முற்காலத்து வழங்காது பிற்காலத்து வழங்கிவரும் இலக்கணங்களைத் தழுவி, உலக வழக்குச் செய்யுள் வழக்குக்களோடு சிறிதும் மாறுபடாமல், உடன்படல் முதலிய எழுவகை மதங்களையும் தழுவி, குன்றக்கூறல் முதலிய பத்துக் குற்றங்களும் சாராது, சுருங்கச்சொல்லல் முதலிய பத்து அழகுகளோடும் கூடி, நுதலிப்புகுதல் முதலிய முப்பத்திரண்டு உத்திகளும் விளங்க, சாதாரண மாணாக்கர்கட்கும் உபயோகமாகத்தக்கதாய, 'நன்னூல்' என்னும் இந்நூலை இயற்றி அவ்வரசனது சபையில் அரங்கேற்றினர்.

இந்நூலின் பெருமையை 'நன்னூல்' என்னும் இதன்பெயரே இனிது விளக்கும்; அன்றியும், இந்நூல் தோன்றியபின்னர் எந்நூலினுஞ் சிறந்த தொல்காப்பியம் முதலிய தொன்னூற் பயிற்சி குன்ற இதுவே தலையெடுத்து வந்தமை யொன்றுமே இதன் மாட்சியை நன்கு புலப்படுத்தும். மேலும், தொல்காப்பியம் முதலிய நூல்களை ஐயந்திரிபறக் கற்றறிந்தவராகிய சுவாமிநாததேசிகர் தாம்செய்த இலக்கணக்கொத்தில் ‘முன்னூ லொழியப் பின்னூல் பலவினுள், நன்னூ லார்தமக் கெந்நூ லாரும், இணையோ வென்னுந் துணிவே மன்னுக’’ என இதன் சிறப்பை எடுத்துக்கூறியிருப்பதுங் காண்க.

‘பவணந்தி முனிவரை யாதரித்தவனும் கங்காகுலத்திற் பிறந்தவனுமான அமராபரணசீயகங்க னென்பான், இப்பொழுதைக்கு எஉஅ வருடங்கட்கு முன் சிங்காதனமேறிய மூன்றாவது குலோத்துங்க சோழராஜனுக்கு அடங்கிய ஒரு சிற்றரசன்' என்று சிலாசாசன பரிசோதகர் வெளியிட்டிருப்பது கொண்டு, இந்நூல் இற்றைக்குச் சற்றேறக்குறைய எ00 - வருடங்களின் முன் இயற்றப்பட்டதென்று அறியலாம். இந்நூலில் உரியியலில் கக-ஆம் சூத்திரத்தில் ‘‘பிங்கலமுதலாம் நல்லோ ருரிச்சொலில் நயந்தனர் கொளலே’’ எனப் பிங்கலந்தை யென்னும் நூல் மேற்கோள் காட்டப்பட்டுள்ளதனால், ஆதிதிவாகரனது புதல்வனான பிங்கலமுனிவன் செய்ததும் மண்டலபுருடன் சூடாமணிநிகண்டு சேந்தன்திவாகரம் என்ற நிகண்டுகட்கு முற்பட்டது

மான பிங்கலந்தை என்னும் நிகண்டுக்கு இந்நூல் பிற்பட்டதென்பது விளங்குகின்றது. ஸ்ரீவைஷ்ணவசம்பிரதாயத்தில் வழங்குகின்ற திவ்வியப்பிரபந்தங்களின் தனியன்கள் முதலியவற்றிற்கு வியாக்கியானஞ் செய்தருளிய பிள்ளைலோகாசார்யசீயர், "நெஞ்சுக் கிருள்கடி தீபம் அடங்கா நெடும்பிறவி, நஞ்சுக்கு நல்லவமுதம் தமிழ நன்னூற் றுறைகள், அஞ்சுக் கிலக்கியம் ஆரணசாரம் பரசமயப், பஞ்சுக்கனலின்பொறி பரகாலன் பனுவல்களே" என்ற பெரிய திருமொழிச் சிறப்புப்பாயிரத்தில் 'தமிழ நன்னூல் துறைகள் அஞ்சுக்கு' என்பதன்பொருளை விளக்குமிடத்து, 'த்ராவிடசாஸ்த்ரம்' எழுத்துசொல்பொருள் யாப்பு அலங்காரம் என்கிற விலக்ஷணமான பஞ்சலக்ஷணத்தோடே கூடியிறே யிருப்பது; அன்றிக்கே, தமிழுக்கு எழுத்து முதலான அஞ்சுலக்ஷணத்தையும் அறுதியிடுவதான நன்னூலென்று ஒரு சாஸ்த்ர முண்டு அத்தைச் சொல்லிற்றாதல் ஏவம்விதமான 'த்ராவிட சாஸ்த்ர மார்க்க பஞ்சகத்துக்கு' என்று எழுதியிருத்தலால், பிள்ளைலோகாசார்யசீயர் காலத்தில் இந்தநன்னூல் பிரசித்தமாக இருந்த தென்று அறியலாம்; அவர்காலம் இப்பொழுதைக்கு ஏறக்குறைய நானூற்றறுபது வருடங்கட்கு முன்பென்று அறியப்படுகின்றது. இன்னும், மேற்கண்ட பெரிய திருமொழிச் சிறப்புப்பாயிரச்செய்யுள் கூரத்தாழ்வான் செய்ததாதலால், அதில 'நன்னூல்' என்பதற்குப் பிள்ளைலோகாசார்யசீயர் இங்ஙனம் வியாக்கியானஞ் செய்திருப்பதுகொண்டு, கூரத்தாழ்வான்காலத்தே யுள்ளது நன்னூலென்று அறுதியிடவும் இடமுண்டு; கூரத்தாழ்வான்காலம், ஏறத்தாழ எண்ணூறுவருடத்துக்கு முன்பாகும்.

தமிழிலக்கண மைந்தனுள்ளும் பெரும்பயன்படுதல் கருதி, எழுத்திலக்கணம் சொல்லிலக்கணம் என்ற இரண்டுமே இந்நூலிற் கூறப்பட்டுள்ளன; ஆகலால், இந்நூல்-எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் என இரண்டுபகுப்பு உடையது. இனி, இந்நூற்சிறப்புப்பாயிரத்துள், 'இருந்தமிழ்க்கடலுள், அரும்பொருளைந்தையும் யாவரு முணரத், தொகைவகை விரியிற் றருகென ..— மொழிந்தனனாக ... வகுத்தனன்" என்று கூறியிருத்தலால், இந்நூலின் எழுத்துச்சொல்லதிகாரங்கள்போலவே மற்றைப்பொருள் யாப்பு அணியதிகாரங்களும் ஆசிரியரால் செய்யப்பட்டு முற்காலத்தில் இருந்து பிற்காலத்திற் கிடைத்தில வென்று கொள்வாரும் உளர்; * அக்கொள்கையை, மேற்காட்டிய 'தமிழுக்கு எழுத்து முதலான அஞ்சு லக்ஷணத்தையும் அறுதியிடுவதான

* 'அரும்பொருளைந்து' எனக் கூறினமையின், இந்நூலுட் கூறிய பொருள் யாப் பணிக ளென்னும் மூன்று அதிகாரங்களும் அக்காலத்து உள்ளனபோலும்' என்பது, நன்னூல் விருத்தியுரை.

நன்னூலென்று ஒரு சாஸ்திர முண்டு' என்ற பிள்ளைலோகாசாரியர் வியாக்கியானவாக்கியம் வற்புறுத்தும். இனி, இந்நூல் இடையூற்றின் மிகுதியால் முடிவுபெறாதென்பர் ஒருசாரார் * எங்ஙனமாயினும், நாடெங்கும் வழங்கி வருவன இந்நூலின் எழுத்ததிகாரமும் சொல்லதிகாரமுமே யென்பது, யாவர்க்குஞ் சம்மதமே. இந்நூலின் மற்றையதிகாரங்களும் இருந்து கிடைத்து வழங்குமாயின், தமிழிலக்கணங் கற்போர்க்குப் பொருள் யாப்பு அணிகளின் பயிற்சி குன்றிப்போகாமல் எழுத்துச் சொற் பயிற்சிபோலவே நின்று நிறைவுறு மென்பதிற் சிறிதும் ஐயமில்லை. ஆகவே, இந்நூல்போலத் தெளிவான இலக்கணநூல் வேறு எதுவும் தமிழில் இல்லை யென்பதாயிற்று.

இவர்மதம் ஜைந மென்பது, இவர் எழுத்ததிகாரத்திலும் சொல்லதிகாரத்திலும் முதலிற் கூறியுள்ள கடவுள்வணக்கங்களாலும், மற்றுஞ் சிலவாற்றாலும் விளங்கும்.

இவர் இந்நூலில் ஆங்காங்கு வடமொழிவழக்கைத் தழுவி இலக்கண மெழுதியுள்ளதனால், இவர்காலத்துக்கு முன்னமே வடசொற்கள் தமிழில் மிகுதியாகப் பயிலத்தொடங்கிவிட்டன வென்பது உணரப்படும். இந்நூலின் இரண்டாம் இயலுக்கு 'மொழியியல்' எனப் பெயர்குறியாது 'பதவியல்' எனப் பெயர்குறித்ததும் காண்க (மொழி-தமிழ்ச்சொல். பதம் - வடசொல்.)



* 'மங்கலங் கூறியவழியும் நன்னூல் முதலியவற்றின் முடிவு காணாமையின், மங்கலங் கூறாதவழியும் தொல்காப்பியம் முதலியவற்றின் முடிவுகாணலின், உடன்பாட்டினும் எதிர்மறையினும் நியமந் தப்புதலின் எனின்:— நன்று சொன்னாய்; நன்னூல் முதலியவற்றில் இடையூற்றின் மிகுதிப்பாட்டால் முடிவுபெற இன்று' என்ற தர்க்கசங்கிரகவுரையைக் காண்க.

# சிறப்புப்பாயிரம்.



மலர்தலை யுலகின் மல்கிரு ளகல
இலகொளி பரப்பி யாவையும் விளக்கும்
பரிதியி னொருதா னாகி முதலீறு
ஒப்பள வாசை முனிவிகந் துயர்ந்த
அற்புத மூர்த்திதன் னலர்தரு தன்மையின்
மனவிரு ளிரிய மாண்பொருண் முழுவதும்
முனிவற வருளிய மூவறு மொழியுளும்
குணகடல் குமரி குடகம் வேங்கடம்
எனுநான் கெல்லையி னிருந்தமிழ்க் கடலுள்
அரும்பொரு ளைந்தையும் யாவரு முணரத்
தொகைவகை விரியிற் றருகெனத் துன்னார்
இகலற நூறி யிருநில முழுவதுந்
தனதெனக் கோலித் தன்மத வாரணந்
திசைதொறு நிறுவிய திறலுறு தொல்சீர்க்
கருங்கழல் வெண்குடைக் கார்நிகர் வண்கைத்
திருந்திய செங்கோற் சீய கங்கன்
அருங்கலை விநோத னமரா பரணன்
மொழிந்தன னாக முன்னோர் நூலின்
வழியே நன்னூற் பெயரின் வகுத்தனன்
பொன்மதிற் சனகைச் சனமதி முனியருள்
பன்னருஞ் சிறப்பிற் பவணந்தி
என்னு நாமத் திருந்தவத் தோனே.

இது, நூலாசிரியர்பெயர் முதலிய பதினொன்றையும் விளக்குகின்றது

(இதன்பொருள்.) 'மலர் தலை உலகில் - பரந்த இடத்தையுடைய இவ்வுலகத்திலே, மல்கு இருள் அகல - நிறைந்த வெளியிருள் ஒழியும்படி, இலகு ஒளி பரப்பி - விளங்குகின்ற (தனது ஆயிரம்) கிரணங்களை விரித்து, யாவையும் விளக்கும் - (கண்ணுக்குத் தெரியத்தக்க உருவங்கள்) எல்லாவற்றையும் காட்டுகின்ற, பரிதியின் - சூரியன்போல, ஒரு தான் ஆகி - (உலகங்கட்கெல்லாம்) தான் ஒரு முதல்வனேயாகி, முதல் ஈறு ஒப்பு அளவு ஆசை முனிவு இகந்து உயர்ந்த - பிறப்பும் இறப்பும் உவமையும் அளவும் விருப்பும் வெறுப்பும் (ஆகிய இவற்றை இயல்பாகவே) நீங்கி நிற்றலினாலே தலைவனாகிய, அற

புத மூர்த்தி - வியக்கத்தக்க திருமேனியையுடைய கடவுள், தன் அலர் தரு தன்மையின் - தனது பரவிய குணமாகிய அருளினாலே, மனம் இருள் இரிய - (உயிர்களின்) மனத்தினிருளாகிய அஞ்ஞானம் ஒழியும்படி, மாண் பொருள் முழுவதும் - சிறந்த (அறம் பொருள் இன்பம் வீடு என்னும்) நான்கு உறுதிப் பொருள்களையும், முனிவு அற அருளிய - வெறுப்பில்லாமல் அருளிச்செய்த [விருப்பத்தோடு தந்த], மூ அறு மொழியுளும் - பதினெட்டுத் தேசபாஷைகளுளும், குணகடல் குமரி குடகம் வேங்கடம் எனும் நான்கு எல்லையின் - (கிழக்கே) கீழ்கடலும் (தெற்கே) கன்னியாகுமரியும் (மேற்கே) குடகநாடும் (வடக்கே) திருவேங்கடமலையும் என்கிற நான்கு எல்லைக்கு உட்பட்ட தேசத்து (வழங்குகின்ற), இருந்தமிழ் கடலுள் - பெரிய தமிழ்ப்பாஷையென்னும் கடலில் உள்ள, அரும் பொருள் ஐந்தையும் - (அறிதற்கு) அரியனவான (எழுத்து சொல் பொருள் யாப்பு அணி என்னும்) ஐந்து பொருள்களையும், யாவரும் உணர - (இலக்கியவாராய்ச்சியில்) வல்லவர் மாத்திரமேயன்றி அல்லாதவரும் (எளிதில்) அறியும்படி, தொகை வகை விரியின் தருக - தொகுத்தும் வகுத்தும் விரித்தும் செய்யப்படும் நூல்யாப்பினாலே இயற்றித்தருவாயாக,' என - என்று,—துன்னார் இகல் அற நூறி - பகைவரது பகைமை கெட (அவரை) அழித்து, இரு நிலம் முழுவதும் தனது என கோலி - பெரிய பூமி முழுவதையும் தன்னுடையதாகக் கைப்பற்றிக்கொண்டு, தன் மதம் வாரணம் திசை தொறும் நிறுவிய - தனது மதயானைகளை(த் தன்வெற்றிக்கு அடையாளமாக) எட்டுத்திக்கிலும் (திக்குயானைகளைப்போல) நிறுத்திய, திறல் - வல்லமையையும், உறு தொல் சீர் - மிக்க தொன்றுதொட்டு [பரம்பரையாக] வருகின்ற பெருங்கீர்த்தியையும், கருங் கழல் - பெருமை பொருந்திய வீரக்கழலையும், வெள்குடை - வெண்கொற்றக்குடையையும், கார் நிகர் வள் கை - மேகம் போன்ற (பிரதியுபகாரத்தை விரும்பாமற்) கொடுக்கின்ற கையையும், திருந்திய செங்கோல் - சோர்வுறாத [நீதிதவறாத] அரசாட்சியையும் உடைய, அருங் கலை விநோதன் - அரிய நூல்களை ஆராய்தலையே பொழுதுபோக்கும் விளையாட்டாக வுடையவனும், அமர் ஆபரணன் - போரை மேற்கொள்ளுதலையே (தனக்கு) ஆபரணமாகக்கொண்டவனும் ஆகிய, சீயகங்கன் - சீயகங்கனென்னும் இயற்பெயரையுடைய அரசன், மொழிந்தனன் ஆக - சொல்ல,—பொன் மதில் சனகை - பொன்மயமான மதில்சூழ்ந்த சனகாபுரத்தில் இருக்கின்ற, சன்மதி முனி அருள் - சன்மதியென்னும் முனிவன் பெற்ற, பன் அரு சிறப்பின் - சொல்லுதற்கு அரிய மேன்மையையும், பவணந்தி என்னும் நாமத்து - பவணந்தி யென்னும் இயற்பெயரையுமுடைய, இருந் தவத்தோன் - பெரிய தவத்தையுடைய முனிவன்,—முன்னோர் நூலின் வழியே - (தொல்காப்பியர் முதலிய) முன்னையோர் செய்த இலக்கண நூலின் வழியாக, நன்னூல் பெயரின் வகுத்தனன் - நன்னூலென்னும் பெயரினால் (இந்நூலைச்) செய்தான்; (என்றவாறு.)—ஏகாரம் - ஈற்றசை. சீயகங்கன் - சிங்கம்போன்ற கங்கனென்பவன்.

ஸம்மதி என்ற வடமொழிப்பெயர் நலமறிவுடையவனென்று பொருள் படும். 'அமர ஆபரணன்' என்பதற்கு - போரில் தன்உடம்பின்மேற் படும் பெரும்புண்களையே ஆபரணமாகவுடையவ னென வுரைத்தலு மொன்று; அமர - ஆகுபெயர்.

இதனுள் 'பவணந்தி' எனவே நூல்செய்தோன்பெயரும், 'முன்னோர் நூலின்வழி' எனவே நூல்வந்த வழியும், 'நான்கெல்லை' எனவே நூல்வழங்கும் எல்லையும், 'நன்னூல்' எனவே நூலின்பெயரும், 'தொகைவகைவிரியின்' எனவே நூல்யாப்பும் 'அரும்பொருளைந்தையும் யாவரு முணர' எனவே நூலிற்சொல்லப்பட்ட பொருளும், அவற்றையாராய்வோர் இந்நூல்கேட்டற்கு உரியா ரென்னுங் கேட்போரும், அவர் அப்பொருளைந்தையும் அறிந்து சொற்களின் வழுவை ஒழித்தலாலே மொழித்திறத்தின் முட்டறுத்த லென்னும் பயனும், 'சீயகங்கன் மொழிந்தனனுக் வகுத்தனன்' எனவே அவ்வரசன் காலத்தில இயற்றப்பட்டு அவனது சபையிலே அரங்கேற்றப்பட்ட தெனச் செய்த காலமும், அரங்கேறிய இடமும், சீயகங்கன் சொன்னதனாலும் யாவரிடத்தும் உண்டாகிய இரக்கத்தினாலும் இயற்றினமையாற் காரணமும் ஆகிய பதினொன்றும் பெறப்பட்டன; இனி, 'யாவருமுணர' எனவே ஙிகண்டுகற்று இலக்கியப்பயிற்சி செய்தபின்பு இந்நூல் கேட்கத்தக்கது என்னும் யாப்பும், 'சீயகங்கன் தருகென மொழிந்தனன்' எனவே கேட்போனும், 'மாண் பொருள் முழுவதும்' எனவே பயனும் பெறப்பட்டன வென்பாரு முளர்.

இப்பாயிரம், இவ்வொருநூலுக்கே உரிய தாதலால், சிறப்புப்பாயிரமாம்.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.



# பொதுப்பாயிரம்.

[பாயிரத்தின் பெயர்கள்.]

க. முகவுரை பதிகம் அணிந்துரை நூன்முகம்
புறவுரை தந்துரை புனைந்துரை பாயிரம்.

(இ - ள்) முகவுரை .. பாயிரம் - முகவுரை பதிகம் அணிந்துரை நூன்முகம் புறவுரை தந்துரை புனைந்துரை என்பன பாயிரத்தின் பெயர்களாம்; (எ - று.)

பாயிரம் - வரலாறு இது, வடமொழியில் உபோத்காத மெனப்படும். முகவுரை யென்பதற்கு - நூலுக்கு முன் சொல்லப்படுவ தென்றும், பதிக மென்பதற்கு - ஐந்துபொதுவும் பதினொருசிறப்பு மாகிய பலவகைப்பொருள்களையும் * தொகுத்துச் சொல்வதென்றும், அணிந்துரை புனைந்துரையென்பவற்றிற்கு - நூலின் பெருமை முதலியவை விளங்க அலங்கரித்துச்சொல்வதென்றும், நூன்முக மென்பதற்கு - நூலுக்கு முகம்போல முற்பட்டிருப்பதென்றும், புறவுரை யென்பதற்கு - நூலிற்சொல்லிய பொருளல்லாதவைகளை நூலின் புறத்திலே சொல்வதென்றும், தந்துரை யென்பதற்கு - நூலிற் சொல்லிய பொருளல்லாதவைகளைத் தந்துசொல்வ தென்றும் பொருள். (க)

[பாயிரத்தின் வகை]

உ. பாயிரம் பொதுசிறப் பெனவிரு பாற்றே.

(இ - ள்.) பாயிரம் - (மேற்சொன்ன) பாயிரமானது,—பொது - பொதுப்பாயிரமும், சிறப்பு - சிறப்புப்பாயிரமும், என-என்று, இரு பாற்று - இரண்டு வகையை யுடையது; (எ - று.)—எ - ஈற்றசை.

தன்னால் உரைக்கப்படும் ஒருநூலுக்குமாத்திரமே உரியதன்றி எல்லா நூன்முகத்தும் உரைக்கத்தக்கது பொதுப்பாயிர மெனவும், தன்னால் உரைக்கப்படும் ஒரு நூலுக்கே இன்றியமையாமல் உரியதாய் அந்நூன்முகத்திலே உரைக்கப்படுவது சிறப்புப்பாயிர மெனவும் அறிக. (உ)

முதலாவது

## பொதுப்பாயிரத்தின் இலக்கணம்.

[பொதுப்பாயிரத்தின் இலக்கணம் இன்னதென்பது.]

ங. நூலே நுவல்வோன் நுவலுந் திறனே
கொள்வோன் கோடற் கூற்றா மைந்தும்
எல்லா நூற்கு மிவைபொதுப் பாயிரம்.

---

* "பதிகக் கிளவி பலவகைப் பொருளைத்
தொகுதி யாகச் சொல்லுதல் தானே."

(இ - ள்.) நூலே - நூலினது வரலாறும், நுவல்வோன் - (நூலைக்) கற்பிக்கும் ஆசிரியனது வரலாறும், நுவலும் திறனே - (ஆசிரியன் மாணாக்கனுக்கு நூலைப்) பாடஞ்சொல்லுதலின் வரலாறும், கொள்வோன் - மாணாக்கனது வரலாறும், கோடல் கூற்று - (மாணாக்கன்) பாடங்கேட்டலின் வரலாறும், ஆம் - ஆகிய, இவை ஐந்தும் - இவ்வைந்து பொருள்களும், எல்லா நூற்கும் - எல்லா நூல்கட்கும், (பொதுவா மாதலால்), பொதுப்பாயிரம் - (இவற்றை விளக்கச்சொல்வது) பொதுப்பாயிரத்தின் இலக்கணமாம்; (எ - று.)

விரிந்தும் தொக்கும் வந்த ஏகாரங்கள் - எண்ணுப்பொருளன; இதனைப் பிறவிடங்கட்கும் கொள்க. திறன் - திறம். கூற்று என்றது - வரலாற்றை; இதனைப் பிறவற்றோடும் கூட்டுக. (௩)

## ௧. நூலின் வரலாறு.

[நூல் இன்னதென்பது.]

௪. நூலி னியல்பே நுவலி னோரிரு
பாயிரந் தோற்றி மும்மையி னொன்றாய்
நாற்பொருட் பயத்தோ டெழுமதந் தழுவி
ஐயிரு குற்றமு மகற்றியம் மாட்சியோடு
எண்ணான் குத்தியி னோத்துப் படலம்
என்னு முறுப்பினிற் சூத்திரங் காண்டிகை
விருத்தி யாகும் விகற்பநடை பெறுமே.

(இ - ள்.) (மேற்கூறிய ஐந்தனுள்), நூலின் இயல்பு - நூலின் வரலாற்றை, நுவலின் - சொல்லப்புகுந்தால்,—ஓர் இரு பாயிரம் தோற்றி - (கீழ்க் கூறிய பொதுவும் சிறப்பு மாகிய) இருவகைப் பாயிரங்களையும் முன்னேயுடையதாய், மும்மையின் ஒன்று ஆய் - மூவகை நூல்களுள் ஒன்றாகி, நால் பொருள் பயத்தோடு - நான்கு புருஷார்த்தங்களாகிய பிரயோசனங்களுடன், எழு மதம் தழுவி - எழுவகை மதங்களையும் தழுவி, ஐ இரு குற்றமும் அகற்றி - பத்துவகைக் குற்றங்களையும் நீக்கி, அ மாட்சியோடு - அத்தனை [பத்துவகை] அழகுகளுடனே கூடி, எண் நான்கு உத்தியின் - முப்பத்திரண்டுவகை உத்திகளைக்கொண்டு, ஓத்து படலம் என்னும் உறுப்பினின் - ஓத்தும் படலமும் என்கிற அவயவங்களுடனே, சூத்திரம் - சூத்திரமும், காண்டிகை - காண்டிகையுரையும், விருத்தி விருத்தியுரையும், ஆகும் - ஆகின்ற, விகற்பம் நடை - வேறுபட்ட நடைகளை, பெறும் - பெற்றுவரும்; (எ - று.)

'மும்மை' முதலியவற்றை, மேல்வருஞ் சூத்திரங்களிற் காண்க. 'அம் மாட்சி' என்பதில், அகரம் - ஐயிரண்டைச் சுட்டிற்று. ஓத்து, படலம் = இயல், அதிகாரம்; ஓத்து - சிற்றுறுப்பு, படலம் - பேருறுப்பு. (௪)

[நூலின் வகை-௩]

௫. முதல்வழி சார்பென நூன்மூன் றாகும்.

---

* இறையனாரகப்பொருளுரை மேற்கோள்.

(இ - ள்.) முதல் - முதல நூலும், வழி - வழிநூலும, சார்பு - சார்பு நூலும, என - என்று, நூல்—, மூன்று ஆகும - மூன்றுவகையாகும; (எ-று.)

இச்சூத்திரம, முன்னோர் செய்ததை மேற்கோளாகக் கொண்டது. (ரு)

[முதல்நூல்]

சு. அவற்றுள்,
வினையி னீங்கி விளங்கிய வறிவின்
முனைவன் கண்டது முதனூ லாகும.

(இ - ள) அவற்றுள - அந்த மூவகை நூல்களுள்,—வினையின் நீங்கி - (இயல்பாகவே நல்வினை தீவினை யென்னும்) இருவினையினின்றும நீங்கி, விளங்கிய அறிவின் - (தானே இயலபின்) விளங்கின அறிவையுடைய, முனைவன் - கடவுள், கண்டது - செய்தது,—முதனூல் ஆகும—; (எ - று)

'முனைவன் கண்டது முதனூல' எனருராயினும், அம்முனைவனை வழிபட்டுத் தலைவராயினார் செய்ததும முதனூ லெனப்படுமென அறிக வருஞ் சூத்திரத்தில் 'முன்னோர் நூலின்' எனப் பன்மையாகக் கூறுவதும இது பற்றி யெனக் காணக; அவை - அகத்தியம முதலியன.

இச்சூத்திரம, தொல்காப்பியத்தினின்று மேற்கோளாக எடுத்துக் கொள்ளப்பட்டது. (சு)

[வழிநூல்.]

எ. § முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப்
பின்னோன் வேண்டும விகற்பங் கூறி
அழியா மரபினது வழிநூ லாகும்.

(இ - ள்.) முன்னோர் நூலின் - கடவுளும் அவனருள்வழிபட்டோரும செய்த நூலகளினது, முடிபு - பொருள்முடிபு, ஒருங்கு ஒத்து - முழுவதும ஒத்து [வேறுபடாமலிருக்க],—பின்னோன் - வழிநூல செய்யபபுகுந்தவன், வேண்டும் விகற்பம் கூறி (முதனூல் இருக்கவும தான் வேறே வழிநூல் செய்தற்குக் காரணமாக) இன்றியமையாத சில வேறுபாடுகளையும (அதனோடுகூட்டிச) சொலலி,—அழியா மரபினது - (அவ்வேறுபாடுகள அறிவுடையார பலர்களும் ஒத்திருத்தலால) அழியாமல (உலகத்தில்) நிலைநிற்கின்ற தன்மையை யுடையது,—வழிநூல் ஆகும—; (எ - று.)

எனவே, முதனூலைப் பெரும்பான்மை ஒத்துச சிறுபான்மை வேறுபட்டிருப்பது வழிநூ லென்றதாயிற்று. பின்னோன வேண்டும விகற்பங் கூறலாவது-பழைய இலக்கணங்களாகிப் பிற்காலத்து வழங்காதவை உளவாயின் அவற்றை 'இறந்ததுவிலக்கல' என்னும உத்தியால விலக்கியும், புதிய இலக்

* தொல்காப்பியம - பொருளதிகாரம - மரபியல கூசு.

§ இறையனாரகப்பொருளுரை மேற்கோள்.

கணங்களாகிப் பிற்காலத்து வழங்கிவருபவை உளவாயின் அவற்றை 'எதிரது போற்றல்' என்னும் உத்தியால் தழுவியும் கூறுதல் முதலியன. வழிநூல் - தொல்காப்பியம் முதலியன. இவ்வழிநூல்களெல்லாம், ஒருவனுக்கு மகனானவன் தன்மகனுக்குத் தந்தையாவதுபோல, முதனூலைநோக்க வழிநூலாயும் சார்புநூலை நோக்க முதனூலாயும் நிற்குமென அறிக

இசைநூற்றிரமும், அதற்றகுத்திரமும் - முன்னோர்செய்தவற்றை மேற்கோளாகக் கொண்டன. (எ)

[சார்புநூல்.] *

அ. § இருவர் நூற்கு மொருசிறை தொடங்கித்
திரிபுவே றுடையது புடைநூ லாகும்.

(இ - ள்.) இருவர் நூற்கும் - (கீழ்க்கூறிய) இருதிறத்தார் (செய்த முதனூல் வழிநூல் என்னும் இருவகை) நூல்கட்கும், ஒரு சிறை தொடங்கி -

* முதனூல் வழிநூல் என்னும் இரண்டே யொழியச் சார்புநூ லென ஒன்று தனியே கொள்ளுதல், ஆசிரியர் தொல்காப்பியனாருக்கு உடன்பாடன்று; "மரபுநிலை திரியா மாட்சிய வாகி, யுரைபடுநூல்தா மிருவகை யியல, முதலும் வழியு மென நுதலிய நெறியின" என்ற தொல்காப்பியச் சூத்திரத்தைக் காண்க; அங்ஙனம் கொள்ளாமைக்குக் காரணம், அடியிற்காட்டப்படுகிற நச்சினார்க்கினியருரை வாக்கியத்தால் நன்கு விளங்கும்.—' "நுதலிய நெறி" என்றது என்னையெனின்,—இன்னதே முதனூல் இன்னதே வழிநூல் என்பது ஓராயாப்புறவு இல்லை; ஒருநூல்பற்றி ஒருவன் வழிநூல்செய்தவழி அவ்வழிநூல்பற்றிப் பினொருகாலத்து ஒருநூல் பிறந்ததாயின் அது வழிநூலெனப்படும் முன்னைவழிநூலே முதனூலெனப்படுமென்றற்கு என்பது. இதனைச் சார்புநூ லென்னுமோ வெனின்,—வழிநூலாம் சார்புநூலுமாகலின் அங்ஙனம் கூறுனுயினுன் என்றற்கு? சார்புநூலினைப்பற்றி ஒரு நூல் பிறந்தவழிச் சார்பின் சார்பெனக் கூறவேண்டுவ தாகலானும், அதனைச்சார்ந்து தோன்றின சார்பென்னுஞ்சொல்லை மும்முறை சொல்லியும் அதன் பின் தோன்றிய நூற்கு நான்முறை சொல்லியும் எண்ணிகந்து ஓடுதலானும் என்பது. மற்று, இரண்டாம் எண்ணும் முறைமைக்கண் நின்ற நூலினையே வழிநூலெனக் கொண்டு, மூன்றாவதுதோன்றிய நூலே சார்புநூலாகவும் அதன் பின்னர் நூல் செய்யப்பெறாரெனவுங் கொள்ளாமோ வெனின்,— 'முதனூலிற்கிடந்த பொருளை ஓர் உபகாரப்பட வழிநூல்செய்த ஆசிரியன் செய்தக்கால் சார்புநூலெனப் பின்னர் ஓர் ஆசிரியன் நூல்செய்ததனாற் பயந்த தென்னையென்க' என்றாற்கு, 'வழிநூலும் பிற்காலத்து அரிதாமாயின் அதனையும் எளிதாகச் செய்தலன்றே இதனாற்பயந்தது' எனின், 'அதுதானும் பின்னொரு காலத்து அரிதாமாயின் அதனையும் எளிதாகச் செய்வானல்லனோ?' என்று மறுக்க, இவ்வாராய்ச்சி வேண்டா வென்றற் கன்றே இவ்விருவகையானும் வருதலே மர பென்பா னுயிற்று என்று ஒழிக.'

§ இறையனாரகப்பொருளுரை மேற்கோள்.

(பொருளமுடிபு) ஒருபுடை [சிறபானமை] ஒததது, வேறு திரிபு உடையது - மறறவைகளெல்லாம ஒவவாமையை யுடையது,—புடைநூல ஆகும - சாாபு நூலாம; (எ - று)

எனவே முதனூல் வழிநூலகட்குச சிறபான்மை ஒததுப் பெருமபான மை வேறுபடடுள்ளது சாாபுநூலெனற தாயிறறு. இநநன்னூல - தொல காபபியததைநோகக வழிநூலும, அகததியததைநோககச சாாபுநூலுமாம.(அ)

[வழிநூல் சார்புநூல்கட்குச் சிறப்புவிதி ]

கூ. முனனோா மொழிபொருளே யனறி யவாமொழியும
பொனனேபோ ற போற்றுவ மெனபதறகும—முன்னோரின்
வேறுநூல செயதுமெனு மேறகோளில லென்பதறகுங்
கூறுபழஞ சூததிரததின கோள்

(இ - ள.) 'முனனோா மொழி பொருளே அனறி - முதனூல்செயதவா சொன்ன பொருளகளையே பெருமபாலும ஒததிருககவும சிறுபான்மை ஒத திருககவும் எடுததுச சொலவது மலலாமல, அவா மொழியும - அவாக ளுடைய சொற்களையும, பொனனே போல் போறறுவம - பொனனைப போலவே விருமபி வைததுககொளளககடவோம்', என்பதறகும - எனனுங கொள்கைககு அடையாளமாகவும,—'முனனோரின வேறுநூல செயதும எனும - முனனோா செயத நூலையே சொலலாமல அநநூலினினறும வழி நூல் சாாபுநூல் என வேறுநூலைச செயதோமாயினும, மேறகோள இல் - (இநநூலுள) ஆசிரியவசனம இல்லை,' என்பதறகும - எனறு-சொலலுங குறை ஒழிவதறகாகவும்,—பழஞ் சூததிரததின கோள கூறு - (அவாசொல்லிய) பழஞ்சூததிரஙகளையும ஒவ்வோரிடத்தில் எடுததுசசொலலககடவாய;' எ-று )

எனவே, வழிநூல் சாாபுநூல்களில் முன்னோர் கூறிய செய்யுள ஓரோ விடததில் இருககதலும இலககணமாயிறறு. தொல்காப்பியததிலிருந்தும பிற நூல்களிலிருந்தும சிறசில சூததிரஙகள் இந்நூலில் ஆஙகாஙகு எடுத்துக கொளளப்பட்டிருத்தல் காணக.

எனும் - எனினு மென்பதன் விகாரம ஆசிரியவசனம், மேறகோள், பழஞ்சூததிரக்கோள் என்பன - ஒருபொருட்சொறகள.

முன்னே 'போற்றுவம,' 'செய்தும்' என உளப்பாட்டுததன்மைப்பன்மை முற்றுககளாகவும், பின்னே 'கூறு' என முன்னிலை யேவலொருமைமுறறு கவும கூறியதனுல், இசசூததிரம, பலாகூடிப்பேசிப் பின்பு ஒருவனைநோககி முடிவு சொனனதாகச செய்யப்பட்ட தென அறிக. (கூ)

[நூறபொருட்பயன்.]

கO. அறம்பொரு ளின்பம்வீ டடைதல்நூற பயனே.

(இ - ள்.) அறம் - தருமமும், பொருள் - அாததமும், இனபம் காமமும், வீடு - மோக்ஷமும், (ஆகிய இந்நானகு புருஷாாததஙகளையும), அடைதல் - அடைவது,—நூல் பயன் - நூலால அடையும பிரயோசனமாம; (எ - று.)

[எழு மதம்]

௧௧. * எழுவகை மதமே உடன்படல் மறுத்தல்
பிறர்தம மதமேற் கொண்டு களைவே
தாஅ னாட்டித் தனாது நிறுப்பே
இருவர் மாறுகோ ளொருதலை துணிவே
பிறர்நூற் குற்றங் காட்டல் ஏனைப்
பிறிதொடு படாஅன் றனமதங் கொளலே.

(இ - ள) எழுவகை மதம் - எழுவகை மதங்களாவன —உடன்படல் - (பிறர்மதத்திற்குத் தான்) உடன்படுதலும், மறுத்தல் - (பிறர்மதத்தை) மறுத்தலும், பிறர்தம் மதம் மேற்கொண்டு களைவே - பிறர்மதத்தை ஒருவாறு அங்கீகரித்து (பின்பு) மறுத்துவிடுதலும், தான் நாட்டித் தனாது நிறுப்பே - தானே ஒருபொருளை எடுத்துத்தாபித்து அதனை (இடந்தோறும்) நிலைநிறுத்துதலும், இருவர் மாறுகோள் ஒருதலை துணிவே - ஒன்றற்கொன்று விரோதமாக இருவராலே கொள்ளப்பட்ட இரண்டு விஷயங்களுள் (ஒன்றை நீக்கி) மற்றொன்றைத் துணிந்து எடுத்துக்கொள்ளுதலும், பிறர் நூற் குற்றம் காட்டல் - பிறர்செய்த நூல்களிலுள்ள குற்றங்களை எடுத்துக் காட்டுதலும், ஏனை - மற்றும், பிறிதொடு படாஅன் தன் மதம் கொளல் - பிறர்மதத்தோடு கலவாதவனாய்த் தன்மதத்தையே தான் கொள்ளுதலுமாம்; (எ - று.)

மதம் - கொள்கை. இம் மதங்கட்கும், மேற் சொல்லப்படும் அழகு உத்தியென்பவற்றிற்கும் உதாரணம், இந்நூலுட் பின்வருமிடங்களிற் பெரும்பாலும் காட்டப்படும். (௧௧)

[பத்துக் குற்றம்.]

௧௨. குன்றக் கூறல் மிகைபடக் கூறல்
கூறியது கூறல் மாறுகொளக் கூறல்
வழூஉச்சொற் புணர்த்தல் மயங்க வைத்தல்
வெற்றெனத் தொடுத்தல் மற்றொன்று விரித்தல்
சென்றுதேய்ந் திறுதல் நின்றுபய னின்மை
என்றிவை யீரைங் குற்றம் நூற்கே.

(இ - ள்.) குன்றக் கூறல் - (குறித்தபொருளை விளக்குதற்கு வேண்டுஞ் சொற்களிற்) குறைவுபடச் சொல்லுதலும், மிகைபடக் கூறல் - (குறித்த பொருளை விளக்குதற்கு வேண்டுஞ் சொற்களினும்) அதிகப்படச் சொல்லுத

* இதுமுதல் நான்கு சூத்திரங்களிலுள்ள சொற்றொடர்களை யெழுதி 'இவ்வாறு சொன்னார் பாடலனாரென்னும் ஆசிரியரெனக் கொள்க' என்பர் யாப்பருங்கலக்காரிகை யுரையாசிரியர்.

லும், * கூறியது கூறல் - (முன் தான் ஒருகால்) சொன்னதொரு பொருளையே (பின்னும் காரணமின்றி) [அவசியமில்லாமற்] சொல்லுதலும், மாறு கொளக் கூறல் - (முன்சொன்னதற்குப் பின்சொல்வது) விரோதப்படச் சொல்லுதலும், வழூஉச் சொற் புணர்த்தல் - குற்றமுடைய சொற்களைச் சேர்த்துவைத்தலும், மயங்க வைத்தல் - (இதற்குப் பொருள் இன்னதென்று துணியக்கூடாமல் இதுவோ அதுவோ என்று) மயங்கும்படி வைத்தலும், வெற்றெனத் தொடுத்தல் - (பொருள் என்னுங் கருக் கொள்ளாது) வெளிறுபடச் சொற்களைச் சேர்த்துவைத்தலும், மற்றொன்று விரித்தல் - (சொல்லத் தொடங்கியபொருளைச் சுருக்கி) மற்றொருபொருளை (இடையிலே) விரித்துச் சொல்லுதலும், சென்று தேய்ந்து இறுதல் - செல்லச்செல்ல (ச் சொற்செறிவு பொருட்பொலிவுகள்) தேய்ந்து முடியச் சொல்லுதலும், நின்று பயன் இன்மை - (சொற்கள்) இருந்தும் (அவற்றுக்கு) ஒரு பிரயோஜனமும் இல்லாதொழியச் சொல்லுதலும், என்ற இவை—,—நூற்கு - நூலுக்கு, ஈர் ஐங் குற்றம் - பத்துக் குற்றங்களாம்; (எ - று.)

என்றிவை - விகாரம். 'வெற்றெனத்தொடுத்தல் - வியங்கியார்த்தப்பிரதானமாக வல்லாமற் கூறுதல்; (வியங்கியார்த்தம் - குறிப்புப்பொருள்.)

வடநூலார் கூறுகிற § அவ்யாப்தி, அதிவ்யாப்தி, அஸம்பவம் என்னுங் குற்றங்களும் இவற்றுள்ளே அடங்குமாறு அறிந்து அடக்கிக்கொள்க. (கஉ)

[பத்து அழகு]

கஙூ. சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்
நவின்றோர்க் கினிமை நன்மொழி புணர்த்தல்
ஓசை யுடைமை ஆழமுடைத் தாதல்
முறையின் வைப்பே உலக மலையாமை
விழுமியது பயத்தல் விளங்குதா ரணத்த
தாகுதல் நூலிற்கு அழகெனும் பத்தே.

(இ - ள்.) சுருங்கச் சொல்லல் - (சொற்கள் வீணாக விரியாமற்) சுருங்கிநிற்கச்சொல்லுதலும், விளங்க வைத்தல் - (அவ்வாறு சொல்லினும் யாவர்க்கும் பொருளைச் சந்தேகத்துக்கு இடமாகாமல்) விளங்கித்தோன்ற வைத்தலும், நவின்றோர்க்கு இனிமை - படிப்பவர்க்கு இன்பத்தைத் தருதலும், நல

* யாதாயினும் ஒருநிமித்தத்தால் ஒன்றனை முற்கூறி வேறொருநிமித்தத்தால் அதனையே பின்னுங் கூறுதல், அநுவாதமென்னுங் குணமாமென்க

§ அவ்யாப்தி - இலக்கியத்தின் ஏகதேசத்தில் இலக்கணமில்லாமை; 'பசுவிற்கு வெண்ணிற முண்டு' என்றல் போல்வன. அதிவ்யாப்தி - இலக்கியமல்லாததிலும் இலக்கணமிருப்பது; 'பசுவுக்குக் கொம்பு உண்டு' என்றல் போல்வன. அஸம்பவம் - இலக்கியமுழுவதிலும் இலக்கணமில்லாமை; 'பசுவுக்கு ஒற்றைக்குளம்பு உண்டு' என்றல் போல்வன.

மொழி புணாதகல் - நலலசொறகளைச சோதததுவைததலும, ஓசை உடைமை சநதவின்பமுடையதாதலும, ஆழம உடைத்து ஆதல் - (பாாகக்ப்பாாகக இவ் வளவெனறு வரையறுககபபடாமல) ஆழ்ந்தகருததுககளை யுடையதாதலும, முறையின வைப்பே - (சொல பொருள இயல அதிகாரம் முதலியவற்றை யாதாயினும ஓா ஏறற) முறைபபடி (வரிசைபபட) வைததலும, உலகம மலே யாமை - உயாநதோா வழககததோடு விரோதபபடாமற சொலலுதலும், விழு மியது பயததல - சிறநதபொருளைத் தருதலும, விளஙகு உதாரணததது ஆகு தல் - (எளிதில்) விளஙகததகக உதாரணஙகளை யுடையதாதலும, (என்னும இவை), நூலிறகு அழகு எனும பததுது - நூலுககு அழகென்று சொல்லப் படும் பததாகும; (எ - று.) (கரு)

[முபபத்திரணடு உததி.]

கச. நுதலிப புகுதல ஒத்துமுறை வைபபே
தொகுத்துச சுடடல வகுததுக காட்டல்
முடிததுக் காடடல் முடிவிடங கூறல
தானெடுத்து மொழிதல பிறன கோட் கூறல
சொற்பொருள விரிததல தொடாசசொற் புணர்ததல
இரடடுற மொழிதல ஏதுவின முடித்தல்
ஒபபின் முடிததல மாடடெறிந தொழுகல
இறநதது விலககல எதிரது போறறல
முன்மொழிநது கோடல பின்னது நிறுத்தல்
விகறபத்தின் முடித்தல முடிந்தது முடிததல
உரைத்து மென்றல உரைததா மென்றல
ஒருதலே துணிதல எடுத்துக காடடல
எடுத்த மொழியி னெய்த வைத்தல
இன்ன தல்ல திதுவென மொழிதல
எஞ்சிய சொலலி னெயதக கூறல்
பிறநூன முடிந்தது தானுடன் படுதல்
தன்குறி வழக்க மிகவெடுத தரைத்தல
சொலலின முடிவி னபபொருண் முடித்தல்
ஒன்றின முடிதத றன்னின முடிததல
உய்ததுணா வைபபென உததியெண் ணுன்கே.

(இ - ள்.) நுதலி புகுதல் - (இந்நூசசொல்வே னென்று முதலிற) சொல்லித தொடஙகுதலும், ஒதது முறை வைப்பு - இயல்களை (யாதாயி னும் ஓா ஏற்ற) முறையினபடி வைததலும், தொகுத்து சுட்டல் - (பலவற் றையும) திரட்டிசசொல்லுதலும், வகுதது காட்டல் (அவ்வாறு தொகுத்துச் சொல்லியவறறை வெவ்வேருக) விவரிததுச சொல்லுதலும், முடிதது காட் டல் - (மேலோா முடிததவாறு தான்) முடிததுககாட்டுதலும், முடிவு இடம்

கூறல் - (தான்சொல்லும் இலக்கணத்திற்கு) இலக்கியந்தோன்றுமிடத்தைச் சொல்லுதலும், தான் எடுத்து மொழிதல் - (பழஞ்சூத்திரங்களைத்) தான் (ஓரோரிடத்திலே) எடுத்துச்சொல்லுதலும், பிறன் கோள் கூறல் - பிறன் கொண்ட கொள்கையைத் (தனது நூலிற்) சொல்லுதலும், சொல் பொருள் விரித்தல் - சொல்லின் பொருள் வெளிப்படையாக விளங்கும்படி விவரித்துச் சொல்லுதலும், தொடர் சொல் புணர்த்தல் - (ஒன்றற்கொன்று) சம்பந்தமுடைய சொற்களைச் சேர்த்துவைத்தலும், இரண்டு உற மொழிதல் - (ஒரு வாக்கியத்தில்) இரண்டு [பல] பொருள் ஒருங்கே படும்படி சொல்லுதலும், ஏதுவின் முடித்தல் - (முன்பு காரணம் விளங்காமற் சொல்லப்பட்ட ஒன்றைப் பின்பு) காரணம் விளங்கக்காட்டி முடிவுசெய்தலும், ஒப்பின் முடித்தல் - (அங்கே சொல்லக் கூடாதாயினும் ஒன்றற்குத் தான் சொல்லும் இலக்கணம் வேறொன்றற்கும்) ஒத்துவருமாயின் (அதற்கும் அதுவே இலக்கணமாக இயைபில்லாததையும் அவ்விடத்து) உடன்கூட்டி முடிவுசெய்தலும், மாட்டெறிந்து ஒழுகல் - (ஒன்றற்குச் சொல்லப்பட்ட இலக்கணத்தை அதனைப் பெறுதற்கு உரிய மற்றொன்றற்கும்) மாட்டிச் சொல்லுதலும், இறந்தது விலக்கல் - முன்பு உள்ளதாய்ப் பின்பு வழங்காதாயின் அதனை விலக்குதலும், எதிரது போற்றல் - முன்பு இல்லாததாய்ப் பின்பு வழங்கிவருமாயின் அதனைத் தழுவிக் கொள்ளுதலும், முன் மொழிந்து கோடல் - முன்பு (ஓரிடத்து ஒன்றைச்) சொல்லிப் (பின்பு அதனை வேண்டுமிடந்தோறும்) எடுத்துக்கொள்ளுதலும், பின் அது நிறுத்தல் - முறை தவறாமல் முன் வைக்கவேண்டியதைப் பின்னே வைத்தலும், விகற்பத்தின் முடித்தல் - (விளங்குதற்பொருட்டுப்) பல வேறுபாடுகளின் சிறப்புவாய்பாட்டால் முடித்தலும், முடிந்தது முடித்தல் - (அவ்வாறு சிறப்புவாய்பாட்டால்) முடிந்ததைப் (புலப்படவேண்டிப் பொது வாய்பாட்டால் தொகுத்து) முடித்தலும், உரைத்தும் என்றல் - (பின்னே சொல்லப்படுவதை முன்னே ஒரு நிமித்தத்தினாற் சொல்லவேண்டின்) இதனைப் பின்னே சொல்வோமென்பது தோன்ற அங்கே சுருக்கிச் சொல்லுதலும், உரைத்தாம் என்றல் - (முன்னே ஒரு நிமித்தத்தினாலே சொல்லப்பட்டதைப் பின்னே சொல்லவேண்டியவிடத்து) இதனை முன்னேதானே சொன்னோமென்பது தோன்ற அங்கே மீளவுஞ் சொல்லாது விடுதலும், ஒருதலை துணிதல் - (இருவராலே ஒன்றற்கு ஒன்று விரோதமாகக் கொள்ளப்பட்ட இரண்டு பக்ஷங்களுள்) ஒருபக்ஷத்தைத் துணிந்து எடுத்துக்கொள்ளுதலும், எடுத்து காட்டல் - (தான்சொல்லும் இலக்கணத்திற்கு அமைந்த இலக்கியத்தைத் தானே) எடுத்துக்காட்டுதலும், எடுத்தமொழியின் எய்தவைத்தல் - தான் எடுத்துக்காட்டிய இலக்கியத்தில் (தான் சொல்லும் இலக்கணத்தைப்) பொருந்தியிருக்கவைத்தலும், இன்னது அல்லது இதுஎன மொழிதல் - (சந்தேகப்படநின்றவிடத்து) இதுவன்று இதுதானென்று துணிந்துசொல்லுதலும், எஞ்சிய சொல்லின் எய்தக் கூறல் - சொல்லாது விடப்பட்டவற்றிற்குஞ் சொல்லியவற்றால் (இலக்கணம்) பொருந்தச்சொல்லுதலும், பிற நூல் முடிந்தது தான் உடன்படுதல் - வேறுநூல்களிலே சொல்லப்பட்ட கொள்கையைத் தான் அங்கீகரித்தலும், தன் குறி வழக்கம் மிக எடுத்து உரைத்தல் - தான்

(நூதனமாகக்) குறித்து வழங்கியதை (ப் பல இடங்களில்) அதிகமாக எடுத்துச்சொல்லுதலும், சொல்லின் முடிவின் அப்பொருள் முடித்தல் - சொல் முடிந்தவிடத்து அதன்பொருளையும் முடியவைத்தலும், ஒன்று இனம் முடித்தல் தன் இனம் முடித்தல் - விதியால் ஒற்றுமைப்பட்டவற்றை ஒருங்குகூட்டி முடித்தல் = ஒன்றைச்சொல்லுமிடத்து அதற்கு இனமாகிய மற்றொன்றையும் (விரியாதிருக்கவேண்டி அதனுடனே) கூட்டி முடித்தலும், உய்த்துணர வைப்பு - (சிலசூத்திரவிதிகளைக்கொண்டு) ஆராய்ந்து அறியும்படி (ஒரு பொருளை) வைத்தலும், என - என்று, உத்தி - தந்திரயுக்திகள், — எண் நான்கு - முப்பத்திரண்டாம்; (எ - று.) — உத்தி = யுக்தி

'ஒன்றினமுடித்தல் தன்னினமுடித்தல்' என்பது - ஓர் உத்தி; இதனை இரண்டு உத்தியாகக்கொண்டு, 'உய்த்துணரவைப்பெனும்' என்ப பாடமோதி, அதனை உத்திக்கு விசேஷணமாக்கி உரைப்பாரும் உளர். அவ்வுரைக்கு, ஒன்றினம் - ஒருபொருட்கூட்டமும், தன்னினம் - பலபொருளீட்டமுமாம். மதத்தினுள்ளும் அழகினுள்ளும் வருவன சிலவற்றை உத்தியுள்ளும் கூறியது என்னையெனின், — கொள்கைபற்றி மதமென்றும் சிறப்புப்பற்றி அழகென்றும், இந்த மதம் அழகு முதலிய எல்லாம் புத்திநுட்பத்தால் அமைதல்பற்றி உத்தியென்றும் கூறப்பட்டன வெனக் கொள்க. தலைமைபற்றிக் கூறிய இம்முப்பத்திரண்டே யன்றி, உரையிற்கோடல், உடம்பொடுபுணர்த்தல், ஏற்புழிக்கோடல், மொழிந்தபொருளோ டொன்ற அவ்வயின் மொழியாததனையும் முட்டின்று முடித்தல் முதலாகப் பிறவும் சில உள்ளன வெனக் கொள்க; அவற்றையும் ஒருவாறு இவற்றில் அடக்கவுங்கூடும். (௧௪)

[உத்தி இன்னதென்பது]

௧௫. நூற்பொருள் வழக்கொடு வாய்ப்பக் காட்டி
ஏற்புழி யறிந்திதற் கிவ்வகை யாமெனத்
தகும்வகை செலுத்துதல் தந்திர வுத்தி.

(இ - ள்) நூல் பொருள் - ஓர் இலக்கணநூலினுள் சொல்லப்படுகின்ற பொருளை, வழக்கொடு வாய்ப்பக் காட்டி - உலகவழக்கும் செய்யுள்வழக்குமாகிய வழக்குகளோடு பொருந்தக் காண்பித்து, ஏற்பு உழி அறிந்து - (மற்றோரிலக்கிய நூலிலும்) ஏற்கும் இடத்தை அறிந்து, இதற்கு இ வகை ஆம் என - இவ்விடத்துக்கு இப்படி ஆமென்று நினைத்து, தகும் வகை - தக்கபடியாக, செலுத்துதல் - நடத்துவது, — தந்திரம் உத்தி - தந்திரயுக்தியாம்; (எ - று.)

தந்திரம், யுக்தி என்னும் வடசொற்களுக்கு - முறையே நூல் என்றும், பொருந்துமவிதம் என்றும் பொருள். (௧௫)

[ஓத்து.]

௧௬. நேரின மணியை நிரல்பட வைத்தாங்கு
ஓரினப் பொருளை யொருவழி வைப்பது
ஓத்தென மொழிப வுயர்மொழிப் புலவர்.

(இ - ள்) நேர் இனம் மணியை - ஒரு சாதியாயுள்ள இரத்தினங்களை, நிரல் பட - வரிசையாக வைத்து ஆங்கு - பதித்துவைத்தாற் போல,—ஓர் இனம் பொருளை - ஒருசாதியாயுள்ள பொருள்களை. ஒரு வழி வைப்பது-ஒரு வழிப்பட வைத்துச் சொல்வது, ஓத்து - இயலென்னும் உறுப்பாம், என - என்று. உயர் மொழி புலவர் - சிறந்த நூல்களை யறிந்த புலவர்கள், மொழிப - சொல்வார்கள்; (எ - று)—மொழி - நூலுக்குக் கருவியாகுபெயர்.

நேர்தல - ஒன்றுபடுதல். 'நேரினம்' எனவே, ஒருசாதியாயினும் தம்மில் ஒத்தனவே கூறலவேண்டுமென்பதாம். 'உயர்மொழிப்புலவர்' என்றது, அங்ஙனம் நூல்செய்தல உயர்ந்தோர்கட னென்றவாறு. ஓத்தெனினும், இய லெனினும் ஒக்கும்.

இதுவும், வருஞ்சூத்திரமும் - * தொல்காப்பியத்தினின்று இவ்வாசிரிய ரால எடுத்துக்கொள்ளப்பட்டன	(கசு)

[படலம்.]

கஎ. ஒருநெறி யின்றி விரவிய பொருளால்
பொதுமொழி தொடரி னதுபடல மாகும்

(இ - ள்.) ஒரு நெறி இன்றி விரவிய பொருளால் - ஒருவழிப்படாமற கலந்த [பலவேறுவகைப்பட்ட] பொருள்களோடு பொருந்தி, பொது மொழி தொடரின் - பொதுவகையாகக் கூறினால், அது—. படலம் ஆகும் - படல மென்னும் உறுப்பாம்; (எ - று.)

படலமெனினும், அதிகாரமெனினும் ஒக்கும். § இயலென்பது - ஒருசா திய பொருள்கொண்டது, படலமென்பது - பலசாதிப்பொருள்கொண்டது என அறிக. இயலென்பதற்கு உதாரணம்-இந்நூலில எழுத்தியலில எழுத்தி லக்கணமே வருதலும், பதவியலில பதவிலக்கணமே வருதலும், புணரியலில் புணர்ச்சியிலக்கணமே வருதலும், அதிகாரமென்பதற்கு உதாரணம் - எழுத் ததிகாரத்தில் இவ்விலக்கணங்களெல்லாம் பொருந்தி வருதலும் காண்க (கஎ)

[சூத்திரம்.]

கஅ. சில்வகை யெழுத்திற் பலவகைப் பொருளைச்
செவ்வ னாடியிற் செறித்தினிது விளக்கித்
திட்ப நுட்பஞ் சிறந்தன சூத்திரம்.

(இ - ள்) ஆடியின் - (பெரிய உருவங்களின் பிரதிபிம்பத்தை தன்னு ள்ளே செவ்வையாக அடக்கி இனிதாகக்காட்டுகின்ற சிறிய) கண்ணாடிபோல, சில் வகை எழுத்தில் - சிலவகை யெழுத்துக்களாலாகிய சொற்களில், பல் வகை பொருளை - பலவகைப்பட்டு அகன்ற பொருள்களை, செவ்வன் - செவ் வையாக, செறித்து - அடக்கி, இனிது விளக்கி - (நோக்குவார்க்கு) இனிய

* தொல்காப்பியம் - பொருளதிகாரம் - செய்யுளியல - சஎக, சஎஉ.

§ இத்தன்மை மாறியும் வரும்; திருக்குறள் முதலியவற்றிற் காண்க.

த்தாக (அப்பொருளை) விளங்கச்செய்தது,— திட்பம் - (குற்றமில்லாமையாற்) சொல்வலிமை பொருள்வலிமைகளும், நுட்பம் - (ஆழமுடைமையாற்) பொருள் நுணுக்கங்களும்; சிறந்தன - சிறந்துவருவன —சூத்திரம் சூத்திரங்களாம்; (எ - று.) (கஅ)

[சூத்திரநிலை]

கக. ஆற்றொழுக் கரிமா நோக்கந் தவளைப்
பாய்த்துப் பருந்தின்வீழ் வன்னசூத் திரநிலை.

(இ - ள்) சூத்திர நிலை-சூத்திரங்கள் ஒன்றோடொன்று பொருளால் தொடர்ந்துநிற்கும் நிலைகள்,— ஆற்று ஒழுக்கு இடையறாமல் ஒருமுகமாகவே செல்லுகின்ற) ஆற்றுநீரோட்டத்தையும், அரிமா நோக்கம் - (முன்னும்பின்னும் பார்க்கின்ற) சிங்கத்தின் பார்வையையும், தவளை பாய்த்து - (நடுவே சிறிது இடம்விட்டுக் குதிக்கின்ற)தவளையின் குதிப்பையும், பருந்தின் வீழ்வு-(நெடுந்தூரத்திலிருந்து ஒன்றைவௌவிப்போதற்குத் தலைகீழாக விழுகின்ற) பருந்தின் வீழ்ச்சியையும், அன்ன - போலவனவாம்; (எ - று.) (கக)

[சூத்திர வகை]

உ0. பிண்டந் தொகைவகை குறிப்பே செய்கை
கொண்டியல் புறனடைக் கூற்றன சூத்திரம்.

(இ - ள்.) சூத்திரம் - சூத்திரங்கள்,—பிண்டம் - (பலதிறப்பொருள்களையும் ஒருங்குதிரட்டிக்கூறும்) பிண்டசூத்திரமும், தொகை - (அப்பலதிறப் பொருள்களையும் வேறுவேறாகத் தொகுத்துச் சொல்லுந) தொகைச்சூத்திரமும், வகை - (அவ்வாறு தொகுத்துச்சொல்லப் பட்டவற்றை வேறுவேறாக வகுத்துச் சொல்லும்)வகைச்சூத்திரமும், குறி - (இவைஉயிர் இவைமெய்யென்பது முதலாக அறியவருவ) குறிச்சூத்திரமும், செய்கை - (புணர்ச்சிமுடிபு முதலியவற்றைச் செய்கின்ற)செய்கைச்சூத்திரமும், கொண்டு இயல் புறன் அடை - (இவற்றையெல்லாம்) ஏற்றுக்கொண்டு (இவற்றின்) புறத்து அடுத்து வரும் புறனடைச்சூத்திரமும் ஆகிய, கூற்றன-(ஆறு) பிரிவையுடையனவாம்.

இந்நூலில், பிண்டசூத்திரம் -“ நன்கியம்புவ னெழுத்தே” என்றாற் போலவன.தொகைச் சூத்திரம் -“பன்னிருபாற்றதுவே” என்றாற் போல்வன. வகைச்சூத்திரம் - “ மொழிமுதற்காரணமாம்” என்றாற் போல்வன. குறிச் சூத்திரம் - “அம்முத லீராறாவி” என்றாற் போல்வன. செய்கைச்சூத்திரம்- “ணனவல்லினம்வரட் டறவும்” என்றாற் போல்வன. புறனடைச்சூத்திரம் - “ இடையுரி வடசொலின்” என்றாற் போல்வன. (உ0)

[உரையின் பொதுவிலக்கணம்.]

உக. பாடங் கருத்தே சொல்வகை சொற்பொருள்
தொகுத்துரை யுதாரணம் வினாவிடை விசேடம்
விரிவதி காரந் துணிவு பயனோடு
ஆசிரிய வசனமென் றீரே ழுரையே.

(இ - ள்.) பாடம் - மூலபாடமெடுத்துரைத்தலும், கருத்து - (தாற்பரியத்தைச் சுருக்கமாக எழுதுவது) கருத்துரையும், சொல் வகை - பதங்களைப் பிரித்துரைத்தலும், சொல் பொருள் - சொல்லுக்குப் பொருளெழுதும் பதவுரையும், தொகுத்துரை - பதத்தைத் தனித்தனி எடுத்துப் பொருளெழுதாமல் தொகுப்பாக எழுதுகின்ற பொழிப்புரையும், உதாரணம் - உதாரணமெடுத்துரைத்தலும், வினா-(தானே) வினாவிக்கொள்ளுதலும், விடை-(தானே அவ்வினாக்களுக்கு) உத்தரமுரைத்தலும், விசேடம் (சூத்திரத்துஉள்ள பொருளன்றியும் அவ்விடத்துக்கு வேண்டுவனவற்றைத் தந்துரைத்தலும், விரிவு-(வேண்டுவனவற்றையெல்லாம்) விரித்துரைத்தலும், அதிகாரம் - அதிகாரத்தோடு பொருந்தக் காட்டியுரைத்தலும், துணிவு - (சந்தேகப்பட நின்றவிடத்து இதற்கு இதுவே பொருளெனத்) துணிந்துரைத்தலும், பயனொடு-(இவ்வாறுசொல்லியதனால் வந்த பயன் இதுவென் றுரைத்தலும், ஆசிரியவசனம் - ஆன்றோர் நூல்களினின்று மேற்கோள்காட்டியுரைத்தலும், என்று-, உரை - (நூலுக்கு) உரை, ஈர் ஏழ் - பதினான்குவகையாகச் செய்யப்படும்.

சொல்வகை எனபதற்கு-சொற்களுக்கு இலக்கணமுதலியன உரைத்தலென்பாரு முளர். (உக)

[காண்டிகையுரை]

உஉ. கருத்துப் பதப்பொருள் காட்டு மூன்றினும்
அவற்றொடு வினாவிடை யாக்க லானுஞ்
சூத்திரத் துட்பொருள் தோற்றுவ காண்டிகை.

(இ - ள்.) (மேற்கூறிய பதினான்கனுள்),கருத்து - கருத்துரையும்,பதப்பொருள் - பதவுரையும்,காட்டு - உதாரணமும் ஆகிய, மூன்றினும் - மூன்று வகைகளாலும்,—அவற்றொடு - அம்மூன்றனுடனே, வினா விடை ஆக்கலானும் - வினாவும் விடையும் ஆகிய இரண்டுவகைகளையுங் கூட்டிச்சொல்லுதலாலும்,—சூத்திரத்து உள் பொருள் - சூத்திரத்திலுள்ள பொருளை, தோற்றுவ - விளக்கியுரைப்பன,—காண்டிகை - காண்டிகையுரைகளாம்; (எ - று.)

'மூன்றினும்' எனப் பிரித்துக் கூறியதனால், வினாவிடை யின்றியும் காண்டிகையுரை வழங்கு மென்க. (உஉ)

[விருத்தியுரை.]

உங. சூத்திரத் துட்பொரு ளன்றியு மாண்டைக்கு
இன்றி யமையா யாவையும் விளங்கத்
தன்னுரை யானும் பிறநூ லானும்
ஐய மகல வைங் காண்டிகை யுறுப்பொடு
மெய்யினை யெஞ்சா திசைப்பது விருத்தி

(இ - ள்.) சூத்திரத்து உள் பொருள் அன்றியும் - சூத்திரத்தில் உள்ள பொருள்மாத்திரமே யல்லாமலும் ஆண்டைக்கு - அவ்விடத்துக்கு, இன்றி அமையா - இல்லாமல்முடியாத [அவசியமான], யாவையும் - எல்லாப் பொ

ருள்களும், விளங்க - விளங்கும்படி, தன் உரையானும் - தான் உரைக்கும் உரையாலும், பிற நூலானும் - ஆசிரியவசனங்களாலும், ஐய காண்டிகை உறுப்பொடு - (மேற்கூறிய) காண்டிகையுறுப்பு ஐந்தினாலும், ஐயம் அகல - சந்தேகந் தீர, மெய்யினை - மெய்யான பொருளை, எஞ்சாது - குறைவுபடாமல [விரித்து], இசைப்பது - உரைப்பது,—விருத்தி - விருத்தியுரையாம்.

மேற்கூறிய பதினன்கு வகையுங் கொண்டது விருத்தியுரையென்க. ()

## [நூல் என்னும் பெயர்க்குக் காரணம்.]

உச. பஞ்சிதன் சொல்லாப் பனுவ லிழையாகச்
செஞ்சொற் புலவனே சேயிழையா—எஞ்சாத
கையேவா யாகக் கதிரே மதியாக
மையிலா நூன்முடியு மாறு.

(இ - ள்.) தன சொல பஞ்சி ஆ - தன்சொற்களே பஞ்சு ஆகவும், பனுவல இழைஆக - செய்யுளே இழையாகவும், செம சொல் புலவனே சேயிழை ஆ-செவ்வையாகிய சொற்களை யறிந்த புலவனே நூற்கின்ற பெண்ணாகவும், எஞ்சாத வாயே கை ஆக - குறைவில்லாத வாயே கையாகவும், மதியே கதிர் ஆக - அறிவே நூற்குங்கதிராகவும், மை இலா நூல் - குற்றமில்லாத கல்வி நூல், முடியும் ஆறு - முடியுந்தன்மை, (இது); (எ - று.)

ஆதலால், நூலென்றது - உவமவாகுபெயராம் பஞ்சுகொண்டு இழைத்து நூற்கப்படும் நூல் போலச் சொற்கொண்டு தொடுத்து அமைக்கப்படுவது நூலென்க. பஞ்சி= பஞ்சு; பஞ்சு இதன எனறும பிரிக்கலாம். (உச)

## [இதுவும் அது.]

உரு. உரத்தின் வளம்பெருக்கி யுள்ளிய தீமைப்
புரத்தின் வளமுருக்கிப் பொல்லா—மரத்தின்
கனக்கோட்டந் தீர்க்குநூ லஃதேபோன் மாந்தர்
மனக்கோட்டந் தீர்க்குநூன் மாண்பு

* 'இனி நூலென்ற சொற்குப் பொருள் யாதோ வெனின்—நூல் போறலின், நூலென்ப; பாவைபோல்வாளைப் பாவையென்றது போல. என்னை? நுண்ணிய பலவாய பஞ்சினை நுனிகளாற் கைவல்மகடூஉத் தனது செய்றகைநலந் தோன்ற ஓரிழைப்படுத்தலாம், உலகத்து நூல்நூற்ற லென்பது அவ்வாறே, சுகிர்ந்துபரந்த சொற்பரவைகளாற் பெருமபுலவன் தனது உணர்வுமாட்சியின் பிண்டம் படலம் சூத்திரம் சூத்திர மென்னும் யாப்புநடைபடக் கோத்து நூற்கப்படலி னென்பது இனி, ஒருசாரார், நூல்போலச் செப்பஞ்செய்தலின் நூலென்ப. இனி, தந்திர மென்னும் வடமொழிப்பொருளை நூலென வழங்குதல் தமிழவழக் கெனக் கொள்க. இது, நூலென்ற சொற்குப் பொருள்' என்ற இறையனாரகப்பொருளுரை அறியத்தக்கது. இனி, நூல் என்ற பெயரை 'ஸூத்ரம்' என்றும் வடமொழியின் பொருளமைந்த தென்பாரும் உளர்.

(இ - ள.) புரத்தின் உரத்தினை வளம் பெருக்கி - உடம்பினுள் உள்ள அறிவின் வளத்தை வளர்வித்து,—உள்ளிய தீமை வளம் முருக்கி - நினைக்கப் பட்ட தீமையாகிய அறியாமையின் மிகுதியை ஒழித்து,—பொல்லா மரத்தின் கனம் கோட்டம் தீர்க்கும் நூல் அஃதே போல - கெட்ட மரத்தினது மிக்க கோணலைப் போக்குகின்ற எற்றுநூலின் அம்மாட்சிமை போலவே, நூல் மாண்பு - கல்வி நூலின் மாட்சிமை மாந்தர் மனம் கோட்டம் தீர்க்கும் மனிதரது மனத்தின் கோணலைப் போக்கும், (எ - று)

இதனாலும், நூல் - உவமவாகுபெயராம். மரம் முதலியவற்றின் கோணலைத் தீர்த்துச் செப்பஞ்செய்யும் எற்றுநூல்போல மனத்தின் கோணலைத் தீர்த்துச் செவ்வைசெய்வது நூலெனக. (உரு)

## உ. ஆசிரியனது வரலாறு.

[நல்லாசிரியனிலக்கணம்.]

உகூ. குலனருள் தெய்வங் கொள்கை மேன்மை
கலைபயில் தெளிவு கட்டுரை வன்மை
நிலமலை நிறைகோல் மலர்நிகர் மாட்சியும்
உலகிய லறிவோ டுயர்குண மிணையவும்
அமைபவன் நூலுரை யாசிரி யன்னே.

(இ - ள.) குலன் - உயர்குடிப்பிறப்பும், அருள் - ஜீவகாருண்யமும், தெய்வம் கொள்கை - கடவுள்வழிபாடும், மேன்மை - பெருந்தகைமையும், கலை பயில் தெளிவு - (பல) நூல்களிற் பழகிய தேர்ச்சியும், கட்டு உரை வன்மை - (நூற்பொருள்களை மாணாக்கர் எளிதில் உணரும்படி) தொடுத்துச் சொல்லுகின்ற சொல்வன்மை [போதநாசக்தி] யும், நிலம் மலை நிறைகோல் மலர் நிகர் மாட்சியும் - பூமியையும் மலையையும் தராசுக்கோலையும் பூவையும் ஒக்கின்ற குணங்களும், உலகு இயல் அறிவோடு - உலகநடையை யறிகிற அறிவும், உயர் குணம் இணையவும் - இவைபோல்வன பிற உயர்ந்த குணங்களும், அமைபவனே - பொருந்தியிருக்கப்பெற்றவனே,—நூல் உரை ஆசிரியன் - நூலைக் கற்பிக்கும் ஆசிரியனாவான்; (எ - று.)

நிலம் மலை நிறைகோல் மலர் நிகர் மாட்சியை, அடுத்த நான்கு சூத்திரங்களால் முறையே கூறுவர் ஈற்றிலுள்ள பிரிநிலையேகாரம், பிரித்துக்கூட்டப்பட்டது. (உகூ)

[க. நிலமாட்சி.]

உஎ. தெரிவரும் பெருமையுந் திண்மையும் பொறையும்
பருவ முயற்சி யளவிற் பயத்தலும்
மருவிய நன்னில மாண்பா கும்மே.

(இ - ள.) தெரிவு அரு - (ஓரிடத்தில் நின்று முழுவதுங்) காணுதற்கு அரிய, பெருமையும் - (உருவப்பரப்பின்) பெருமையும், திண்மையும் - (பெரிய

---

* " அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை, இகழ்வார்ப் பொறுத்தல் தலை ' என்ற திருக்குறளைக் காண்க.

பாரஞ்செய்து தன்மேல் நெருங்கியவைகளால் கலங்காத) வலிமையும், பொறையும் - (தன்னையடுத்த மனிதர் தோண்டுதல் முதலிய குற்றங்களைச் செய்தாலும் பொறுக்கின்ற) பொறுமையும், பருவம் முயற்சி அளவின் பயத்தலும் - தக்கபருவத்திலே (உழவர்செய்கின்ற) முயற்சியளவுக்குத் தகுதியாக (அவர்க்குப்) பயன் கொடுத்தலும், — நல் நிலம் மருவிய மாண்பு ஆகும் - நல்லநிலத்தினிடத்துப் பொருந்திய நற்குணங்களாம்; (எ - று.)

பிறரால் வகுத்தறியப்படாத கல்வியறிவின் பெருமையும், பெரியவாதஞ் செய்து தன்மேல் நெருங்கினவரால் கலங்காத வல்லமையும், தன்னையடுத்தவர் இகழ்தல் முதலிய குற்றங்களைச் செயினும் பொறுக்கும் பொறுமையும், மாணுக்கர் செய்யும் முயற்சியளவிற்குத் தக அவர்க்குப் பயனைத் தருதலும் ஆசிரியனிடத்துப் பொருந்துங் குணங்களாதலால், நிலம் அவனுக்கு உவமையாமென அறிக. 'தெரிவரு' என்பதைத் திண்மைபொறைகளோடுங் கூட்டுக. (உஎ)

[உ. மலைமாட்சி]

உஅ. அளக்க லாகா வளவும் பொருளுந்
துளக்க லாகா நிலையுந் தோற்றமும்
வறப்பினும் வளந்தரும் வண்மையு மலைக்கே.

(இ - ள்) அளக்கல் ஆகா - அளவுசெய்தற்கு அரிய, அளவும் - தன் வடிவத்தின் அளவும், பொருளும் - பலவகைப்பொருள்களை யுடைமையும், துளக்கல் ஆகா நிலையும் (எப்படிப்பட்ட வலிமையுடையவர்களாலும்) அசைக்கப்படாத உருவத்தின் நிலைமையும், தோற்றமும் - (நெடுந்தூரத்திலுள்ளாராலும்) காணப்படுகின்ற உயர்ச்சியும், வறப்பினும் வளம் தரும் வண்மையும் - (மழைபெய்யாமல்) வறந்துபோனாலும் (தன்னைச்சேர்ந்த உயிர்கட்கு) நீர்வளத்தைக் கொடுக்கின்ற கொடையும், — மலைக்கு - மலைக்கு (உள்ள நற்குணங்களாம்); (எ - று.)

அளவுகாணக்கூடாத கல்வியினளவும், பலவகை நூற்பொருள்களும், எப்படிப்பட்ட புலமையுடையோராலும் அசைக்கப்படாத கல்வியறிவின் நிலையும், நெடுந்தூரத்திலுள்ளாராலும் அறியப்படும் உயர்ச்சியும், பொருள் வருவழி வறந்தாலும் தன்னைச்சேர்ந்த மாணுக்கர்க்குக் கல்விப்பொருளைக் கொடுக்குங் கொடையும் ஆசிரியனுக்கு உள்ள குணங்களாமாதலால், மலை அவனுக்கு உவமையாமென அறிக. 'அளக்கலாகா' என்பதைப் பொருளோடுங் கூட்டுக. மலைக்கு மாண்பாகும் என முற்சூத்திரத்தினின்றும் வினை வருவித்து முடிக்க. (உஅ)

[௩. நிறைகோல்மாட்சி]

உ௯. ஐயந் தீரப் பொருளை யுணர்த்தலும்
மெய்ந்நடு நிலையு மிகுநிறை கோற்கே.

*"சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற், கோடாமை சான்றோர்க்கு அணி" என்ற திருக்குறள் காணத்தக்கது.

(இ - ள்.) பொருளை ஐயம் தீர உணர்த்தலும் - (சிறக்கப்பட்ட) பொருளினளவைச் சந்தேகந் தீரக் காட்டுதலும், மெய் நடு நிலையும் - உண்மை பெறத் தான் (இரண்டுதட்டுக்கும்) நடுவே (ஒருபாற்கோணுமல்) நிற்றலும், —நிறைகோற்கு மிகும் - தராசுகோலுக்கு (நற்குணங்களாக) மிகும்; (எ - று)

வினவப்பட்ட சொற்பொருளினியல்பைச் சந்தேகந்தீர அறிவித்தலும், புலவர் இருவர் மாறுபட்டாராயின் உண்மைபெறத் தான் அவ்விருவர்க்கும் நடுவாகப் பக்ஷபாதமின்றி நிற்றலும் ஆசிரியனிடத்துக் குணங்களாக மிகு மாதலால், நிறைகோல் அவனுக்கு உவமையா மென அறிக. ஆசிரியனுக்கு மெய்ந்நடுநிலை - மாணுக்கர்பலருள் ஒருவனிடத்து விருப்பாகவும் ஒருவனிடத்து வெறுப்பாகவும் உணர்த்தாமையுமாம். (உகூ)

[ச மலர்மாட்சி.]

௩௦. மங்கல மாகி யின்றி யமையாது
யாவரு மகிழ்ந்து மேற்கொள மெலகிப்
பொழுதின் முகமலர் வுடை யது பூவே

(இ - ள்) மங்கலம் ஆகி - சுபகாரியங்கட்கு உரியதாய், இன்றி அமையாது - (அலங்காரிக்குத் தான்) இல்லாமல் (யாதொருசெயலையும்) முடியாதாக, யாவரும் மகிழ்ந்து மேல் கொள - கண்டோரெல்லாரும் விரும்பி மேலாகத் தனனைச் சூடிக்கொள்ள, மெலகி - மென்மைக்குணமுடையதாய், பொழுதில் முகம் மலர்வு உடையது - மலர்தற்கு உரிய காலத்தில் முகமலர் தலை யுடைமை,—பூ பூவின் குணமாம்; (எ - று.)

சுபகாரியத்துக்கு உரியனுயச் சிறப்பிக்குத் தான் இல்லாமல் யாதொரு செயலையும் முடியாதாகக் கண்டோரெல்லாரும் விரும்பிமேலாகத் தன்னை வைத்துக்கொள்ள மெல்லிய குணமுடையவனுகிப் பாடஞ்சொல்லுதற்குரிய காலத்தில் முகமலர்ச்சியை யுடையவனுயிருத்தல் ஆசிரியனுக்குக் குணமாதலால், பூ அவனுக்கு உவமையா மென அறிக. (௩௦)

[ஆசிரியராகாதவர்]

௩க. மொழிகுண மின்மையு மிழிகுண வியல்பும்
அழுக்கா றவாவஞ்ச மச்ச மாட லும்
கழற்குட மடற்பனை பருத்திக் குண்டிகை
முடத்தெங் கொப்பென முரண்கொள் சிந்தையும்
உடையோ ரிலரா சிரியரா குதலே.

(இ - ள்.) மொழி குணம் இன்மையும் - பாடஞ்சொல்லுங் குணமில்லா மையையும், இழி குணம் இயல்பும் - தாழ்ந்த குணமாகிய சுபாவத்தையும், அழுக்காறு - (மாணுக்கர்க்கு வரும் கல்வியைக்குறித்துக் கொள்ளும்)பொறாமையையும், அவா - (செல்வத்தின்மேல் அதிகமாகவைக்கும்) ஆசையையும், வஞ்சம் - (மெய்ப்பொருளைமறைத்துப் பொய்ப்பொருளைக்கூறி) வஞ்சித்தலையும், அச்சம் ஆடலும் - (கேட்பவர்க்கு) அச்சமுண்டாகப் பேசுதலையும்,

கழல்குடம் மடற்பனை பருத்திக்குண்டிகை முடத்தெங்கு ஒப்பு என முரண் கொள் சிந்தையும் - கழற்காய்பெய்த குடமும் கூரிய கருக்கு மடல்கள் விரியப்பெற்ற பனைமரமும் பஞ்சு அடைத்த குடுக்கையும் வளைந்த தென்னைமரமும் (ஆகிய நான்கும் தமக்கு ஒப்பென்று சொல்லும்படி மாறுபாடுகொண்ட மனத்தையும் உடையோர் - உடையவர்கள்,—ஆசிரியர் ஆகுதல் இலர் - கற்பிக்கும் ஆசிரிய ராகுத லிலராவர் [ஆசிரியராகார்]; (எ - று.)

இனி, 'மொழிகுணமின்மை' என்பதற்கு - கீழ் நல்லாசிரியர்க்குச் சொன்ன நற்குணங்க ளில்லாமை யென்றும், போதிக்குந் திறமில்லாமை யென்றும், 'அச்சமாடல்' என்பதற்கு - சபைக்கு அஞ்சுதலையுடைமை யென்றும் பொருள் கொள்ளலாம். கழற்குடம் முதலியவற்றின் தன்மையை, மேல் நான்கு சூத்திரங்களால் முறையே கூறுவர். (௩௧)

[க. கழற்குடத்தின் தன்மை.]

௩௨ பெய்தமுறை யன்றிப் பிறழ வுடன்றருஞ்
செய்தி கழற்பெய் குடத்தின் சீரே.

(இ - ள்) பெய்த முறை அன்றி - (முன்பு தன்னுள்ளே) இட்ட முறையின்படி யல்லாமல், பிறழ - (முன் இடப்பட்டவையும் பின் இடப்பட்டவையும் அம்முறை) மாறிப்போம்படி, உடன் தரும் - (கொட்டும்போது) விரைவிலே (தன்னுள்ளே கொண்ட கழற்காய்களை) கொடுக்கின்ற, செய்தி - செய்கை,—கழல் பெய் குடத்தின் சீர் - கழற்காய்பெய்த குடத்தின் தன்மையாம்; (எ - று.)

தாம் கற்றுக்கொண்டமுறையினு லல்லாமல் முன் பின்னாக அம்முறை மாறுபடப் போதிக்கும்போது தம்முள்ளே கொண்ட நூற்பொருள்களை விரைவிலே தருகின்ற செய்கை ஆசிரியராகாதவரது குற்றமாதலால், கழற்குடம் அவர்க்கு உவமையா மென அறிக. (௩௨)

[உ. மடற்பனையின் தன்மை.]

௩௩. தானே தரக்கொளி னன்றித் தன்பால்
மேவிக் கொளக்கொடா விடத்தது மடற்பனை.

(இ - ள்.) தானே தர - (தன் பழங்களைத்) தானே கொடுக்க, கொளின் அன்றி - கொண்டா லல்லாமல், தன்பால் மேவி (ஒருவர்) தன்னிடம் நெருங்கி ஏறிவந்து, கொள - பறித்துக்கொள்ளும்படி, கொடா இடத்தது - இடங்கொடாதது,—மடல் பனை - (தன்வடிவமுழுவதும்) கூரிய கருக்குமடல்கள் விரியப்பெற்ற பனைமரத்தின் தன்மையாம்; (எ - று.)—இம்மடற்பனையிலேறுவார் அம்மடல்களின் கருக்கினுற கொடும்புண்படுவ ரென்க.

தாமே தம்மிடத்திலுள்ள நூற்பொருள்களைச் சொல்லப் பிறர் அறிந்து கொண்டா லல்லாமல் ஒருவர் தம்மிடம் நெருங்கி வந்து வினவி அறிந்து கொள்ள இடங்கொடாதவர் ஆசிரியராகாதவ ராதலால், மடற்பனை அவர்க்கு உவமையா மென அறிக. கொடாவிடத்தது - விகுதி பிரித்துக் கூட்டப்பட்டது. (௩௩)

[௩. பருத்திக்குண்டிகையின் தன்மை]

௩௪. அரிதிற் பெயக்கொண் டப்பொரு டான்பிறர்க்
கெளிதீ வில்லது பருத்திக் குண்டிகை.

(இ - ள்) அரிதின் பெய்து கொண்டு - (பஞ்சை உட்கொண்டபோதும்) அருமையாக [வருத்தத்தோடு] (சிறிதுசிறிதாக) அடைக்கத் (தன்னுள்ளே) கொண்டு, அ பொருள் - அப்பஞ்சை, தான் பிறர்க்கு எளிது ஈவு இல்லது - (கொடுக்கும்போது) தான் பிறர்க்கு எளிதிற்கொடாதது,—பருத்தி குண்டிகை - பஞ்சு அடைத்த குடுக்கையின் தன்மையாம்; (எ - று.)

கல்வியைக் கற்றபோதும் வருத்தத்தோடு சிறிதுசிறிதாகக் கற்பிக்கத் தாம் அறிந்துகொண்டு பாடஞ்சொல்லும்போதும் அக்கல்வியைத் தாம் பிறர்க்கு எளிதிற்கொடாதவர் ஆசிரியராகாதவ ராதலால், பருத்திக்குண்டிகை அவர்க்கு உவமையா மென அறிக தன்வாய் சிறியதாதலாற் சிறிதுசிறிதாக வேகொண்டு அவ்வாறே கொடுக்கின்ற குண்டிகைபோல, தமதுணர்வு சிறியதாதலாற் சிறிது சிறிதாகவே கற்று மாணாக்க னுணர்வு பெரியதாயினும் அவ்வாறே கொடுப்பவ ரென்றபடி (௩௪)

[௪. முடத்தெங்கின் தன்மை.]

௩௫ பல்வகை யுதவி வழிபடு பண்பின
அல்லோர்க் களிக்கு மதுமுடத் தெங்கே

(இ - ள்.) பல் வகை உதவி - (நீர்பாய்ச்சுதல்முதலிய) பலவகைகளாலும் உபகரித்து, வழிபடு பண்பின் - (தனக்கு) வழிபாடுசெய்கின்ற [போற்றிவளர்க்கின்ற] தன்மையினின்றும், அல்லோர்க்கு - அல்லாத பிறர்க்கு, அளிக்கும் அது - (தன்காய்களைத்) தருவது,—முடம் தெங்கு - (வேலிக்கு வெளிப்புறத்தே) வளைந்த தென்னை மரத்தின் தன்மையாம்; (எ - று.)

பொருள்கொடுத்தல் முதலிய பலவகைகளாலும் உபகரித்துத் தமக்கு வழிபாடுசெய்யும் நன்மாணாக்கர்க்குத் தாராமல் அத்தன்மையரல்லாத பிறர்க்குத் தாம் கற்ற நூற்பொருளைத் தருபவர் ஆசிரியராகாதவ ராதலால், முடத்தெங்கு அவர்க்கு உவமையா மென அறிக. (௩௫)

## ௩. பாடஞ்சொல்லுதலின் வரலாறு.

௩௬. ஈதல் வியல்பே யியம்புங் காலைக்
காலமு மிடனும் வாலிதி னோக்கிச்
சிறந்துழி யிருந்துதன் றெய்வம் வாழ்த்தி
உரைக்கப் படும்பொரு ளுள்ளத் தமைத்து
விரையான் வெகுளான் விரும்பி முகமலர்ந்து
கொள்வோன் கொள்வகை யறிந்தவ னுளங்கொளக்
கோட்டமில் மனத்தி னூல் கொடுத்த லென்ப.

(இ - ள்) ஈதல் - (ஆசிரியன் மாணாக்கர்க்கு நூலைக்) கற்றுக்கொடுத்த வினது, இயல்பு - முறைமையை, இயம்பும் காலை - சொல்லும்போது,—காலமும் இடனும் (இருவர்க்கும் உரிய) காலத்தையும் இடத்தையும், வாலிதின் நோக்கி - செவ்வையாக ஆராய்ந்துபார்த்து, சிறந்த உழி இருந்து - மேம்பட்ட இடத்தில் இருந்து தன தெய்வம் வாழ்த்தி - தான் வழிபடு கடவுளைத் துதித்து, உரைக்கப்படும் பொருள் உள்ளத்து அமைத்து - (தன்னால்) பாடஞ் சொல்லப்படும் நூற்பொருளைத் தன் மனத்தில் பொருத்தமாக முன்னமே நிறைத்து வைத்துக்கொண்டு, விரையான் - விரைவுபடாமலும், வெகுளான் - கோபியாமலும், விரும்பி - விருப்பத்தோடுகூடி, முகம் மலர்ந்து - மலர்ந்த முகமுடையவனாய், கொள்வோன் கொள் வகை அறிந்து - கற்றுக் கொள்ளும்மாணாக்கன் தன் மனத்தில் கொள்ளுந்தன்மையை அறிந்து கொண்டு, அவன் உளம் கொள - அவன் மனத்தில் ஏற்றுக்கொள்ளும்படி, கோட்டம் இல் மனத்தின் - மாறுபாடில்லாத நன்மனத்துடனே, நூல் - நூற்பொருளை, கொடுத்தல - கற்றுக்கொடுத்தலாம், என்ப - என்று சொல்வா, (அறிவுடையோர்) எ - று ;—சிறந்துழி - விகாரம் கொள்வோன் கொள்வகை - பாடங்கேட்பவனது அறிவின் திறம் (௩௬)

## ௪. மாணாக்கனது வரலாறு.

[மாணாக்கராதற்கு உரியவர்.]

௩௭. *தன்மக னாசான் மகனே மன்மகன்
பொருணனி கொடுப்போன் வழிபடு வோனே
உரைகோ ளாளற்கு உரைப்பது நூலே.

(இ - ள்.) தன மகன - தனது புத்திரனும் ஆசான் மகன் - தனது ஆசிரியனது புத்திரனும், மன மகன்-அரசனது புத்திரனும், பொருள் நனி கொடுப்போன - செல்வத்தை மிகுதியாகக் கொடுப்பவனும், வழிபடுவோன் - (தனக்கு) வழிபாடுசெய்பவனும், உரை கோளாளற்கு - (தான்சொல்லும்) உரையை (விரைவிலே) மனத்திற்கொள்ளும் அறிவுடையவனும் ஆகிய இவர்கட்கு, நூல் உரைப்பது - நூல் சொல்லத்தக்கதாம்; (எ - று.)

தன்மகன முதலிய நால்வர்க்கும் வழிபாடின்றியும் வுரைக்கவேண்டுமென்பார் அவரை முன்வைத்து, உரைகோளாளனும் வழிபடுதல் வேண்டுமென்று அறிவித்தற்கு அவனை வழிபடுவோனுக்குப்பின்னே வைத்தார். (உஎ)

[மாணாக்கரின் வகை - ௩]

௩௮. அன்ன மாவே மண்ணொடு கிளியே
இல்லிக் குடமா டெருமை நெய்யரி
அன்னா தலையிடை கடைமா ணாக்கர்.

(இ - ள்.) அன்னம் ஆவே - அன்னப்பறவையும் பசுவும் என்னும் இரண்டையும், மண்ணொடு கிளியே - நிலமும் கிளியும் என்னும் இரண்டையும்,

* தொல்காப்பியத்து இளம்பூரணருரை மேற்கோள்.

இல்லிக்குடம் ஆடு எருமை நெய்யரி - சில்லிக்குடமும் ஆடும் எருமையும் பன்னாடையும் என்னும் நான்கையும் அன்னர் - ஒப்பவர்,— தலை இடை கடை மாணாக்கர்-(முறையே) உத்தமமாணாக்கரும் மத்திமமாணாக்கரும் அதம மாணாக்கருமாவர்; (எ - று.)—இது முறைநிரனிறைப்பொருள்கோள்.

இவற்றுள், அன்னம் பாலையும் நீரையும் வேறு பிரித்துப் பாலைமாத்திரம் உட்கொண்டு நீரை நீக்கிவிடுதல்போல முதல்மாணாக்கர் சாரத்தையும் அசாரத்தையும் வேறுபிரித்துச் சாரத்தை உட்கொண்டு அசாரத்தை விலக்கிவிடுதலாலும், பசு மிக்கபுல்லுள்ள இடத்தைக் கண்டால் அப்புல்லை வயிறு நிரம்ப மேய்ந்து பின்பு ஓரிடத்தில் இருந்து சிறிதுசிறிதாக அதனை வாயில் வருவித்துக்கொண்டு மென்று தின்று ஜீரணப்படுத்துதல்போல முதல்மாணாக்கர் மிக்க கல்வியுள்ள ஆசிரியனைக் கண்டால் அக்கல்வியை உள்ளம்நிரம்பக் கேட்டு உட்கொண்டு பின்பு ஓரிடத்தில் இருந்து அதனைச் சிறிதுசிறிதாக நினைவிற் கொண்டுவந்து சிந்தித்துத் தெளிதலாலும்; அவர்க்கு இவ்விரண்டும் உவமையாயின பசுவுக்குப் புல்மேய்தலும் அசைவுபோட்டு மெல்லுதலுமே முக்கியமான தொழில்களாதல்போல, இடைவிடாமற் பாடங்கேட்டலும் சிந்தித்தலுமே தலைமாணாக்கர்க்கு முக்கியமான தொழில்களா மென்றபடி.

நிலம் உழவர் வருந்திப் பயிர்செய்யும் முயற்சியளவுக்குத் தக்க விளைவைத் தருதல்போல நடுமாணாக்கர் ஆசிரியன் கற்பித்த முயற்சியளவுக்குத் தக்க கல்வியறிவையே காட்டுதலாலும், கிளி தனக்குக் கற்பித்த சொல்லையல்லாமல் வேறொன்றையுஞ் சொல்லமாட்டாமை போல இடைமாணாக்கர் தமக்குக் கற்பித்த நூற்பொருளையல்லாமல் வேறொரு நூற்பொருளையுஞ் சொல்லமாட்டாமையாலும், அவர்க்கு இவ்விரண்டும் உவமையாயின. ஏறாமற் குறையாமற் சொல்வித்தபடி சொல்வது, கிளிக்கு இயல்பு.

இல்லியுள்ள குடம் நீரை வார்க்கவார்க்கப் புறத்தே ஒழுகவிட்டு எப்பொழுதும் நிரம்பாமைபோலக் கடைமாணாக்கர் ஆசிரியர் தமக்கு நூற்பொருளைக் கற்பிக்கக் கற்பிக்க மனத்திற்கொள்ளாது மறந்து எப்பொழுதும் கல்வி நிரம்பாமையாலும், ஆடு ஒருசெடியிலே தன்வயிறு நிரம்பும்படி தழைநிறைந்திருந்தாலும் அதனை வயிறுநிரம்ப மேயாமற் சிறிது கடித்தமாத்திரத்திலே விட்டுப் பல செடிகளிலுஞ் சென்று சிறிதுசிறிது மேய்ப்புகு மியல்பினதாய் எங்கும் வயிறுநிரம்பாமைபோல ஓராசிரியனிடத்தே தமக்குப் புலமை நிரம்பும்படி கல்வி மிக்கிருந்தாலும் புலமைநிரம்ப அவனிடங் கற்றுக்கொள்ளாமல் அவனிடம் ஒருநூலைச் சிறிது கற்றமாத்திரத்திலே விட்டுப் பலரிடத்தும் போய்ச் சிறிதுசிறிதாகப் பல நூல்களைப் பாடங்கேட்கப்புக்கு எங்கும் புலமை நிரம்பாமையாலும், எருமை தெளிந்தநீரைக் கலக்கிக் குடித்தல்போலக் கடைமாணாக்கர் ஆசிரியனது நன்மனத்தை வருத்திக்கலங்கச்செய்து பின்பு அவன் வெறுப்புக்கொண்டு பாடஞ்சொன்னதைக் கேட்டுப் போதலாலும், பன்னாடையானது நெய் தேன் முதலியவற்றை வடிகட்டுதற்பொருட்டுத் தன்மேல் வார்க்கும்போது அவற்றின்சாரத்தைக் கீழேயொழுக

விட்டு அசாரமான கசட்டையே தன்னிடந் தங்கப்பெற்றுக்கொள்ளுதல் போலக் கடைமாணாக்கர் தமக்கு நல்லாசிரியன் நூல்கற்பிக்கும்போது அவன் வாயினின்று வந்தவற்றில் விதியாகிய நற்பொருள்களையெல்லாம் மறந்து விட்டு விலக்காகிய தீப்பொருள்களைப் பற்றிக்கொள்ளுதலாலும், இந்நான்கும் கடைமாணாக்கர்க்கு உவமையாயின (௩அ)

[மாணாக்கராகத் தகாதவர்]

௩௯ களிமடி மானி காமி கள்வன்
பிணியன் ஏழை பிணக்கன் சினத்தன்
துயில்வோன் மந்தன் தொன்னூற் கஞ்சித்
தடுமா றுளத்தன் தறுகணன் பாவி
படிறனின் னோர்க்குப் பகரார் நூலே

(இ - ள்.) களி - கட்குடியனும், மடி - சோம்பேறியும், மானி - அகங்காரியும், காமி - காமமுடையவனும், கள்வன் - திருடனும், பிணியன் - நோயாளியும், ஏழை - அறிவில்லாதவனும், பிணக்கன் - மாறுபாடுடையவனும், சினத்தன் - கோபமுள்ளவனும், துயில்வோன் - மிகுதியாகத் தூங்குபவனும், மந்தன் - (சொன்னதை விரைவில் அறிந்துகொள்ளும்) நுட்பமில்லாதவனும், தொல் நூற்கு அஞ்சித் தடுமாறு உளத்தன் - பழைய நூல்களின் பரப்பைக் கண்டு அச்சங்கொண்டு கலங்குகின்ற மனமுள்ளவனும், தறுகணன் - (அஞ்சத்தக்கவைகட்கு) அஞ்சாதவனும், பாவி - பாவத்தொழில் செய்பவனும், படிறன் - பொய்ம்மையுடையவனும், இன்னோர்க்கு - இத்தன்மையவர்க்கு, நூல் - நூலை, பகரார் - சொல்லார், (ஆசிரியர்); (எ - று.)—காமி - தூர்த்தன்

'நுண்ணுணர்வின்மை வறுமை", 'அறிவிலார், என்னுடையரேனு மிலர்" ஆதலால் ஏழையென்பதற்கு - அறிவில்லாதவனென்று உரைக்கப்பட்டது; பொருளில்லாதவனென்றுங் கொள்ளலாம்; மிக்க தரித்திரனுக்கு மனம் ஒரு நிலையில் நில்லாதாதலால், அவன், கல்விக்கு உதவான்; அவனுக்குக் கல்வி பயிற்ற வேண்டுமாயின் உணவு உடை உறையுள் முதலியன கிடைக்கத் தக்க வகை செய்தே பயிற்றவேண்டுமென்க (௩௯)

## ௫. பாடங்கேட்டலின் வரலாறு.

[பாடங்கேட்கும் முறை.]

௪0 கோடல் மரபே கூறுங் காலைப்
பொழுதொடு சென்று வழிபடல் முனியான்
குணத்தொடு பழகி அவன்குறிப் பிற்சார்ந்து
இருவென இருந்து சொல்லெனச் சொல்லிப்
பருகுவ னன்ன ஆர்வத்த னாகிச்
சித்திரப் பாவையி னத்தக வடங்கிச்
செவிவா யாக நெஞ்சுகள னாகக்
கேட்டவை கேட்டவை விடாதுளத் தமைத்துப்
போவெனப் போதல் என்மனார் புலவர்.

(இ - ள்) கோடல் மரபு - பாடங்கேட்டலின் விதத்தை, கூறும் காலை சொல்லும்பொழுது — பொழுதொடு சென்று - (தக்க) காலத்திலே போய், வழிபடல் முனியான் - வழிபாடு செய்தலில் வெறுப்பில்லாதவனாய் [மிக்க விருப்பமுள்ளவனாய்], குணத்தொடு பழகி (ஆசிரியனது) குணத்துக்குத் தக்கபடி பழகி, அவன் குறிப்பின் சார்ந்து - அவன் குறிப்பின் வழியிலே சேர்ந்து [தான் வரலாமென்ற ஆசிரியன் கருத்தைக் குறிப்பால் நுட்பமாக அறிந்து கிட்டி], இரு என இருந்து - 'இரு' என்று (ஆசிரியன்) சொன்னபின்பு இருந்து, சொல் என சொல்லி - 'படி' என்று (ஆசிரியன்) சொன்னபின்பு படித்து, பருகுவன் அன்ன ஆர்வத்தன் ஆகி - மிக்க தாகமுள்ளவன் நீரினிடத்துக்கொள்ளும் விருப்பம்போலத் தான் பாடங்கேட்டலில் மிக்க விருப்பமுடையவனாய், சித்திரப் பாவையின் அத்தகவு அடங்கி - சித்திரத்திலெழுதிய பிரதிமையினது அசைவில்லாத அக்குணம்போல மன மொழி மெய்கள் அடங்கி, செவி வாய் ஆக - காது (கல்வியாகிய நீரைப் பருகும்) வாயாகவும், நெஞ்சு களன் ஆக-மனம் கொள்ளுமிடமாகிய வயிறாகவும், கேட்டவை கேட்டவை - (ஆசிரியனிடத்தில்) பலமுறைகேட்ட நூற்பொருள்களை, விடாது உளத்து அமைத்து - மறந்துவிடாமல் தன் மனத்தில் நிரம்பப் பதியவைத்துக் கொண்டு, போ என போதல் - 'போ' என்று (ஆசிரியன்) சொன்னபின்பு தான் மீண்டு போகுதலாம், என்மனார் புலவர் - என்று சொல்வர் அறிவுடையோர்; (எ - று.)—களன் - இங்கே, வயிறு என்றபடி.

இனி, 'சொல்லெனச் சொல்லி' என்பதற்கு - ஆசிரியன் கீழ்நடந்த பாடத்தைச் சொல் என்றவுடனே தான் சொல்லி என்றலுமாம். கேட்டவைகேட்டவை, அடுக்கு - மிகுதிப்பொருளது. கோடல்=கொள்+தல் கொள்ளுதல். ஆசிரியன் கற்றுக்கொடுப்பதை மாணாக்கன் பெற்றுக் கொள்ளல். (௪0)

[நூற்பயிற்சி செய்யும் விதம்.]

௪க. * நூல்பயி லியல்பே நுவலின் வழக்கறிதல்
பாடம் போற்றல் கேட்டவை நினைத்தல்
ஆசாற் சார்ந்தவை யமைவரக் கேட்டல்
அம்மாண் புடையோர் தம்மொடு பயிறல்
வினாதல் வினாயவை விடுத்த லென்றிவை
கடனாக் கொளினே மடநனி யிகக்கும்.

(இ - ள்.) நூல் பயில் இயல்பு - நூற்பயிற்சிசெய்தலின் தன்மையை, நுவலின் - சொல்லுமிடத்து,—வழக்கு அறிதல் - (உலகவழக்குச் செய்யுள் வழக்கு என்னும்) இருவகைவழக்குக்களை அறிதலும், பாடம் போற்றல் மூல பாடங்களை (மறவாமற்) பாதுகாத்தலும், கேட்டவை நினைத்தல் - (ஆசிரியனிடத்துக்) கேட்ட நூற்பொருள்களைப் (பலமுறை) சிந்தித்தலும், ஆசான் சார்ந்து அவை அமைவர கேட்டல் - ஆசிரியனை அடுத்து முன்கேட்ட அவற்றையே குறைவுதீர மனத்திற்பதியும்படி மறுபடியும் கேட்டலும், அ மாண்பு

* தொல்காப்பியத்து இளம்பூரணருரை மேற்கோள்.

உடையோர்தம்மொடு பயிறல் - அவ்வாறு கற்குந் தொழிலுடைய மாணாக்கர்களோடு பழகுதலும், வினாதல் - (தான் சந்தேகித்த பொருள்களைக்குறித்து அவர்களைக்) கேள்விகேட்டலும், வினாயவை விடுத்தல் - (அவர்கள்கேட்ட) கேள்விகட்குத் தான் உத்தரஞ்சொல்லுதலும், என்று இவை - என்று சொல்லப்பட்ட இச்செயல்களை யெல்லாம், கடன் ஆ கொளினே - (தனக்கு) முறைமையாக (மாணாக்கன்) கொண்டால்தான், மடம் - அறியாமையானது, நனி - மிகுதியும், இகக்கும் - (அவனைவிட்டு) நீங்கும்; (எ - று.) (௪௧)

௪௨ ஒருகுறி கேட்போ னிருகாற் கேட்பின்
பெருக நூலிற் பிழைபா டிலனே.

(இ - ள்) ஒரு குறி கேட்போன் - ஒருநூலைஒருதரம்பாடங்கேட்டவன், இரு கால் கேட்பின் - (ஒருதரங் கேட்டவளவில் அமையாமல்) இரண்டுதரங் கேட்டானாயின், (அவன்),—நூலின் - அந்நூலில், பிழைபாடு, - தவறுபடுதல், பெருக இலன் - மிகுதியும் இலனாவன்; (எ - று.)

பிழை - ஐயம் திரிபு இது, கீழ்ச் சூத்திரத்திற் கூறின 'ஆசாற்சார்ந்து அவை அமைவரக்கேட்ட' லின் பயன்; அடுத்த சூத்திரமும் இவ்வாறே. (௪௨)

௪௩. * முக்காற் கேட்பின் முறையறிந் துரைக்கும்.

(இ - ள்.) முக்கால் கேட்பின் - மூன்று தரம் கேட்டானாயின்,—முறை அறிந்து - (ஆசிரியன் கற்பித்த) முறைமையை அறிந்து, உரைக்கும் - (தான் பிறர்க்குச்) சொல்ல வல்லவனாவான்; (எ - று) (௪௩)

௪௪ ஆசா னுரைத்த தமைவரக் கொளினுங் * காற்கூ றல்லது பற்றல னாகும்.

(இ - ள்) (மாணாக்கன்),—ஆசான் உரைத்தது - ஆசிரியன் கற்பித்த நூற்பொருளை, அமைவர கொளினும் - (மேற்சொல்லியவாறு தன் அறிவில்) நிரம்பக் கற்றுக்கொண்டானாயினும்,—கால் கூறு அல்லது பற்றலன் ஆகும் - (ஆசிரியனது புலமைத்திறத்தில்) காற்பங்கு பெறுவனேயல்லது அதற்கு அதிகமாகப் பெறான்; (எ - று.) (௪௪)

௪௫. * அவ்வினை யாளரொடு பயில்வகை யொருகால்
செவ்விதி னுரைப்ப வவ்விரு காலும்
மையறு புலமை மாண்புடைத் தாகும்.

(இ - ள்.) அ வினையாளரொடு - அவ்வாறு கற்குந்தொழிலுடைய மாணாக்கர்களோடு, பயில வகை - பழகும் வகையால், ஒரு கால் - ஒருகாற்பங்கும், —செவ்விதின் உரைப்ப - (தன் மாணாக்கர்க்கும் சபையார்க்கும் தான்) ஒழுங்காகச் சொல்லுதலால், அ இரு காலும் - மற்றை இரண்டு கால் [அரைப்] பங்குமாக,—மை அறு புலமை-குற்றமற்ற புலமைத்திறம், மாண்பு உடைத்து ஆகும் - (நிரம்பி) மாட்சிமையுடையதாம், (எ - று.)—இது, 'அம்மாண்புடை

* தொல்காப்பியத்து நச்சினார்க்கினியருரை மேற்கோள்,

யோதமமொபெயிறல் வினுதல, வினையமை விடுததல்' என்றவறறின் பயன மூநதினசூததிரம, அவறறின இனறியமையாமையைக காட்டும (௪௫)

[மாணுக்கா வழிபாடு செயயும் விதம்.]

௪௬. அழலி னீங்கா னணுகா னஞசி
நிழலி னீங்கா னிறைநத நெஞசமோடு
எததிறத தாசா னுவககு மததிறம
அறததிற றிரியாப படாசசி வழிபாடே.

(இ - ள.) அழலின - (குளிருககாக அனலகாயபவன விடடு நீஙகாம லும நெருஙகாமலும இருககினற) நெருபபைபபோல (ஆசிரியனை நினைதது), அஞசி நீஙகான அணுகான - அசசஙகொணடு விட்டு நீஙகாமலும கிட்டநெ ருஙகாமலும (இருநது), நிழலின நீஙகான (அவன சென றவிடததெல்லாம) நிழலைப்போல விடாது பினதொடாந்து சென்று, நிறைநத நெஞசமோடு அனபு நிரமபின மனததுடனகூடி, எததிறதது ஆசான உவககும அததிறம எவவகையால ஆசிரியன மகிழ்வானே அவ்வகையோடு பொருநதி, அறததின திரியா படாசசி - தருமததினினறும மாறுபடாத நடததையானது,—வழி பாடு - (மாணுக்கன் ஆசிரியனுககுச செயயும) வழிபாடாம; (எ - று.)

குளிாகாயவோன் தீயை விடடு விலகினுல், குளிா நீஙகுதலாகிய பயன் சிததியாது. நெருஙகினுல, சுடுதாககும; ஆதலால், மிகவிலஙகாமலும் மிகநெ ருஙகாமலும் அளவாகச சாாதல போல மாணுககன் ஆசிரியனைவிட்டு விலகி னுல் அவனருள பெறுதலாகிய கருதியபயன கைகூடா தாதலாலும, மிகநெ ருஙகினுல் அவனை அவமதிததானபோனறு அவனது வெறுபபுககு இலக்கா தலாலும், அளவாகச சாாந்து வழிபடுதல வேணடு மெனக. (௪௬)

பொதுபபாயிரத்தின இலககணம முறறிறறு



இரணடாவது

## சிறப்புப்பாயிரத்தின் இலக்கணம்.

[சிறப்புப்பாயிரத்தின் பொதுவிதி].

௪௭. ஆககியோன் பெயரே வழியே யெல்லை
நூறபெயா யாபபே நுதலிய பொருளே
கேடபோா பயனோ டாயெண் பொருளும
வாயபபக காட்டல பாயிரத் தியலபே.

(இ - ள.) ஆக்கியோன பெயரே-(நூலைச) செய்தவனது பெயரும, வழி யே - நூல்வநத) வழியும, எல்லை - (நூல் வழஙகும நிலததின) எலலையும, நூல் பெயா - நூலின பெயரும, யாபபே - (தொகுததல முதலிய) நூறகட் டும, நுதலிய பொருளே - (நூலிற) சொலலப்பட்ட பொருளும, கேட்போர் -

* தொலகாபபியதது இளமபூரணருரை மேறகோள.

(இந்நூல்) கேட்டற்கு உரிய அதிகாரிகள் இவரென்பதும், பயனோடு - (நூல் கற்றதனாற் பெறப்படும்) பயனும், ஆ எண் பொருளும் - அவ்வெட்டுவகைப் பொருள்களையும், வாய்ப்பக் காட்டல் - விளங்க உணர்த்துதல்,—பாயிரத்து இயல்பு - சிறப்புப்பாயிரத்தின் இலக்கணமாம்; (எ - று.)

இனி, யாப்பு - இந் நூல் கேட்டபின் இந் நூல் கேட்கத்தகு மென்னும் இயைபு என்றும், கேட்போர் - நூலை இயற்றித்தருகவெனக் கேட்பவர் என்றும் உரைப்பாருமுளர்; யாப்பு என்பதற்கு - இந்நூல் இன்னவகைச்செய்யுளாற் செய்யப்பட்ட தென்பதென்றலும் ஒன்று ஆயெண்பொருள் - சுட்டு நீண்டவிடத்து யகரம் தோன்றிற்று; 'ஆய எண்பொருள்' என்பதன் தொகுத்த லெனக் கொண்டு உரைக்கவும் அமையும் ஆய=ஆகிய.

இசுத்திரமும், அடுத்தசூத்திரமும் - முன்னோர் செய்தவற்றை மேற் கோளாகக் கொண்டது. * (௯)

௪௨ காலங் களனே காரண மென்றிம்
மூவகை யேற்றி மொழிநரு முளரே.

(இ - ள்.) காலம் - (நூல்செய்த) காலமும், களனே-(நூல் அரங்கேறிய) சபையும், காரணம் - (நூல்செய்தற்குக்) காரணமும், என்ற இ மூ வகை - என்கிற இந்த மூன்றையும், ஏற்றி - (அந்த எட்டோடு) கூட்டி, மொழிநரும்- (பதினொன்றாகச்) சொல்வாரும் உளர் - (சிலர்) உண்டு; (எ - று.)

காலம் முதலிய மூன்றும் நூல்செய்த காலத்தன்றி நூல்வழங்குங் காலத்து இல்லாமையால், பிறர்கோட்கூறலாகத் தனியே பிரித்துக்கூறினார்.

[நூற்பெயர்க்குச் சிறப்புவிதி: நூற்குப் பெயரிடும் வகை.]

௪௩. முதனூல் கருத்த னளவு மிகுதி
பொருள்செய் விதந்தோன் றன்மை முதல நிமித்தினும்
இடுகுறி யானும் நூற்கெய்தும் பெயரே.

(இ - ள்.) நூற்கு - ஒருநூலுக்கு,—முதனூல் - (அந்நூலின்) முதனூலும், கருத்தன - (அந்நூல) செய்தவனும், அளவு - (அந்நூலின) அளவும், மிகுதி - (அந்நூலிற் சொல்லப்படும் பொருள்களுள்) மிகுந்தான பாகமும், பொருள - (அந்நூலிற் சொல்லப்பட்ட) பொருளும், செய்வித்தோன் - (அந் நூல் செய்வோனுக்குப் பொருளுதவிமுதலியன செய்து நூலைச்) செய்வித்த வனும், தன்மை - (அந்நூலின) குணமும், முதல - முதலாகிய, நிமித்தினும்- காரணங்களாலும், இடுகுறியானும் - (காரண மில்லாமல்) இடுகுறியாலும், பெயர் எய்தும் - பெயர் வரும்; (எ - று.)—நிமித்து - நிமித்தம், விகாரம்.

முதனூலாற் பெயர்பெறுதல் வழிநூல் சார்புநூல்கட்கே அமையுமென் பது, ஏற்புழிக்கோட லென்னும் உத்தியால் விளங்கும்.

முதனூலாற் பெயர்பெற்றன - தமிழிலுள்ள இராமாயணம், பாரதம் முதலியன. கருத்தனாற் பெயர்பெற்றன - அகத்தியம், திருவள்ளுவர் முதலி

* க, உ - சூத்திரங்கள் - இறையனாரகப்பொருளுரை மேற்கோள்.

யன. அளவினாற் பெயர்பெற்றன - பன்னிருபடலம், நாலடிநானூறு முதலி யன. மிகுதியாற் பெயர்பெற்றன-களவியல் முதலியன. பொருளாற்பெயர் பெற்றன-அகப்பொருள் முதலியன. செய்வித்தோனாற் பெயர் பெற்றன-சாத வாகனம், இளந்திரையம் முதலியன வென்பர் தன்மையாற் பெயர்பெற்றன-சிந்தாமணி, நன்னூல் முதலியன. இடுகுறியாற் பெயர்பெற்றன-கலைக்கோட் டுத்தண்டு முதலியன வென்பர்; (காண்டிகையென்னும் உரைப்பெயரையும் இடுகுறி யென்பர்) பிறவும் இவ்வாறு வருவன உளவாயின் கண்டுகொள்க.

ஆத்திசூடி, கண்ணிநுண் சிறுத்தாம்பு என்றாற்போல முதற்குறிப்பி னாற் பெயர்பெற்றவை முதலியன, இச்சூத்திரத்தில் 'முதல் நிமித்து' என்ற தற்கு உதாரணமாம். (கூ)

[நூல்யாப்பிற்குச் சிறப்புவிதி.]

ருo. தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்ப்பு
என்த்தகு நூல்யாப் பீரிரண் டென்ப.

(இ - ள்.) தொகுத்தல் - (விரிந்துகிடந்ததைத்) தொகுத்துச் செய்த லும், விரித்தல் - (தொகுத்துக்கிடந்ததை) விரித்துச் செய்தலும், தொகை விரி - சிலவற்றைத் தொகுத்தும் சிலவற்றை விரித்தும் செய்தலும், மொழி பெயர்ப்பு - ஒரு பாஷையிலுள்ள நூலை மற்றொருபாஷையிற் செய்தலும், என - என்று, தகும் நூல் யாப்பு - தக்க நூல்யாப்பானது, ஈர் இரண்டு - நால்வகைப்படும், என்ப - என்று சொல்வர் (அறிவுடையோர்); (எ - று)—(நூல் யாப்பு - நூற்கட்டு.)

தொகுத்தலுக்கும், மொழிபெயர்த்தலுக்கும் உதாரணம்-வடமொழியில் இருபத்தினாலாயிரஞ் சுலோகமான வால்மீகத்தைக் கம்பர் தென்மொழியிற் பன்னீராயிரஞ் செய்யுளாக்கியது போல்வன; பாரதமும் இது. விரித்த லுக்கு உதாரணம் - திருத்தொண்டத்தொகை யென்னும் பதிகத்தைச் சேக் கிழார் பெரியபுராணமாக விவரித்தது போல்வன. தொகைவிரிக்கு உதார ணம் - தொல்காப்பியத்திற் குற்றியலுகரப்புணரியலெனத் தனித்துக்கூறிய தனை இந்நூலில் உயிரீற்றுப்புணரியலுள் அடக்கியும், தொல்காப்பியத்திற் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ள கால இடைநிலைகளை இந்நூலில் விரித்தும் கூறியது போல்வன. (ச)

[சிறப்புப்பாயிரஞ் செய்தற்கு உரியவர்]

ருக. தன்னா சிரியன் தன்னொடு கற்றோன்
தன்மா ணாக்கன் தகுமுரை காரனென்று
இன்னோர் பாயிர மியம்புதல் கடனே.

(இ - ள்.) தன் ஆசிரியன் - தன்னுடைய ஆசிரியனும், தன்னொடு கற் றோன் - தன்னோடு பாடங்கேட்டவனும், தன் மாணாக்கன் - தன்னுடைய மாணாக்கனும், தகும் உரைகாரன் - (தான்செய்த நூலுக்குத்) தக்க உரை செய்தவனும், என்ற இன்னோர் - என்று சொல்லப்பட்ட இந்நால்வரில் ஒரு வர், பாயிரம் - சிறப்புப்பாயிரத்தை, இயம்புதல் - சொல்லுதல், கடன் - முறைமை; (எ - று.) (ரு)

[சிறப்புப்பாயிரம் பிறர்செயதற்குக் காரணம்.]

௫௨. தோன்றா தோற்றித் துறைபல முடிப்பினுந்
தான்றற் புகழ்தல் தகுதி யன்றே.

(இ - ள்) தோன்றா-(பிறர்க்குத்) தோன்றாத நுட்பமானபொருள்களை, தோற்றி - தான் தோன்றச்செய்து [காட்டி], துறை பல முடிப்பினும் - பல துறைகள் (அமைப்ப பெரிய நூலைச் செய்து) முடித்தாலும்,—தான் தன் புகழ்தல் - தானே தன்னைப் புகழ்ந்துகொள்வது, தகுதி அன்று - தக்கதன்றாம்; (எ - று)

நூல்செய்தவனே சிறப்புப்பாயிரமும் செய்துகொண்டால் தற்புகழ்ச்சி செய்தவனாவனாதலால், நூல்செய்பவனது புகழாகிய சிறப்புப்பாயிரத்தைப் பிறர் கூறவேண்டு மென்பதாம் § (௬)

[தற்புகழ்ச்சி குற்றமாகாத இடங்கள்.]

௫௩. மன்னுடை மன்றத் தோலைத் தூக்கினுந்
தன்னுடை யாற்ற லுணரா ரிடையினும்
மன்னிய அவையிடை வெல்லுறு பொழுதினுந்
தன்னை மறுதலை பழித்த காலையுந்
தன்னைப் புகழ்தலுந் தகும்புல வோற்கே

(இ - ள்.) மன்னுடை மன்றத்து ஓலைத்தூக்கினும்-அரசனது சபைக்கு எழுதுகின்ற சீட்டுக்கவியிலும், தன்னுடை ஆற்றல் உணரார் இடையினும் - தன்னுடைய(கல்வியின்)வலிமையை அறியாதவரிடத்திலும், மன்னிய அவையிடை வெல்லுறு பொழுதினும் - நிலைபெற்ற சபையிற் (பிறரோடு வாதஞ் செய்து) சயிக்கும்பொழுதிலும், தன்னை மறுதலை பழித்த காலையும் - தன்னை எதிரியாகிய புலவன் இகழ்ந்துபேசிய காலத்திலும், தன்னை புகழ்தலும்-தன்னைத் தான் புகழ்ந்துகொள்ளுதலும், புலவோற்கு - புலவனுக்கு, தகும—; (எ - று)—'புகழ்தலும்' என்ற இழிவுசிறப்பும்மையால், இவ்விடங்களிலும் தற்புகழ்ச்சிசெய்யாமையே மேம்பட்டதென்பது பெறப்படும் (எ)

[பாயிரம் அவசிய மென்பது]

௫௪. ¶ ஆயிர முகத்தா னகன்ற தாயினும்
பாயிர மில்லது பனுவ லன்றே

---

* தொல்காப்பியத்து இளம்பூரணருரை மேற்கோள்.

§ சிறுபான்மை நூலாசிரியர் தாமே தம்மைப் பிறன்போலும் பாயிரங் கூறுதலும் உண்டு. பிரயோகவிவேகநூலார் 'இது, தன்னைப் பிறன்போலும் நாந்தி கூறுகின்றது,' 'வடநூலார் தாமே பதிகமும் உரையும் செய்வார்', 'இனிச் சமபந்தர் சடகோபர் முதலாயினோரும் திருவாசகரும் பதினெண்கீழ்க் கணக்குச்செய்தாரும் முன்னாகப் பின்னாகப் பதிகங்கூறுவதும் காண்க' என்றவை காணத்தக்கன. அது, தற்சிறப்புப்பாயிர மெனப்படும்.

¶ இறையனாரகப்பொருளுரை மேற்கோள்.

(இ - ள்.) ஆயிரம் முகத்தான் - மிகப்பல வகைகளால், அகன்றது ஆயினும் - விரிந்த நூலாயினும்,—பாயிரம் இல்லது - பாயிரமில்லாதது, பனுவல் அன்று - நூலன்றாம்; (எ - று)—ஏ - தேற்றம்.

இச்சூத்திரம், முன்னோர் செய்ததை மேற்கோளாகக் கொண்டது.

'எந்நூல் உரைப்பினும் அந்நூற்குப் பாயிரம் உரைத்து உரைக்க' என்பது, இலக்கணம் என்னை? "ஆயிர முகத்தா னகன்ற தாயினும், பாயிர மில்லது பனுவலன்றே" என்றாராதலின். பாயிரமென்றது, புறவுரையை. நூல்கேட்கின்றான் புறவுரை கேட்கின், கொழுச்சென்றவழித் துன்னூசி இனிது செல்லுமாறுபோல, அந்நூல் இனிது விளங்குதலின், புறவுரை கேட்டல்வேண்டும்; என்னை? 'பருப்பொருட்டாகிய பாயிரங் கேட்டார்க்கு, நுண்பொருட்டாகிய நூல் இனிது விளங்கும்' என்றாராதலின். அப்பாயிரந்தான், தலையமைந்த யானைக்கு வினையமைந்த பாகன் போலவும், அளப்பரிய ஆகாயத்திற்கு விளக்கமாகிய திங்களும் ஞாயிறும் போலவும், நூற்கு இன்றியமையாச் சிறப்பிற்றாயிருத்தலின், அதுகேளாக்கால், 'குன்றுமுட்டிய குரீஇப்போலவும், குறிச்சிபுக்க மான்போலவும், மாணாக்கன் இடர்ப்படுமெனக்' என்பது, தொல்காப்பியம் நச்சினார்க்கினியருரைத் தொடக்கம். (௮)

௫௫. மாடக்குச் சித்திரமும் மாநகர்க்குக் கோபுரமும்
ஆடமைத்தோள் நல்லார்க்கு அணியும்போல—நாடிமுன்
ஐதுரையா நின்ற அணிந்துரையை எந்நூற்கும்
பெய்துரையா வைத்தார் பெரிது

(இ - ள்.) மாடக்கு - மாளிகைக்கு, சித்திரமும் - சித்திரவேலையும், மாநகர்க்கு - பெரியபட்டணத்துக்கு, கோபுரமும் - வாயிற்கோபுரமும், ஆடு - நாட்டியஞ்செய்கின்ற, அமை தோள் நல்லார்க்கு - மூங்கில்போலுந் தோள்களையுடைய மகளிர்க்கு, அணியும் - ஆபரணமும், போல - போல,—நாடி - (நூலுக்குப் பாயிரம் இன்றியமையாச் சிறப்புடையதென்று) எண்ணி,—ஐது உரையா நின்ற அணிந்துரையை - அழகிய பொருளைச் சொல்லுகின்ற பாயிரத்தை, உரையா - உரைத்து, எ நூற்கும் - எவ்வகைப்பட்ட நூல்களுக்கும், முன் - முதலில், பெரிது - பெரும்பாலும், பெய்து வைத்தார் - சேர்த்து வைத்தார்கள், (அறிவுடையோர்); (எ - று.)—மாடக்கு=மாடத்துக்கு.

ஆடு நல்லார் என இயையும்; நாட்டியப்பெண்களென்றபடி. (௯)

சிறப்புப்பாயிரத்தின் இலக்கணம் முற்றிற்று.

---

## பொதுப்பாயிரம் முற்றுப்பெற்றது.



முதலாவது

# எழுத்ததிகாரம்.

எழுத்தின் அகத்திலக்கணம் புறத்திலக்கணம் என்னும் இருவகை யிலக்கணங்களையும் உணர்த்தும் அதிகாரம்; அதிகாரம் - இங்கே, பெரும்பிரிவு.

—ooo—

## ௧. எழுத்தியல்.

எழுத்தின் அகத்திலக்கணத்தை உணர்த்தும் இயல்; இயல் - இங்கே சிறுபிரிவு.

[கடவுள் வணக்கமும், அதிகாரத் தோடக்கமும்.]

௫௬. பூமலி யசோகின் புனைநிழ லமர்ந்த
நான்முகற் றொழுதுநன் கியம்புவ னெழுத்தே

(இ - ள்) பூ மலி - பூக்கள் நிறைந்த, அசோகின் - அசோகமரத்தினது, புனை நிழல் - அழகிய நிழலில், அமர்ந்த - எழுந்தருளிய, நான்முகன் - நான்கு திருமுகங்களையுடைய கடவுளை [அருகதேவனை] *, தொழுது - வணங்கி,— எழுத்து - எழுத்திலக்கணத்தை, நன்கு இயம்புவன் - நன்றாகச்சொல்வேன், (யான்); (எ - று.)—எ - ற்றசை

§ எல்லா நூல்களும் மங்கலமொழி முதல் வகுத்துக் கூறவேண்டுதலால், 'பூ' என்று தொடங்கப்பட்டது. எழுதப்படுதலின் எழுத்து எனக் கொள்க. எழுத்திலக்கணத்தை 'எழுத்து' என்றது, ஆகுபெயர்.

எல்லாம் வல்ல கடவுளை வணங்கியதனால் எடுத்துக்கொண்ட காரியம் இனிது முடியுமென்பது கருதி, 'நன்கியம்புவன்' என்று தொடங்கியதனால், இது நுதலிப்புகுதல் என்னும் உத்தி; (நுதலிப்புகுதல்-சொல்லித்தொடங்குதல்.) (௧)

[எழுத்திலக்கணத்தின் பகுப்பு - ௧௨]

‡ ௫௭. எண்பெயர் முறைபிறப் புருவம் மாத்திரை
முதலீ றிடைநிலை போலி யென்றா
பதம்புணர் பெனப்பன் னிருபாற் றதுவே.

---

* 'எல்லாச் சமயத்தோராலும் வணங்கப்படும் படைப்பு முதலிய ஐந்தொழிற்கு முரிய எல்லாக்கடவுளாகியும் நின்ற ஒருவனே யென்பார், அருகனை 'நான்முகன்' என்று கூறினார்' என்பது, நன்னூல் விருத்தியுரை. சீவகசிந்தாமணியில் "பிண்டிநான்முகன்" என்றதும, 'எல்லாமூர்த்தமும் இவனாதலின், நான்முக னென்றார்', 'அரியும் அயனும் அரனும் இவனே யென்பது கருத்து' என்ற நச்சினார்க்கினியருரையும் காணத்தக்கன.

§ "வழிபடு தெய்வ வணக்கஞ் செய்து, மங்கலமொழி முதல் வகுத்து, எடுத்துக்கொண்ட விலக்கண விலக்கிய, மிடுக்கணின்றி யினிது முடியும்".

(இ - ள்.) எண் - (எழுத்துக்களின்) கணக்கும், பெயர் - பெயரும், முறை - (நிற்கும்) முறைமையும், பிறப்பு - பிறத்தலும், உருவம் - வடிவமும், மாத்திரை - (உச்சரிக்கும்) அளவும், முதல் (நிலை) - (மொழிக்கு) முதலில் நிற்றலும், ஈறு (நிலை) - (மொழிக்கு) இறுதியில் நிற்றலும், இடை நிலை - (மொழிக்கு) நடுவில் நிற்றலும், போலி - போலியும், என்று - என்றும்,—பதம் - பதமும், புணர்ப்பு - புணர்ச்சியும், என - என்றும்.—பன்னிருபாற்று - பன்னிரண்டுவகையினை யுடையதாகும் அது - அவ்வெழுத்திலக்கணம்; (எ - று.)

பிறப்பும், மாத்திரையும்-எழுத்தின் ஒலிவடிவத்தையும், உருவம் - எழுத்தின் வரிவடிவத்தையும் பற்றியவை; மற்றவை, பொது.

எண் முதலிய பத்தும் எழுத்தின் அகத்திலக்கணம் என்பதும், பதம் புணர்ப்பு என்னும் இரண்டுமே எழுத்தின் புறத்திலக்கணம் என்பதும் தோன்ற, 'என்று' என்றும், 'என' என்றும் வெவ்வேறு சொற்களாற் கொடுத்துப் பிரித்தார்.

இச்சூத்திரம் **தொகுத்துச்சுட்டல்** என்னும் உத்தி. மேல் வருவன **வகுத்துக்காட்டல்.** (தொகுத்துச் சுட்டல் - திரட்டிச்சொல்லுதல். வகுத்துக் காட்டல் - விரித்துச்சொல்லுதல். உத்தி - யுக்தி.)

எழுத்தின் அகத்திலக்கணமாகிய பத்தையும் **எழுத்தியல்** என ஓரியலாக்கி முதலிலும்; அவ்வெழுத்தாலாகிய பதத்தின் இலக்கணத்தைப் **பதவியல்** என ஓரியலாக்கி அதன்பின்னும்; அப்பதம் புணரும் புணர்ச்சியிலக்கணத்தை **உயிரீற்றுப்புணரியல், மெய்யீற்றுப்புணரியல், உருபுபுணரியல்** என மூன்று இயலாக்கி, உயிரெழுத்து மெய்யெழுத்துக்களின் முறைமை பற்றி உயிரீற்றுப்புணரியலைப் பதவியலின் பின்னும், மெய்யீற்றுப்புணரியலை அதன் பின்னும், உயிரீறு மெய்யீறு என்றவற்றுள் அடங்குதலால் உருபுபுணரியலை அவ்விரண்டன் பின்னும் **ஓத்துமுறைவைப்பு** என்னும் உத்தியால் வைத்தார். (ஓத்துமுறைவைப்பு - இயல்களைக் காரணம்பற்றி முறைப்படவைத்தல்.)

## ௧ எண்.

### [எழுத்து இன்னதென்பதும், அதன் வகையும்]

† ௫௮. மொழிமுதற் காரண மாமணுத் திரளொலி
எழுத்தது முதல்சார் பெனவிரு வகைத்தே.

(இ - ள்.) மொழி முதல் காரணம் ஆம் - சொல்லுக்கு * முதற்காரணமாகின்ற, அணு திரள் ஒலி - அணுக்கூட்டத்தின் காரியமாகிய ஓசை, எழுத்து - எழுத்தாகும்; அது - அவ்வெழுத்து,—முதல் சார்பு என - முதலெழுத்தும் சார்பெழுத்தும் என்று, இரு வகைத்து - இரண்டு வகையை யுடையது; (எ - று.)

* முதற்காரணத்தின் தன்மை, இந்நூலின் ௨௧௭ - ஆம் சூத்திரத்தின் உரையில் விளங்கும்.

'ஆம்' என்னும் பெயரெச்சம், 'ஒலி' என்பதனோடு இயையும்; 'அணுத் திரள்' என்றதும், ஒலிக்கு அடைமொழியே அணுத்திரள் - அணுக்கூட்டம் அணு என்பது, மிகச் சிறிய பொருள்; அது - கட்புலனாகுமணுவும், செவிப்புலனாகுமணுவும் முதலாகப் பலவகைப்படும் இங்கு அணுவென்றது-செவிப் புலனும் அணுவை; அது - ஒலிநுட்பம். அணுத்திரளொலி - பரமாணுக்களின் இயைபினாலாவதான ஒலி மொழிக்கு முதற்காரணம் எழுத்தானாற் போல. எழுத்திற்கு முதற்காரணம் அணுத்திர ளென்றபடி; எழுத்தின் காரியம் மொழியாதல்போல, அணுக்கூட்டத்தின் காரியம் எழுத்தாம் 'அணுத் திரளொலி எழுத்து' என்று மாத்திரம் கூறினலது மமல இருமல் கனைத்தல் முதலியனவும் எழுத்தாமெனக் கொள்ளப்படுமாதலின். அதனை ஒழித்தற்கு, 'மொழிமுதற்காரணமாம்' என்ற அடைமொழி கொடுத்தார் 'அணுத்திரள்' என்றது - ஒலியின் தன்மையை அறியாதவர்க்கு அது இன்னதென விளக்கு தற்பொருட்டு வந்த இயற்கையடைமொழி: இனம் விலக்க வந்ததன்று. பிற மதங்களில் உலகத்தோற்றத்துக்குக் காரணமாகச் சொல்லப்படுகின்ற மாயை முதலியவற்றை ஒப்புக்கொள்ளாமல் அணுக்களினாலேயே எல்லாப்பொருள்களும் அமைவனவென்று கூறுகின்ற தமது ஆருகதசமயத்தை விளக்குதற் பொருட்டு, 'அணுத்திரள்' என்ற அவசியமில்லாத விசேடணங் கொடுத்தாரெனவுங் கொள்ளலாம்; இது - பிறிதொடுபடாஅன் தன்மதங்கோடல் என்னும் மதம் (பிறிதொடு படாஅன் தன் மதம் கொளல் - பிறர் கொள்கையோடு கலவாமல் தன்மதத்தையே தான் கொள்ளுதல்.) சில அணுக்களாவது தம்மிற்கூடினலொழிய ஒலி செவிக்கு எழாமையின், 'அணுத்திரள்' என வேண்டிற்று எழுத்தின் ஒலிவடிவு வரிவடிவு என்ற இரண்டனுள் ஒலிவடிவு சிறப்புடைமையால், அதனை எடுத்து ஓதினர்.

இனி, மொழிக்கு முதற்காரணமாகிய அணுத்திரளே ஒலியெழுத்தாம் என்று உரைத்தலும் ஒன்று (௩)

[முதலெழுத்தின் வகையும், விரியும்]

௫௯. உயிரு முடம்புமா முப்பது முதலே.

(இ - ள்) உயிரும் - உயிரெழுத்துப் பன்னிரண்டும், உடம்பும் - மெய்யெழுத்துப் பதினெட்டும், ஆம் - ஆகிய, முப்பதும் - முப்பது எழுத்துக்களும், முதல் - முதலெழுத்தாம்; (எ - று)

'முதலெழுத்து' என்றது, தொகை: 'உயிரு முடம்பும்' என்றது, வகை; 'முப்பது' என்றது, விரி. உயிர்மெய் முதலிய மற்றையெழுத்துக்களுக்குக் காரணமாதலால், முதலெழுத்தென்று பெயர். * உயிர் இத்தனை மெய் இத்தனை என்று மேல் வரையறை செய்யப்போவதனால் இங்கு வரையறை செய்யாமல் 'முப்பது முதல்' எனக் கூறியது, உரைத்துமென்றல் என்னும் உத்தி; (உரைத்தும் என்றல் - பின்னே விவரித்துச் சொல்வோமென்பதுபற்றி முன்னே சுருக்கிச் சொல்லுதல்) (௪)

* 'தாமே தமித்து நிற்கையின், முதலாயின' என்பது, பழைய உரை.

[சார்பெழுத்தின் வகை - ௬௦.]

௬௦. உயிர்மெய் ஆய்தம் உயிரளபு ஒற்றளபு
அஃகிய இ உ ஐ ஔ மஃகான்
தனிநிலை பத்துஞ் சார்பெழுத் தாகும்.

(இ - ள்.) உயிர்மெய் - உயிர்மெய்யும், ஆய்தம் - முற்றாய்தமும், உயிரளபு - உயிரளபெடையும், ஒற்றளபு - ஒற்றளபெடையும், அஃகிய இ - குறுகிய இகரமும் [குற்றியலிகரமும்], (அஃகிய) உ - குற்றியலுகரமும், (அஃகிய) ஐ - ஐகாரக் குறுக்கமும், (அஃகிய) ஔ - ஔகாரக்குறுக்கமும், (அஃகிய) மஃகான் - மகரக்குறுக்கமும், (அஃகிய) தனிநிலை - ஆய்தக்குறுக்கமும், பத்தும்-ஆகிய பத்தும், சார்பெழுத்து ஆகும்-சார்பெழுத்தின் வகையாம்;(எ-று.)

அஃகுதல் - சுருங்குதல் இங்கே, மாத்திரைகுறைதல். 'அஃகிய' என்னும் பெயரெச்சத்தை உகரமுதலியவற்றோடும் கூட்டுக (மேற்சூத்திரத்தில் 'அஃகும்'என்பதையும் இவ்வாறேகொள்க.) பின்னே 'அஃகியதனிநிலை'என ஆய்தக்குறுக்கம் கூறப்படுதலால், முன்னே 'ஆய்தம்' என்றது, முற்றாய்தம்.

ஆய்தம்-("அற்றா லளவறிந் துண்க வஃதுடம்பு" முதலிய இடங்களில் உயிர்போல அலகுபெற்றும், 'தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்" முதலிய இடங்களில் மெய்போல அலகுபெறாமலும் உயிர்மெய்களை ஒருபுடையொத்து) உயிருமாகாமல் மெய்யுமாகாமல் (அலிபோலத்) தனிநிற்றலால், 'தனிநிலை' எனப்பட்டது. உயிரும் மெய்யும் தம்மிற் கலத்தல்போல ஆய்தம் ஓரெழுத்தோடுங் கலத்தலின்றித் தனிநிற்றலால் தனிநிலையெனப் பட்டதென்றலு மொன்று. உயிர்மெய்-உயிரும் மெய்யுஞ் சார்ந்து உண்டாதலாலும், ஆய்தம் - உயிர் மெய்களினிடையே சார்ந்துவருதலாலும், மற்றை உயிரளபெடை முதலிய எட்டும் - தம் தம் முதலெழுத்தின் திரிபு விகாரத்தாற் பிறத்தலாலும், இவையெல்லாம் சார்பெழுத்தெனப்பட்டன. * (௫)

[சார்பெழுத்தின் விரி - ௩௬௯.]

௬௧. உயிர்மெய் யிரட்டு நூற் றெட்டுய ராய்தம்
எட்டுயி ரளபெழு மூன்றொற் றளபெடை
ஆறே ழஃகு மிம்முப் பானேழ்
உகர மாறா றைகான் மூன்றே
ஔகா னொன்றே மஃகான் மூன்றே
ஆய்த மிரண்டொடு சார்பெழுத் துறுவிரி
ஒன்றொழி முந்நூற் றெழுபா னென்ப.

(இ - ள்) உயிர்மெய் இரட்டு நூறெட்டு - உயிர்மெய் இருநூற்றுப்பதினாறும், உயர் ஆய்தம் எட்டு - முற்றாய்தம் எட்டும், உயிரளபு எழுமூன்று-உயி

* 'அவையே தம்மொடுதாம் சார்ந்தும் இடம் சார்ந்தும் பற்றுக்கோடு சார்ந்தும் விகாரத்தால் வருதலின், சார்பெழுத்தென்றாயின' என்பது, பழைய உரை.

ரளபெடை இருபத்தொன்றும், ஒற்றளபெடை ஆறேழ் - ஒற்றளபெடைநாற் பத்திரண்டும், அஃதும் இ முப்பானேழ்-குற்றியலிகரம் முப்பத்தேழும், (அஃ தும்) உகரம் ஆறுறு-குற்றியலுகரம் முப்பத்தாறும், (அஃதும்) ஐகான்மூன் றே-ஐகாரக்குறுக்கம் மூன்றும், (அஃதும்) ஔகானொன்றே - ஔகாரக்குறுக் கம் ஒன்றும், (அஃதும்) மஃகான்மூன்றே-மகரக்குறுக்கமூன்றும், (அஃதும்) ஆய்தம் இரண்டொடு - ஆய்தக்குறுக்கம் இரண்டும், (ஆக) சார்பெழுத்து உறு விரி - சார்பெழுத்தினது மிக்க விரி. ஒன்று ஒழி மூந்நூறு எழுபான்-ஒன்று குறைந்த மூந்நூற்றெழுபது [மூந்நூற்றறுபத்தொன்பது] ஆகும், என்ப - என்றுசொல்வர் (அறிவுடையோர்); (எ - று)—உறுவிரி - முழுத்தொகை.

இவை இத்தனையாதலை, * அவ்வவற்றின் பிறப்பிலக்கணத்திற்காண்க. எழுத்துவேற்றுமைபற்றி, உயிர்மெய் இருநூற்றுப்பதினாறாயின. உயிரள பெடையும் ஒற்றளபெடையும், எழுத்துவேற்றுமை இடவேற்றுமை என்னு மிரண்டும்பற்றித் தொகையிடப்பட்டன திரிந்த முதலெழுத்துக்களைப்பற்றி, ஆய்தக்குறுக்கத்திற்குத் தொகைக்குறிக்கப்பட்டது மற்றவையெல்லாம், இட வேற்றுமைபற்றிக் கணக்கிடப்பட்டன. உயர் ஆய்தம் - மாத்திரை குறையா மல் நிறைந்த ஆய்தம்; எனவே, முற்றாய்தமாம். (௬)

## உ. பெயர்.

### [பெயரின் பொதுவிலக்கணம்]

௬௨. இடுகுறி காரணப் பெயர்பொதுச் சிறப்பின.

(இ - ள) இடுகுறி காரணம் பெயர்-இடுகுறிப்பெயரும் காரணப்பெயரு மாகிய இரண்டும்,—பொது சிறப்பின-பலபொருளுக்குப் பொதுப்பெயராகி யும் ஒவ்வொரு பொருளுக்கே சிறப்புப்பெயராகியும் வருவனவாம்; (எ - று.)

எனவே, இடுகுறிப்பொதுப்பெயர், இடுகுறிச்சிறப்புப்பெயர், காரணப் பொதுப்பெயர், காரணச்சிறப்புப்பெயர் எனப்பெயர் நால்வகைப்படுமென்ற தாயிற்று. ஒருகாரணமும் பற்றாமல் ஒருபொருளுக்குக் கடவுளாலும் அறி வுடையோராலும் இட்டகுறியாகிய பெயர், இடுகுறிப்பெயர். காரணத்தால் வரும் பெயர், காரணப்பெயர்.

(உதாரணம்)
மரம்—இடுகுறிப் பொதுப்பெயர்.
பனை, பலா - இடுகுறிச் சிறப்புப்பெயர்.
அணி—காரணப் பொதுப்பெயர்.
வளை, சிலம்பு—காரணச் சிறப்புப்பெயர்.

(அணி - அணியப்படுவன ஆபரணங்கள். வளை - வளைவாகவுள்ளது ஒருவகையணி. சிலம்பு - ஒலிப்பது ஒருவகைக் காலணி.)

இனி இரட்டுறமொழிதல் என்னும் உத்தியால், இச்சூத்திரத்திற்கு வேறொரு பொருளும் உரைக்கப்படும்: (இரண்டு உற மொழிதல் - இரண்டு பொருள் ஒருங்கே அமையும்படி சொல்லுதல்.) அது வருமாறு.—

* அக - ஆஞ் சூத்திரம் முதலியன.

பெயர் - பெயர்கள்,—இடுகுறி காரணம் பொது - இடுகுறி காரணம் என்னும் இரண்டு இலக்கணங்களுக்கும் பொதுவாகியும், சிறப்பின - இடுகுறிக்கே சிறப்பாகியும் காரணத்திற்கே சிறப்பாகியும் வருவனவாம், (எ-று.)

எனவே, காரணவிடுகுறிப்பெயர், இடுகுறிப்பெயர், காரணப்பெயர் எனப்பெயர் மூவகைப்படு மென்றதாயிற்று. (வடநூலார் இடுகுறியை ரூட மென்றும், காரணத்தை யோகமென்றும், காரணவிடுகுறியை யோகரூட மென்றுமவழங்குவர்.) காரணவிடுகுறிப்பெயராவது - காரணத்தைநோக்கு மிடத்து அக்காரணத்தையுடைய பலவற்றிற்கும் பெயராக வழங்கக்கூடிய தாயினும், அங்ஙனம் வழங்காமல் அக்காரணத்தையுடைய ஒன்றற்கேஉரிய தாக இடப்பட்ட குறியாய் வழங்குஞ் சொல்.

(உ - ம்.) பரம், பொன—இடுகுறிப்பெயர்.
பரமன, பொன்னன—காரணப்பெயர்.
முக்கணன, அந்தணர், முள்ளி—காரணவிடுகுறிப்பெயர்

(பரம - மேன்மை, பரமன் - மேலானவன். பொன்னன் - பொனனை யுடையவன.) முக்கணனென்பது - காரணங்கருதியபொழுது மூன்றுகண் களையுடைய விநாயகமூர்த்தி முதலிய பலர்க்குஞ் செல்லுமாயினும் இடுகுறி யளவாயச் சிவபிரானுக்கே பெயராதலாலும், அந்தணரென்பது - அழகிய தண்மையை [குளிர்ந்த அருளை] யுடையபலர்க்குஞ் செலலுமாயினும் பிராம ணர்க்கே பெயராதலாலும், முள்ளியெனபது - முள்ளுடையன பலவற்றிற் குஞ் செல்லுமாயினும் ஒருவகைச்செடிக்கே பெயராதலாலும், காரணவிடு குறிப்பெயராயின.

எழுத்துக்குப் பெயர்கூறத்தொடங்கியவர், பெயரினிலக்கணத்தை முத லில தெரிவித்தார். இவ்வாறேமேல எழுத்துக்களின்பெயர் வருதல்காணக.*

## எழுத்துக்களின் பெயர்.

### [உயிரும், மெய்யும்.]

† சுங. அம்முத லீரா றாவி கமமுதல
மெய்ம்மூ வாறென விளம்பினர் புலவர்.

(இ - ள்.) 'அ முதல்ஈராறு - அகரமமுதலிய பன்னிரண்டும், ஆவி-உயி ரெழுத்து க முதல் மூவாறு - ககரம் முதலிய பதினெட்டும், மெய் - மெய் யெழுத்து,' என - என்று, விளம்பினர்புலவர்-சொன்னார் அறிவுடையோர்; (எ - று.)—வடமொழியில உயிர் 'அச்' எனவும், மெய் 'ஹல' எனவுமபடும்.

* 'அ ஆ என்றற் றொடக்கத்தன - இடுகுறிச் சிறப்புப்பெயர். குறில நெடில வல்லினம மெல்லினம இடையினம் என்றற் றொடக்கத்தன - காரணப் பொதுப்பெயர். குற்றிகரம குற்றுகரம் மகரக்குறுக்கம ஆய்தக்குறுக் கம என்றற் றொடக்கத்தன - காரணச் சிறப்புப்பெயர். இவ்வாறே பிறவும ஆராய்ந்தறிக' என்பது பழைய உரை.

(உ - ம்) அ ஆ இ ஈ உ ஊ எ ஏ ஐ ஒ ஓ ஔ—உயிர் - ௧௨.
க் ங் ச் ஞ் ட் ண் த் ந் ப் ம் ய் ர் ல் வ் ழ் ள் ற் ன்—மெய் - ௧௮.

அகரம் முதலிய பன்னிரண்டும் உயிர்போலத் தனித்து இயங்குவன வாதலால் 'உயிர்' எனவும், ககரம் முதலிய பதினெட்டும் உடம்புபோல உயிரோடு கூடியல்லது இயங்காவாதலால் 'மெய்' எனவும் பெயர்பெற்றன. உயிர் ஆவி என்பனவும், * மெய் உடல் உடம்பு உறுப்பு ஒற்று புள்ளி என்பனவும் ஒரு பொருளன (௮)

[குறில் - ௫]

௯௪. அவற்றுள்,

அ இ உ எ ஒக் குறிலைந்தே

(இ - ள்) அவற்றுள் - (உயிர் மெய் என்ற) அவற்றுள், அ இ உ எ ஒ ஐந்து - இவ்வைந்தும்,—குறில் - குற்றெழுத்தாம்; (எ - று.)—குறில் - குறுகிய அளவுள்ளது; (ஹ்ரஸ்வம்.) (௯)

[நெடில் - ௭.]

௯௫. ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ நெடில்.

(இ - ள்.) ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ - இவ்வேழும்,—நெடில்-நெட்டெழுத்தாம்; (எ - று.)—நெடில் - நீண்ட அளவுள்ளது; (தீர்க்கம்.)

'குறில் ஐந்து' என்றாற்போல 'நெடில் ஏழு' எனத் தொகை கொடாமல் 'நெடில்' என்றவளவோடு நிறுத்தியது, ஐயும் ஔவும் சிலவிடத்தன்றி எங்கும் நெடிலாகாமையைக் குறிப்பித்தற்கு என்பர். (௧௦)

[சுட்டு - ௩.]

௯௬. அ இ உம் முதல் தனிவரிற் சுட்டே.

(இ - ள்.) அ இ உ - இம்மூன்றும்,—முதல் - (மொழிக்கு) முதலில், தனி வரின் - தனித்து [சுட்டுப்பொருளைக் காட்டி] வந்தால், சுட்டு-சுட்டெழுத்தாம்; (எ - று)—சுட்டு-குறித்துக் காட்டுதற்பொருளை உணர்த்துவது.

'முதல்' எனப் பொதுப்படச் சொன்னதனால், மொழிக்கு அகத்தும்புறத்தும் வருமெனக் கொள்க. அகத்து உறுப்பு-பதத்தினுள்ளாகவே சுட்டெழுத்து நிற்பது புறத்து உறுப்பு-பதத்திற்கு வெளியாகச் சுட்டெழுத்துநிற்பது.

(உ - ம்)

| | | | |
|---|---|---|---|
| அவன் இவன் உவன் | அகச்சுட்டு. | அக்கொற்றன் இம்மனிதன் உவ்வீடு | புறச்சுட்டு. |

அகரம் - தூரத்திலுள்ள பொருளையும், இகரம்-சமீபத்திலுள்ள பொருளையும், உகரம்-நடுவிலுள்ள பொருளையும், பின் நிற்கும் பொருளையும், மேல் நிற்கும் பொருளையும் சுட்டுதற்கு வரும்: 'அவ னிவ னுவன்,' 'உப்பக்கம்', 'உம்பர்' என்பன காண்க. (உப்பக்கம் - பின்பக்கம். உம்பர் - மேலிடம்.)

* மெய்யீற்றுப்புணரியல் - ௧, உயிரீற்றுப்புணரியல்-௬௩, ௬௦, ௩௧ - ஆஞ் சூத்திரங்களில் முறையே காண்க.

அவன் இவன் உவன் என்பவற்றிலுள்ள அகர இகர உகரங்கள்-அடை இடை உடை என்பவற்றின் முதலெழுத்துக்கள்போலப் பின்னெழுத்துக்களோடு தொடர்ந்து நின்று ஒரு பொருளை உணர்த்தாமல், பொன்னன் முதலிய சொற்களின் பகுதிபோல வேறுநின்று சுட்டுப்பொருளை யுணர்த்துதலால், அகத்துறுப்பும 'தனிவரின்' என்றதில் அடங்குகிறது. இதனை வினாவிற்கும் கொள்க. (கக)

[வினா - ரு.]

சூஎ. எ யா முதலும் ஆ ஓ ஈற்றும்
ஏ இரு வழியும் வினாவா கும்மே.

(இ - ள்.) எ யா முதலும், - எகரமும் யாவும் (மொழிக்கு) முதலிலும், ஆ ஓ ஈற்றும் - ஆகாரமும் ஓகாரமும் (மொழிக்கு) இறுதியிலும், ஏ இருவழியும் - ஏகாரம் இரண்டு இடத்திலும் [மொழிக்கு முதலிலும் இறுதியிலும்], (தனி வரின்) வினா ஆகும் - தனித்து [வினாப்பொருளைக்காட்டி] வந்தால் வினாவெழுத்தாம்; (எ - று.)

வினா - கேள்விப்பொருளை உணர்த்துவது. முன்சூத்திரத்தில 'தனி வரின்' என்றது, இங்குங்கூட்டப்பட்டது. ஒன்றினமுடித்தல் தன்னினமுடித்தல் எனனும் உத்தியால், உயிர்மெய்யாகிய யாவினாவும் உடன்கூறப்பட்டது. (ஒன்று இனம் முடித்தல் தன் இனம் முடித்தல் - ஒத்த இலக்கணமுடையவற்றை ஒருங்கு கூட்டிக் கூறுதல.)

| | | |
|---|---|---|
| (உ - ம்.) | எவன்<br>யாவன் | எ, யா - முதலிலே அகத்து வந்தன. (அகவினா) |
| | எக்கடவுள்<br>யாங்ஙனம் | எ, யா - முதலிலே புறத்து வந்தன. (புறவினா) |
| | பொன்னனா<br>பொன்னனோ | ஆ, ஓ - ஈற்றிலே புறத்து வந்தன (ஈற்றுவினா, புறத்துமாத்திரமே வரும்.) |
| | ஏவன்<br>பொன்னனே | ஏ-முதலில் அகத்தும், ஈற்றில் புறத்தும் வந்தது. (கஉ) |

[வல்லினம் - சூ.]

சூஅ. வல்லினம் க ச ட த ப ற வென வாறே.

(இ - ள்.) க ச ட த ப ற என ஆறு - இவ்வாறும்,—வல்லினம் - வல்லெழுத்தாம்; (எ - று.)—வல் இனம் - வன்மையாக ஒலிக்கின்ற வருக்கம்.

இவை - வலி, வன்மை, வன்கணம் எனவும் பெயர்பெறும். (கங)

[மெல்லினம் - சூ.]

சூகூ. மெல்லினம் ங ஞ ண ந ம ன வென வாறே.

(இ - ள்.) ங ஞ ண ந ம ன என ஆறு - இவ்வாறும்,—மெல்லினம் - மெல்லெழுத்தாம்; (எ-று)—மெல் இனம் - மென்மையாக ஒலிக்கின்றவருக்கம்.

இவை - மெலி, மென்மை, மென்கணம் எனவும் பெயர் பெறும். (கச)

[இடையினம் - ௬]

௭௦ இடையினம் ய ர ல வ ழ ள வென வாறே.

(இ - ள்.) ய ர ல வ ழ ள என ஆறும் - இவ்வாறும்,—இடையினம் - இடையெழுத்தாம்; (எ - று.)—இடை இனம் - வல்லின மெல்லினங்கட்கு நடுத்தரமாக ஒலிக்கின்ற வருக்கம்; வல்லினம் பிறக்கு மிடமாகிய மார்பிற்கும் மெல்லினம் பிறக்கு மிடமாகிய மூக்கிற்கும் இடையிடமாகிய கழுத்தினின்று பிறத்தல்பற்றி இடையெழுத்தெனப் பெயர்வந்த தென்றலும் உண்டு.

இவை-இடை, இடைமை இடைக்கணம் எனவும் பெயர்பெறும். (௧௫)

[இனவெழுத்து]

* ௭௧. ஐ ஔ இ உச் செறிய முதலெழுத்து
இவ்விரண் டோரின மாய்வரல் முறையே

(இ - ள்.) ஐ ஔ - (ஒத்த இனமில்லாத) ஐகார ஔகாரங்கள், இ உ செறிய (ஏகார ஓகாரங்கட்கு இனமாகிய) இகர உகரங்களோடே (தமக்கும் இனமாகப்) பொருந்த, முதல் எழுத்து - முதலெழுத்துக்கள், இவ்விரண்டு - இரண்டிரண்டு, ஓர் இனம் ஆய வரல் - ஓரினமாகி வருதல், முறை - தொன்று தொட்டுவரும் முறைமையாம்; (எ - று.)—ஆதலால், அவை 'இனவெழுத்து' எனப் பெயர்பெறும். முறை - வரன்முறை.

சுருங்கச்சொல்லல் என்னும் அழகுபற்றி, 'முதலெழுத்து' எனப் பொதுப்படக் கூறினாராயினும், ஏற்புழிக்கோடல் என்னும் உத்தியால், இவ்விரண்டு ஓரினமாய் வருதலை இடையினம் ஒழிந்த மற்றவற்றிற்கே கொள்க. (சுருங்கச்சொல்லல்-சொற்கள் விரியாதபடி சொல்லுதல். ஏற்புழிக்கோடல் - கூறிய இலக்கணத்தை ஏற்ற இடத்திற்கு மாத்திரமே கொள்ளுதல். (இதனை 'முறை' என்ற மிகையாற் கொள்ளுதலும் ஒன்று.

(உ - ம்.) அ - ஆ, இ - ஈ, உ - ஊ, எ - ஏ, (இ) ஐ, ஒ - ஓ, (உ)-ஔ எனவும், க - ங, ச - ஞ, ட - ண, த - ந, ப - ம, ற - ன எனவும் வரும். இடையெழுத்து ஆறும், ஓரினம். (௧௬)

[இனமென்றற்குக் காரணம்.]

௭௨. தான முயற்சி யளவு பொருள் வடிவு
ஆனவொன் றாதியோர் புடையொப் பினமே.

(இ - ள்.) தானம் பிறப்பிடமும், முயற்சி பிரயத்தனமும், அளவு - மாத்திரையும், பொருள்-அர்த்தமும், வடிவு - உருவமும், ஆன ஆகிய இவற்றுள், ஒன்று ஆதி - ஒன்றுமுதலாக, ஓர் புடை ஒப்பு - ஒருபுடை [சில] ஒத்திருத்தல்,—இனம் - இனமாதற்குக் காரணம்; (எ - று.)—இங்கு, வடிவு - வரிவடிவம்.

---

* 'இவ்விரண்டோரினமாய வருமுறையே' என்பது, பழையவுரையின் பாடம்; அகரம் முதலான முதலெழுத்துக்கள் முறையே இவ்விரண்டெழுத்து தம்முள் இனமாயவரும் என்று பொருள்.

தானததாலும் முயறசியாலும ஒததுவருவன - உயிரினமெலலாம்.

முயறசியாலும் அளவாலும் ஒததுவருவன - இடையினம ஒழிந்த மெய்கள்.

பொருளால் ஒததுவருவன - அ ஆ, இ ஈ, உ ஊ, எ ஏ, ஒ ஓ, க ங, ச ஞ, ட ண, த ந, ப ம, ற ன முதலியன. அது, ஆது: இஙகு, ஈஙகு; உஙகு, ஊஙகு; எது, ஏது; ஒடு, ஓடு: குளககரை, குளஙகரை; தடசசோலை, தடஞ் சோலை; படம், பணம, பாழ்ததுறு, பாழநதுறு; அப்பு, அமபு, நறகு, நனகு எனச சில பொருள் ஒதது வருதல காணக.

வடிவால ஒததுவருவன - இ ஈ ஐ இ, ஔ உ ஒழிந்த மற்றைஉயிாகள.

முன்பு காரணம் விளஙகாமற கூறபபட்ட இனமென்றதை இஙகே காரணஙகாட்டி முடிவுசெயதலால இசசூததிரம, ஏதுவின்முடித்தல் என்னும உததி. (ஏதுவின முடிததல் - காரணஙகாட்டி முடிவுசெயதல.) (கஎ)

## ங. முறை

எங. சிறபபினு மினத்தினுஞ் செறிந்தீண் டம்முதல
நடததல் தானே முறையா குமமே.

(இ - ள.) சிறப்பினும - சிறப்பினாலும, இனததினும - இனததினாலும, செறிந்து - (ஒன்றன்பின ஒன்று) பொருந்தி, ஈண்டு - இவ்வுலகததில், அ முதல நடத்தல் தானே - அகரமமுதலாகத் தொன்றுதொட்டு வழஙகுதலே, முறை ஆகும் - (எழுததுககள நிறகும) முறையாம; (எ - று)

தனிதது இயஙகும ஆற்றலுடைய உயிரெழுத்துககள அவவுயிாகளோடு கூடியலலது இயஙகும ஆறறலிலலாத மெயயெழுததுககட்கு முனநிறபதும, குறறெழுததுககள தமது விகாரஙகளாகிய நெட்டெழுததுககட்கு முன நிற பதும, வலியாா மெலியாாககுமுன நிறறல்போல வலலெழுததுககள் மெல் லெழுததுககட்கு முன் நிறபதும-சிறபபினால எனவும, குறறெழுததுககட் குபபின அவ்வவறறின இனமொதத நெட்டெழுததுககள நிற்பதும, வல் லெழுததுககட்குப்பின் அவ்வவறறின இனமொதத மெலலெழுததுக்கள நிற்பதும - இனத்தினால் எனவும கொள்க.

[அகரம முதல்னகரமீறுகப் பொருந்திய முறைமைககுககாரணம முழுவ தையும விருததியுரைகளிற் காணக.] (கஅ)

## ச. பிறப்பு.

[பிறப்பின் பொதுவிலககணம்.]

எச. நிறையுயிர் முயறசியி னுளவளி துரபப
எழுமணுத திரளுரங கண்ட முசசி
மூக்குற றிதழ்நாப பலலணத் தொழிலின்
வெவவேவ றெழுததொலி யாயவரல பிறப்பே *

---

*"ஆறறலுடையுயிா முயறசியி னணுவியைந, தேறறனவொலிவாயத தோறறுதல்பிறபபே, எனறுா ஆசிரியாஅவினயனாா" என்பது பழைய உரை.

(இ - ள்.) நிறை - (ஒலியெழுத்திற்கு வேண்டும் காரணங்களிற் குறைவின்றி) நிறைந்த, உயிர் - உயிரினது, முயற்சியின் - உச்சரிக்கவேண்டுமென்னும் முயற்சியால், உள் வளி துரப்ப - உள்ளேயின்ற காற்றானது எழுப்ப, எழும் - எழுகின்ற, அணு திரள் - (செவிப்புலனும்) அணுக்கூட்டம், உரம் கண்டம் உச்சி மூக்கு - மார்பும் கழுத்தும் தலையும் மூக்கும் ஆகிய நானிடத்தையும், உற்று - (முதலிற்) பொருந்தி, (பின்பு), இதழ் நா பல் அண்ணம்-உதடும் நாக்கும் பல்லும் வாயும் ஆகிய நான்கினுடைய, தொழிலின் - முயற்சிவேறுபாட்டினால், வெவ்வேறு எழுத்து ஒலி ஆய-வேறு வேறுவகைப்பட்ட எழுத்தாகிய ஓசைகளாய், வரல்-தோன்றுதல்,—பிறப்பு - (அவற்றின்) பிறப்பாம்; (எ - று.)—அண்ணம் - அண்ணம்; மேல்வாயும் கீழ்வாயும். (௧௯)

[முதலெழுத்துக்களின் பிறப்பிடம்]

எ௫. அவ்வழி,
ஆவி யிடைமை யிடமிட றாகும்
மேவு மென்மை மூக்கு உரம்பெறும் வன்மை.

(இ - ள்) அ வழி - முன்சொன்ன வழியாற் பிறக்குமிடத்து,—ஆவி இடைமை இடம்-உயிரெழுத்துக்கட்கும் இடையினத்திற்கும் இடம், மிடறு ஆகும் - கழுத்தாகும்; மென்மை - மெல்லினம், மூக்கு மேவும் - மூக்கை (இடமாக)ப் பொருந்தும்; வன்மை - வல்லினம், உரம் பெறும் மார்பை (இடமாக)ப் பெறும்; (எ - று.) (௨௦)

[முதலெழுத்துக்கட்கு முயற்சிவகையாற் பிறப்பு]

எ௬. அவற்றுள்,
முயற்சியுள் அ ஆ அங்காப் புடைய.

(இ - ள்) அவற்றுள் - (மேல் இடம் வகுக்கப்பட்ட) முதலெழுத்துக்களுள், அ ஆ - அ ஆ இரண்டும்,—முயற்சியுள் - (முன்சொன்ன நால்வகை) முயற்சிகளுள், அங்காப்பு உடைய-(அண்ணத்தின் தொழிலாகிய) அங்காத்தலை யுடையனவாய்ப் பிறக்கும்; (எ - று.)—அங்காத்தல் - வாய்திறத்தல்.

அ ஆ என உச்சரித்துக் கண்டுகொள்க. பிறவும் இவ்வாறே. (௨௧)

எஎ. இ ஈ எ ஏ ஐ அங் காப்போடு
அண்பல் முதல்நா விளிம்புற வருமே.

(இ - ள்.) இ ஈ எ ஏ ஐ-இந்த ஐந்தும்,—அங்காப்போடு - வாய்திறத்தலுடனே, அண் பல் - மேல்வாய்ப்பல்லை, நா முதல் விளிம்பு-அடிநாக்கினது ஓரமானது, உற - பொருந்த, வரும் - பிறக்கும்; (எ - று.)—அண் பல் - (நாவின் ஓரத்தால்) அணுகப்படும் பல்; வினைத்தொகை.

'அங்காப்போடு' என்பதை, இப்பிறப்பிலக்கணம் முடியுமளவும் வருஞ் சூத்திரந் தோறும் கூட்டுக. (௨௨)

எஅ. உ ஊ ஒ ஓ ஔ இதழ் குவிவே.

(இ - ள்.) உ ஊ ஒ ஓ ஔ - இந்த ஐந்தும், (பிறத்தற்கு ஏதுவாகிய முயற்சி), இதழ் குவிவு - உதடுகளின் குவிதலாம்; (எ - று.) (உரு)

எக. கஙவுஞ் சஞவும் டணவு முதலிடை
நுனிநா வண்ண முறமுறை வருமே.

(இ - ள்) க ங வும் - ககரமும் ஙகரமும், ச ஞவும் - சகரமும் ஞகரமும், ட ணவும் - டகரமும் ணகரமும்;—முறை - முறையே,—முதல் இடை நுனி நா அண்ணம் உற - நாக்கின் அடியும் நடுவும் கடையும் மேல்வாயின் அடியையும் நடுவையும் கடையையும் பொருந்த, வரும் - பிறக்கும்; (எ - று.)

'முத லிடை நுனி' என்பதை, நா அண்ணம் என்ற இரண்டோடுங் கூட்டுக

அடிநா மேல்வாயடியைச் சேர்தலாற் ககரஙகரங்களும், இடைநா மேல் வாயிடையைச் சேர்தலாற் சகரஞகரங்களும், நுனிநா மேல்வாய் நுனியைச் சேர்தலால் டகர ணகரங்களும் பிறக்குமென்க; * முறைநிரனிறை (உச)

அ0. அண்பல் லடிநா முடியுறத் தநவரும்.

(இ - ள்.) அண்பல் அடி - மேல்வாய்ப் பல்லின் அடியை, நா முடி உற - நாக்குநுனி பொருந்த,—த ந - தகரமும் நகரமும், வரும் - பிறக்கும். (உரு)

அக. மீகீ ழிதழுறப் பமப்ப பிறக்கும்.

(இ - ள்.) மீ கீழ் இதழ் உற - மேலுதடும் கீழுதடும் (தம்மிற்) பொருந்த, ப ம - பகரமும் மகரமும், பிறக்கும்;—(எ - று.) (உசா)

அஉ. அடிநா வடியண முறயத் தோன்றும்.

(இ - ள்.) அடி நா - நாக்கினடியானது, அடி அண்ணம் உற - மேல்வாயடியைப் பொருந்த,—ய - யகரம், தோன்றும் - பிறக்கும்; (எ - று.) (உஎ)

அங. அண்ண நுனிநா வருட ரழவரும்.

(இ - ள்.) அண்ணம் - மேல்வாயை, நா நுனி வருட - நாக்கின் நுனியானது தடவ,—ர ழ - ரகரமும் ழகரமும், வரும் - பிறக்கும்; (எ - று.)

அண்ணம் நுனி-மேல்வாய் நுனியை, நாவருட - நாக்குத் தடவ எனினுமாம். மத்திமதீபமாக; நுனியென்பதை அண்ணம் நா என்ற இரண்டிற்குங் கூட்டுதலு மொன்று. மேல் அசு - ஆஞ் சூத்திரத்திலும் இதுகொள்க. (உஅ)

அச. அண்பல் முதலும் மண்ணமு முறையின்
நாவிளிம்பு வீங்கி யொற்றவும் வருடவும்
லகார ளகாரமா யிரண்டும் பிறக்கும்.

(இ - ள்.) அண்பல் முதலும்-மேல்வாய்ப்பல்லின் அடியையும், அண்ணமும் - மேல்வாயையும், முறையின் - முறையே, நா விளிம்பு - நாவின் ஓரமானது, வீங்கி - தடித்து, ஒற்றவும் வருடவும் - பொருந்தவும் தடவவும்,

* முறை நிரனிறையின் தன்மையை சகச-ஆஞ் சூத்திரத்திற் காண்க.

லகார ளகாரம ஆய - லகாரமாகியும் ளகாரமாகியும், இரண்டும - இவ்விரண டெழுத்துக்களும, பிறக்கும—; (எ - று.)—முறைநிரனிறை

மேல்வாய்ப்பல்லினடியை நாவின்ஓரம தடித்துப்பொருந்துதலால் லகரமும், மேல்வாயை நாவின்ஓரம தடித்துத் தடவுதலால் ளகாரமும பிறக்கும்.

லகாரம ளகாரம ஆ இரண்டும என்று பிரித்து, லகாரமும் ளகாரமுமாகிய அவ்விரண்டும என்றும உரைக்கலாம, (அ + இரண்டு = ஆயிரண்டு.)

அரு. மேற்பல் லிதழுற மேவிடும வவ்வே.

(இ - ள.) மேல் பல் - மேல்வாய்ப்பல்லை, இதழ்உற - கீழுதடு பொருந்த,—வ-வகரமானது, மேவிடும் - பிறக்கும (எ - று)

மேற்பல் கீழுதட்டைப் பொருந்த எனினுமாம (ரு௦)

அசு. அண்ணம் நுனிநா நனியுறில் றனவரும.

(இ - ள்.) அண்ணம - மேல்வாயை, நுனி நா-நாக்கு நுனி, நனிஉறில்-மிகப்பொருந்தின,—ற ன - றகரமும னகரமும, வரும-பிறக்கும் (எ - று.)

[சார்பெழுத்துக்கு இடமும், முயற்சியும்.]

அஎ. ஆய்தக் கிடந்தலை யங்கா முயற்சி
சார்பெழுத் தேனவுந் தம்முத லனைய.

(இ - ள்.) ஆய்தக்கு - ஆய்தவெழுத்துக்கு, இடம - பிறப்பிடம, தலை-தலையாம்; முயற்சி - பிரயத்தனம் அங்கா - வாயைத் திறத்தலாம்; சார்பெழுத்து எனவும - (ஆய்தம நீங்கலான மற்றவை) சார்பெழுத்துக்களும், தம முதல் அனைய-(இடமுயற்சி வகைகளினால்) தம தம் முதலெழுத்துக்களை ஒப்பனவாம; (எ - று.) ஆய்தக்கு = ஆய்தத்துக்கு' விகாரம் (ருஉ)

[பிறப்புக்குப் புறனடை]

அஅ எடுத்தல் படுத்தல் நலிதல் லுழப்பின
திரிபுந் தத்தமிற் சிறிதுள வாகும.

(இ - ள.) (பலவெழுத்திற்குப் பிறப்பு ஒன்றாகச்சொல்லப்பட்டனவாயினும)—எடுத்தல உயர்த்தி உச்சரித்தலும, படுத்தல் - தாழ்த்தி உச்சரித்தலும, நலிதல் - நடுத்தரமாக உச்சரித்தலும ஆகிய, உழப்பின் - (எழுத்திற்கு உரிய) ஒலிமுயற்சிவகையினால், திரிபும - (ஒன்றற்கொன்று பிறப்பு) வேறுபாடுகளும, தமதமில் அவ்வவற்றுள் சிறிது உள ஆகும - சிறிது சிறிது உள்ளனவாம; (எ - று)

ஓர் எழுத்தே வெவ்வேறு வகையாக ஒலித்தலையும் இச்சூத்திரத்திலேயே அடக்கவேண்டும்; அதற்கு உதாரணம்-'தந்தது' என்பதிலுள்ள தகரங்களின் ஒலிவேறுபாடு போலவன காண்க. (ருரு)

[உயிர்மெய் - உக்கூ]

‡ அகூ. புள்ளிவிட் டவ்வொடு முன்னுரு வாகியும்
ஏனை யுயிரோ டுருவு திரிந்தும்
உயிரள வாயதன் வடிவொழித் திருவயிற்
பெயரொடு மொற்றுமுன் னாய்வரு முயிர்மெய்.

(இ - ள்.) அவ்வொடு-(மெய்) அகரவுயிரோடு, (கூடியபொழுது), புள்ளி விட்டு-புள்ளியை விட்டு, மூன் உரு ஆகியும் - அவ்விட்டவடிவே வடிவாகியும், ஏனை உயிரோடு-('ஆ'முதலிய) மற்றை உயிர்களோடு(கூடியபொழுது,) உருவு திரிந்தும்-(புள்ளிவிடுதல்மாத்திரமேயன்றி) வடிவுவேறுபட்டும், உயிர் அளவு ஆய-உயிர்மாத்திரையே மாத்திரையாய [மெய்யின்மாத்திரை தோன்றாமல்], அதன் வடிவு ஒழிந்து - (வரிவடிவில்) உயிரின் வடிவை ஒழித்து [மெய்யெழுத்து விகாரப்பட்ட வடிவே வடிவாய்], இருவயின் பெயரொடும்-(உயிரும் மெய்யும் ஆகிய) இரண்டிடத்தும் பிறந்த (உயிர்மெய் என்னும்) பெயருடனே, ஒற்று மூன் ஆய்-மெய்யின்ஒலி முன்னும் உயிரின்ஒலி பின்னுமாகி, உயிர்மெய்-உயிர்மெய்யெழுத்து, வரும்—:(எ - று.)

பன்னிரண்டு உயிரும் பதினெட்டு மெய்யின்மேலும் தனித்தனி ஏறி வருதலால் உயிர்மெய் இருநூற்றுப்பதினாறாம்; க + அ = க, க + ஆ = கா முதலியன.

'உயிரளவாய' என்றதனால், உயிர்மெய்க்குற்றெழுத்துக்கு ஒருமாத்திரையும் உயிர்மெய்நெட்டெழுத்துக்கு இரண்டுமாத்திரையுமா மெனக.

ஙா ஙி ஙீ முதலிய மொழிமுதற்காரணமாகாத ஒலிகளையும் இங்கே எழுத்தெனத் தழுவுதல், அவற்றுள் முதலாகிய ஙகரம் மொழிமுதற்காரணமாதலால்; இது எண்ணிறைத்தற்பொருட்டுச் சுருங்கச்சொல்லலாகக் கூறப்பட்டு வருவதோர் அனுதிவழக்கமாமென அறிக; இங்கே "ஙப்போல் வளை" எனனும் ஔவையார் வாய்மொழியின் அருமபொருள் ஆராயத் தக்கது.

சார்பெழுத்திற்குச் சார்ந்துவருதல் ஓர்சிறப்பாதலால், அதனைப்பிறப்பிலக்கணத்தோடு சார்வைத்துச் சொல்லத்தொடங்கினார். (ருச)

[முற்றாய்தம் - ௩]

‡ கூO. குறியதன் முன்ன ராய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்த வல்லா றன் மிசைத்தே.

(இ - ள்.) ஆய்தம் புள்ளி - (மூன்று) புள்ளிவடிவாகிய ஆய்தவெழுத்தானது,—குறியதன் முன்னர் - குற்றெழுத்தின் முன்னதாய், உயிரொடு புணர்ந்த வல் ஆறன் மிசைத்து ஏ-உயிரோடு கூடிய வல்லெழுத்தாறனுள் ஒன்றன் மேலதாகியே வரும்; (எ - று.)—முன் - இங்கே, இடமுன்.

"ஆய்தவொற்று என்றவாறு. ஆய்தமான புள்ளி, 'ஆய்தப்புள்ளி' என்றார். இதனையும் ஒன்றின்பாற் சார்த்துதற்கு என்க" என்பது, பழைய உரை.

அடுப்புக்கூட்டுப்போல ஒருவகை ஆயுதவடிவாகமூன்று புள்ளிவைத்து எழுதப்படுதலால், ஆய்தமென்று பெயர். ஆய்தம் = ஆயுதம்; இங்கே, போர்க்கருவியாகிய கேடகமென்னும் படை சமைத்தற் கருவியாகிய அடுப்புமாம்.

முற்றாய்தம்-மாத்திரை குறையாத ஆய்தம் இச்சூத்திரத்தால், ஆய்தம் தனிமொழி தொடர்மொழிகளின் இடையிலன்றி மற்றைய இடங்களில் வாராதென்பது நன்கு விளங்கும்.

(உ - ம்.) எஃகு, கஃசு, ஒன்பஃது, பஃறி, பிறவுங் கண்டுகொள்க.

(எஃகு-வேல், கஃசு-கால்பலம் அரைக்காணி எடையளவு ஒன்பஃது-ஒன்பது. பஃறி-ஓடம்.)

வல்லினவகையால் இயல்பாகவரும ஆயதம் ஆறு;* அவ + கடிய = அஃகடிய எனத் திரிதலென்னும புணாச்சிவிகாரத்தால் வரும ஆயதம் ஒன்று; செயவது — செயவஃது என விரித்தலென்னுஞ் செய்யுள் விகாரத்தால்வரும ஆய்தம் ஒன்று ஆக, முற்றாய்தம் எட்டாதல காணக.

இது § தொல்காப்பியசூத்திரமாதலால், இதனை எடுத்துக்கொண்டது, தானெடுத்துமொழிதல் என்னும உத்தி (தான எடுத்துமொழிதல - பழஞ் சூத்திரத்தைத் தான் எடுத்துச் சொலலுதல) (ருரு)

[உயிரளபெடை - உக]

கூக. இசைகெடின மொழிமுத லிடைகடை நிலைநெடில்
அளபெழு மவறறவற் றினககுறில குறியே.

(இ - ள) மொழி - சொலலுககு, முதல் இடைகடை - முதலிலும நடுவிலும் இறுதியிலும, நிலை - நினற, நெடில - நெட்டெழுத்து எழும,—இசைகெடின்-(பாட்டில) ஓசை குறையுமிடத்து அளபு எழும-(அவவோசையை நிறைககத) தமதம [இரண்டு] மாத்திரையின மிககு ஒலிககும; அவறறு - அநதநெட்டெழுத்துககளின பின், அவறறு இனம குறில - அதற்கு இனமாகிய குறறெழுத்துககள, குறி-(அளபெடுத்தமையை அறிதற்குவரிவடிவில) அடையாளமாக வரும; (எ - று.)

குறி - அவ்வளவிறகுக குறியாய வநதுநிறகு மெனறபடி; எனவே, ஒரு மாத்திரைககு ஒன்றாக வைத்து எழுதபபடு மெனக.

உயிா அளவு எடை - உயிரெழுத்து மாத்திரை அதிகபபடுவது. இது, வடமொழியில, 'பலுதம' எனபபடும

(உ-ம்.)¶ "ஓஒதல வேணடும"-"ஆஅது மென்னுமவா" என முதலிலும,
உறஅாக குறுநோய"- சேறஅய் வாழிய" என இடையிலும,
"நலலபடாஅ," "அடாஅவடுப்பினவா" எனககடையிலும்வந்தன.

* மெயயீறறுபபுணரியல் ருஉ - ஆஞ் சூத்திரம பாாகக.

§ தொலகாபபியம், எழுத்ததிகாரம, மொழிமரபு - ரு.

¶ "ஓஒதல்வேணடு மொளிமாழகும செயவினை, யா அதுமென்னுமவா"

" உறாஅாக குறுநோயுரைபபாய கடலைச, செறாஅயவாழியநெஞ்சு "

" அனிச்சப்பூககாலகளை யாளபெய்தாள் நுசுபபிற்கு, நல்லபடா அபறை"

" கொடாஅ தவரெனபா குணடுநீா வையத், தடாஅ வடுப்பினவா."

" கெடுப்பதூஉங கெட்டாாககுச சாாவாய மறறாஙகே
யெடுபபதூஉ மெல்லாமமழை."

" உரனசைஇ யுள்ளந துணையாகச செனறாா
வரனசைஇ யின்னு முளேன."

மற்றை நெட்டெழுத்துக்களுமஇப்படியே அளபெடுக்கும 'செரூஅ அய்' எனபதில், ஆ ராளபெடுத்தது; ஆதலின, இருகுறிலகுறியாக எழுதப்பட்டது

இவை, செய்யுளிசை நிறைக்க வந்த அளபெடை.

செய்யுளோசை குன்றாவிடத்தும (க) இனிய ஓசையைத் தருதறபொருட்டாகவே அளபெடுப்பதும, (உ) ஒருசொல மற்றொருசொல்லின இசையை நிறைத்தறபொருட்டு அளபெடுப்பதும் உணடு

(க) (உ - ம.) ' கெடுப்பதூஉஉ கெட்டார்க்கு''-''எடுப்பதூஉமெல்லாம்''

இவற்றுள கெடுப்பதும, எடுப்பதும என நிற்பினும செய்யுளோசை குன்றாதாயினும, இனனிசை நிறைத்தற்பொருட்டுக குறில நெடிலாய அளபெடுத்தது; இது, இன்னிசையளபெடை. நெடில்அளபெடுத்தாலும் செய்யுளோசைகுறையாவிடத்தாயின இன்னிசையளபெடையேயாம.

(உ) (உ - ம.) ''உரனசைஇ யுள்ளம'' - ''வரனசைஇ யின்னும''

இவற்றுள உரனசை வரனசை எனநிற்பினுமசெய்யுளோசைகுன்றாதாயினும விருப்பமெனப பொருள்படும நசையென்னும பெயாசசொல்விருமபியென வினையெச்சப பொருளபடுமபொருட்டு வினையெச்சச்சொல்லாதற்கு'நசைஇ' என அளபெடுத்தது; இது, சொல்லிசையளபெடை. சொல விகாரப்பட்டு அளபெடுக்கும தழீஇ - [தழுவி] குரீஇ-[குருவி]வளைஇ[வளைந்து] முதலியனவும இதில் அடக்கப்படும.

ஆகவே, உயிரளபெடைகளெல்லாம அடஙகுமாறு அறிக.

நெட்டெழுத்து ஏழும மொழியின் மூன்றிடத்தும அளபெடுக்குமெனவே உயிரளபெடை இருபத்தொன்றாம; ஔகாரம மொழிக்குநடுவிலும கடையிலும் வாராமையால் அவ்விரண்டையும கழிக்க, நின்றஉயிரளபெடை பத்தொன்பது அப்பத்தொன்பதனோடு இன்னிசையளபெடை, சொல்லிசையளபெடை என்னும் இரண்டையும கூட்டஉயிரளபெடை இருபத்தோராதல் காணக (ருசு)

## [ஒற்றளபெடை - சஉ]

கூஉ. ஙஞண நமன வயலள வாயதம
அளபாங் குறிலிணை குறிற்கீ ழிடைகடை
மிகலே யவற்றின குறியாம வேறே.

(இ - ள.) (இசைகெடின்)-பாட்டில் ஓசை குறையுமிடத்து,—ங ஞ ண ந ம ன வ ய ல ள ஆயதம - ங முதலிய இப்பத்துமெய்யும ஆயதமும ஆகிய பதினொரெழுத்தும, குறில் இணை குறில் கீழ - இரண்டுகுற்றெழுத்தினபின்னும் ஒரு குற்றெழுத்தின பின்னும், இடை கடை - (மொழிக்கு) நடுவிலும கடையிலும், அளபு ஆம - (அவவோசையைநிறைக்கத) தமதம் (அரை) மாத்திரையின் மிக்கு ஒலிக்கும்; அவற்றின குறி - அப்படி அவை அளபெடுத்தமையை அறிதற்கு அடையாளம, வேறு மிகலே ஆம் அமமெய்யெழுத்துக்களின்பின் அவ்வெழுத்துக்களே (வரிவடிவில்) மற்றொருமுறை அளவுகுறியாய் வருதலாம்; (எ - று.)

ஒற்றளபெடை - மெய்யெழுத்து மாத்திரை அதிகப்படுவது. ('ஒற்றுக்கள் ஊன்றிச்சொல்ல அளபெழும் நெட்டெழுத்தை நீட்டிச்சொல்ல அளபெழும்' என்ற நேமிநாதவுரைவாக்கியங்கள் கருத்தக்கன.)

ஆய்தம், மாத்திரைமுதலியவற்றில் மெய்யெழுத்தோடு ஒத்திருத்தலால், அதனையும் இங்குக் கூட்டி உரைத்தார், கீழ் "ஆய்தப்புள்ளி" என்றதும் காண்க.

முன்சூத்திரத்தின் 'இசைகெடின்' என்றது இதற்குங் கூட்டப்பட்டது.
(உ-ம்) * "இலங்ங்கு வெண்பிறை"- "கலங்ங்கு" எனக்குறிலிணைக்கீழிடையிலும்,
"எங்ங்கிறைவன்"- "எங்ங்கென" எனக்குறிற்கீழிடையிலும்,
"மடங்ங்கலந்த"- "விடங்ங்கலந்தான்" எனக்குறிலிணைக்கீழ்க்கடையிலும்,
"அங்ங்கனிந்த"- "நங்ங்களம்" எனக்குறிற்கீழ்க்கடையிலும்.

ஙகரம் அளபெடுத்தது; மற்றைமெய்யெழுத்துக்களும் இப்படியே அளபெடுக்கும். (ஙகரம் கடைசியில் விதியீறாகவே வரும்; இயல்பீறாகவாராது.)

"விலஃஃகி வீங்கிருள்"- "இலஃஃகு முத்து" எனக் குறிலிணைக்கீழிடையிலும், "எஃஃகிலங்கிய" - "வெஃஃகுவார்க்கு" எனக் குறிலிணைக்கீழிடையிலும் ஆய்தம் அளபெடுத்தது.

குறிலிணைக்கீழிடை குறிற்கீழிடை குறிலிணைக்கீழ்க்கடை குறிற்கீழ்க்கடை என்னும் நான்கிடத்தும் பதினொரெழுத்து அளபெடுக்குமெனவே, ஒற்றளபெடை நாற்பத்துநான்காம்; ஆய்தம் மொழியிடையில் மாத்திரம் வருமேயன்றி (விதியீறாயினும்) மொழியிறுதியில்வாராமையால் § அதற்குக் குறிலிணைக்கீழ்க்கடை குறிற்கீழ்க்கடை என்னும் இரண்டிடத்தைக் கழிக்க, ஒற்றளபெடை நாற்பத்திரண்டாதல் காண்க. (௭௩)

---

* "இலங்ங்கு வெண்பிறைசூடீசனடியார்க்குக், கலங்ங்குநெஞ்சமிலைகாண்"
"எங்ங்கிறைவ னுள்ளென்பாய்மனனேயா, னெங்ங்கெனத்திரிவாரின்."
"மடங்ங்கலந்தமனனேகளத்து, விடங்ங்கலந்தானை வேண்டு."
"அங்ங்கனிந்தவருளீடத்தார்க்கன்புசெய்து, நங்ங்களங்கறுப்பாநாம்"
"விலஃஃகிவீங்கிருளோட்டுமேமாத், திலஃஃகுமுத்தினினம்"
"எஃஃகிலங்கியகையாயினனுயிர், வெஃஃகுவார்க்கில்லைவீடு"

§ அவ் + கடிய = அஃகடிய என்றாற்போலப் புணர்ச்சிவிகாரத்தால் (விதியீறாக) மொழியிறுதியில்வரும் ஆய்தமும் "குறியதன்முன்னர்" என்ற சூத்திரத்தால் மொழியிடையில் வந்ததுபோலவே பாவிக்கப்பட்டதனால், ஆய்தம் ஙகரம்போல விதியீறாக வருதலும் இல்லையெனக் கொள்ளப்பட்டது. அல் + திணை = அஃறிணை; பல் + தலை = பஃறலை என்றாற்போலப் புணர்ச்சிவிகாரத்தால் (விதியீறாக) மொழியிறுதியில் வருபவை ஆய்தக்குறுக்கமாதலால், அவையும் இங்கே கொள்ளப்படவில்லை "தற்சுட் டளபொழி" என ஐகார ஔகாரக் குறுக்கங்கட்குக் கூறுவதுபோல ஆய்தக்குறுக்கத்துக்கு எல்லை வரையறுத்துக் கூறாமையால், அது அளபெடுத்தல் ஆசிரியர்க்கு உடன்பாடன்றென்பது அறிக; இது மகரக்குறுக்கத்துக்கும் கொள்க.

[குற்றியலிகரம் - ஙஎ.]

† கூங. யகரம வரககுற ளுத்திரி யிகரமும்
அசைசசொல மியாவி னிகரமுங குறிய.

(இ - ள்) * யகரம வர - யகரத்தை முதலிலுடைய சொல (வருமொழியாய்) வர, குறள உ திரி - குற்றியலுகம திரிநத, இகரமும்—,—அசைசசொல் - முன்னிலையசைசசொல்லாகிய, மியாவின - மியாவென்பதன (மகரத்தின்மேலுள்ள), இகரமும—,—குறிய - குற்றியலிகரஙகளாம் ; (எ - று.)

குற்றியலிகரம் - ஒருமாத்திரையாகிய இகரம குறுகி அரைமாத்திரையாய நிற்பது; குற்றியலுகரமும இவ்வாறே.

(உ - ம) வீடு + யாது = வீடியாது எனவும், கேண்மியா எனவும வரும.

மேறகூறிய குற்றியலுகரம் முப்பத்தாறினும், அசைசசொல்மியாவினும குற்றியலிகரம் முப்பத்தேழாக வருதல காணக.

குற்றியலுகரம அறிநதபின்பே இது அறியப்படுவ தாயினும, எழுத்து முறைமைபற்றி, இதனை அதற்குமுன வைத்தார். (ஙஅ)

[குற்றியலுகரம் - ஙகூ]

‡ கூச. நெடிலோ டாயத முயிாவலி மெலியிடை
தொடர்மொழி யிறுதி வன்மையூ ருகரம்
அஃகும் பிறமேல தொடரவும பெறுமே.

(இ - ள்.) நெடிலோடு-தனிநெடில் எழுத்தோடே, ஆய்தம - ஆய்தம ஒன்றும, உயிர - (சொல்லுக்கு நடுவிலும கடையிலும வாராத ஒளகாரம நீஙகிய) உயிர பதினொன்றும, வலி - வல்லினமெய ஆறும, மெலி - மெல்லின மெய ஆறும, இடை - (வல்லெழுத்துககளோடு தொடராத வகரமெய் நீஙகிய) இடையினமெய ஐந்தும, ஆகிய முப்பத்தாறெழுத்துககளுள ஒன்றினால), தொடர - (ஈற்றுககு அயலெழுத்தாகத) தொடரப்பட்ட, மொழி - சொல்லின், இறுதி - ஈற்றில், வன்மை ஊர உகரம - வல்லெழுத்துககளிலொன்றன்மேல ஏறிவருகின்ற உகரமானது [கு சு டு து பு று], அஃகும - (தன் ஒரு மாத்திரையிற) குறுகும்; பிற - எழுத்துக்கள் ஒன்றும் பலவும, மேல தொடரவும - ஈற்றயலெழுத்துககு முன்னே தொடரவும, பெறும-(நெடிற்றொடரொழிநத ஐநது தொடாகளும) பெறும; (எ - று.)

'நெடிலோடு' என நெடிலை 'ஓடு' என்னும உருபுகொடுத்துப்பிரித்தது, நெடிற்றொடர பிற மேல தொடரப பெறாமல் தனிநெடிலுடையதாகியே ஈரெழுத்தொருமொழியாய் வருமென்று தோன்றுதற்கு; 'உயிர' என்றது, குறில் நெடில் இரணடையும.

---

* கஙச - ஆம சூத்திரம பாாகக.

(உ - ம்) நாடு, சோறு நெடிற்றொடர். | கொக்கு, பட்டு- வன்றொடர்.
எஃகு, அஃது-ஆய்தத்தொடர் | குரங்கு, பஞ்சு - மென்றொடர்
வரகு, பலாசு-உயிர்த்தொடர். | மார்பு, வீழ்து- இடைத்தொடர்.

புணரியலில் எடுத்தாளுதற் பொருட்டு இங்கே ஈற்றயலெழுத்தைக் கொண்டு ஆறுவகையாகச்சொன்னது, முன் மொழிந்து கோடல் என்னும் உத்தி; முன் மொழிந்து கோடல் - முன்னே ஒன்றைச் சொல்லிப்பின்னே அதனை வேண்டுமிடத்து எடுத்துக் கொள்ளுதல்; அன்றி பின்னே வேண்டு மென்ற காரணத்தால் முன்னே சொல்லி வைத்துக்கொள்ளுதல்.)

ஈற்றயலெழுத்தை நோக்கிக் குற்றியலுகரம் முப்பத்தாறாதல் காண்க

நாடு, ஈது, சூடு, ஏடு ஐது, ஓடு, வௌபு; அஃது, வரகு, பலாசு, அரிது, இடையீடு, குருடு, இறும்பூது,—இலேசு, இளைது,—புரோசு, சுக்கு, கச்சு பட்டு, பத்து, உப்பு, பற்று; சங்கு, பஞ்சு, வண்டு, பந்து, வம்பு, கன்று; வெய்து, மார்பு, சால்பு, வீழ்து, தௌகு என ஈற்றயலெழுத்து நோக்கிய உதாரணங்களை முறையே காண்க. கோடிட்ட எகர ஒகர உயிர்த்தொடர்க் குற்றுகரங்களுக்கு உதாரணம் வருமிடத்துக் கண்டுகொள்க

இனி, நெடிற்றொடர் முதலிய ஆறும் வல்லெழுத்து ஆறையும் ஈறாகக் கொள்ளக் குற்றியலுகரம் முப்பத்தாறாகுமென்று கொள்வாருமுளர்; அவர்க்கு—நாகு, காசு, காடு, காது, காபு, சோறு; எஃகு, கஃசு, கஃடு, அஃது, அஃபு, சுஃறு, வரகு, பலாசு, முருடு, எருது, மரபு, கயிறு; சுக்கு, கச்சு, பட்டு, பத்து, உப்பு, பற்று; சங்கு, பஞ்சு, வண்டு, பந்து, வம்பு, கன்று; செய்கு,—,—, பெய்து, மார்பு,—என்பன உதாரணமாம். சில வாராதிருக்கவும் முப்பத்தாறென்றல், 'உயிர்மெய் இருநூற்றுப்பதினாறு' என்றல் போலச் சுருங்கச் சொல்லலாகக் கூறிய தெனக

('நுந்தை' என்னும் முறைப்பெயரின் முன்னின்ற நகர மெய்யின்மேலிருக்கின்ற உகரமும் குறுகு மென்றல் பழைய வழக்கு.)

தனித்தும் தனிக்குறிலைச் சார்ந்தும் வரும் வல்லின மெய்யின்மேலும், மெல்லின இடையின மெய்களின் மேலும் மொழியிறுதியில் வரும் உகரம் முற்றியலுகரம் எனப்படும்

(உ - ம்) கு, து, நடு, பெறு; தாணு, துமு; கதவு, நாலு. (௯௪)

[ஐகாரக்குறுக்கம் - ௩, ஔகாரக்குறுக்கம் - ௧.]

௯௫. தற்சுட் டளபொழி யைம்மூ வழியும்
நையு மௌவு முதலற் றாகும்.

(இ - ள்) ஐ - ஐகாரம்,—தன் சுட்டு - தன்னை(எழுத்தை)க் குறிக்கு மிடமும், அளபு - அளபெடுக்குமிடமும், ஒழி-அல்லாத, மூவழியும்-(சொல்லுக்கு) முதல் இடைகடைகளிலே எங்கே நின்றாலும், நையும்-(தன் இரண்டு மாத்திரையிற்) குறுகும்; ஔவும் - ஔகாரமும்,—முதல் - (சொல்லுக்கு)

முதலில,—அறறு ஆகும - அவ்வாறுகும [தனனேகுறிககுமிடததும அள பெடுககுமிடததும குறுகாமல் சொலலில் வருமபொழுதெல்லாம் குறுகும]

ஐகார ஔகாரக குறுக்கஙகள-இரணடு மாததிரையாகிய ஐகார ஔகாரஙகள குறுகி ஒருமாததிரையாய நிறபன

தனிததும மெயயுடனகூடி உயிரமெய்யாயும நிறகின்ற ஐ ஔ என்பவை எழுததைககுறிககுமிடத்துமாததிரம குறுகாதிருககுமேயன்றி வேறு பொருளேககுறிககுமிடத தெல்லாம குறுகு மெனபதைக காட்டுதறகு, 'தற சுட்டொழி' எனறும, தன் மாததிரையின் மிககு ஒலிககும அளபெடையிற குறுகாதென்ற இயல்பை விளககுதறகு 'அளபொழி' என்றும கூறினரெனக

(உ - ம்.) ஐப்பசி, இடையன, குவளே; ஔவை.

இடவகையால் ஐகாரக்குறுக்கம் மூன்றும், ஔகாரக்குறுக்கம் ஒன்றும் வருதல காணக ஔகாரம், மொழியிடை கடைகளில வாராது (௬0)

[மகரக்குறுக்கம் - ௩.]

௬௫. ண ன முனனும வஃகான் மிசையுமக் குறுகும்.

(இ - ள்) ண ன முன்னும (ளகர லகரம திரிநத) ணகரனகரமெய களில் ஒன்றன் முன்னும,—வஃகான மிசையும-[வருமொழிமுதலில் நின்ற] வகரவுயிர்மெயயின் பினனும்,—ம-மகரமெய், குறுகும் - (தன் அரைமாததிரையிற்) குறுகும; (எ - று)—இஙகு, முன் பின் எனபன-இடம பறறின

மகரககுறுககம - அரைமாததிரையாகிய மகரமெய குறுகிக கால்மாத திரையாய் நிற்பது: ஆயதககுறுக்கமும இவ்வாறே.

(உ - ம்.) 'மருண்ம்" "போன்ம்," "தரும்வளவன்."

இவற்றுள், மருளும எனபது - 'மருணம' என்றும, போலும என்பது 'போனம' என்றும் உகரஙகெட்டு மெயதிரிநது நின்றன வென்று அறிக.

இசசூததிரக கருததை இந்நூலிற் பினவருஞ் சில * சூததிரஙகளேக கொணடு உய்ததுணரவைததலால், இது உய்த்துணரவைப்பு என்னும உததி; (உய்தது உணர வைபபு - (சிலவிதிகளேககொணடு ஆராயந்து அறியுமபடி ஒருபொருளே வைததல்.)

மகரக்குறுக்கம் இடவகையால் மூன்றுதல காணக. (௬௧)

[ஆயதக்குறுக்கம் - உ]

௬௭. லளவீற் றியைபினு மாய்த மஃகும

(இ - ள) ல ள ஈறு இயைபின்-(தனிககுறிலடுதத) லகர ளகர வீற றுப புணாசசியில,ஆம-(வருமொழிமுதலில் தகரம வருமபொழுது) ஆகினற ஆயதம—,—அஃகும - (தன் அரை மாததிரையிற) குறுகும; (எ - று.)

(உ - ம்) அல் + திணே = அஃறிணே; முள் + தீது = முஃடீது.

* ௩௪௧, உஉஎ, ௪உ0 இசசூததிரஙகள் முதலியன.

'லளவீற்றியைபினுமாய்தம' என்றது, முடிவிடங்கூறல் என்னும் உத்தி; * "குறிலவழி லளத்தவ்வணையி னய்த, மாகவும பெறூஉம் அல்வழியானே" எனனுஞ் சூத்திரத்தை நோக்கிக் கூறுதலால். (முடிவு இடம் கூறல் - தான் சொல்லும இலக்கணத்திற்கு விதி உள்ள இடத்தைச் சொலலுதல்.)

ஆய்தக்குறுக்கம் திரிபுவகையால இரணடாதல் காணக. (சஉ)

## ரு. உருவம்.

கூ௨ தொலலை வடிவின வெலலா வெழுத்துமாண்டு
எய்து மெகர வொகர மெய் புள்ளி.

(இ - ள்.) எல்லா எழுத்தும் - எல்லா வெழுத்துக்களும், தொல்லை வடிவின - (பல வேறு வகைப்பட எழுதி வழஙகும, பழைய வடிவை யுடையன வாம்; ஆணடு-அவ்வாறு வழஙகுமிடத்து,—எகரம ஒகரம்-எகரவுயிரும் ஒகர வுயிரும், மெய்-மெயகளும், புளளி எயதும-புள்ளியைப் பெறும்; (எ - று.)

(உ-ம்.) எ ஒ; க ங ச ஞ ட் ண த் ப் ம் ய ா ல் வ் ழ் ள் ற் ன் எனவரும்.

எகர ஒகரஙகளைப புளளியிட்டெழுதுதல், இககாலத்தில் இல்லை. (சரு)

## சா. மாத்திரை.

[எழுத்துக்களின் மாத்திரை.]

† கூ௩. மூன்று உயிரளபு இரணடாமநெடில ஒன்றே
குறிலொடு ஐஔக் குறுக்கம் ஒற்றளபு
அரை ஒற்று இ உக் குறுக்கம் ஆயதம்
கால குறள் மஃகான் ஆயதம் மாத்திரை.

(இ - ள்.) மாத்திரை—,—உயிரளபு-உயிரளபெடைக்கு, மூன்று-மூன்றாகும; நெடில் - நெட்டெழுத்திற்கு, இரணடு ஆம் - இரண்டாகும்; குறிலொடு - குறறெழுத்திறகும, ஐக்குறுககம்-ஐகாரக குறுககத்திறகும், ஔக குறுககம - ஔகாரககுறுககத்திற்கும, ஒற்றளபு - ஒற்றளபெடைககும், ஒன்றே - (தனித்தனி) ஒன்றாகும; ஒற்று - மெயயெழுத்திற்கும், இக்குறுக்கம் - குற்றியலிகரத்திறகும, உககுறுக்கம - குற்றியலுகரத்திறகும், ஆய்தம் - முற்றாய்தத்திறகும், அரை - (தனிததனி) அரையாகும்; குறள் மஃகான் - மகரக குறுககத்திறகும், குறள ஆயதம - ஆய்தக்குறுககத்திறகும், கால் - (தனித தனி) காலாகும; (எ - று.)

மேல் "புள்ளிவிட்டவ்வொடு" என்ற சூத்திரத்தில் 'உயிரளவாய்' என்றதனால உயிர்மெய்யின் மாததிரை இவ்வளவென்று பெறப்பட்டமைபற்றி, இஙகே அதற்கு மாததிரை சொல்லவில்லை; இது உரைத்தாமென்றல் என்னும உத்தி; (உரைததாம் என்றல்-முன்னே சொன்னோமென்பது தோன்ற மீளவுஞ்சொல்லாதுவிடுதல் ) உயிர்மெயக்கு மெய்ம்மாத்திரையொழிய எறிய

* உ௨அ - ஆம் சூத்திரம.

உயிர் மாத்திரையே மாத்திரை; உயிர்மெய்க்குற்றெழுத்துக்கு ஒரு மாத்திரையும், உயிர்மெய்நெட்டெழுத்துக்கு இரண்டு மாத்திரையு மாமெனக.

இனி, "செறாஅய் வாழிய நெஞ்சு", "இலாஅஅர்க்கில்லைத் தமர்" என உயிரளபெடை சிறுபான்மை [ஈரளபெடுக்குமிடத்து] நான்கு மாத்திரையினதாய் வருதலும் உண்டு. (௪௪)

[மாத்திரை இன்ன தென்பது.]

‡ ௧௦௦ இயல்பெழு மாந்த ரிமைநொடி மாத்திரை.

(இ - ள்.) மாந்தர் - மனிதருடைய, இயல்பு எழு - இயற்கையாக உண்டாகின்ற, இமை - கண்ணிமைப்பொழுதும், நொடி - கைந்நொடிப்பொழுதும்,—மாத்திரை-(தனித்தனி) ஒருமாத்திரை யென்னுங் காலவரையறைப் பொழுதாம்; (எ - று.)—இமை - ஒருமுறை கண்ணிமைத்தற்கு வேண்டும் பொழுது; நொடி - ஒரு முறை கைந்நொடித்தற்கு வேண்டும் பொழுது.

இந்த அளவுகருவியை 'மூன்றுயிரளபு" என்னுஞ் சூத்திரத்துக்கு முன்னே கூறாமல் பின்னே கூறியது, பின்னது நிறுத்தல் என்னும் உத்தி. (பின்னது நிறுத்தல்-முன் வைக்கவேண்டியதைப் பின்னே வைத்தல்) மாத்திரை - எழுத்து ஒலிக்கும் அளவு, மாத்ரா - வடசொல்.

கட்புலனாகிய இமைக்காலமும், செவிப்புலனாகிய நொடிக்காலமும் கருதிக்கொள்ளுதற்கு ஓதினாரென்க. இந்த இரண்டு அளவுகளுள் நொடியினும் இமை சிறப்புடையது; உள்ளத்தால் நினைத்து நிகழாமையின்; ஆனது பற்றி, அது முன்னே கூறப்பட்டது

"உன்னல் காலே யூன்றலரையே, முறுக்கல் முக்கால் விடுத்த லொன்றே" என்னுஞ் சூத்திரத்தின் பொருளும் இங்கு அறியத்தக்கது (௪௫)

[மாத்திரைக்குச் சிறப்புவிதி.]

| ௧௦௧. ஆவியு மொற்று மளவிறந் திசைத்தலும
மேவு மிசைவிளி பண்டமாற் றாதியின.

(இ - ள்.) இசை - இராகமும, விளி - அழைத்தலும, பண்டமாற்று - பண்டமாற்றலும, ஆதியின் - முதலானவிடத்து,—ஆவியும ஒற்றும - உயிரெழுத்துக்களும் மெய்யெழுத்துக்களும,—அளவு இறந்து - (முன்சொன்ன) அளவைக் கடந்து, இசைத்தலும - (அதிகமாக) ஒலித்தலையும், மேவும் - பொருந்தும்; (எ - று.)—பண்டம மாற்று - பொருள்களை விற்றற்பொருட்டுப் பெயர்கூறிக் கூவுதல்

முதலெழுத்தாகிய ஆவியும ஒற்றும் கூறினதில், அவற்றைச்சார்ந்து பிறக்கும் உயிர்மெய் முதலியனவும் அடங்கும்.

'ஆதி' என்றதனால், முறையிடுதல் புலம்புதல் முதலியன கொள்க.

இராகத்தில் அளவிறந்து ஒலிக்குமபோது உயிர் பன்னிரண்டுமாத்திரை வரையிலும், ஒற்றுப் பதினொரு மாத்திரைவரையிலும் நீண்டு ஒலிக்குமென்

ஞர் இசைநூலார்; அதனை இவ்வாசிரியர் உடன்பட்டது பிறநூல் முடிந்தது தானுடன்படுதல் என்னும் உத்தி (பிறநூல முடிந்தது தான உடன்படுதல் - வேறு நூலகளிற சொலலபபட்ட விதியைத தான் அங்கீகரித்தல்.)

மற்றவற்றில் அளவிறந்து ஒலிக்கும்பொழுது உலகநடைபிறழாமல் ஒலிப்பதே வரையறை யெனக்கொள்க.

இச்சூத்திரம் - தவளைப்பாய்த்து; "இயல் பெழு" என்னும் முற்சூத்திரத்தைத் தழுவாமல இடைவிட்டு, அதற்குமுன நின்ற "மூன்றுயிரளபு"என்னுஞ் சூத்திரத்தைத் தழுவி நின்றதனால் (தவளைப பாய்த்து - இடையிட்டுக் குதிக்கின்ற தவளையின பாய்ச்சல் போலத் தனக்கு முன் நின்ற சூத்திரத்தைத் தழுவாமல அதற்குமுனநின்ற சூத்திரத்தைத் தழுவுதல.) (௬௬)

## எ. முதல் நிலை.

[மொழிக்கு முதலில் வரும் எழுத்துக்கள்.]

‡ ௧0௨ பன்னீ ருயிருங் கசதந பமவய
ஞஙவீ ரைந்துயிர் மெய்யு மொழிமுதல.

(இ - ள்.) பன்னீருயிரும் - பன்னிரண்டு உயிரெழுத்துக்களும், க ச த ந ப ம வ ய ஞ ங ஈரைந்து உயிர்மெய்யும் - இப்பத்து உயிர்மெய்யெழுத்துக்களும்,—மொழிமுதல் - சொல்லுக்கு முதலாகும்; (எ - று.)

(உ-ம்) அடை, ஆடை, இடை, ஈடு உடை, ஊக்கம், எடு, ஏடு, ஐயம், ஒன்று, ஓடு, ஔவை எனவும்; கனி, சற்று, தனி, நலம், படை, மலை, வனம்; யவனர், ஞமலி, ஙனம் எனவும் வரும்.

மெய்யெழுத்து உயிரெழுத்தோடுகூடி முதலாகுமேயன்றி உயிரெழுத்துப்போலத் தனித்து முதலாகமாட்டாமையால், 'உயிர்மெய்' என்றார்; உயிரேறிய மெய் எனக. இது, இன்னதல்ல திதுவென மொழிதல் என்னும் உத்தி. (இன்னது அல்லது இது என மொழிதல் - இதுவன்று இதுதான் என்று துணிந்து சொல்லுதல்) (௬௭)

[வகரத்துக்குச் சிறப்பு விதி.]

‡ ௧0௩. உ ஊ ஒ ஓ வலவொடு வம்முதல்.

(இ - ள்.) உ ஊ ஒ ஓ அலவொடு - இந்நான்குமல்லாத எட்டு உயிரோடும் (கூடி), வ முதல் - வகரமெய் (சொல்லுக்கு) முதலாகும்; (எ - று.)

(உ - ம்) வண்டு, வாழை, வினை, வீடு, வெளி, வேழம், வையம், வௌவால். (௬௮)

[யகரத்துக்குச் சிறப்புவிதி.]

‡ ௧0௪. அ ஆ உ ஊ ஓ ஔ யம்முதல். -

* தொல்காப்பியனார் "ஆவோடல்லது யகரம் முதலாவது" எனக்கூறியிருப்பினும், இவ்வாசிரியர் இங்ஙனம் கொண்டது, வடசொற்கள் தமிழில் வரும்பொழுது முதலாதலையும் கூட்டியென்க; இதனை, இங்ஙனம் வருவன பிறவற்றிற்குங்கொள்க. இவ்வாசிரியர் வடசொல்லிலக்கணத்தையும் ஒருசார் தழுவுதலை, மேல் 'மொழியியல்' என்றது 'பதவியல்' என்பதனாலுமறிக.

(இ-ள்.) அ ஆ உ ஊ ஓ ஔ - இந்த ஆறு உயிரோடும் (கூடி), யமுதல்- யகரமெய் (சொல்லுக்கு) முதலாகும்; (எ - று.)

(உ - ம்.) யவனர், யானை, யுகம் யூகம், யோகம், யௌவனம் - (யவனர்- ஒருதேயத்தார். யூகம் - கூட்டம் யௌவனம்-இளமை.) (௬௯)

[ஞகரத்துக்குச் சிறப்புவிதி]

‡ ௧௦௫. அ ஆ எ ஒவ்வோ டாகு ஞம்முதல.

(இ - ள்.) அ ஆ எ ஒவ்வோடு - இந்நான்கு உயிரோடும் (கூடி), ஞ முதல் ஆகும் - ஞகரமெய் (சொல்லுக்கு) முதலாகும்; (எ - று)

(உ - ம்.) ஞமலி, ஞாலம், ஞெகிழி, ஞொள்கல். (ஞமலி - நாய், ஞாலம்- பூமி. ஞெகிழி - கொள்ளிக்கட்டை. ஞொள்கல் - இளைத்தல்.)

பிற்காலத்தார், மிஞிறு என்பதுஎழுத்துநிலை மாறிய இலக்கணப்போலி மொழியாகிய ஞிமிறு என்பதையுங் கூட்டி, ஞகரம் ஐந்து உயிரோடு கூடி மொழிக்கு முதலா மென்பர். (ஞிமிறு - வண்டு) அது, இயற்கை மொழியன் றாதலால், இவ்வாசிரியராற் கொள்ளப்பட்டிலது ஞேயம் என்றவடசொற் சிதைவும் அது. (௭௦)

[ஙகரத்துக்குச் சிறப்புவிதி.]

‡ ௧௦௬. சுட்டியா வெகர வினவழி யவ்வை
ஒட்டி ஙவ்வு முதலா கும்மே.

(இ - ள்.) சுட்டு - மூன்று சுட்டும், யா எகர வினா - யாவினாவும் எகர வினாவும் ஆகிய ஐந்தனுடைய, வழி - பின்னே, அவ்வை ஒட்டி - அகரத் தைச்சேர்ந்து, ஙவ்வும் முதல் ஆகும் - ஙகர மெய்யும் (சொல்லுக்கு) முத லாம்; (எ - று.)

(உ - ம்) அங்ஙனம், இங்ஙனம், உங்ஙனம், யாங்ஙனம், எங்ஙனம் (ஙனம்-விதம்.)

ஒருவிதத்தினாலே முதலாகையால், 'ஙவவும்' என இழிவு சிறப்பும்மை கொடுத்துக்கூறினார். முதலாகா தென்பவாகளு ஒருவகையால் உடன்படுத லும் ஒருவகையால் மறுத்தலுமாதலால, இது, பிறர்தம்மதம்மேற்கோண்டு களைவு என்னும் தம்மதம். (பிறாமதம் மேற்கொண்டு களைவு பிறாமதத்தை ஒருவாறு அங்கீகரித்து மற்றொருவகையால மறுத்தல.)

முதலாமென்ற பதத்துஉயிர்மெய்யுள் வகரம் முதலிய நான்கையும்எடுத் துச் சிறப்புவிதிகூறவே, மற்றைய க ச த ந ப ம என்னும் ஆறுமெய்களும் பன்னிரண்டுஉயிரோடுங்கூடி மொழிக்கு முதலாமென்பது அமைதல் காண்க.

(உ - ம்.) கனி, காய், கிளி, கீரை, குடம், கூடு, கெண்டை, கேள், கைதை, கொண்டை, கோடு, கௌவை; சமர், சாந்து, சிறுமை, சீர், சுரை, சூது, செக்கு, சேவல், சையம், சொல், சோறு, சௌரியம்; தந்தை, தாய், தினை, தீமை, துணி, தூது, தெறகு, தேன், தையல், தொண்டை, தோடு, தௌவை; நன்மை, நாடு, நிலம், நீர், நுனி, நூல், நெஞ்சு, நேர், நைதல், நொசசி, நோக் கம்; நௌவி, படை, பால, பிடி, பீடு, புகழ், பூண்டு, பெடை, பேடு, பைதல்,

பொன், போா, பௌவம்; மனே, மாலே, மின்னல, மீன், முனே, மூப்பு, மெலிவு, மேனி, மையல, மொழி, மோடு, மௌவல்

இங்ஙனம் க ச த ந ப மக்கள் பன்னிரண்டு உயிரோடும், வகரம் எட்டு உயிரோடும, யகரம் ஆறு உயிரோடும, ஞகரம நானகு உயிரோடும, ஙகரம் ஒருயிரோடும கூடி மொழிககு முதலாதல்பற்றியே, மேல 'பன்னீருயிரும" என்ற சூத்திரத்தில கசதநபமவயஞங' என்று முறைபபடுததினரென அறிக.

உயிரெழுத்துப பன்னிரணடும, கசதநபமக்கள் பன்னிரண்டு உயிரோடு வருதலால் அவை எழுபததிரணடும், வகரம் எட்டு உயிரோடு வருதலால் அவை எட்டும, யகரம ஆறு உயிரோடு வருதலால்அவைஆறும, ஞகரம நான்கு உயிரோடு வருதலால் அவை நான்கும, ஙகரம ஒருயிரோடுவருதலால் அது ஒன்றும், ஆக நூற்றுமூன்று எழுத்துக்களே மொழிக்கு முதலாம். (ருக)

## அ. ஈற்றுநிலே.

[மொழிககு இறுதியில் வரும எழுத்துக்கள்].

‡ கoஎ. ஆவி ஞணநமன யரலவ ழளமெய
சாயு முகர நாலா றீறே *

(இ - ள்.) ஆவி - (தனிததும் மெய்யோடுகூடியும் வரும்) பன்னிரணடு உயிர்களும, ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள மெய - இப்பதினொருமெய்களும, சாயும் உகரம - குற்றியலுகரமும ஆகிய, நாலாறும - இருபததுநான்குஎழுத துக்களும்,—ஈறு - (மொழிககு) இறுதியாகும்; (எ - று.)

(உ - ம்) அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ எனவும; விள, பலா, களி, தீ, விடு, பூ, சே, தே, பனே, நொ, போ, வெளஎனவும், உரிஞ், மண, பொருந, மரம், பொன, வேய, வோ, வேல, தெவ, புகழ், வாள், அஃது எனவும் வரும. (ஆ - பசு. ஊ-மாமிசம. ஏ - அமபு. ஐ - அழகு. ஒ - ஒததல். ஓ - மதகு-நீர்தாஙகும் பலகை. ஔ - பறறுதல். சே-எருது தே - தெயவம். நொ - வருத்து. உரிஞ - உராயதல். பொருந - பொருநதுதல; அல்லது, ஒரு வகைப்பாட்டு. வேய-மூஙகில். தெவ்-பகை )

குற்றியலுகரமும உயிரீற்றில் அடஙகுமாயினும், புணாசசிவேறுபாடு பற்றி, வேறு எடுததுக கூறினா எனவே, இஙகு 'ஆவி' என்றதில அடஙகிய உகரம் முற்றியலுகரமாம. மறறைய குறுககஙகளே வேறுஎடுத்துககூறாமைக் குக் காரணம புணர்ச்சிவேறுபாடின்மை யென்க.

வல்லினமெய் ஆறும, ஙகரமெய்யும மொழிக்கு ஈறுகா. (ருஉ)

[சிலவற்றிற்குச் சிறப்புவிதி]

கo அ. குற்றுயி ரளபி னீறா மெகரம்
மெய்யொடே லாதொந நவவொ டாமௌ
ககர வகரமோ டாகு மென்ப.

---

* மேல உயிரீற்றுப்புணரியலிலும "எணமூ வெழுததிற றெவ்வகை மொழிக்கும்" என்பா.

(இ - ள்.) குறு உயிர் - (அ இ உ எ ஒ என்கின்ற) உயிர்க்குற்றெழுத்துக்கள்,—(ஓரெழுத்தொருமொழியாய் நாருத லன்றி) அளபின் - அளபெடையிலும், நாறு ஆம் - (வரிவடிவில் அறிகுறியாகத் தனித்து) நாருகும், எகரம்—, மெய்யொடு ஏலாது - மெய்யோடுகூடி நாருகாது; ஒ - ஒகரம், நவ்வொடு ஆம் - நகரமெய்யொன றுடனே கூடி நாருகும்; ஔ - ஔகாரம், ககர வகரமோடு ஆகும் - ககர வகர மெய்க ளிரண்டுடன் கூடி நாருகும், என்ப - என்றுசொலவா, (அறிவுடையோர்); (எ - று.)

(உ - ம்.) பலாஅ, தீஇ, பூஉ, சேஎ, கைஇ, கோஒ, கௌஉ எனவும் நொ எனவும்; கௌ, வௌ எனவும் வரும். (கௌ - வாயினுற்பற்று. வௌ - கொள்ளையிடு.)

எகர ஒகர ஔகாரங்களை எடுத்துச்சொல்லவே, மற்றை உயிர்கள் தமக்கு ஏற்ற மெய்களோடும் கூடி நாரு மென்பது விளங்கும். (௫௩)

[உயிர்மெய்க்கு முதலும் ஈறும்.]

௧0௯. நின்ற நெறியே யுயிர்மெய் முதலீறே.

(இ - ள்.) நின்ற நெறியே - (மெய் முன்னும் உயிர் பின்னுமாக ஒலித்து) நின்ற வழியே, உயிர்மெய் - உயிர்மெய்க்கு, முதல்-(மெய்) முதலாகும்; ஈறு - (உயிர்) ஈருகும்; (எ - று.)

எனவே உயிரும் மெய்யும் உயிர்மெய்யொழிந்த ஆய்தம் முதலிய ஒன்பது சார்பெழுத்துக்களும் ஓரெழுத் தாகையால் அவற்றிற்கு முதலும் ஈறும் அவையேயா மென்பது பெறப்படும். (௫௪)

## ௯. இடைநிலை.

[மொழிக்கு இடையில் வரும் எழுத்துக்கள்.]

௧௧0. க ச த ப வொழித்தவீ ரேழன் கூட்டம்
மெய்ம்மயக் குடனிலை ரழவொழித் தீரெட்டு
ஆகுமிவ் விருபான் மயக்கு மொழியிடை
மேவு முயிர்மெய்ம் மயக்கள வின்றே.

(இ - ள்.) க ச த ப ஒழித்த - (பதினெட்டுமெய்களிற்) கசதப எனும் நான்கையும் நீக்கிய, ஈரேழன் கூட்டம் - (மற்றைப்) பதினான்குமெய்களும் (பிறமெய்களோடுகூடுங்) கூட்டம், மெய்ம்மயக்கு - (வேற்றுநிலை) மெய்ம்மயக்க மாகும் ர ழ ஒழித்து - ரழ என்னும் இரண்டையும் நீக்கி, ஈரெட்டு - (மற்றைப்) பதினாறு மெய்களும் (தம்மோடு கூடுங் கூட்டம்), உடன் நிலை ஆகும்- உடனிலைமெய்ம்மயக்கமாகும்; இ இரு பால் மயக்கும் - இவ்விரண்டுவகை மயக்கமும், மொழி இடை மேவும் - ஒருமொழிக்கு நடுவிலும் தொடர்மொழிக்கு நடுவிலும் வரும்; உயிர்மெய் மயக்கு - உயிருடன் மெய்யும் மெய்யுடன் உயிரும் மாறிமயங்கும் மயக்கத்திற்கு, அளவு இன்று - அளவில்லை; (வேண்டியவாறே மயங்கும் என்றபடி); (எ - று.)

'கூட்டம்,' 'மயக்கம்' என்பன-ஒருபொருட்சொற்கள். பின் 'உடனிலை' என்றதனால், முன் 'வேற்றுநிலை' என்பது கொள்ளப்பட்டது.

மொழியிடையின்றி ஓரெழுத்திலும் மயங்குதலால், மெய்யும் உயிரும் மயங்குதற்கு இடங்கூறாது விட்டார்.

இச்சூத்திரத்தால், மெய்யுடன் மெய் மயங்கும்பொழுது, க ச த ப என்னும் நான்கும் பிறமெய்யோடு மயங்காவாய்த் தம்மொடு தாமே மயங்குமென்பதும். ர ழ என்னும் இரண்டும் தம்மொடு தாம் மயங்காவாய்த் தம்மொடு பிறவே மயங்கு மென்பதும், மற்றைப் பன்னிரண்டு மெய்களும் தம்மொடு தாமும் பிறவும் மயங்குமென்பதும் பெறப்பட்டன என அறிக.

உயிரும் மெய்யும் மயங்குதற்கு உதாரணம் —அல், புள் என உயிருடன் மெய் மயங்கின; கா, பூ என மெய்யுடன் உயிர் மயங்கின. மெய்யுடன் மெய் மயங்குதற்கு உதாரணம், மேல்வருஞ் சிறப்புச் சூத்திரங்களிற் காண்க.

உயிருடன் உயிர் மயங்குதல் அருமையாதலின் கூறப்படவில்லை. (௫௫)

[வேற்றுநிலைமெய்ம்மயக்கத்திறகுச் சிறப்புவிதி.]

௧௧௧. ஙம்முன் கவ்வா ன் வம்முன் யவ்வே.

(இ - ள்.) ங முன் க - ஙகரமெய்யின் முன் ககரமும், வ முன் ய-வகர மெய்யின் முன் யகரமும், ஆம் - மயங்கும்; (எ - று)—முன் - இடமுன்; அடுத்த ஒன்பது சூத்திரங்களிலும் இது. (உ - ம்.) பங்கு, தெவ்யாது. (௫௬)

௧௧௨. ஞ ந முன் தம்மினம் யகரமொ டாகும்.

(இ - ள்.) ஞ ந முன்-ஞகர நகர மெய்களின் முன், தம இனம் - அவற்றுக்கு இனமாகிய சகர தகரங்களும், யகரமொடு - யகரமும், ஆகும் - மயங்கும்; (எ - று.)—ஞகரமெய்யின் முன் சகரமும் யகரமும், நகரமெய்யின் முன் தகரமும் யகரமும் மயங்கு மென்க. ௧௧௪ - ஆஞ் சூத்திரத்துக்கும் இவ்வாறே காண்க.

(உ - ம்.) பஞ்சு, உரிஞ்யாது; பந்து, பொருநயாது. (௫௭)

௧௧௩. டறமுன் கசப மெய்யுடன் மயங்கும்.

(இ - ள்.) ட ற முன் - டகர றகரமெய்களின் முன், க ச ப மெய்-க ச ப என்கின்ற மூன்று மெய்களும், உடன் மயங்கும் - கூடிமயங்கும்; (எ - று.)

(உ - ம்.) வெட்கம், மாட்சி, திட்பம்; கற்க, பயிற்சி, கற்பு. (௫௮)

௧௧௪. ணனமுன் னினங் கச ஞபமய வவ்வரும்

(இ - ள்.) ண ன முன் - ணகர னகரமெய்களின் முன், இனம்-(அவற்றிற்கு) இனமாகிய டகர றகரங்களும், க ச ஞ ப ம ய வ - ககரம் முதலிய இவ்வேழு மெய்களும், வரும் - மயங்கும்; (எ - று.)

ணகரமெய்யின்முன் டகரமும், க ச ஞ ப ம ய வக்களும், னகரமெய்யின் முன் றகரமும் க ச ஞ ப ம ய வக்களும், மயங்கு மென்க.

(உ - ம்.) விண்டு, உணகு, வெண்சோறு, வெண்ஞமலி, பண்பு, வெண்மை, மண்யாது, மண்வலிது; கன்று, புன்கு, நன்செய், புன்ஞமலி, இன்பம், நன்மை, பொன்யாது, பொன்வலிது. (நிக)

ககரு மமமுன் பயவ மயங்கு மென்ப.

(இ - ள்.) ம முன் - மகரமெய்யின் முன், ப ய வ - இம்மூன்றுமெய்களும், மயங்கும் - இணங்கும், என்ப - என்று சொல்வர் (புலவர்); (எ - று)

(உ - ம்.) நம்பன், கலம்யாது, கலம்வலிது. (சுo)

ககசு. யரழ முன்னர் மொழிமுதன் மெய்வரும்.

(இ - ள்) ய ர ழ முன்னர்-இம்மூன்று மெய்களின் முன், மொழிமுதல் மெய்-மொழிக்கு முதலாமென்ற பத்துமெய்களும், வரும்-மயங்கும்; (எ - று)

(உ - ம்) பொய்கை, கொய்சகம், எய்து, செய்நா, ஆய்ப்பு, சேய்மை, ஆய்வு,—பாய்ஞெகிழி, சோக, வார்சிலை, ஓர்தும், சேர்நா, மார்பு, சீர்மை, ஆர்வம், போர்யானை, நோர்ஞெகிழி, சூழ்கி, வீழ்சிலை, வாழ்தல், வாழ்நன், சூழ்ப, நீழ்மை, வாழ்வு, வீழ்யானை, வாழ்ஞெண்டு.

வேய்ங்குழல், ஆர்ங்கோடு, பாழ்ங்கிணறு என ய ர ழ வொற்றின்முன் ஙகரம் தனிமெய்யாய் மயங்குதல், மேல, "யரழ வொற்று" என்னுஞ் சூத்திரத்தாற் பெறப்படும். கீழ் "சுட்டியா எகரவினு" என்னும் சூத்திரத்தால் ஙகரம் பிறமொழிகளுக்கு முதலாகாமை கூறப்பட்டதனால் இவற்றின் முன் ஙகரம் உயிர்மெய்யாக வந்து மயங்குதற்கு உதாரணம் இல்லை.

சுருங்கச் சொல்லல் என்னும் அழகுபற்றி 'மொழிமுதன்மெய்' எனக் கூறினாராயினும், வெய்யன் என யகரத்தின் முன் யகரம் மயங்குதல் உடனிலை மயக்கமாதலின், அதனை இங்கு விலக்குக; இது ஏற்புழிக்கோடலென்னும் உத்தியின் பாற்படும். (சுக)

ககஎ. லளமுன் கசப வயவொன் றுமமே.

(இ - ள்.) ல ள முன் - லகர ளகர மெய்களின் முன், க ச ப வ ய - இவ்வைந்து மெய்களும், ஒன்றும் - மயங்கும்; (எ - று.)

(உ - ம்.) நல்கி, வலசி, சால்பு, செல்வம், கல்யாணம், வெள்கி, நீள்சிலை, கொள்ப, கேள்வி, வெள்யானை. (சுஉ)

[உடனிலை மெய்ம்மயக்கத்திற்குச் சிறப்புவிதி.]

ககஅ. ரழவல்லன தமமுற் றாமுட னிலையும்.

(இ - ள்.) ர ழ அல்லன - ரகர ழகர மல்லாத மற்றைப் பதினாறு மெய்களும்,—தமமுன் தாம் - தமக்கு முன் தாமே வந்து, உடன் நிலையும் - உடன் நின்று மயங்கும்; (எ - று)—மேல் 'உடனிலை ரழவொழிந்து ஈரெட்டாகும்' என்றதன் விவரணம் இது. உடனிலைமயக்கமாவது - தனக்கு முன் தான் மயங்குதல் என்ற இலக்கணம் இங்கு விளக்கப்பட்டது.

(உ - ம்) சுக்கு, அங்ஙனம், அச்சம், மஞ்ஞை, பட்டு, திண்ணம், பத்து, வெந்நீர், அப்பனை, அம்மை, மெய்யன், அல்லி, தெவ்வர், பள்ளம், காற்று, அன்னை. (௯௩)

[தனிமெய்யுடனே தனிமெய்யாக மயங்குவனவும், மொழிக்கு உறுப்பாக மயங்காதனவும்.]

௧௧௯. யரழவொற் றின்முன் கசதப ஙஞநம
ஈரொற் றாம் ரழத் தனிக்குறி லணையா.

(இ - ள்.) யரழ ஒற்றின்முன் - ய ர ழ என்னும் மூன்று மெய்களின் முன்னே, க ச த ப ங ஞ ந ம - இவ்வெட்டுமெய்களும், ஈரொற்று ஆம் - (கீழ்க்கூறியபடி உயிர்மெய்யாகி மயங்குதலுமல்லாமல் தாமும் மெய்யாய் நின்று) இரண்டு ஒற்றாயும் மயங்கும்; ர ழ - ரகர ழகர மெய்கள், தனிக்குறில் அணையா - (மொழிக்கு உறுப்பாகத்) தனிக்குற்றெழுத்தின் பின்னே வந்து மயங்காவாம்; (எ - று.)

| | | | |
|---|---|---|---|
| (உ - ம்.) | காய்க்க, | ஈர்க்கு, | வாழ்க்கை; |
| | பாய்ச்சினன், | உணர்ச்சி, | சூழ்ச்சி; |
| | தேய்த்தல், | போர்த்தல் | வாழ்த்தினன்; |
| | வாய்ப்பு, | கூர்ப்பு, | காழ்ப்பு; |
| | வேய்ங்குழல், | ஆர்ங்கோடு, | பாழ்ங்கிணறு; |
| | தேய்ஞ்சது, | கூர்ஞ்சிறை, | பாழ்ஞ்சுனை; |
| | காய்ந்தனம், | சோர்ந்தனம், | வாழ்ந்தனம்; |
| | மொய்ம்பு. | ஈர்ம்பணை, | பாழ்ம்பதி. |

'அணையா' என்ற ரழக்களுக்கு உதாரணம் காட்டலாகாமை உணர்க.

இனி, உரையிற்கோடல் என்னும் உத்தியால், ரகரவொற்றுத் தனிக்குறிலைச்சேர்ந்து மொழிக்குஉறுப்பாகி விகுதி இடைச்சொல்லாய் வருதலைக் கொள்வாருமுளர்; (உ - ம்.) வந்தனர் என்பதில், அர். (௯௪)

[செய்யுளில் ஈரொற்றாய்நிற்கும் எழுத்துக்கள்]

௧௨௦. லளமெய் திரிந்த னணமுன் மகாரம்
நைந்தீ ரொற்றாஞ் செய்யு ளுள்ளே.

(இ - ள்.) செய்யுளுள்ளே - பாட்டினுள்,—ல ள மெய் திரிந்த - லகார ளகார மெய்கள் திரிந்த, ன ண முன் - னகார ணகாரமெய்களின்முன் வருகின்ற, மகாரம் - மகர மெய்யானது,—நைந்து - (முன் சொன்னபடியே) குறுகி, ஈரொற்று ஆம் - (அந்தமெய்களுடனே) ஈரொற்றுமயக்கமாம்; (எ - று.)

(உ - ம்) "திசையறிமீகானும் போன்ம்," "மயிலியன்மாதர் மருண்ம்"

இங்கே, முன் - இடமுன். இங்கு 'செய்யுளுள்ளே' என்றதனால், முன்பு கூறியவை வழக்குஞ் செய்யுள் இரண்டிலும் வருவன என்று அறிக. (௯௫)

* 'தனிக்குறிலணையா' என்றும் பாடம்.

[முதனிலை இறுதிநிலை இடைநிலைகட்குப் புறனடை.]

௧௨௧ தம்பெயர் மொழியின் முதலும் மயக்கமும்
இம்முறை மாறியு மியலு மெனப.

(இ - ள்) தம்பெயர் மொழியின் - எழுத்துக்களின் பெயர்களைச் சொல்லுமிடத்து,—முதலும் மயக்கமும்-மொழிமுதலில்நிற்றலும் மொழியிடையே நிற்றலும், இ முறை மாறியும் இயலும் - கீழ்ச்சொன்ன இவ்விலக்கணம் பிறழ்ந்தும் வரும், எனப - என்று சொல்வர்,(அறிவுடையோர்); (எ - று.)

எனவே, எழுத்துக்கள் வேறுபொருள்குறியாமல் தம்மையேகுறித்து நிலைமொழிகளாகப் புணருமிடத்து, மொழிமுதற்கு விதித்தனவும் விலக்கியனவுமாகிய எல்லாவெழுத்துக்களும் முதலாமென்பதும், இடைநிலை மயக்கத்திற்கு விதித்தனவும் விலக்கியனவுமாகிய எல்லாவெழுத்துக்களும் இடைநின்று மயங்குமென்பதும் ஆயிற்று; இப்படி எல்லாவெழுத்துக்களும் தனித்தனி அதற்கு அதுவே முதலா மெனவே, ஈற்றிற்கு விதிக்கப்பட்டனவும் விலக்கப்பட்டனவுமாகிய எல்லாவெழுத்துக்களும் தனித்தனி அதற்கு அதுவே ஈறுமெனத் தானே விளங்குதலின், 'ஈறும்' என மிகைபடக்கூறாமல் விட்டார்.

(உ-ம்) "அவற்றுள், லளஃகான் முன்னர் யவவுந் தோன்றும்"-இதில் லகரமானது - முதலாகியும், 'அவற்றுள்' என்றதன் இறுதியிலே நின்ற ளகர மெய்யோடு மயங்கியும் வந்தது. 'ஙப் பெரிது' இதில், ஙகரம் - மெய்யோடு ஈறாய் வந்தது. பிறவும் இப்படியே. (௬௬)

## ௧௦. போலி

[இறுதிப்போலி]

௧௨௨. மகர விறுதி யஃறிணைப் பெயரின்
னகரமோ டுறழா நடப்பன வுளவே.

(இ - ள்.) அஃறிணைப்பெயரின் - பலபகாவஃறிணைப்பெயர்களிடத்து, இறுதி மகரம் - ஈற்றிலேநின்ற மகரமெய், னகரமோடு உறழா - னகரமெய்யோடு ஒத்து, நடப்பன - நடப்பவை, உள - உண்டு; (எ று.)—அது, போலியெனப்படும். இம்மகரம் குறிலிணைக்கீழ் வருவ தென்று உரையிற்கோடலெனனும் உத்தியாற் கொள்க. (உரையிற் கோடல்-சூத்திரத்திற் சொல்லப் படாத பொருளை அதன் உரையினால் அமைத்துக்கொள்ளுதல்.)

(உ - ம்) அகம்=அகன், கலம்=கலன், நிலம்=நிலன்.

போலியாவது - ஒருசொல்லில் ஓர் எழுத்து உள்ளவிடத்தில் அவ்வெழுத்துக்கு ஈடாக வேறோர் எழுத்து நின்றாலும் பொருள்வேறுபடாமல் ஒத்திருப்பது; போலி - போலநிற்பது. அது, மொழியின் முதல் இடை கடைகளால் மூன்றுவகைப்படும்.

முதற்போலி இடைப்போலிகளின் பின் முறையே சொல்லவேண்டிய இவ்விறுதிப்போலியை முன்னே சொன்னதனால், * சுரும்பு=சுரும்பர்,

* இது, முறையனறிக்கூற்று எனப்படும்; இதனால் ஏதேனும் விசேஷார்த்தங் கொள்ளுதல், மரபு.

வண்டு = வண்டர், சிறகு = சிறகர், இடக்கு = இடக்கர், வெற்பு = வெற்பர் என்ச் சில குற்றியலுகரப்பெயரினிறுதி உகரத்துக்கு 'அர்' என்பது போலியாக வருதலும்; பந்தல் = பந்தர், சாம்பல் = சாம்பர், குடல் = குடர் என்ச் சில பெயரினிறுதி லகரமெய்க்கு ரகரமெய் போலியாகவருதலும்; திறம் = திறல், மறம் = மறல், பக்கம் = பக்கல், கூவம் = கூவல் என்ச் சில பெயரினிறுதி மகரமெய்க்கு லகரமெய்போலியாகவருதலும்; மதில் = மதிள் என்ச் சிறுபான்மை லகரத்துக்கு ளகரம் போலியாகவருதலும் முதலியன கொள்க. (கூஎ)

[முதற்போலியும், இடைப்போலியும்.]

கஉரு. அஐ முதலிடை யொக்குஞ் சஞய முன்.

(இ - ள்) அ ஐ - அகரமும் ஐகாரமும்,—முதல் இடை-(சொல்லுக்கு) முதலிலும் நடுவிலும்,—ச ஞ ய முன் - சகர ஞகர யகரங்களுக்கு முன்,—ஒக்கும் - (தம்முள் வேறுபாடில்லாமல்) போலியாக வரும்; (எ - று)

இங்கு 'முன்' என்றது, காலமுன் எனக்கொள்க. * (இவ்வியலில் கூடு, சக, நிகூ—கூடு - இச்சூத்திரங்களில் 'முன்' என்றதற்கும், இச்சூத்திரத்தில் 'முன்' என்றதற்கும் உள்ள பொருள்வேறுபாடு நுட்பமாக நோக்கத்தக்கது)

| முதற்போலி. | இடைப்போலி. |
|---|---|
| (உ - ம்.) பசல் = பைசல் | அரசு = அரைசு. |
| மஞ்சு = மைஞ்சு. | இலஞ்சி = இலைஞ்சி. |
| மயல் = மையல். | அரயா = அரையா. |

'அ ஐ ஒக்கும்' எனப் பொதுப்படக்கூறியதனால், வைசச-வச்ச, ஐஞ்சு-அஞ்சு, பைய-பய என்ச் சகர ஞகரயகரங்களின்முன் ஐகாரத்துக்கு அகரம் போலியாக வருதலும் கொள்க. இனி, சிறுபான்மை பழமை - பழைமை, இளமை - இளைமை எனப் பிறவெழுத்தின் முன்னும் இவ்வாறு வரும். (கூஅ)

[இடைப்போலி,]

கஉச. ஐகான் யவ்வழி நவ்வொடு சில்வழி
ஞஃகா னுறழு மென்மரு முளரே.

(இ-ள்) சில வழி-(சொல்லுக்கு நடுவிற) சிலவிடத்து, ஐகான ய வழி - ஐகாரத்தின்பின்னும் யகரமெய்யின்பின்னும், நவ்வோடு - (வருகின்ற) நகர மெய்யோடு, ஞஃகான் - ஞகரமெய், உறழும் - போலியாகவரும், என்மரும்-என்று சொல்பவரும், உளா - (சிலர்) உண்டு; (எ - று.)

| | | |
|---|---|---|
| (உ-ம்.) மைந்நின்ற = 'மைஞ்ஞின்ற' | செய்ந்நின்ற = செய்ஞ்ஞின்ற' | செய்யுள். |
| கைந்நின்ற = 'கைஞ்ஞின்ற' | செய்ந்நின்று = 'செய்ஞ்ஞின்று, | |

ஐந்நூறு = ஐஞ்ஞூறு, சேய்நலூா = சேய்ஞலூா; வழக்கு.

---

* முன்பின் என்பன-காலம்பற்றியும், இடம்பற்றியும்மாறிவரும்;(உ-ம்) க ங என்பதில் ககரம் முன்னெழுதப்படுதலால் காலம்பற்றி முன்னும், அது வே தனக்கு எதிர்முகமாக ஙகரம் முன்னிருத்தலால் இடம்பற்றிப் பின்னு மாம் எனக் காண்க; மேல் கீழ் என்பவற்றிற்கும் இவ்வாறே கண்டுகொள்க.

இங்குக்கூறிய நகரம் பெரும்பாலும் தொடர்மொழியில் சிறப்ப தென அறிக.

இச்சூத்திரம், பிறன்கோட்கூறல் என்னும் உத்தி. (பிறன் கோட்கூறல் - பிறன்கொண்ட கொள்கையைத் தன்னூலிற் சொல்லுதல்.) 'உம்மையான், உறழாதென்பார் பெரும்பாலரெனக்' என்பது, பழையவுரை.

இனி, உரையிற்கோடல் என்னும் உத்தியால், நயம்=ஞயம், நாஞ்சில்=ஞாஞ்சில், நேயம்=ஞேயம் என மொழிமுதல் நகரத்துக்கு ஞகரமும், ஞண்டு=ஞெண்டு என மொழிமுதல் அகரத்துக்கு எகரமும் போலியாகவும் வரும்.

ஐந்து=அஞ்சு, உயந்தனன்=உய்ஞ்சனன் என நகர தகரங்களுக்கு ஞகர சகரங்கள் முறையே போலியாக வருதலும்; பித்து=பிச்சு, வைத்த=வைச்ச எனத் தகரத்துக்குச் சகரம் போலியாக வருதலும்; நேயம்=நேசம், சயம்=சசம் என யகரத்துக்குச் சகரம் போலியாக வருதலும் முதலியவற்றையும் அடங்கும்வழியறிந்து அமைத்துக்கொள்க.* (௬௯)

## எழுத்துக்களுக்குப் புறனடை. §

[சந்தியக்கரம்.]

௧௨௫. அம்மு னிகரம் யகர மென்றிவை
எய்தி னையொத் திசைக்கு மவ்வோடு
உவ்வும் வவ்வும் ஔவோ ரன்ன.

(இ - ள்.) அ முன் - அகரத்தின்முன், இகரம் - இகரமும், யகரம் - யகரமெய்யும், என்ற இவை - என்று சொல்லப்பட்ட இவை, எய்தின் - தம்முள் ஒத்துப் பொருந்தினால், ஐ இசைக்கும் - ஐ என்னும் நெட்டெழுத்து ஒலிக்கும்; அவ்வோடு - அகரத்தோடு, உவ்வும் - உகரமும், வவ்வும் - வகரமெய்யும், ஓர் அன்ன - (தம்முள் ஒத்து) ஒருதன்மையனவாக (ப் பொருந்தினால்), ஔ - ஔ என்னும் நெட்டெழுத்து, (ஒலிக்கும்); (எ - று.)

யகரவகரமெய் நடுவிற்கலக்குமெனக் கொள்க. அய்இ=ஐ; அவ்உ=ஔ.

சிலஎழுத்துக்கள்கூடி வேறோரெழுத்துப்போன்று ஒலித்தலாதலால், இதனைப் போலியைச்சார வைத்தார்.

இனி, இச்சூத்திரத்தை எழுத்துப்போலி உணர்த்தியதாகவே கொண்டு வேறுமொருபொருள் உரைக்கப்படும்; அது வருமாறு —

அ முன் - அகரத்தின்முன், இகரம் யகரம் என்ற இவை - இகரமும் யகரமெய்யும் என்கின்ற இவ்வெழுத்துக்கள், எய்தின் - வருமாயின், ஐ ஒத்து இசைக்கும் - ஐகாரத்தை ஒத்து நடக்கும்; அவ்வோடு - அகரத்தின்முன், உவ்

---

* பழம்=பளம், விளக்கு=விழக்கு என்றாற்போலச் சிறுபான்மை வழங்குகின்ற ழகரளகரப் போலி இலக்கணநெறியாற் கொள்ளத்தக்க தன்றென்பது, வீரசோழியத்தால் விளங்கும்.

§ புறனடை - புறன் + அடை - புறத்து அடையாய் [அடுத்துள்ளதாய்] வருவது; அன்றி, புறன் + நடை - வேறுவிதமாகிய நடக்கை யெனினுமாம்.

வும வ்வவும - உகரமும வகரமெய்யும் (வருமாயின்), ஔ அன்ன - ஔகாரத்தை ஒத்து நடக்கும்; (எ - று.)—ஓர் - அசைநிலையிடைச்சொல்.

யகர வகரங்கள் தனித்தும் வரும்.

(உ - ம) வைத்தியன்=வயித்தியன், கைடபன=கயிடபன் எனவும், வையம=வய்யம ஐவனம=அய்வனம எனவும், பௌத்தா=பவுத்தா கௌரி=கவுரி எனவும், ஔவை=அவ்வை, வெளவுதல்=வவ்வுதல் எனவும வரும (௭௦)

[எழுத்தின் சாரியைகள்.]

கஉரு. மெய்க ளகரமும நெட்டுயி ரகாரமும
ஐ யௌக கானு மிருமைக குறிலிவ
விரண்டொடு காரமுமாகு சாரியை பெறுமபிற.

(இ - ள்.) மெய்கள் - தனிமெய்கள், அகரமும்-அ எனனும சாரியையும், நெடு உயிர - உயிர்நெடில்கள், காரமும்-காரம எனனும் சாரியையும், ஐ ஔ - (அவற்றுள்) ஐகார ஔகாரஙகள். கானும-(காரம்என்னும சாரியையுடனே) கான் என்னும் சாரியையும், இருமை குறில் - உயிர்க்குறிலும உயிர்மெய்க் குறிலும, இ இரணடொடு - (காரம் கான் என்கிற) இவ்விரணடுடனே. காரமும - கரம என்னும சாரியையும், ஆம - ஆகினற, சாரியை - சாரியைகளை, பெறும்—; (எ - று.)

மெய்களை முற்கூறினர், அவற்றிற்கு அசசாரியை இன்றியமையாமையின். 'மெய்கள் அவ்வும' என்னாது 'அகரமும' என்றுர, இப்படியே கரம காரம கான் வந்தால, அவை சாரியையாகிய அகரத்தினது சாரியை யெனக் கொள்ளுதற்கு மெயகள சாரியைபெற்றேயும், உயிர்மெய்நெடில்கள சாரியை பெறுமலேயும்வரும்; க ங என்றும, ககர ஆகாரம எனறும இவ்வாறு வருமேயன்றி, க் ங் என்றும், காகாரம எனறும நூல்களிற பயினறுவாரா எனறபடி. மற்றவை ஏற்றபடி பெறறும் பெறுமலும் வரும். ஆய்தம் தனியே வாராமையால, அதனை இடைவைத்து முனனே அகரவுயிரும் பின்னே கேனம் என்னும் சாரியையும தந்து அஃகேனம் என வழஙகுவ ரென்பதும் அறிக.

'பிற' என்றதனல் குறிலோடு கான சாரியை புணருமபோது இடையிலே ஆய்தம தோன்றுதல் கொள்க.

அன், ஆன் முதலிய மொழிச்சாரியைகள் வேறு உள்ளதனல், இவை எழுத்துச்சாரியை யெனக.

(உ - ம்.) க - ங எனவும், ஆகாரம-ஐகாரம் ஔகாரம எனவும், ஐகான்-ஔகான் எனவும, அகாரம - அஃகான் - அகரம, மகாரம - மஃகான்-மகரம் எனவும் வரும். (௭௧)

## எழுத்தியலுக்குப் புறனடை.

கஉஎ. மொழியாயத் தொடரினு முன்னனைத் தெழுத்தே.

(இ - ள்.) எழுத்து - இவ்வெழுத்துக்கள், மொழி ஆய - பதமாயினும் தொடரினும - (அப்பதம தமமோடும் உருபோடும) புணர்ந்தாலும, முன் அனைத்து - முன்சொல்லப்பட்ட அப்பதத்திலக்கணத்தையும உடையனவாம்; (எ - று)—'எழுத்து' எனபது - சாதியொருமை யாதலால், 'அனைத்து' என்னும ஒருமைமுற்றேடு முடிந்தது. (எஉ)

எழுத்தியல் முற்றிற்று.

## உ. பதவியல்.

எழுத்தின புறத்திலக்கணம் இரணடிற் பதத்தின இலக்கணத்தைச, சொல்லும இயல. இவ்வியலுக்கு ஆதாரம் பெருமபாலும வடமொழியாத லால் அது தோனற, 'மொழியியல்' எனப் பெயா குறியாமல் 'பதவியல்' எனப் பெயாகுறித்தாாபோலும. (மொழி - தமிழ்ச்சொல; பதம-வடசொல்.)

[பதம் இன்னதென்பதும், அதன் வகையும்.]

கஉஎ எழுத்தே தனித்துந் தொடாந்தும் பொருள்தரின்
பதமா மதுபகாப பதமபகு பதமென
இருபா லாகி யியலு மென்ப.

(இ - ள) எழுத்தே - எழுத்துக்கள்தாமே, தனித்தும் - (ஒவ்வொன்று கத) தனித்தாயினும, தொடாந்தும - (இரணடு முதலாகத) தொடாந்தாயி னும், பொருள் தரின் - பொருளைத் தருமாயின, (அது), பதம் ஆம - பத மாகும; அது - அப்பதம,—பகாப்பதம பகுபதம என - பகாப்பத மெனறும் பகுபத மென்றும், இரு பால ஆகி - இரணடுவகையை யுடையதாகி, இய லும - நடக்கும், என்ப - என்று சொல்வா, (புலவா;) (எ - று.)—பகாப்பதம - பிரிக்ககூடாத பதம. பகுபதம - பிரிக்கக்கூடிய பதம (க)

[ஓரெழுத்துமொழிகள்.]

கஉஅ. உயிர்மவி லாறுந தபநவி லைந்தும
கவசவி னாலும யவவி லொன்றும
ஆறு நெடிலநொது வாங்குறி லிரண்டோடு
ஓரெழுத் தியலபத மாறேழ் சிறபபின

(இ - ள்) உயிா மவில ஆறும - உயிாவருக்கத்திலும் மவ்வருக்கத்திலும அவ்வாறும, த ப நவில ஐந்தும் தவ்வருக்கத்திலும் பவ்வருக்கத்திலும் நவ்வ ருக்கத்திலும் ஐவைந்தும, க வ சவில் நாலும - கவ்வருக்கத்திலும வவ்வருக் கத்திலும சவ்வருக்கத்திலும் நந்நான்கும, யவவில் ஒன்றும் - யவ்வருக்கத்தில் ஒன்றும், ஆகும நெடில் - நெட்டெழுத்தாலாகிய மொழி நாற்பதும், நொ து ஆம குறில் இரண்டோடு - நொவ்வும் துவ்வும ஆகும் குற்றெழுத்தாலாகிய மொழி இரண்டுடனே, ஓா எழுத்து இயல் பதம - ஓரெழுத்தாலாகிய மொழி கள், ஆறு ஏழ் - நாற்பத்திரணடும,—சிறப்பின - சிறப்பையுடையனவாம,

(உ - ம்.) ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ எனவும; மா, மீ, மூ, மே, மை, மோ எனவும: தா, தீ, தூ, தே, தை எனவும; பா, பூ, பே, பை, போ எனவும்; நா, நீ, நே, நை, நோ எனவும்; கா, கூ, கை, கோ எனவும; வா, வே, வை, வெள எனவும; சா, சீ சே, சோ எனவும; யா எனவும; நொ, து எனவும வரும்.

இவை, 'சிறப்பின' எனவே - அ, இ, உ, எ, ஒ, ஔ; கு; கௌ; சை; பீ; வீ எனச சிறபபில்லாதவைகளும சில உள வெனக் கொளக. (உ)

[தொடரெழுத்து மொழிகள்.]

கரு௦. பகாபபத மேழும் பகுபத மொனபதும
எழுத்தீ றாகத் தொடரு மென்ப.

(இ - ள்.) பகாபபதம - பகாபபதஙகள், ஏழும - (இரணடெழுதது முதல்) ஏழெழுததுககளும, பகுபதம - பகுபதஙகள, ஒனபது எழுதது உம - (இரணடெழுதது முதல) ஒனபதெழுததுககளும, ஈறு ஆக - எல்லையாக; தொடரும—, என்ப - என்று சொல்வா, (அறிவுடையோா); (எ - று.)

(உ - ம.) அணி, கலம, பொருபபு, இறும்பூது, குஙகிலியம, உததரட்டாதி எனப் பகாபபதமும்; கூனி, கூனன், அறிஞன், பொருபபன், அம்பலவன், அரஙகததான, உததராடததான, உததரட்டாதியான் எனப் பகுபதமும வரும.

'நடததுவிப்பிககப் படுகினறவாகள்' எனப பகுதி முதலிய உறுப்பு வேறுபட்டு வருகினறவைகட்கு இவவரையறை இலலையெனறு அறிக. (ந

[பகாப்பதம்.]

† கருக. பகுப்பாற பயனற றிடுகுறி யாகி
முன்னே யொனறாய் முடிநதியல கின்ற
பெயாவினை யிடையுரி நான்கும பகாப்பதம.

(இ - ள.) பகுப்பால் - பிரிககபபடுதலினுலே, பயன் அறறு - (பகுதி விகுதி முதலிய) பிரயோசன மிலலாமல், இடுகுறி ஆகி - (காரணமில்லாமல) இடபபட்ட குறியாய, முனனே ஒனறு ஆய - அநாதிகாலமாய ஒரேதன்மையனவாகி, முடிநது இயலகினற - முடிநதுநடககினற, பெயா வினை இடை உரி நான்கும - பெயாசசொலலும வினைசசொலலும இடைசசொலலும உரிசசொலலும ஆகிய நானகும், பகாப்பதம - பகாப்பதஙகளாம; (எ - று.)

எனவே, பகாப்பதம் நான்கு வகைப்படும.

பகுபதத்திறகு மறுதலைப்பட்ட தென்பாா, இவ்வாறு கூறினர்.

(உ - ம்.) கலம், சோறு, நெருப்பு, காற்று—பெயர்ப்பகாப்பதம்.
நட, வா, உண, தின், பாா —வினைப்பகாப்பதம்.
மன், கொல், போல், மறறு —இடைபபகாபபதம.
உறு, கழி, நனி, தவ, கூர் —உரிப்பகாபபதம்.

(இனி, புளி கடு முதலிய ஆகுபெயர்கள் - காரணத்தால் வருவனவாயினும், விகுதி முதலிய உறுப்பு இல்லாததனால், பகாப்பதமென்றே கொள்க.) 'பயன் அற்று' என்பதற்கு - பொருட்பயனில்லாமல் என்றும் உரைக்கலாம்.

[பகுபதம்.]

கங௨. பொருளிடங் காலஞ் சினைகுணந் தொழிலின்
வருபெயர் பொழுதுகொள் வினைபகு பதமே.

(இ - ள்.) பொருள் இடம் காலம் சினை குணம் தொழிலின - பொருளும் இடமும் காலமும் உறுப்பும் குணமும் தொழிலும் ஆகிய இந்த ஆறு பெயர்களையும் அடியாகக்கொண்டு, வரு-பிறக்கின்ற, பெயர் - பெயர்ச்சொற்களும்,—பொழுது கொள் - (தெரிநிலையாக வாயினும் குறிப்பாக வாயினும்) காலத்தைக் கொள்ளுகின்ற, வினை - வினைச்சொற்களும்,—பகுபதம் - பகுபதங்களாம்; (எ - று.)—எனவே, பெயர் வினை எனப் பகுபதம் இரண்டு வகைப்படும் இடைச்சொல்லிலும் உரிச்சொல்லிலும் பகுபதம் இல்லை.

'பொழுதுகொள் வினை பகுபதம்' எனவே, தெரிநிலை குறிப்பு என்னும் இருவகை வினையாலணையும் பெயர்களும் பகுபதமாமென்பது பெறப்படும்.

| | | | |
|---|---|---|---|
| (உ - ம்.) | பொன்னன் | —பொருட் | பெயர்ப்பகுபதம் |
| | நாடன் | —இடப் | |
| | திருவோணத்தான் | —காலப் | |
| | கண்ணன் | —சினைப் | |
| | கரியன் | —குணப் | |
| | தட்டான் | —தொழிற் | |

| | |
|---|---|
| நடந்தான் நடந்த, நடந்து, நடவான்—தெரிநிலை | வினைப் பகுபதம். |
| பொன்னன், பெரிய, மெல்ல, அல்லன்—குறிப்பு | |

| | |
|---|---|
| நடந்தான், நடந்தவன், நடவாதவன்—தெரிநிலை | வினையாலணையும் பெயர். |
| பொன்னன், பொன்னவன், இல்லாதவன்—குறிப்பு | |

(க) பெயர்ப்பகுபதம் - காலங்காட்டாமல் வேற்றுமையுருபை ஏற்றுவரும். (உ - ம்) பொன்னனை [பொன்னையுடையவனை] வணங்கினேன்.

(உ) குறிப்பு வினைமுற்றுப் பகுபதம் - காலத்தைக் குறிப்பாகக் காட்டி வேற்றுமையுருபை ஏலாது வரும்; (உ - ம்.) இவன் இப்போது பொன்னன் [பொன்னை யுடையவனாயிருக்கின்றான்.]

(ங) குறிப்பு வினையாலணையும் பெயர்ப்பகுபதம்-காலத்தைக் குறிப்பாகக் காட்டி வேற்றுமையுருபை ஏற்றுவரும்; (உ - ம்.) பண்டு பொன்னனை [முன்னே பொன்னையுடையவனாயிருந்தவனை]ப் பின்பு ஏழையாகக் கண்டேன்.

இவையே இம்மூன்றுக்கும் வேறுபாடாம்.

(க) தெரிநிலைவினைமுற்றுப்பகுபதம் - காலத்தை வெளிப்படையாகக் காட்டி வேற்றுமையுருபை ஏலாது வரும்; (உ - ம்) பொன்னன் நடந்தான்.

(உ) தெரிநிலை வினையாலணையும் பெயர்ப்பகுபதம் - காலத்தை வெளிப்படையாகக் காட்டி வேற்றுமையுருபை ஏற்றுவரும்; (உ - ம்.) நடந்தானைத் தடுத்தேன். [இது நடந்தவன் என்றும் வரும்.]

இவையே இவ்விரண்டிறகும வேறுபாடாம.

அவன் இவன் உவன் என்னும் சுட்டிடைச்சொல்லடியால் வரும் பெயர்களும், எவன் ஏது யார் என்னும் வினாவிடைச்சொல்லடியால் வரும் பெயர்களும, பிறன் மற்றையான என்னும் வேறு இடைச்சொல்லடியால் வரும் பெயர்களும், தமர் நமர் நுமர் என்னும் கிளைப்பெயர்களும, இவைக்கூறிய பொருள் முதலிய ஆறனுள் சொல்வான்குறிப்பின்படி ஒன்றில் அடங்கும்.

செம்மை கருமை முதலிய பண்புப்பெயர்களும நடத்தல் வருதல் முதலிய தொழிற்பெயர்களும, பகுதிவிகுதியாகப் பகுக்கப்படுமாயினும், விகுதிக்கு வேறு பொருளின்றி நிற்பதனால், சொலநிலையாற் பகுபதமாயினும் பொருள் நிலையாற பகாப்பத மெனக் கொள்க (ரு)

[பகுபதவுறுப்பு]

௧௩௩. பகுதி விகுதி யிடைநிலை சாரியை
சந்தி விகார மாறினு மேற்பவை
முன்னிப் புணர்ப்ப முடியுமெப் பதங்களும்.

(இ - ள்.) பகுதி - முதலநிலையும, விகுதி - இறுதிநிலையும், இடைநிலை- இடைநிலையும, சாரியை - சாரியையும், சந்தி - சந்தியும், விகாரம் - விகாரமும, ஆறினும - ஆகிய இந்த ஆறு உருப்பினுள்ளும், ஏற்பவை - (பொருளமைதிக்குப்) பொருந்துபவைகளை, முன்னி - நினைத்து, புணர்ப்ப - (அறிவுடையோர்) கூட்டிமுடிக்க, எப் பதங்களும - எல்லாப் பகுபதங்களும், முடியும - முடிவுபெறும; (எ - று.)

(உ - ம.) கூனி—கூன் + இ எனப் பகுதி விகுதிகளால் முடிந்தது.

வலைஞன்—வலை + ஞ் + அன் எனப்பகுதி இடைநிலை விகுதிகளால் முடிந்தது.

உண்டனன்—உண் + ட் + அன + அன எனப் பகுதி இடைநிலை சாரியை விகுதிகளால் முடிந்தது.

படித்தனன—படி + த் + த + அன் + அன் எனப் பகுதி சந்திஇடைநிலை சாரியை விகுதிகளால முடிந்தது.

நடந்தனன்—நட + த + த + அன + அன எனப் பகுதி சந்தி இடைநிலை சாரியை விகுதி இவவைந்தும பெற்று, சந்தியால் வந்த தகரவல்லொற்று மெலலொற்றுதலாகிய விகாரமும பெற்று முடிந்தது

இயற்கையாகப் பகுபதங்களில் முதலில் நிற்பது பகுதி யென்றும், அவ்வாறுநிற்கும் பகுதியின் பொருளைப் பின்னின்று வேறுபடுத்துவது விகுதி யென்றும், பகுதி விகுதிகளின இடையில நிற்பது இடைநிலை யென்றும, * பகுதி விகுதி முதலியவற்றைச் சாரந்து இயைந்து வருவது சாரியை

* 'சாரியை என்றதன் பொருள் - வேறுகின்ற இருமொழியுமதமமிற் சாரதறபொருட்டு இயைந்து நின்றது என்றவாறு' என்பது. தொல்காப்பியம் நச்சினார்க்கினியம். 'சாரியை - பற்றுசுபோல விகுதிபதவுருபுகளிடை நின்று புணாததுவது' என்பது. பிரயோக விவேகவுரை.

யென்றும், புணர்ச்சிவிதியா லுண்டாகின்ற தோன்றல் திரிதல் கெடுதல் என்ற மூன்றும் சந்தி யென்றும், செய்யுளிலக்கணத்துக்கு ஏற்ப வருகின்ற வலித்தல் முதலிய ஒன்பதும் விகாரமென்றும் கொள்க. சாரியை மொழிக்கு இறுதியாக நிற்றலும் உண்டு.

பகுதி, விகுதி - ப்ரக்ருதி, விக்ருதி என்ற வடமொழிகளின் விகாரம்

அல்வழி வேற்றுமைப்புணர்ச்சிக்கு விதிக்கப்படும் தோன்றல் முதலிய புணர்ச்சிவிகாரங்களையும், செய்யுட்கு விதிக்கப்படும் வலித்தல் முதலிய செய்யுள்விகாரங்களையும் இப்பகுபதம் பெறுமென காட்டியது, **மாட்டேறிந் தொழுகல்** என்னும் உத்தி. (மாட்டெறிந்து ஒழுகல் - ஒன்றன் இலக்கணத்தை அதனைப்பெறுதற்கு உரிய மற்றொன்றற்கும் ஏற்றிச்சொல்லுதல்.)

'ஆறினும் ஏற்பவை முனனிப்புணர்ப்ப' என்றாராயினும், பகுபதத்திற்குப் பகுதிவிகுதிகள் பெரும்பாலும் இன்றியமையாதன வென்றும், மற்றைய உறுப்புக்களுள் ஒன்றையும் பலவற்றையும் பெற்றும் பெறாமலும் வருமென்றும் அறிக. வினைப்பகுபதம் மாத்திரமே ஆறு உறுப்புக்களையும் பெற்று வரும்; பெயர்ப்பகுபதம் இரண்டோருறுப்புக் குறையப்பெற்று வரும்.

எழுத்தியலிற் கூறிய இடைநிலைக்கும், இங்குக்கூறிய இடைநிலைக்கும் வேறுபாடு மாணுக்கர் அறியத்தக்கது; முதல்நிலை இறுதிநிலைகளுக்கும் இவ்வாறே. எழுத்தியலிற்கூறிய முதனிலை இடைநிலை இறுதிநிலைகள் - சொற்களின் முதலிலும் இடையிலும் இறுதியிலும் எழுத்துக்கள் நிற்குமநிலை; இங்குக் கூறிய முதனிலை இடைநிலை இறுதிநிலைகள - பகுபதத்தின் முதலிலும் இடையிலும் இறுதியிலும் நிற்கும் உறுப்புக்கள் (சா)

## க. பகுதி

### [பகுதிக்குப் பொதுவிதி.]

‡ கஙச. தத்தம்,
பகாப் பதங்களே பகுதி யாகும்.

(இ - ள்.) தம் தம் பகாப்பதங்களே - (பெயர்ப்பகுபதங்களுள்ளும் வினைப்பகுபதங்களுள்ளும்) அதனதன (முதலில் நிற்கின்ற) பகாப்பதமே, பகுதி ஆகும் - பகுதியாம், (எ - று.)

சாரியை சந்தி விகாரம் என்ற மூன்றும் புணரியலிற் சொல்லப்படுதலால், மற்றைப் பகுதி விகுதி இடைநிலை என்ற மூன்றையும் இவ்வியலிற் சொல்லுகின்றார்.

பகுபதத்துள்ளே பகுதி விகுதி முதலிய உறுப்புக்களெல்லாம் பகாப்பதமாயினும், விகுதி முதலியவற்றை மேல் எடுத்துக்கூறுதலால், இங்கே 'தத்தம் பகாப்பதங்கள்' என்றது, முதனிலைகளையே யென்பது பெறப்பட்டது.

பெயர்ப்பகுபதங்கட்கும் குறிப்புவினைப்பகுபதங்கட்கும் பெரும்பான்மை பெயர்ச்சொற்களும், சிறுபான்மை இடைச்சொல் உரிச்சொற்களும் பகுதிகளாம்.

(உ - ம்.) பொன்னன், ஊரன், திருவோணத்தன், பல்லன், கரியன் கூத்தன் எனப் பெயர்ப்பகுபதங்கட்கு முறையே பொருள் முதலிய ஆறு வகைப் பெயரும் பகுதியாக வந்தன.

அவன், எவன், பிறன் எனப் பெயர்ப்பகுபதங்கட்கு இடைச்சொற்கள் பகுதியாக வந்தன.

கடியன எனப் பெயர்ப்பகுபதத்திற்கு உரிச்சொல் பகுதியாக வந்தது.
[குறிப்புவினைப்பகுபதத்திற்கும் இவையே உதாரணம்.]
பெயர்ப்பகுபதத்துக்குச் சிறுபான்மை வினையும் பகுதியாம்; (உ-ம்.) அறிஞன்.

தெரிநிலைவினைப் பகுபதங்கட்குப் பெரும்பான்மை வினைச்சொற்களும், சிறுபான்மை பெயர்ச்சொல் இடைச்சொல் உரிச்சொற்களும் பகுதிகளாம்.

(உ - ம்.) நடந்தான், வந்தான் - வினைச்சொற்கள் பகுதியாக வந்தன.
கண்டக்கணித்தான், காதலித்தான் - பெயர்ச்சொற்கள் பகுதியாக வந்தன.
போனான், என்றான் - இடைச்சொற்கள் பகுதியாக வந்தன.
சான்றான், கூர்ந்தான் - உரிச்சொற்கள் பகுதியாக வந்தன. (எ)

[பண்புப்பகுதிகட்குச் சிறப்புவிதி.]

† கஙடு செம்மை சிறுமை சேய்மை தீமை
வெம்மை புதுமை மென்மை மேன்மை
திண்மை பழமை நுண்மை யிவற்றெதிர்
இன்னவும் பண்பிற் பகாநிலைப் பதமே.

(இ - ள்.) செம்மை . நுண்மை - செம்மை முதல் நுண்மை ஈறாகச் சொல்லப்பட்ட பதினொன்றும், இவற்று எதிர் - இவைகட்கு எதிரான வெண்மை முதலானவைகளும், இன்னவும் - இவைபோல்வன பிறவும்,— பண்பின்-பண்புப்பொருளினின்றும், பகா - (வேறுபொருள்) பகுக்கப்படாத, நிலை - நிலையையுடைய, பதம் - பதங்களாம்; (எ - று)—(சேய்மை - தூரம்.)

இவையெல்லாம் சொல்நிலையாற் பகுபதமாயினும் 'மை' விகுதிக்குப் பகுதிப்பொருளல்லது வேறுபொருள் இல்லாமையாற் பொருள்நிலையாற் பகாப்பதமாம் என்பது அறிவித்தற்கு 'பண்பிற்பகா' என்றும், இவை 'மை' விகுதியின்றி வாராமையினாலே இவ்விகுதியையும் பகுதியாகவேநிறுத்திமேல் வரும் விகுதியோடு புணர்க்கப்படும் என்பது அறிவித்தற்கு 'நிலைப்பதம்' என்றும் கூறினார். பண்புப்பகாப்பதமெனனுமல 'பண்பிற்பகாநிலைப்பதம்' என்றது, சொற்பொருள்விரித்தல் என்னும் உத்தி (சொற்பொருள்விரித்தல் - சொல்லின்பொருள் வெளிப்படையாக விளங்கும்படி விவரித்துச்சொல்லுதல்.) செம்மை முதலிய வாய்பாடுகளை எடுத்துக்காட்டியது, எடுத்துக்காட்டல் என்னும் உத்தி. (எடுத்துக் காட்டல் - தான்சொல்லும் இலக்கணத்துக்கு அமைந்த இலக்கியத்தைத் தானே எடுத்துக்காட்டுதல்.)

செம்மைக்கு - வெண்மை கருமை பொன்மை பசுமைகளும், சிறுமைக்கு - பெருமையும், சேய்மைக்கு - அண்மையும், தீமைக்கு - நன்மையும

வெம்மைக்கு - தண்மையும், புதுமைக்கு - பழமையும், மென்மைக்கு - வன்மையும், மேன்மைக்கு - கீழ்மையும், திண்மைக்கு - நொய்ம்மையும், உண்மைக்கு - இன்மையும், நுண்மைக்கு - பருமையும் எதிரானவையெனக் காண்க. இவைபோல்வன பிறவாவன —மடமை, புலமை, இளமை, முதுமை, குறுமை, நெடுமை, கிழமை, வறுமை, வெறுமை, அருமை, நடுமை முதலியன (அ)

[பண்புப்பகுதியின் விகாரங்கள்.]

கஙசு. ஈறு போதல் இடையுகரம் இயாதல்
ஆதி நீடல் அடியகரம் ஐயாதல்
தன்னொற் றிரட்டல் முன்னின்ற மெய்திரிதல்
இனமிகல் இனையவும் பண்பிற் கியல்பே.

(இ - ள்.) ஈறுபோதல்-இறுதியிலுள்ள மை விகுதி போதலும், இடை உகரம் இ ஆதல் - நடுவில்நின்ற உகரம் இகரமாதலும், ஆதி நீடல்-முதலில் நின்ற குறில் நெடிலாதலும், அடி அகரம் ஐ ஆதல் முதலில் நின்ற அகரம் ஐகாரமாதலும், தன் ஒற்று இரட்டல்-தன் [பண்புப்பகுதியின்] மெய் நடுவே மிகுதலும், முன் நின்ற மெய் திரிதல் - மைவிகுதிக்குமுன்னே நின்ற மெய் வேறொரு மெய்யாதலும், இனம் மிகல் - (வருகின்ற வல்லெழுத்துக்கு) இனமான மெல்லெழுத்து மிகுதலும், இனையவும் - இவைபோல்வன பிறவும் — பண்பிற்கு இயல்பு - அப்பண்புச்சொற்களுக்கு இயற்கையாம்; (எ - று)

இவ்விகாரங்கள் விகுதிப்புணர்ச்சிக்குமாத்திரமன்றிப் பதப்புணர்ச்சிக்கும் பொருந்துமென அறிவித்தற்கு, 'பண்புப்பகுதிக்கு' என்னுமல் பொதுப்பட 'பண்பிற்கு' என்றார். பண்பு அதிகாரப்பட்டமையால், பதப்புணர்ச்சிக்கும் இங்கேயே சொன்னாரென்க. இது, ஒப்பின்முடித்தல் எனனும் உத்தி.

(உ - ம்.) நல்லன், சிறுபொருள்—நன்மை சிறுமை என்பவற்றின் மை விகுதி போயிற்று.

கரியன், சிறியிலை—கருமை சிறுமை என்பவற்றின் மை விகுதி போய் உகரம் இகரமாயிற்று.

பாசி, மூதூர்—பசுமை முதுமை என்பவற்றின் மை விகுதி போய் ஆதி நீண்டது.

பைந்தார்—பசுமை என்பதன் மை விகுதிபோய் (நடுநின்ற உயிர்மெய்யும் கெட்டு, முதலிலிருந்த அகரம் ஐகாரமாகி வருமெழுத்திற்கு இனவெழுத்து மிக்கது.

குற்றி நட்டாறு—குறுமை நடுமை என்பவற்றின் மை விகுதி போய்த் தன் ஒற்று இரட்டியது.

செய்யன், வெவ்வுயிர்—செம்மை வெம்மை என்பவற்றின் மை விகுதி போய் முன்னின்ற மகரமெய் திரிந்தது.

இவை போல்வன பிறவாவன - பைந்தார் என்பதில் பசுமையின் இடை நின்ற 'சு' என்னும் உயிர்மெய் கெடுதலும், கார் பார் என்பவற்றில் கருமை

பருமைகளின் இடைநின்ற உகரம் கெடுதலும், இன்சொல் என்பதில் இனிமையின் இடைநின்ற இகரம் கெடுதலும் பழைய என்பதில் பழமையின் இடை அகரம் ஐகாரமாதலும் தூமலர் என்பதில் தூய்மையின் இடையொற்றுக் கெடுதலும். தூய என்பதில் தூய்மையின் முதல் குறுகுதலும், அருமலி பெருமவளம் முதலிய இடங்களில் அருமை பெருமை என்பவற்றின் இறுதி ஐகாரமாத்திரம் கெடுதலும் முதலியன.

இவ்விகாரங்களை அன்பு அழகு முதலிய பண்புவாய்பாடுகட்கு அடையாமல், எடுத்துக்காட்டிய செம்மை முதலிய மையீற்றுப் பண்புவாய்பாடுகட்கே அடைய வைத்தலால், இது - எடுத்தமொழியினெய்தவைத்தல் என்னும் உத்தி (எடுத்த மொழியின் எய்தவைத்தல் - தான் எடுத்துக்காட்டிய இலக்கியத்தில் தான் சொல்லும் இலக்கணத்தைப் பொருந்தியிருக்க வைத்தல்)

மற்றை விகாரங்களை யடையும்போதெல்லாம் 'ஈறுபோதல்' கொள்க ஆனது பற்றியே அது முற்கூறப்பட்டது. இனையவும்' என்ற உம்மையை எதிரமறையாக வைத்து, செம்மையன் கருமையன் என இவ்விகாரங்களுள் ஒன்றையும் பெறாமல் இயல்பாய் முடிதலையும் அமைத்துக்கொள்க (கூ)

[தெரிநிலைவினைப்பகுதிக்குச் சிறப்புவிதி]

கஙஎ நட வா மடி சீ விடு கூ வே வை
நொ (ப) போ வெள உரிஞ உண் பொருந திரும தின
தேய பார செல வவ வாழ கேள அஃகு என்று
எய்திய இருபான் மூன்று மீற்றவும்
செய்யென் ஏவல் வினைப்பகாப் பதமே.

(இ - ள்.) நட—அஃகு என்று - நட என்பது முதல் அஃகு என்பது ஈறாக, எய்திய - பொருந்திய, இருபான் மூன்று ஆம் ஈற்றவும் - இருபத்து மூன்றாகிய ஈற்றையுடைய இவைமுதலிய சொற்களெல்லாம்,—செய் என் ஏவல் வினை பகாப்பதம் - செய்யெனும் வாய்பாட்டு ஒருமையேவலும் மற்றைத் தெரிநிலைவினைகளின் பகாப்பதமாகிய பகுதியும் ஆம்; (எ - று.)—பகாப்பதம்=பகுதி.

சொல்லுக்கு இறுதியில் நிற்கு மெனப்பட்ட இருபத்துநான்கு எழுத்துக்களுள் எகரம் வினாவிடைச் சொல்லினும், அளபெடையினும், தன்னை யுணர்த்துமிடத்திலும் ஈறாவ தல்லாமல் மற்றைச்சொற்களின் இறுதியில் நில்லாதாதலால் அதனை ஒழித்து 'இருபானமூன்று மீற்ற' என்றார். இருபத்துமூன்று ஈற்றனவாக விகற்பித்து எடுத்துக்காட்டிய வாய்பாடுகளெல்லாம் இப்பொதுவாய்பாட்டொன்றில் அடங்கு மென்பார், 'செய்' என்று கூறினார்

பகுதிகூறவந்தவர், அதுதான் ஏவல்வாய்பாடுபட வருதலால், அதனையும் உடன்கூறினாரெனக

ஒருமை யேவலாக வருவதற்கு.—

(உ - ம்.) நட, வா, உண், தின், அஃகு என வரும்.

மற்றை வினைப்பகுதியாக வருவதற்கு,—

(உ - ம்) நடந்தான், வந்தான், மடிந்தான், சீத்தான் [சீவினான்], விட்டான், கூவினான், வெந்தான், வைத்தான், நொந்தான், போயினான், வௌவினான், உரிஞினான் [உராய்ந்தான்], பொருநினான் [பொருந்தினான்], திருமினான் [திரும்பினான்] தின்றான், தேய்ந்தான், பார்த்தான், சென்றான், வவ்வினான், வாழ்ந்தான், கேட்டான், அஃகினான் [சுருங்கினான்] என வரும்.

இங்குக்காட்டிய நட வா முதலியனவெல்லாம், தன்வினைப்பகுதிகள்; பிறவினைப்பகுதிகள் மேற்சூத்திரத்திற் காட்டப்படும். [தன்வினையாவது - தானே நேராகத் தொழிலைச்செய்வது; பிறவினையாவது - மற்றொருவனைக் கொண்டு தான் செய்விப்பது.]

இட, சுர, பற, கல முதலிய அகரவீற்றுவினைப்பகுதிகளெல்லாம் இங்கு எடுத்துக்காட்டிய 'நட' என்னும் அகரவீற்று வாய்பாட்டிலும், இவ்வாறே எல்லா ஈற்றுப் பிற பகுதிகளும் இங்குக்காட்டிய அவ்வவ்வீற்று வாய்பாடுகளிலும் அடங்கப்படுமென அறிக.

இந்நூலாசிரியர் வடநூல்மேற்கோளாக ஒருமொழியை எடுத்துப் பகாப்பதம் பகுபதமெனக் காரணப்பெயர் தாமே இட்டு "எழுத்தே தனித்தும்" என்னும் சூத்திரம் முதல் இதுவரையிலும் பகாப்பதம் பகுபதமெனப் பல தரம் சொல்லுதல், தன்குறிவழக்கம்மிகவெடுத்துரைத்தல் என்னும் உத்தி. (தன் குறி வழக்கம் மிக எடுத்து உரைத்தல் - தான் நூதனமாகக் குறித்து வழங்குவதைப் பலவிடங்களில் எடுத்துச் சொல்லுதல்)

நட, வா முதலிய சொற்கள் இசைவேறுபாட்டாற் கட்டளைப்பொருளுணர்த்தும்போது ஏவலொருமையாமென்றும், மற்றை வினைச்சொற்களெல்லாம் பிறத்தற்கு மூலமாய தொழில்மாத்திரத்தை யுணர்த்தும்போது பகுதியாமென்றும் அறிக.

[நட வா முதலிய பகுதிகளே விகுதியோடு புணராமல் தனித்துநின்று இசைவேறுபாட்டால் ஏவலொருமை வினைமுற்றாய் நிற்குமென்பது, தொல்காப்பியவுரையாசிரியர் முதலியோருள் சிலர் மதம்; நடவாய் வாராய் முதலிய முன்னிலையேவலொருமை வினைமுற்றுச்சொற்கள் தாமே ஆய் என்னும் விகுதிகுன்றி நட வா முதலியனவாக நிற்குமென்பது, மற்றுஞ்சிலர் மதம்: பிறர்மதத்தை மறுத்துத் தமது மதத்தை நிலைநிறுத்துதற்கு அவரவர் பற்பல காரணமுங் கூறுவர். இவ்விருவகைக் கொள்கைகளுள் உண்மையான சித்தாந்தம் எதுவாகுமாயினும், உயத்துணரக்கிடந்தது, நன்னூலாசிரியரது கருத்து முந்திக்கூறிய வகையையே தழுவியுள்ளதென நன்குவிளங்குகின்றது; மேல் "செய்யென வினைவழி விப்பி தனிவரிற், செயவியென னேவல் வினையி னீரேவல" என்றும், "ஆவி யரழ விறுதி முன்னிலைவினை, யேவல் முன் வல்லினம்" என்றும், "ஏவலின் வரூஉ மெல்லா வீற்றவும்" என்றும் கூறுவன, இதற்குச் சிறந்த ஆதாரமாம்.]

இத்தெரிநிலைவினைப்பகுதிகள் விகுதிமுதலியவற்றோடு புணரும்போது தொழு - தொழுதான், உண் - உண்டான் எனச் சில இயல்பாதலல்லாம

லும், செல - சேறல, கொள - கோடல் என முதல் நீண்டும்; தா - தந்தான், வே - வெந்தான் என தனிநெடில் குறுகியும்; சா - செத்தான என முதல் ஆகாரம் எகரமாகியும்; கொணு - கொணர்ந்தான என முதலெழுத்துக்கு அயலெழுத்துக் குறுகி ரகரமெய் விரிந்தும்; விரவு - விராவினுன் என நடுக் குறில நீண்டும்; மூழுகு - மூழுகினுன மூழ்கினுன. விழு - விழுந்தான வீழ்ந் தான என இயல்பும் விகாரமுமாக விகற்பித்தும்; வா - வருகின்றுன், அல மா - அலமருகின்றுன என நெடில்குறுகி ஒருயிர்மெய் விரிந்தும்; கல் - கற றுன, கேள - கேட்டான் என ஈறறுமெய் வருமெய்யாகத் திரிந்தும்; செல் - சென்றுன். கொள் - கொண்டான் என ஈற்றுமெய் வருமெழுத்திற்கு இனமாகத் திரிந்தும்; இன்னும் இவ்வாறு பல விகார மடைந்தும வரும். கா, சா, தா இவை - முறையே காத்தான், செத்தான், தந்தான என்றும; கல், நில, புல, சொல் இவை - கற்றுன், நின்றுன், புல்லினுன், சொன்னுன் என்றும ஒருதன்மையனவான பகுதிகள் பலவிதமாக விகாரப்படுதலால் அவையெல்லாவற்றையும தனித்தனி எடுத்து முடிபு சொல்லப் புகுந்தால் வரையறை யில்லாமல் விரியு மாதலால, செய்யுள வழக்கத்தையும் உலக வழக்கத்தையும பார்த்துப புணர்ச்சிவிகாரமும செய்யுளவிகாரமும கொண்டு அமைத்துக்கொள்க (௪௦)

[ஏவற்குச் சிறப்புவிதி, பிறவினை]

௧௩௭ செய்யென வினைவழி விபபி தனிவரின்
செய்வியென னேவ லிணையி னீரேவல்.

(இ - ள.) செய் என வினை வழி-செய என்னும வாயபாட்டு முதனிலை களின் பின, வி பி தனிவரின-'வி' விகுதியாவது 'பி' விகுதியாவது தனித்து வருமாயின், செய்வி என் ஏவல - (செய என்னும ஏவலின மேல் ஓரேவ லாய்ச) செய்வி என்னும வாயபாட்டேவலொருமையாம்: இணையின -('செய்' என் வினையின்பின இந்த விகுதிகள தனனெடும பிறிதொடும) இணைந்துவரு மாயின், ஈர் ஏவல் -(செயயெனனும ஏவலின்மேல் ஈரேவலாய்ச செய்விப்பி என்னும் வாயபாட்டு ஏவலொருமையாம;(ஈ - று)—இரண்டு + ஏவல்=ஈரே வல' ஏவலின்மேல் ஏவல் என்க; இருமடியேவல.

(உ - ம) வருவி, நடபபி—வி, பி தனித்துவந்தன; ஓரேவல.

நடபபிபபி—பி, தனனேடு இணைந்துவந்தது
வருவிப்பி—வி, பிறிதோடு இணைந்துவந்தது } ஈரேவல

'வி' விகுதி, தன்னேடு இணைந்து வாராது.

இவவினைமுற்றின் தன்மையை மேல வினையியலிற கூருது இங்கே கூறியது, இவை பகுதிமாத்திரமாய் நிற்றலாலும். பகுதி இங்கு அதிகாரபபட் டிருத்தலாலு மென்க.

இனி, உரையிற்கோடல் என்னும உத்தியால, சிலபகுதிகள் கு, சு, டு, து, பு, று என்கிற விகுதிகளுள் ஒன்றைப பெறறும. சிலபகுதிகள இடையி லுள்ள மெல்லொற்று வலலொறறாகத் திரிந்தும, தனஒறறு இரட்டியும பிறவினையாக வரு மெனக் கொள்க.

(உ - ம்.) (க) போ - போக்கு, பாய் - பாய்ச்சு, உருள் - உருட்டு, } பிறவிகுதி
நட - நடத்து, எழு - எழுப்பு, பயில் - பயிற்று } பெற்றன.

(உ) திருந்து - திருத்து, தோன்று - தோற்று — மெலிவலியாயின.

(ங) உருகு - உருக்கு, ஆடு - ஆட்டு — தன்னொற்று இரட்டின

இவ்வாறன்றி, சில வினைப்பகுதிகள் தன்வினை பிறவினைகட்குப் பொதுவாம்: (உ - ம்.) கரை, தேய், மறை, உடை, அலை, சோ. மடி முதலியன.

இத்தன்மையனவான பகுதிகள் இவ்விகுதிவேண்டாமல் கரைத்தான், தேய்த்தான்; கரைத்திலன், தேய்த்திலன், கரைக்கின்றான், தேய்க்கின்றான்; கரைக்கின்றிலன், தேய்க்கின்றிலன்; கரைப்பான், தேய்ப்பான்; கரைக்கான், தேய்க்கான் எனப்பிறவினைப்பொருளைத் தரும்போது வல்லெழுத்துமிகும் கரைந்தான், தேய்ந்தான்; கரைந்திலன், தேய்ந்திலன், கரைகின்றான், தேய்கின்றான்; கரைகின்றிலன், தேய்கின்றிலன்; கரைவான், தேய்வான்; கரையான், தேயான் எனத் தன்வினைப்பொருளைத் தரும்போது வல்லெழுத்து மிகாமலும் வருமென்று அறிக. இப்பகுதிகள் எதிர்காலவினைமுற்றில் பிறவினைப்பொருட்குப் பகர இடைநிலையையும், தன்வினைப்பொருட்கு வகர இடைநிலையையும் ஏற்றுநிற்கும். (௧௧)

[வினைப்பகுதிக்குப் புறனடை.]

௧௩௮ விளம்பிய பகுதி வேறாதலும் விதியே.

(இ - ள்.) விளம்பிய பகுதி வேறு ஆதலும் - (ஏவல் வேறாதல்போல அதன்பின்னே) சொல்லப்பட்ட மற்றை வினைப்பகுதிகள் வேறுபடுதலும், விதியே - விதியேயாம்; (எ - று.)

நட முதலிய ஏவலொருமை முற்றுக்கள் - நடப்பி, நடப்பிப்பி என்று பிறவினையாக வேறுபடுதல்போல, நடந்தான் முதலிய மற்றை வினைமுற்றுக்களிலுள்ள நட முதலிய பகுதிகளும் - நடப்பித்தான், நடப்பிப்பித்தான் என்று பிறவினையாக வேறுபடும் என்பதாம்.

'செய்யென்வல் வினைப்பகாப்பதம்' என்க் கீழ் இரண்டாகக் கூறி நிறுத்தியவர், அவற்றுள் முந்தியது பிறவினையாதற்கு விதியை முந்தின சூத்திரத்திற் கூறி, பிந்தினது பிறவினையாதற்கு அவ்விதியையே இச்சூத்திரத்தாற் பெறவைத்தாரெனக் கொள்க.

கீழ் "நடவாமடிசீ" என்னுஞ் சூத்திரத்து உரையின் இறுதியிற் கூறிய பகுதிவிகாரப்படுதலை இச்சூத்திரத்துக்குப் பொருளாகக் கூறுவாருமுளர்; அவ்விகாரங்கள் பகுபதவுறுப்பாய்க்கொள்ளப்பட்ட மூன்றுசந்தியுள்ளும் ஒன்பதுவிகாரத்துள்ளும் அமைந்துகிடத்தலால், அது பொருந்தாது. (௧௨)

## உ. விகுதி.

௧௪௦. அன் ஆன் அள் ஆள் அர் ஆர் ப (ம) மார்
அ ஆ கு டு து று என் ஏன் அல் அன்
அம் ஆம் எம் ஏம் ஓம் (ஒடு) உம் ஊர்

கட தற ஐ ஆய் இ (ம்)மின் இர் ஈர்
ஈயர் க ய உம் என்பவும் பிறவும்
வினையின் விகுதி பெயரினுஞ் சிலவே.

(இ - ள்.) அன் . . . என்பவும் - அன் முதல் முப்பத்தேழாகச் சொல்லப்பட்டவைகளும், பிறவும் - (இவைபோல்வன) பிறவும், — வினையின் விகுதி - தெரிநிலை வினைமுற்றுப் பகுபதங்களின் விகுதிகளாம்; பெயரினும் சில - பெயர்ப்பகுபதங்களிலும் (அவற்றுள்) சில விகுதிகளாம்; (எ - று.)

இரட்டுறமொழிதல் என்னும் உத்தியால் தன்மையொருமைக்கும் அஃறிணைப்படர்க்கையொருமைக்கும் பொதுவாக 'டு து று' என்றும், முன்னிலையொருமைக்கும் முன்னிலையேவலொருமைக்கும் பொதுவாக 'ஆய்' என்றும், அன் என்னுந் தன்மையொருமைவிகுதி தொன்றுதொட்டதன்றி இலக்கியங்களிற் கண்டமையின் எதிரதுபோற்றல் என்னும் உத்தியால் தழுவிக்கொண்டதாதலின் அதனை வலியுறுத்தற்குப் பின்னும் 'அன்' என எடுத்தும், இன்னும் இவற்றுள் இரட்டுறமொழிதலால் அடங்குவன அடங்க அடங்காதனவாகிய பெயரெச்சம் வினையெச்சம் முதலியவற்றின் ஈற்றில் நிற்பனவெல்லாம் விகுதி யென்று கருதிக்கொள்ளுதற்கு 'பிறவும்' என்றும் கூறினார்; (எதிரது போற்றல் - முன்பு இல்லாததாய்ப் பின்பு வழங்கிவருமாயின், அதனைத் தழுவிக்கொள்ளுதல்.)

உம் ஊர் கடதற - உம் என்பது ஊர்ந்த [ஏறிய] ககர டகர தகர றகர மெய்கள்; அவை - கும், டும், தும், றும் என்பன.

(உ - ம்.) அன், ஆன். —நடந்தனன், நடந்தான் —ஆண்பாற்படர்க்கை.

அள், ஆள். —நடந்தனள், நடந்தாள் —பெண்பாற்படர்க்கை.

அர், ஆர், ப, மார். — நடந்தனர், நடந்தார், நடப்ப, நடமார் — பலர்பாற்படர்க்கை.

அ, ஆ. —நடந்தன, நடவா —பலவின்பாற்படர்க்கை.

கு, டு, து, று, என், ஏன், அல், அன். — உண்கு, உண்டு, நடந்து, சேறு, நடந்தனென், நடந்தேன், நடப்பல், நடப்பன். — ஒருமைத்தன்மை.

அம், ஆம், எம், ஏம், ஓம், கும், டும், தும், றும், — நடப்பம், நடப்பாம், நடப்பெம், நடப்பேம், நடப்போம், உண்கும், உண்டும், நடந்தும், சேறும் — பன்மைத்தன்மை.

ஐ, ஆய், இ — நடந்தனை, நடந்தாய், சேறி [செல்வாய்.] — ஒருமைமுன்னிலை.

மின். இர், ஈர். — நடமின், நடந்தனிர், நடந்தீர். — பன்மைமுன்னிலை.

ஈயர், க, ய. — நிலீயர், நடக்க. வாழிய. — வியங்கோள்.

உம். —நடக்கும் —செய்யுமென்முற்று.

இவையெல்லாம், தெரிநிலைவினைமுற்றுச்சொற்கள்.

டு, து, று விகுதிகள் ஒன்றன்பாலில் வருவதற்கு உதாரணம்.—குறுந்தாட்டு [குறுகியதாளையுடையது], நடந்தது, போயிற்று.

'பிறவும்' என்றதனால், மருல் அழேல் என ஆல ஏல் முதலிய விகுதிகளும வரும். இவை - எதிர்மறையொருமையேவல்

குறிப்புவினைமுற்றுக்கள், குறிப்பாகக் காலங்காட்டுவன வாதலால், இந்த விகுதிகளுள்ளே தாமேகாலங்காட்டும விகுதிகளொழிந்தஅன், ஆன்: அள், ஆள்; அர், ஆர்; அ; டு, து, று; என், ஏன், அம, ஆம, எம, ஏம, ஓம; ஐ, ஆய, இ; இர், ஈர் என்னும விகுதிகளோடு வரு மெனக் கொள்க.

(உ - ம.) கரியன், கரியான்; கரியள், கரியாள்; கரியர், கரியார்; கரியன; குறுந்தாட்டு, கரியது, குழையிற்று; கரியென், கரியேன்; கரியம், கரியாம், கரியெம், கரியேம், கரியோம்; கரியை, கரியாய், வில்லி; கரியிர் கரியீர்.

'பெயரினுஞ் சில' என்றதனால், இவ்விகுதிகளுள் அன், ஆன், அள், ஆள், அர், ஆர், மார், து, அ, ஐ, இ என்பவைகளுடனே, மன், மான், கள், வை, தை, கை, பி, முன், அல், ன், ள், ர, வ் என்பனவும், பிறவும் பெயர் விகுதிகளாம்.

(உ - ம்.) குழையன், வானத்தான்; குழையள், வானத்தாள்; குழையர், வானத்தார், தேவிமார்; யாது; குழையன; கண்ணறை, பொன்னி, வடமன், கோமான், கோக்கள், அவை, எந்தை, எங்கை, எம்பி, எமமுன், தோன்றல், பிறன், பிறள், பிறர், அவ்.

தெரிநிலைப் பெயரெச்ச விகுதிகள் —அ, உம என்பன.

(உ - ம்.) நடந்த, நடக்கின்ற, நடவாத; நடக்கும்.

குறிப்புப் பெயரெச்ச விகுதி —அ ஒன்றேயாம. (உ - ம.) பெரிய.

'உம' விகுதி இடைநிலையை ஏற்காமல தானே எதிர்காலங்காட்டுதலால், குறிப்புப் பெயரெச்சத்திற்கு வாராது.

தெரிநிலை வினையெச்ச விகுதிகள்—உ, இ, ய, பு, ஆ, ஊ, என, அ, இன, ஆல், கால, கு, இய இயர், வான், பான், பாக்கு, கடை, கண், வழி, இடத்து, உம மல், மை, மே என்பனவும, பிறவுமாம். இவற்றுள், இறுதி யிறகூறிய மல், மை, மே என்னும விகுதிகள் எதிர்மறையில வரும.

(உ-ம ) நடந்து, ஓடி, போய், உண்குபு, உண்ணா, உண்ணூ, உண்ணென உண்ண உண்ணின், உண்டால், உண்டக்கால், உணற்கு, உண்ணிய, உண்ணியர், வருவான், உண்பான், உண்பாக்கு, செய்தக்கடை, செய்தக்கண், செய்தவழி, செய்தவிடத்து: காண்டலும் உண்ணாமல், உண்ணாமை, உண்ணாமே.

['உண்ட' என்பதிற்போல அதன் எதிர்மறையாகிய 'உண்ணாத' என்பதிலும 'அ' - விகுதியெனக் கொள்ளப்படுதற்கு ஏற்ப, 'உண்டு' என்பதிற் போல அதன் எதிர்மறையாகிய 'உண்ணாது' என்பதிலும 'உ' - விகுதியெனக் கொள்க; இவ்வெதிர்மறைச்சொற்களில், த - எழுத்துப்பேறு.]

குறிப்பு வினையெச்ச விகுதிகள் —அ றி, து, ஆல், மல், கால், கடை, வழி, இடத்து என்பனவும், பிறவுமாம்.

(உ - ம்.) மெலல: அன்றி, அல்லது, அல்லால் அல்லாமல், அல்லாக் கால் அல்லாக்கடை அல்லாவழி, அல்லாவிடத்து.

தொழிற்பெயர் விகுதிகள் —தல் அல அம, ஐ, கை, வை, கு பு, உ. தி, சி, வி, உள, காடு, பாடு, அரவு, ஆனை, மை, து, ஆல், இல என்பனவும், பிறவுமாம

(உ - ம்) நடத்தல், ஆடல், வாட்டம், கொலை, நடக்கை, பார்வை, போக்கு, நடப்பு, வரவு, மறதி, உணர்ச்சி, கல்வி, விக்குள், [விக்குதல்], சாக்காடு [சாதல்], கோட்பாடு [கொள்கை], தேற்றரவு [தேற்றுதல்], வாரானை [வருதல்], நடவாமை, பாய்த்து [பாய்தல்], கழால் [கழுவல்], எழில் [எழுதல்.]

'மை' என்னும் தொழிற்பெயர் விகுதி - நடந்தமை நடக்கின்றமை என இறந்தகாலவிடைநிலை நிகழ்காலவிடைநிலைகளோடு கூடியும 'து' என்னுந் தொழிற்பெயர் விகுதி - நடந்தது, நடக்கின்றது, நடப்பது என முக்கால விடை நிலைகளோடு கூடியும வரும.

இவையெல்லாம் விகுதிபெற்ற தொழிற்பெயர்.

இனி, இவ்விகுதிகளில் ஒன்று புணர்ந்துகெட்டுப் பகுதிமாத்திரமாய் நிற்கும தொழிற்பெயர்களும், விகுதிபுணர்ந்துகெடும்போது பகுதிவிகாரப் பட்டுநிற்கும் தொழிற்பெயர்களும் உண்டு; அவை - முறையே முதனிலைத் தொழிற்பெயரென்றும முதனிலைதிரிந்ததொழிற் பெயரென்றும கூறப்படும்.

(உ - ம்.) அடி, அறி, உரை, கெடு—முதனிலைத்தொழிற்பெயர்.
கோள், கேடு, இடையீடு—முதனிலைதிரிந்த தொழிற்பெயர்

பண்புப்பெயர் விகுதிகள் —மை ஐ, சி, பு, உ, கு, றி, று அம, ர், பம என்பனவும், பிறவுமாம.

(உ - ம்.) நன்மை, தொல்லை, மாட்சி, மாண்பு, மழவு, நன்கு, நன்றி, நன்று, நலம், நன்னர், திட்பம்.

இ, ஐ, அம் என்னும மூன்று விகுதிகளும வினைமுதற்பொருளையும் செயப்படுபொருளையும், கருவிப்பொருளையும் உணர்த்தும. (வினைமுதற் பொருள் - கருத்தாப்பொருள.)

(உ - ம) அலரி, பறவை, எச்சம், —வினைமுதற்பொருள்.
ஊருணி, தொடை, நீத்தம் —செயப்படுபொருள.
மண்வெட்டி. பார்வை, நோக்கம் —கருவிப்பொருள

அலர்வது அலரி [பூ], பறப்பது பறவை [பக்ஷி], எஞ்சுவது எச்சம [சந்ததி. எஞ்சுதல் - சேஷித்தல]; இவற்றில், வினைகளினை முவாயே பொருளாதல காணக. ஊரரால் நீருண்ணப்படுவது ஊருணி [குளம]; தொடுக்கப் படுவது தொடை [மாலை], நீந்தப்படுவது நீத்தம [வெள்ளம], இவற்றில

வினைகளின் செயப்படுபொருளே பொருளாதல காணக. மணணைவெட்டுதற்குக கருவியானது மணவெட்டி· பாரபபதற்குக் கருவியானது பாரவை [கண], நோககுதற்குக் கருவியானது நோககம் [கண]; இவற்றில் வினைகளின் கருவியே பொருளாதல் காணக.

இமமூவகைவிகுதிகளும் பகுதியோடு புணர்ந்து கெடுதலும உணடு

(உ - ம்.) காய், தளிர், பூ, கனி, திரை, நுரை, அலை என்பவைகளில, வினைமுதற் பொருளுணாததும் விகுதி புணாநதுகெட்டது.

ஊண, பூண, கோள், உரி, துணி,மடி என்பவைகளில, செயபபடுபொருளுணாததும் விகுதி புணர்நது கெட்டது.

நோக்குஎன்பதில், கருவிப்பொருளுணாததும்விகுதிபுணர்ந்துகெட்டது.

"வரிப்புனைபந்து" என்பதில் வரிந்து எனபதன் வினையெச்சவிகுதியும, "கொளவாரும் களவரும் நேர்" என்பதில் நேரவர் என்பதன் வினைமுற்று விகுதியும் கெட்டுவந்தன; இவ்வாறு வேறு சில விகுதிகளும் சிறுபான்மை கெட்டு வருதல் கண்டுகொள்க.

விடு, ஒழி என்ற விகுதிகள் - துணிவுப்பொருளை உணாத்தும்

(உ - ம.) செய்துவிட்டான், விட்டொழிந்தான்.

கொள் என்ற விகுதி - தற்செயலை உணாததும

(உ - ம.) அடிததுககொணடான.

படு, உண விகுதிகள - செயப்பாட்டுவினைப்பொருளை உணாததும்,

(உ - ம ) கட்டபபட்டான் கட்டுணடான.

மை என்ற விகுதி - தன்மைப்பொருளை உணாததும

(உ - ம.) பொனமை, ஆணமை.

இரு, இடு, உறு எனபன - தமககென வேறுபொருளின்றி, பகுதிப் பொருள்விகுதியாய வரும் இவறறைத துணைவினை யெனபா.

(உ - ம்.) எழுநதிருககிறான், உரைததிடுகின்றான், சொல்லுறுகின்றான்.

பலபொருள்குறிக்கும் விகுதிகள் வருமாறு:—

அ.—க. வினையெச்சவிகுதி· செய்ய, மெல்ல.
உ. பெயரெசசவிகுதி. செய்த, பெரிய.
ந. பலவின்பாறபடர்க்கைவிகுதி· வந்தன, கொடியன
ச. வியஙகோள்விகுதி· எழுநதருள [=எழுநதருளக ]

அம்.—க. தன்மைப்பன்மைவிகுதி; நடந்தனம, பெரியம.
உ. தொழிற்பெயாவிகுதி ஆட்டம்.
ந. பணபுப்பெயாவிகுதி: நலம.
ச. வினைமுதற்பொருள்விகுதி எச்சம்.
ரு. செயப்படுபொருள்விகுதி: நீததம.
சா. கருவிப்பொருள்விகுதி· நோககம.

அல்.—௧. தொழிற்பெயர்விகுதி செயல்.

௨. தன்மையொருமைவிகுதி நடப்பல [=நடப்பேன்.]

௩. உடன்பாட்டுவியங்கோள்விகுதி எனல் [=என்க]

௪. எதிர்மறைவியங்கோள்விகுதி கொளல் [=கொள்ளற்க]

௫. எதிர்மறையேவல்விகுதி உண்ணல் [=உண்ணாதே]

௬. வினைமுதற்பொருள்விகுதி. தோன்றல் [=மகன்.]

அர்.—௧. ஆண்பாற்படர்க்கைப் பெயர்விகுதி அறிஞன்.

௨. ,, வினைவிகுதி வந்தனன்.

௩. தன்மையொருமைவிகுதி செய்வன [=செய்வேன்]

௪. ஒன்றன்பாற்படர்க்கைப்பெயர்விகுதி வலியன், கடுவன.

ஆ.—௧. பலவின்பாற்படர்க்கைவிகுதி நடவா.

௨. வினையெச்சவிகுதி செய்யா [=செய்து.]

ஆல்.—௧. தொழிற்பெயர்விகுதி. ஓரால் [=ஒருவுதல.]

௨. தெரிநிலைவினையெச்சவிகுதி உண்டால்.

௩. குறிப்புவினையெச்ச விகுதி அல்லால்.

௪. எதிர்மறையேவலொருமைவிகுதி மரூஉல் [=மறக்காதே.]

ஆன்.—௧. ஆண்பாற்படர்க்கைப்பெயர்விகுதி. பெரியான்.

௨. ,, வினைவிகுதி வந்தான்.

௩. ஒன்றன்பாற்படர்க்கைப்பெயர்விகுதி கோட்டான்.

இ.—௧. ஆண்பாற்படர்க்கைப்பெயர்விகுதி. வில்லி.

௨. பெண்பாற்படர்க்கைப்பெயர்விகுதி பொன்னி.

௩. ஒன்றன்பாற்படர்க்கைப்பெயர்விகுதி நாற்காலி, பலகணி.

௪. முன்னிலையொருமை விகுதி வருதி [வருவாய்.]

௫. வினையெச்சவிகுதி ஓடி.

௬. வினைமுதற்பொருள்விகுதி அலரி.

௭. செயப்படுபொருள்விகுதி ஊருணி.

௮. கருவிப்பொருள்விகுதி மண்வெட்டி.

௯. ஏவலொருமைவிகுதி காட்டுதி [=காட்டு.]

௧௦. * வியங்கோள்விகுதி: காட்டி [=காட்டுக.]

இர்.—௧. பலர்பாற்படர்க்கைப்பெயர்விகுதி. கேளிர், மகளிர்.

௨. முன்னிலைப்பன்மைவிகுதி நடந்தனிர்.

௩. ஏவற்பன்மைவிகுதி வருதிர்.

உ.—௧. வினையெச்சவிகுதி: நடந்து.

௨. தொழிற்பெயர்விகுதி: வரவு.

உம்.—௧. ஏவற்பன்மைவிகுதி: வாரும்.

௨. படர்க்கைவினைமுற்றுவிகுதி: செய்யும்.

---

*'காட்டி-இகரவீற்றுவியங்கோள்' என்பது, சிந்தாமணிநச்சினார்க்கினியருரை.

௩. பெயரெச்சவிகுதி நடக்கும் (மனிதன்.)
௪. வினையெச்சவிகுதி செய்தலும் (போனான்.)

ஐ.—௧. முன்னிலையொருமைவிகுதி: செய்தனை.
௨. தொழிற்பெயர்விகுதி: விலை.
௩. பண்புப்பெயர்விகுதி தொல்லை.
௪. வினைமுதற்பொருள்விகுதி: பறவை.
௫. செயப்படுபொருள்விகுதி: தொடை
௬. கருவிப்பொருள்விகுதி: படை.

கு—௧. பண்புப்பெயர்விகுதி: நன்கு.
௨. பிறவினைவிகுதி போக்கு [=போகச்செய்]
௩. தொழிற்பெயர்விகுதி போக்கு [=போதல்]
௪. தன்மையொருமைவிகுதி. உண்கு [=உண்பேன்.]

கை—௧. தொழிற்பெயர்விகுதி வருகை.
௨. முறைப்பெயர்விகுதி தங்கை.

சி.—௧. பண்புப்பெயர்விகுதி: மாட்சி.
௨. தொழிற்பெயர்விகுதி: காட்சி.

து—௧. ஒன்றன்பாற்படர்க்கைவினைவிகுதி நடந்தது.
௨. " ப்பெயர்விகுதி கைத்து [=கைப்பொருள்]
௩. பிறவினைவிகுதி நடத்து.
௪. தொழிற்பெயர்விகுதி பாய்த்து [=பாய்தல்]
௫. தன்மையொருமைவிகுதி வந்து [=வந்தேன்.]
௬. எதிர்மறைவினையெச்சவிகுதி: அல்லது.

பு—௧. பண்புப்பெயர்விகுதி: நண்பு.
௨. தொழிற்பெயர்விகுதி படிப்பு
௩. வினையெச்சவிகுதி: செய்பு [=செய்து]

மார்.—௧. பலர்பாற்படர்க்கைப்பெயர்விகுதி: குருமார், கன்னிமார்.
௨. பலர்பாற்படர்க்கைவினைமுற்றுவிகுதி கொண்மார் [கொள்வார்.]

மை—௧. பண்புப்பெயர்விகுதி: நன்மை
௨. தொழிற்பெயர்விகுதி: செய்தமை
௩. வினையெச்சவிகுதி செய்யாமை [=செய்யாமல்.]
௪. தன்மைப்பொருளுணர்த்தும்விகுதி: பெண்மை, பொன்மை.

வி.—௧. தொழிற்பெயர்விகுதி: கேள்வி.
௨. பிறவினைவிகுதி: செய்வி.

று—௧. ஒன்றன்பாற்படர்க்கைவினைமுற்றுவிகுதி. போயிற்று.
௨. பண்புப்பெயர்விகுதி: நன்று.
௩. தன்மையொருமைவிகுதி: சென்று [=போனேன்.]
௪. பிறவினைவிகுதி: பயிற்று.

## ௩. இடைநிலை.

[பெயர்ப்பகுபத இடைநிலை]

†௧௪௧. இலக்கியங் கண்டதற் கிலக்கண மியம்பலின்
பகுதி விகுதி பகுத்திடை நின்றதை
வினைப்பெய ரல்பெயர்க் கிடைநிலை யெனலே.

(இ - ள்.) இலக்கியம் கண்டு - (அறிவுடையோரால் நியமிக்கப்பட்ட) இலக்கியத்தைப் பார்த்து, அதற்கு - அவ்விலக்கியத்திற்கு, இலக்கணம் - (அவ்விலக்கியத்தின் அமைதியே) இலக்கணமாக, இயம்பலின் - சொல்ல வேண்டுதலால்,—பகுதி விகுதி பகுத்து-பகுதியையும் விகுதியையும்பிரித்து, இடை நின்றதை - நடுவில் ஏதேனும் நின்றால் அதனை, வினைப்பெயர் அல் பெயர்க்கு - வினையாலணையும் பெயரல்லாத பெயர்ப்பகுபதங்கட்கு, இடைநிலை எனல் - இடைநிலையென்று சொல்லுக:(எ - று.)—இலக்கியம்-லக்ஷ்யம் இலக்கணம் - லக்ஷணம்.

மேற்கூறப்படும் வினைப்பகுபத இடைநிலை காலங்காட்டுதல் போலப் பெயர்ப்பகுபத இடைநிலை காலங்காட்டாதாயினும், முதனிலை இறுதிநிலைக ளாகிய பகுதிவிகுதிகட்கு இடையில் நிற்றலால், 'இடைநிலை' எனப்பட்டது.

* சாரியை சந்தி விகாரங்களும் பகுதிவிகுதிகளின் இடையில் நிற்பன வாயினும், அவை மேல் எடுத்துக்கூறப்படுதலால், அவை ஒழிந்ததை 'இடை நின்றதை' என்றும் மேல் வினைக்குக்கூறும் இடைநிலை வினையாலணையும் பெயர்க்கும் அமைதலால் 'வினைப்பெயரல்பெயர்க்கு' என்றும், 'இப்பெய ரிடைநிலை வரையறுக்கப்பட்டதன்று, ஆங்காங்கு வருவது உணர்ந்து உரை க்க'என்பார் 'எனல்' என்றும் கூறினார்.

(உ-ம்.) அறிஞன், கவிஞன், இளைஞன், பகைஞன் .ஞகர இடைநிலை
இடைச்சி, வலைச்சி, புலைச்சி . .சகர இடைநிலை.
பொருநன், செயருநன் நகர இடைநிலை.

இடைநிலைகூறுபவர்போல, இலக்கிய இலக்கணங்களின் தன்மையை யும் இசுசூத்திரத்துள் விளக்கினார். (௧௪)

வினைப்பகுபத இடைநிலை - ௯.

[இறந்தகால இடைநிலை - ௪.]

†௧௪௨. தடறவொற் றின்னே யைம்பால் மூவிடத்
திறந்த காலந் தருந்தொழி லிடைநிலை.

(இ - ள்.) த ட ற ஒற்று - தகர டகர றகர மெய்களும், இன் - இன் என்பதும்,—ஐம் பால் மூ இடத்து - ஐந்து பால்களிலும் மூன்று இடங்களி

* 'சந்திவகையானும் பொருட்சாரியைவகையானும் முடியாவழி இவ் வாறு வருவன இடைநிலை யெனக் கொள்க' என்றது,பழையவுரை.

லும், இறந்தகாலம் - இறந்தகாலத்தை, தரும் - காட்டுகின்ற, தொழில் வினைப்பகுபதங்களின், இடைநிலை - இடைநிலைகளாம்; (எ-று.)—ஐம் பால்- ஆண்பால் முதலியன. மூவிடம் - தன்மை முதலியன.

(உ - ம்) நடந்தான், நடந்தாள், நடந்தார், நடந்தது, நடந்தன நடந்தேன், நடந்தேம் நடந்தாய், நடந்தீர்; உண்டான்; சென்றன; உறங்கினான்.

'இன்' இடைநிலை - 'சொல்லியது' எனக் கடைகுறைந்தும், 'சொன்னது' என முதல்குறைந்தும் வரும். (கரு)

[நிகழ்கால இடைநிலை - ௩.]

கசங. ஆநின்று கின்று கிறுமூ விடத்தின்
ஐம்பால் நிகழ்பொழு தறைவினை யிடைநிலை.

(இ - ள்.) ஆநின்று கின்று கிறு - இம் மூன்றும்,—மூ இடத்தின் ஐம் பால் - மூன்று இடங்களிலும் ஐந்துபால்களிலும், நிகழ் பொழுது - நிகழ் காலத்தை, அறை - காட்டுகின்ற, வினை - வினைப்பகுபதங்களின், இடைநிலை - இடைநிலைகளாம்; (எ - று.)—அறைதல் - சொல்லுதல்; இங்கே, குறித்தல்; வருஞ்சூத்திரத்தில் இசைத்தலென்பதும் அது இது-இலக்கணை.

(உ - ம்.) நடவாநின்றான், நடக்கின்றான், நடக்கிறான். (கசு)

[எதிர்கால இடைநிலை - ௨.]

கசச. பவவ மூவிடத் தைம்பா லெதிர்பொழுது
இசைவினை யிடைநிலை யாமிவை சிலவில.

(இ - ள்.) ப வ - பகரமெய்யும் வகரமெய்யும்,—மூ இடத்து ஐம்பால - மூன்று இடங்களிலும் ஐந்து பால்களிலும், எதிர் பொழுது-எதிர்காலத்தை, இசை - காட்டுகின்ற, வினை-வினைப்பகுபதங்களின், இடைநிலை ஆம்-இடைநிலைகளாம்; இவை - இந்த மூன்றுகால இடைநிலைகளும்,— சில - சில வினைப்பகுபதங்கட்கு, இல - இல்லை [வாரா]; (எ - று.)

(உ - ம்.) நடப்பான், வருவான்.

'இவைசிலவில' என்றதனால், சில வினைப்பகுபதங்களில் விகுதியாவது, பகுதிவிகாரப்பட்டாவது, வேறு இடைநிலையாவது காலங்காட்டுமென்பது பெறப்பட்டது; அவற்றை பின்வருஞ் சூத்திரத்திலும் அதன் உரையிலும் காண்க. (கஎ)

[காலங்காட்டும் விகுதி.]

கசரு. றவ்வொ டுகர வும்மைநிகழ் பல்லவும்
தவ்வொ டிறப்பு மெதிர்வும் டவ்வொடு
கழிவும் கவ்வோ டெதிர்வும்மின் னேவல்
வியங்கோ ளிம்மா ரெதிர்வும் பாந்தம்
செலவொடு வரவும் செய்யுநிகழ் பெதிர்வும்
எதிர்மறை மும்மையு மேற்கு மீங்கே.

(இ - ள்.) றவ்வொடு உகர உம்மை - றகரமெய்யோடு கூடிய உகரமும் உம்மும் [று, றும் எனனும் விகுதிகள்], நிகழ்பு அல்லவும் - நிகழ்காலமொழிந்த இறந்தகால எதிர்காலங்களையும்; தவ்வொடு - தகரமெய்யோடுகூடியஉகரமும் உம்மும் [து, தும் என்பன], இறப்பும் எதிரவும் - இறந்தகாலத்தையும் எதிர்காலத்தையும்; டவ்வொடு - டகரமெய்யோடு கூடிய உகரமும் உம்மும் [டு, டும் என்பன], கழிவும் - இறந்தகாலத்தையும்; கவ்வோடு - ககரமெய்யோடுகூடிய உகரமும் உம்மும் [கு, கும் என்பன], எதிரவும் - எதிர்காலத்தையும்; மின் - மின்விகுதியும், ஏவல-மற்றை ஏவல் விகுதிகளும், வியங்கோள் - வியங்கோள்விகுதிகளும். இ - இகர விகுதியும், மார - மார விகுதியும், எதிரவும - எதிர்காலத்தையும், ப அந்தம் - பகரவிகுதி, செலவொடு வரவும் - இறந்தகாலத்தையும் எதிர்காலத்தையும்; செய்யும் - செய்யுமென்னும் வாய்பாட்டுமுற்றின் விகுதி; நிகழ்பு எதிரவும் - நிகழ்காலத்தையும் எதிர்காலத்தையும், எதிர்மறை - எதிர்மறை ஆகாரவிகுதி, மும்மையும் - மூன்றுகாலங்களையும், ஏற்கும் - ஏற்றுவரும் ஈங்கு - (மேற்சூத்திரத்தில) "இவை சிலவில" என்றவைகளுள்; (எ - று.)

'உகர உம்மை' என்பதனைத் தவ்வொடு, டவ்வொடு, கவ்வோடுஎன்பவற்றோடும் கூட்டுக. 'அந்தம்' என்பதனை எல்லாவற்றிலும் ஒட்டிக்கொள்க.

அந்தம், ஈறு, விகுதி என்பன - ஒருபொருட் சொற்கள். பாந்தம் - ப+அந்தம் பகரமாகிய விகுதி; வடமொழிப்புணர்ச்சி, தீர்க்கசந்தி.

இங்குக்காட்டிய விகுதிகளுள் று து டு கு என்பவை - தன்மையொருமைக்கும், றும் தும் டும் கும் என்பவை - தன்மைப்பன்மைக்கும், மின் - ஏவற்பன்மைக்கும், ஏவல் - முன்னிலைக்கும், வியங்கோள் - ஐம்பால் மூவிடங்கட்கும், இ - முன்னிலையொருமைக்கும், மார ப என்பவை - படர்க்கைப் பலர்பாலுக்கும், உம் - பலர்பாலொழிந்த நான்குபால்கட்கும், ஆ - படர்க்கைப் பலவின்பாலுக்கும் உரியனவாதல், மேல் வினையியலில் விளங்கும். 'ஏவல்' என்றதில, பகுதிமாத்திரமாய் நிற்கின்ற ஏவலொருமைச் சொற்களும் அடங்கும்.

றவ்வொடுகரவும்மீறும், தவ்வொடுகரவும்மீறும், பாந்தமும் இறந்த காலத்தையும் எதிர்காலத்தையும் ஏற்கும் எனத் தொகுத்துக்கூறாமல், இவ்வாறு வகுத்துக் கூறினார் எளிதில விளங்கவேண்டி யெனக.

இகரவிகுதி தனித்து இயலாமையால யாதாயினும் ஓர்மெய்யினை ஊர்ந்து வருமென்பதும், அம்மெய் காலங்காட்டா தென்பதும், அம்மெய் காலங்காட்டின் இகரவிகுதி காலங்காட்டா தென்பதும்; செய்யுமென்னும் வாய்பாட்டுப்பெயரெச்சமும் இடைநிலையின்றி ஈறு காலங் காட்டுவ தாயினும், அது எதிர்காலங்காட்டுமென மேல் வினையியலிற் கூறுதலால், இங்கு 'செய்யும்' என்று எடுத்தோதியது முற்றென்பதும் பெறப்பட்டன.

(உ-ம்.) சென்று [சென்றேன்], சென்றும் [சென்றோம்] .இறப்பு.
சேறு [செல்வேன்], சேறும் [செல்வோம்]...எதிரவு.

வந்து [வந்தேன்], வாதும் [வந்தோம] இறப்பு.
வருது [வருவேன்]. வருதும் [வருவோம] ..எதிாவு.
உணடு [உணடேன], உணடும் [உணடோம] இறப்பு.
உணது [உணபேன], உணதும் [உணபோம] . .எதிாவு.

உண்மின், உணணீர், உண்ணும், உணணுயி, உண
ொழ்க, வாழிய, வாழியர்
சேறி [செல்வாய]
உணமார் [உணபார.] } எதிர்வு.

உண்ப [உணடார], என்ப [என்ருர்] . செலவு.
உணப [உண்பார], என்ப [என்பார] . . வரவு.
உணணும் நிகழ்பு, எதிாவு.
உணணு இறப்பு, நிகழ்பு, எதிர்வு.

சென்றி, செல்லாநின்றி என வருமாயின், இடைநிலை காலம காட்டிய இகரவீற்றனவாம்.

'இவைசிலவில' என்றவைகளுள்ளே காலஙகாட்டும் விகுதிகளை மாததிரமசொல்லிக் காலஙகாட்டும் பகுதிகளையும் பிறஇடைநிலைகளையும சொல்லாமையால், 'அவை சிறுபான்மையன வந்த இடஙகளிற் கணடுகொள்க' என்ருயிற்று அவை வருமாறு:—

கு டு று எனனும் மூன்று உயிாமெய் யீற்றுச சில பகுதிகள், தம் ஒற்று இரட்டி இறந்தகாலம் காட்டும.

(உ - ம்.) புக்கான், தொககான்; போட்டான, விட்டான்; உற்ருன்' பெற்ருன்.

யகரவொற்றிடைநிலை இறந்தகாலமும்· ஆகிடந்து ஆவிருந்து என்னும் இரணடு இடைநிலைகளும் நிகழ்காலமும: ககரவொற்றிடைநிலை எதிா காலமும் காட்டும்

(உ ம.) போயது; உணணுகிடந்தான், உணணுவிருந்தான்; செய்கேன்.

இசின் என்பது இறந்தகால இடைநிலையாயும், மகரமெய்யும, மன் என்பதும் எதிாகால இடைநிலைகளாயும செய்யுளில் வரும்.

(உ - ம) எனறிசினோ; என்மர் என்மனுா.

'ஈங்கே' என்ற மிகையால, காண்டும் [காணபோம்] என 'டும்' விகுதி எதிாகாலஙகாட்டுதலையும, வருதி [வருகின்ருய்] என இகரவிகுதி நிகழ்காலம காட்டுதலையும், பெயரெச்ச வினையெசசஙகளில் இடைநிலையின்றி விகுதிகாலஙகாட்டுதலையும் அமைததுக கொள்க.

"பகுதிவ்குதி" என்னுஞ் சூததிரமும் முதல் இசசூததிரம் வரையிலும் பகுபதஙகளை மேலோா முடித்தவாறுமுடிததுககாட்டியது 'முடித்துக்காட்டல்' என்னும் உததி. முன்னைத்தமிழ்நூல்களில் இல்லாதவைகளை இவ்வாசிரியா தாமே பகாப்பதம் பகுபத மென முன்னே நாட்டி

இச்சூத்திரம்வரையிலும் அவற்றிற்கு இலக்கணங்கூறி நிறுத்தியது 'தானாட்டித்தனாதுநிறுப்பு' என்னும் மதம். (தான் நாட்டித் தனாது நிறுப்பு - தானே ஒரு பொருளை எடுத்துத் தாபித்து அதனை இடந்தோறும் நிலைநிறுத்துதல்.) (கஅ)

## வடமொழி ஆக்கம்.

[ஆரியமொழி தமிழில் வருதல்.]

ட கசக. இடையில நானகு மீற்றி லிரணடும
அலலா வசசை வருக்க முதலீறு
யவவாதி நானமை ளவவாகு மையைம்
பொதுவெழுத் தொழிநத நாலேழுந திரியும.

(இ - ள்.) இடையில் நானகும் - (ஆரியமொழியுள அச என்று வழஙகுகினற உயிா பதினாறனுள) நடுவிலுளள (ஙீ ஙீ3 ளு ளூ3 என்னும) நாலெழுததுககளும, ஈறறில - கடையிலுள்ள இரணடும - (அம அ: என்னும்) இரணடெழுததுககளும, அல்லா-நீஙகலாகிய, அசசு - (அ ஆ இ ஈ உ ஊ ஏ ஐ ஓ ஔ என்னும பததுு) உயிாகளும, ஐ வருக்கம - (ஹல் எனறு வழஙகும மெய் முப்பததேழுள க ச ட த ப என்னும) ஐந்து வருககஙகளினுடைய, முதல் - முதலிலுளள (க ச ட த ப என்னும) ஐந்தும, ஈறு - கடையிலுள்ள (ங ஞ ண ந ம என்னும) ஐநதும, ய ஆதி நானமை - ய ர ல வ எனனும நானகும, ள-ளகரமும, ஆகும-ஆகிய, ஐ ஐ எழுத்து-இருபததைநது எழுததுககளும், பொது - (ஆரியததிறகும் தமிழிறகும்) பொதுவெழுததுக்களாம; ஒழிந்த - அவை யொழிநத, நாலேழும் - இருபதடுெட்டு எழுததுககளும, திரியும் - (ஆரியததிற்குச சிறப்பெழுததுக்களாயத தமிழில தமககு ஏறற பொது வெழுததுககளாகத) திரிநதுவரும; (எ - று.)

மேல 'ஏழாமுயிா' எனவிதநது கூறுவராதலால், 'இடையில் நான்கு' என் விதவாது கூறினா. ஐயைந்து பொதுவெழுதது எனவே, நாலேழ் சிறபபெழுதது எனபது பெறப்பட்டது. சிறப்பெழுததுத திரியுமெனவே, பொதுவெழுதது இயல்பாயும் தமககு ஏற்ற விகாரமாயும் வருமென்றதாயிறறு.

ஆரியபாஷையுள உயிரெழுததுப் பதினாறுவன:—அ ஆ இ ஈ உ ஊ ஙீ ஙீ3 ளு ளூ3 ஏ ஐ ஓ ஔ அம அ:.

இவறறுள, ஙீ ஙீ3 ளு ளூ3 அம அ: என்னும ஆறும் - ஆரியததிற்குச சிறபபெழுததுககள; அ ஆ இ ஈ உ ஊ ஏ ஐ ஓ ஔ என்னும மற்றைப் பததும - ஆரியததிறகும் தமிழிற்கும பொது வெழுததுககள. (தமிழிலுள்ள எகர ஒகர வுயிாகள வடமொழியில இலலை.)

---

+ இஙகுக கூறிய வடமொழி யெழுததுககளின தொகை வடமொழி யிலக்கணநூலாருள ஒருசாரார் கொள்கையைததழுவிய தென்றும், பிரசித்தமாக வழஙகுகினற பாணிநிவியாகரணததுககு ஒத்த தன்றென்றும் அறிக.

மெய்யெழுத்து முப்பத்தேழாவன — க ஖ ஗ ஘ ங, ச ஛ ஜ ஝ ஞ, ட ஠ ஡ ஢ ண, த ථ ද ධ ந, ப ඵ බ භ ம, ய, ர, ல, வ ஶ ஷ ஸ ஹ ள க்ஷ꞉ க꞉ ஖.

இவற்றுள், ஖ ஗ ஘ ஛ ஜ ஝ ஠ ஡ ஢ ථ ද ධ ඵ බ භ ஶ ஷ ஸ ஹ க்ஷ꞉ க꞉ ஖ என்னும் இருபத்திரண்டும் - ஆரியத்திற்குச் சிறப்பெழுத்துக்கள்; க ங ச ஞ ட ண த ந ப ம ய ர ல வ ள என்னும் மற்றைப் பதினைந்தும் - ஆரியத்திற்கும் தமிழிற்கும் பொதுவெழுத்துக்கள். (தமிழிலுள்ள ழகர றகர னகரமெய்கள் வடமொழியில் இல்லை)

| | | |
|---|---|---|
| ஐவருக்கமாவன — | கவர்க்கம்—க ஖ ஗ ஘ ங | தவர்க்கம்—த ථ ද ධ ந |
| | சவர்க்கம்—ச ஛ ஜ ஝ ஞ | பவர்க்கம்—ப ඵ බ භ ம |
| | டவர்க்கம்—ட ஠ ஡ ஢ ண | |

ஆரியத்திற்கும் தமிழிற்கும் பொதுவாகவுள்ள எழுத்தாலாகி விகாரமின்றித் தமிழில் வந்து வழங்கும் வடமொழி தற்சமம் எனப்படும்.

(உ - ம்.) அமலம், கமலம், காரணம், குங்குமம்.

ஆரியத்திற்கே உரிய சிறப்பெழுத்தாலும், பொதுவும் சிறப்புமாகிய ஈரெழுத்தாலுமாகித் திரிதல் முதலிய விகாரம் பெற்றுத் தமிழில் வந்து வழங்கும் வடமொழி, தற்பவம் எனப்படும்.

(உ - ம்.) ஸுகீ-சுகி, போகீ-போகி, ஶாந்தி꞉-சாந்தி, இவை-சிறப்பெழுத்தாலாகி விகாரம் பெற்றுத் தமிழில் வந்து வழங்கும் தற்பவமொழி.

ஹரி꞉-அரி, ஹர꞉-அரன், ஜய꞉-சயம், ஜ்ஞாநம்-ஞானம் இவை - ஈரெழுத்தாலுமாகி விகாரம்பெற்றுத் தமிழில் வந்து வழங்கும் தற்பவமொழி.

[ஆரியவெழுத்துத் தமிழில் விகாரப்படுதல்.]

௺ ௧௪௭. அவற்றுள்,

ஏழாமுயி ரிய்யும் இருவும் ஐவருக்கத்து
இடையில் மூன்று மவ்வவ் முதலும்
எட்டே யவ்வும் முப்பது சயவும்
மேலொன் று சடவும் இரண்டு சதவும்
மூன்றே யகவும் ஐந்திரு கவ்வும்
ஆவீ றையும் ஈயீ றிகரமும்.

(இ - ள்.) அவற்றுள் - முன்னே "திரியும்" என்ற சிறப்பெழுத்துக்களுள், ஏழ் ஆம் உயிர்-(ஏழாமுயிரானது [஋], இய்யும் இருவும் - இகரமாகவும் இருவாகவும்; ஐ வருக்கத்து - ஐந்து வர்க்கங்களிலும், இடையில் மூன்றும் - நடுநின்ற மும்மூன்று எழுத்துக்களும், அவ் அவ் முதலும் - அந்தந்த வருக்கத்தின் முதலெழுத்துக்களாகவும்; எட்டு - எட்டாவது மெய் [ஜ], யவ்வும் - (சகரமாகத் திரிதல் மாத்திரமேயன்றி) யகரமாகவும்; முப்பது -

முப்பதாம்மெய [𑌶], ச யவும - (மொழிமுதலிறுதிகளில) சகரமாகவும் (நடு வில) சகரமாகவும யகரமாகவும, மேலொனறு - முப்பதொனறாம மெய் [ஷ]ச டவும் - (முதலில) சகரமாகவும (இடைகடைகளில) டகரமாகவும; இரணடு - முபபததிரணடாம மெய [ஸ], ச தவும - (முதலில்) சகரமாகவும (இடையில) சகரமாகவும தகரமாகவும; மூனறு - முபபததுமூனறாமமெய [ஹ], அ கவும - (முதலில) ஏறினற உயிராகவும (இடையில) ககரமாகவும; ஐந்து - முபபததைநதாமமெய [க்ஷ], இருகவவும - இரணடு ககரமாக வும்; ஆ று - (பொதுவெழுததுககளிலே) மொழியிறுதி ஆகாரமானது, ஐயும - ஐகாரமாகவும; ஈ று - மொழியிறுதி ஈகாரமானது, இகரமும்-இகர மாகவும, (திரியும); (எ - று.)

'மூன்றே அகவும்' எனறதில அஎனறது, மற்றஉயிாகட்கு உபலக்ஷணம.

(உ-ம்.) 𑌋 இ—𑌋𑌷𑌭𑌃 இடபம ⎫ ஏழாம உயிர-இ, இரு
இரு—𑌵𑍃𑌤𑍍𑌤𑌃 - விருத்தம ⎭ எனத திரிந்தது.

| | | | |
|---|---|---|---|
| 𑌖 | க—𑌨𑌖𑌃 | நகம (உகிர) | ஐந்து வருக்கத்தி லும இடைநின்ற மும்மூன்று எழுத் துக்களும் - அவ்வவ் வருக்கத்தின் முத லெழுத்தாகத் திரி ந்தன. |
| 𑌗 | 𑌨𑌾𑌗𑌃 | . நாகம (பாமபு) | |
| 𑌘 | 𑌮𑍇𑌘𑌂 | . மேகம். | |
| 𑌛 | ச—𑌛𑌵𑌿𑌃 | . சவி (ஒளி.) | |
| ஜ | விஜயஃ | விசயம | |
| 𑌝 | 𑌝𑌟𑌿𑌤𑌿 | . சடிதி. | |
| 𑌠 | ட—𑌪𑍀𑌠𑌂 | .. பீடம. | |
| 𑌡 | ஜ𑌡𑌂 | . சடம. | |
| 𑌢 | 𑌗𑍂𑌢𑌂 | .. கூடம். (மறைவானது) | |
| 𑌥 | த—ஸ்𑌥𑌲𑌂 | . தலம. | |
| 𑌦 | 𑌦𑌿𑌨𑌂 | தினம. | |
| 𑌧 | 𑌧𑌰𑌾 | தரை. | |
| 𑌫 | ப—𑌫𑌲𑌂 | .. பலம (பயன.) | |
| 𑌬 | 𑌬𑌲𑌂 | பலம (வலிமை.) | |
| 𑌭 | 𑌭𑌾𑌰𑌃 | . பாரம. | |

| | | | |
|---|---|---|---|
| ஜ | ய—ஜ𑌮𑌦𑌗𑍍𑌨𑌿 | .. யமதங்கி [மொழிமுதல்.] | ஜ - யகரமாகத் திரிந்தது. |
| | 𑌪𑌂𑌕ஜம் | .. பங்கயம. [மொழிமுதல்.] | |
| 𑌶 | ச—𑌶𑌂𑌕𑌰𑌃 | .. சங்கரன். [மொழிமுதல.] | 𑌶 - சகரமாகவும், யகரமாகவும் திரிந் தது. |
| | 𑌆𑌶𑌾 | .. ஆசை. [மொழியிறுதி.] | |
| | 𑌪𑌾𑌶𑌃 | .. பாசம [மொழியிடை.] | |
| | ய—𑌦𑍇𑌶𑌃 | ... தேயம [மொழியிடை.] | |
| ஷ | ச—ஷ𑌣𑍍𑌮𑍁𑌖𑌃 | .. சணமுகன [மொழிமுதல.] | டகரமாகவும திரிந் தது. |
| | ட—விஷயம் | ...விடயம. [மொழியிடை] | |
| | 𑌭𑌾ஷா | ...பாடை. [கடை.] | |

ஸ ச—ஸபா ... சபை. [மொழிமுதல்.] } ஸ - சகரமாகவும், தகரமாகவும திரிந்தது.
வாஸ: .. வாசம } [மொழியிடை.]
த ஊஸ: . யாதம.

ஹ உயிர்—ஹரிஃஹாரஃ,. அரிஆரம், } [மொழிமுதல்] } ஹ உயிராகவும், ககரமாகவும திரிநதது.
ஹிமம் இமம, ஏமம்
க—மோஹம். மோகம. [மொழியிடை.]

க்ஷ க்க—வக்ஷஃ பக்கம். க்ஷ - இரணடு ககரமாகத் திரிந்தது.

ஆ ஐ—மாலா .மாலை ஆகாரவீறு ஐகாரமாகததிரிநதது.

ஈ இ—புரீ .புரி ஈகாரவீறு இகரமாகத திரிந்தது.

ஆவீற்றையும ஐயீற்றையும இறுதியிற்கூறியது, அவை பொதுவெழுததாதல் தோனற வென்க.

பயின்றுவருவனவற்றிற்குத திரிபுகூறி, மற்றவை வந்தவிடததிற் காண்கவென்பார், 'இகரமுமாகும' எனப் பயனிலைகொடுதது முடியாமல 'இகரமும' என அவாய்நிலையாக முடிததார். (அவாய்நிலையாவது - ஒருசொல மற்றொரு சொலலை வேணடி நிற்பது.)

அதனால க்ஷகரம் - இரு ககர மாதலேயன்றி, க்ஷணம் - கணம், க்ஷமா - கமை, க்ஷீரம் - கீரம, க்ஷுத்ரம் - சுததிரம என ஒரு ககரமாகவும கடாக்ஷம - கடாட்சம, மீனாக்ஷி - மீனாட்சி என டகர சகரமாகவும் பிக்ஷா - பிச்சை என இருசகரமாகவும. க்ஷேமம - சேமம என ஒருசகரமாகவும திரிந்து வருதல் முதலியன கொள்க. (உ௦)

[வடமொழி விகாரம்]

† கசஅ. ரவ்விற் கமமுத லாமுக குறிலும்
லவவிற இமமுத லிரண்டும யவவிற்கு
இய்யு மொழிமுத லாகிமுன வருமே.

(இ - ள்.) (ஆரியமொழி தமிழில வரும்பொழுது)—ரவவிற்கு - ரகரததை முதலிலேயுடைய மொழிககு, அ முதல ஆம மூககுறிலும - அ இ உ என்னும மூன்றுகுற்றெழுததுககளி லொனறும,—லவவிறகு-லகரததை முதலிலேயுடையமொழிககு இ முதல இரணடும - இ உ என்னும் இரணடி லொன்றும,—யவ்விறகு - யகரததை முதலிலே யுடைய மொழிககு - இயயும - இகரமும,—மொழிமுதல் ஆகி - மொழிக்குமுதலாகி, முனவரும-(அம மூன்றெழுததுக்களுககு) முனனே வரும; (எ - று)—முன் - காலமுன்.

(உ - ம்.) ரஙகம - அரஙகம, ரதநம-அரதனம ராமன்-இராமன, ரவி - இரவி; ரோமம - உரோமம, ரோஹிணீ-உரோகிணி எனவும' லாபம - இலாபம, லக்ஷணம - இலககணம், லோபம - உலோபம், லோகம் - உலோகம் எனவும; யமன் - இயமன, யக்ஷன் - இயக்கன எனவும் வரும.

இனி, சிறுபான்மை, யுததம - உயுததம, யோகம - உயோகம என யகரததுககுமுன உகரம வருதலும், டமபம - இடமபம என டகரததுககு முன் இகரம் வருதலும் உணடு. (உக)

‡ கசகூ. இணைந்தியல் காலை யரலக் கிகரமும்
மவ்வக் குகரமும் நகரக் ககரமும்
மிசைவரும் ரவ்வழி யுவ்வு மாம்பிற.

(இ - ள்) இணைந்து இயல் காலை-(ஆரியமொழியுள் இரண்டெழுத்து) இணைந்து (ஓரெழுத்தைப்போல) நடக்கும்போது,— யரலக்கு - (பின்னின்ற) யகர ரகர லகரங்கட்கு, இகரமும்—;—மவ்வக்கு-மகர வகரங்கட்கு, உகரமும்—;—நகரக்கு - நகரத்திற்கு அகரமும்—,—மிசை-முன்னேவரும் —;ர வழி - (இணைந்து முன்னின்ற) ரகரத்திற்குப் பின், உவ்வும்ஆம் - உகரமும்வரும். (எ-று.)—இணைந்துவருதலை, ஸம்யுக்தாக்ஷர மென்பர்.

(உ-ம்.) காவ்யம் - காவியம் ⎫
வக்ரம் - ... வக்கிரம் ⎬ யரலக்கு இகரம்.
சுக்லம் - .. சுக்கிலம் ⎭

பத்மம் - பதுமம் ⎫
பக்வம் - ... பக்குவம் ⎭ மவ்வக்கு உகரம்.

ரத்நம் - அரத்தனம்—நகரக்கு அகரம்.

ஆர்த்தம் - . அருத்தம்—ரவ்வழி உ.

'பிற' என்றதனால், ரத்நம் - இரத்தினம், சக்ரம் - சக்கரம், வாக் - வாக்கு, விராட் - விராட்டு, ஸத் - சத்து இவை முதலாகிய தோன்றலும், சக்தி-சத்தி, காவ்யம்-காப்பியம், பர்வதம் பருப்பதம், ஸ்வயம்பூ - சுயம்பு, ஸ்வயம்வரம்-சுயம்வரம், சயம்வரம், உத்பலம் - உற்பலம், தினம் - தினம், பாபம் - பாவம், கல்பகம் - கற்பகம், ஸ்நேஹம் - சினேகம், சம்பகம் - சண்பகம், அக்நி-அங்கி, பங்க்தி - பந்தி, அஸ்தரம்-அச்சிரம், சூர்ணம் - சுண்ணம், க்ருஷ்ணன் - கண்ணன், கர்ணன் - கன்னன், பஸ்மம் - பற்பம், அக்ஷௌஹிணீ - அக்குரோணி, கர்மம் - கன்மம், இவைமுதலாகிய திரிதலும்; ஸ்தூலம் - தூலம், ஜ்ஞாநம் - ஞானம், ஜ்யோதி - சோதி, ஸமரம் - சமர், அமர், சமம் இவை முதலாகிய கெடுதலும் கொள்க. (உஉ)

[தமிழிற் சிறப்பெழுத்தும், பொதுவெழுத்தும்.]

‡ கரு0. றனழஎ ஒவ்வு முயிர்மெய் யுயிரளபு
அல்லாச் சார்புந் தமிழ்பிற பொதுவே.

(இ - ள்.) (முதலும் சார்புமாகிய தமிழெழுத்துநாற்பதில்),—றனழஎ ஒவ்வும் - இவ்வைந்து முதலெழுத்துக்களும், உயிர்மெய் உயிரளபு அல்லாச்சார்பும் - உயிர்மெய்யும் உயிரளபெடையுமல்லாத சார்பெழுத்து எட்டும், தமிழ் - தமிழுக்கே (சிறப்பெழுத்துக்களாய்), பிற - ஒழிந்த இருபத்தேழு எழுத்துக்களும், பொது - (தமிழுக்கும் ஆரியத்துக்கும்) பொதுவெழுத்துக்களாம்; (எ-று.)—எகர ஒகரங்கள் பிராகிருதபாஷைக்கும் உரியனவாதலால், மெய்யை முற்கூறினார். (உங)

பதவியல் முற்றிற்று.

---

# ௩. உயிரீற்றுப்புணரியல்.

உயிரெழுத்துக்களை இறுதியிலுடைய நிலைமொழிகளோடு உயிர்முத லும் மெய்ம்முதலுமாகிய வருமொழிகள் புணரும் விதத்தைச் சொல் லும் இயல்.

[புணர்ச்சி இன்ன தென்பது.]

‡ ௧௫௧. மெய்யுயிர் முதலீ றாமிரு பதங்களும்
தன்னொடும் பிறிதொடு மலவழி வேற்றுமைப்
பொருளிற் பொருந்துழி நிலைவரு மொழிகள்
இயல்பொடு விகாரத் தியைவது புணர்ப்பே.

(இ - ள்.) மெய் உயிர்-மெய்யையும் உயிரையும், முதல் ஈறு ஆம்-முத லும் இறுதியுமாகவுடைய, இருபதங்களும் - (பகாப்பதம் பகுபதமென்ற) இரண்டு பதங்களும், தன்னொடும் பிறிதொடும் - தன்னொடு தானும் பிறி தொடு பிறிதுமாய், அல்வழி வேற்றுமைப்பொருளின் - அல்வழிப்பொருளி னலாவது வேற்றுமைப்பொருளினலாவது, பொருந்து உழி - பொருந்து மிடத்து,—நிலை வரு மொழிகள் - நிலைமொழியும் வருமொழியும், இயல் பொடு விகாரத்து - இயல்பாகவாயினும் விகாரமாகவாயினும், இயைவது - பொருந்துவது,—புணர்ப்பு - (முன்சொல்லப்பட்ட) புணர்ச்சியாம். (எ - று.)

உயிரீற்றின்முன் உயிர்முதல்மொழிபுணர்தல், உயிரீற்றின்முன்மெய்ம் முதல்மொழி புணர்தல், மெய்யீற்றின் முன் உயிர்முதல்மொழி புணர் தல், மெய்யீற்றின் முன் மெய்ம்முதல்மொழி புணர்தல் எனப் புணர்ச்சி நான்கு வகையாம்.

| | |
|---|---|
| (உ-ம்.) மெய்ம்முத லுயிரீறு-மணி. | மணி + அழகு - உயிர்முன் உயிர். |
| உயிர்முத லுயிரீறு - அது | நிலம் + வலிது - மெய்ம்முன் மெய். |
| உயிர்முதல மெய்யீறு-அவன். | மணி + பெரிது-உயிர் முன் மெய். |
| மெய்ம்முதல மெய்யீறு-கல. | நிலம் + அழகிது-மெய்ம்முன் உயிர். |

தன்னொடு தான் பொருந்துதலாவது - பகுபதத்தோடு பகுபதமும், பகாப்பதத்தோடு பகாப்பதமும் புணர்தல், பிறிதொடுபிறிதுபொருந்துத லாவது - பகுபதத்தோடு பகாப்பதமும் பகாப்பதத்தோடு பகுபதமும் புணர்தல்.

| | | |
|---|---|---|
| (உ-ம்.) அவன் | + வந்தான் | —பகுபதத்தோடு பகுபதம். |
| பொன் | + கலம் | —பகாப்பதத்தோடு பகாப்பதம். |
| பொன்னன் | + கை | —பகுபதத்தோடு பகாப்பதம். |
| கிளி | + அழகிது | —பகாப்பதத்தோடு பகுபதம். |

'உயிர்மெய்முதலீறும்' என்றும், வேற்றுமையல்வழி என்றுங்கூறி னல், உயிர்மெய்யெனனும் ஓரெழுத்தென்றும் வேற்றுமையல்லாதவழி யென்றும் பொருள்பட்டு மயங்கவைத்த லென்னும் குற்றத்துக்கு இட மாமாதலால், அங்ஙனங்கூறாது, 'மெய்யுயிர்' என்றும், 'அல்வழிவேற் றுமை' என்றும் மாற்றிக்கூறினர். (௧)

# பொருட்புணர்ச்சி.

[வேற்றுமை, அல்வழி]

† கருஉ. வேற்றுமை யைம்முத லாறா மல்வழி
தொழில்பண் புவமை யும்மை யன்மொழி
எழுவாய் விளியீ ரெச்சமுற் றிடையுரி
தழுவு தொடரடுக் கெனவீ ரேழே.

(இ - ள்.) வேற்றுமை - வேற்றுமைப்புணர்ச்சியாவது,—ஐ முதல் ஆறு ஆம் - ஐ ஆல் கு இன் அது கண் என்கின்ற ஆறு உருபுகளும (இடையில் மறைந்தாயினும் வெளிப்பட்டாயினும் வரப் பதங்கள்) பொருந்தும் தொடர்ச்சியாம்; அல்வழி - அல்வழிப்புணர்ச்சியாவது,—தொழில - வினைத்தொகையும், பண்பு - பண்புத்தொகையும, உவமை - உவமைத்தொகையும், உம்மை - உம்மைத்தொகையும், அன்மொழி - அன்மொழித்தொகையும, எழுவாய் - எழுவாய்த்தொடரும, விளி - விளித்தொடரும், (ஈர்) எச்சம் - பெயரெச்சத் தொடரும வினையெச்சத்தொடரும், (ஈர்) முற்று - தெரிநிலைவினைமுற்றுத் தொடரும் குறிப்புவினைமுற்றுத்தொடரும், இடை - இடைச்சொல் தொடரும், உரி - உரிச்சொல்தொடரும், அடுக்கு - அடுக்குத்தொடரும், என - என்று, ஈர் ஏழ் - பதினான்காம்; தழுவு தொடர் - (இவையெல்லாம்) தழுவுத் தொடர்களாம: (எ - று.)—அல்வழி - வேற்றுமையல்லாத வழி.

'ஈர்' என்பதை 'முற்று' என்பதனோடும் கூட்டுக.

ஐ முதலிய ஆறுவேற்றுமையுருபுகள் இடையில் மறைந்துநிற்க நிலைமொழி வருமொழியோடு புணர்வது - வேற்றுமைத்தொகைநிலை யென்றும, அவ்வுருபுகள் வெளிப்பட்டுநிற்கப் புணர்வது - வேற்றுமைத்தொகாநிலை [விரி] யென்றும கூறப்படும. அல்வழியில வினைத்தொகை முதலிய ஐந்தும், தொகைநிலைகள்; மற்றை ஒன்பதும், தொகாநிலைகள். இவற்றின் இலக்கணத் தையெல்லாம, மேற் பொதுவியலில் கo ஆஞ் சூத்திர முதல் கச ஆஞ் சூத்திரங்களில் விவரமாகக் காணலாம.

[வேற்றுமைப்புணர்ச்சி.]

| தொகை. | (உ - ம) | விரி. | |
|---|---|---|---|
| நீர் குடித்தான் | [ஐ] | நீரைக் குடித்தான். | (உ) |
| கல் எறிந்தான் | [ஆல்] | கல்லால் எறிந்தான். | (ங) |
| மன்னன் மகன் | [கு] | மன்னனுக்கு மகன். | (ச) |
| மலைவீழருவி | [இன்] | மலையின் வீழருவி. | (ரு) |
| பொன்னன் கை | [அது] | பொன்னனது கை. | (சா) |
| வீடு புகுந்தான் | [கண்] | வீட்டின்கண் புகுந்தான். | (எ) |

* 'தொழில பண்பு உவமை உம்மை அன்மொழி எழுவாய விளி ஈரெச்சம் முற்றுஇடை உரி தழுவுதொடர்' என்பதற்கு - வினைத்தொகை முதலிய பதின்மூன்றும (தமக்கு ஏற்கும பெயர்வினைகளோடு) தொடரும தொடர்ச்சி யென்று உரைத்தல், நோ.

[அல்வழிப்புணர்ச்சி.]

க. வினைத்தொகை — கொலயானை [கொன்ற யானை, கொல்கின்ற யானை, கொல்லும யானை]
உ. பண்புத்தொகை — கருங்குதிரை [கருமையாகிய குதிரை.]
இருபெயரொட்டுப் பண்புத்தொகை — பனைமரம் [பனையாகிய மரம.]
ங. உவமைத்தொகை — மதி முகம [மதிபோன்ற முகம.]
ச. உம்மைத்தொகை — கபிலபரணா [கபிலனும பரணனும்]
ரு. அன்மொழித்தொகை—கருங்குழல [கருமையாகிய கூந்தலையுடையவள்] (வந்தாள்)
} தொகைநிலைத்தொடா - ரு.

சு. எழுவாய்த்தொடா — பொன்னன் வந்தான.
எ. விளிததொடா — பொன்னு! வா.
அ. பெயரெசசததொடா — வந்த மன்னன், பெரிய மன்னன்.
கூ. வினையெசசததொடா — வந்து போனுன், மெல்லபபோனுன்.
க0. தெரிநிலைவினைமுற்றுததொடா — வந்தான் பொன்னன்.
கக. குறிப்புவினைமுற்றுததொடா — குழையன் கொற்றன்.
கஉ. இடைசசொல்தொடா — மற்றொன்று.
கங. உரிசசொல்தொடர் — நனி பேதை.
கச. அடுக்குததொடா — பாம்புபாமபு.
} தொகாநிலைத்தொடா-கூ.

இவை தழுவுதொடர் எனவே, அவ்விருவழியிலும் தழாததொடரும சில உள என்றாராயிற்று. 'நீரகுடம' என்பது - நீரையுடைய குடம என விரிதலால், நீர் என்பது உடைய என்பதைத் தழுவிக் குடம என்பதைப் பொருளால் தழுவாமல் தொடாந்ததனுல், இது - தழாததொடராகிய வேற்றுமைததொகை; [இவ்வாறு தொகக்குவருவது, உருபும்பயனும் உடன்தொக்க தொகை எனப்படும். உருபும்பொருளு முடன்தொக்க தொகை யெனினும ஒக்கும] 'மரததைச சாததன் வெட்டினுன்' என்பதில், மரத்தை என்பது வெட்டினுன் எனபதைத் தழுவிச சாததன் என்பதைப் பொருளால் தழுவாமல் தொடாந்ததனுல், இது - தழாத்தொடராகிய வேற்றுமைவிரி. "சுரையாழ அம்மி மிதப்ப" என்பது சுரை மிதப்ப அம்மி ஆழ எனக் கூட்டப்படுதலால், சுரை என்பது ஆழ என்பதையும் அம்மி எனபது மிதப்ப என்பதையும பொருளால் தழுவாமல் தொடாநதன. இவை - தழாததொடராகிய அல்வழிப்புணாசசி. தழாத்தொடராவது - நிலைமொழியானது வருமொழியோடு பொருட்பொருத்தமுறத தழுவாத தொடர். பொருட்பொருததமுறததழுவிய தொடா - தழுவுதொடர்.

உருபும் பயனு முடன் தொக்க தொகை.

இரண்டாம வேற்றுமை. — நீரகுடம [நீரையுடைய குடம்]
மூன்றாம வேற்றுமை. — பொறகுடம [பொன்னலாகிய குடம.]
நான்காம் வேற்றுமை. — நோய்மருந்து [நோய்க்குததரும மருந்து.]

ஐந்தாம் வேற்றுமை. மலையருவி [மலையினின்றுவிழும் அருவி.]
ஆறும வேற்றுமை. ——— (வந்தவழிக் கண்டுகொள்க.)*
ஏழாம் வேற்றுமை. காட்டுப்புலி [காட்டிலுள்ள புலி.]

எட்டு வேற்றுமைகளுள் முதலவேற்றுமைக்கும் எட்டாமவேற்றுமைக்கும் பெயரும் பெயரின் விகாரமுமே யன்றித் தமக்கென வேறுஉருபு இல்லாமையால், அவவிரண்டையும் 'எழுவாய்', 'விளி' என்று அல்வழியிற் சேர்த்து, அவையொழிந்த ஆறையுமே வேற்றுமை யென்றார். அடுக்கும் தழுவுதொடராயினும், ஒருசொலலே அடுக்கிவருதலால மற்றையவைபோலத் தழுவுதொடரன் றென்பதை அறிவித்தற்கு, அதனை இறுதியில் வைத்தார் (உ)

# எழுத்துப்புணர்ச்சி.

## [இயல்புபுணர்ச்சி]

‡ கருரு. விகார மனைத்து மேவல தியல்பே.

(இ - ள்.) விகாரம் அனைத்தும் - (வருஞ்சூத்திரத்திற் சொல்லப்படும்) விகாரவகை முழுவதையும், மேவலது அடையாதது,—இயலபு - இயல்பு புணர்ச்சியாம்; (எ - று)

(உ - ம.) மணி + பெரிது = மணிபெரிது புகழ் + அழகு = புகழழகு. (ங)

## [விகாரப்புணர்ச்சி]

| கருச. தோன்றல் திரிதல் கெடுதல் விகாரம்
மூன்றும் மொழிமூ விடத்து மாகும.

(இ - ள்) தோன்றல் - (எழுத்தாவது சாரியையாவது) தோன்றுதலும், திரிதல்-(ஓரெழுத்து மற்றோர் எழுத்தாக) வேறுபடுதலும, கெடுதல் - (உள்ள எழுத்துக) கெடுதலும,—விகாரம - விகாரப்புணர்ச்சியாம; மூன்றும - இம்மூவகைவிகாரங்களும,—மொழி - நிலைமொழி வருமொழிகளின,மூஇடத்தும - (முதல் இடை கடை என்னும்) மூன்று இடத்திலும, ஆகும - வரும்;(எ-று.)

(உ - ம.) பூ + கொடி = பூங்கொடி—வருமொழிமுதலில் மெய்தோன்றிற்று.

அல் + திணை = அஃறிணை—வருமொழிமுதலிலும், நிலைமொழி யீற்றிலும உள்ள மெய்கள் திரிந்தன.

நிலம + வலயம = நிலவலயம—நிலைமொழி யீற்றுமெய் கெட்டது

ஆறு + பத்து = அறுபது —நிலைமொழி முதலுயிர் திரிந்து வருமொழியிடையொற்றுக் கெட்டது.

---

* தசரதனது மகனாகிய ராமனென்பது 'தசரதராமன்' என ஆறுமவேற்றுமை யுருபும பொருளும உடன தொக்கு வழங்குதல் காணக. சடகோபரந்தாதி (உக) "இராவணன்றன் பொனமுடியாற கடலதூர்த்த வில்லான் பொருநைத்துறைவன்" என்பது இராமபிரானது அடியவராகிய ஆழ்வார் எனப் பொருள்படுதலும் அது

பனை + காய் = பனங்காய் — நிலைமொழி யீற்றுயிர் கெட்டு 'அம்' சாரியைதோன்றி அதனாறு திரிந்தது.

ஒன்பது + பத்து = தொண்ணூறு — நிலைமொழிவருமொழிகள் மூன்றிடத்தும [முழுவதும] விகாரப்பட்டன. (ச)

[செயயுள்விகாரம்.]

கருரு. வலித்தல் மெலித்தல் நீட்டல் குறுக்கல்
விரித்தல் தொகுத்தலும் வருஞ்செயயுள் வேண்டுழி.

(இ - ள்.) வலித்தல் - (மெல்லெழுத்தை) வல்லெழுத்தாக்கலும், மெலித்தல் - (வல்லெழுத்தை) மெல்லெழுத்தாக்கலும், நீட்டல் - (குற்றெழுத்தை) நெட்டெழுத்தாக்கலும், குறுக்கல் - (நெட்டெழுத்தைக்) குற்றெழுத்தாக்கலும், விரித்தல் - (இல்லாத எழுத்தை) வருவித்தலும், தொகுத்தலும் (உள்ள எழுத்தை) நீக்குதலும், — செயயுள் - செயயுளிடத்து, வேண்டு உழி - (செயயுளிலக்கணத்தைநோக்கி) அமைக்கவேண்டுமிடத்து, வரும் —; (எ - று)

(உதாரணம்.)
க "முத்தை வருஉங் காலம்" — முந்தையெனபது வலித்துநின்றது
உ "தண்டையி னினக்கிளி" — தட்டையென்பது மெலிந்துநின்றது
ங. "குறுக நீழல்" — நிழலெனபது நீண்டுநின்றது
ச. "நனெறென்றேன தீயேன" — தீயேனெனபது குறுகிநின்றது
ரு "தெல்விளையும்மே" — விளையுமேயென்பது மகரமெயவிரிந்துநின்றது.
சு "தீ நாடுகேன" — நாடுகேனென வென்பது அகரம தொகக்குநின்றது

(தட்டை - கிளியோட்டுங் கருவி.)

புணர்ச்சிவிகாரத்துக்கும் செய்யுள்விகாரத்துக்கும் வேறுபாடு — புணர்ச்சிவிகாரம், நிலைமொழி வருமொழிப் புணர்ச்சியிலமாத்திரமே வரும்; தனிமொழியில் வாராது இது, உலகவழக்குச் செயயுளவழக்கு எனனும இரண்டுக்கும் உரியதாம. செயயுளவிகாரம, செயயுளிலமாத்திரமே வரும உலக வழக்கில் வாராது. இது, தனிமொழி தொடர்மொழி இரண்டுக்கும பொது.()

[இதுவும் அது]

கருசு. ஒருமொழி மூவழிக் குறைதலு மனைத்தே.

(இ - ள்.) ஒருமொழி - ஒருசொல்லினுடைய, மூ வழி - (முதல இடை கடைஎன்னும) மூன்றில் ஓரிடத்து, குறைதலும - குறைந்து வருதலும, — அனைத்து - அச்செயயுள்விகாரமாம; (எ - று)

(உ - ம) "மரை யிதழ்" — தாமரை எனபது முதல் குறைந்தது.
"ஓதி முதுபோத்து" — ஓந்தி என்பது இடை குறைந்தது
"நீலுண் துகிலிகை" — நீலம் எனபது கடை குறைந்தது.
(ஓந்தி - ஓணான்.)

தொகுத்தல் விகாரம் பகுபதத்திலும், முதல் இடை கடைக்குறைவிகாரங்கள் * பகாப்பதத்திலும் வருமெனை வேறுபாடு கொள்க. (௬)

[புணர்ச்சி விகாரத்தில் வரும் ஐயத்தை நீக்குதல்]

௧௫௭. ஒருபுணர்க் கிரண்டு மூன்று முறப்பெறும்.

(இ - ள்) ஒரு புணர்க்கு - ஒருபுணர்ச்சிக்கே, இரண்டும் - (ஒருவிகாரமே யன்றி) இரண்டுவிகாரங்களும், மூன்றும் - மூன்றுவிகாரங்களும், உற பெறும் - வரப்பெறும்; (எ - று)

(உ-ம்.) (க) யானை + கொம்பு = யானைக்கொம்பு — தோன்றல்

(உ) நிலம் + பனை = நிலப்பனை — கெடுதலும் தோன்றலும்.

(௩) பனை + காய் = பனங்காய் — கெடுதலும் தோன்றலும் திரிதலும்.

பிறவும் இவ்வாறே காண்க. (எ)

## பொதுப்புணர்ச்சி.

(உயிரீற்றுக்கும் மெய்யீற்றுக்கும் பொது)

[எல்லா ஈற்றின் முன்னும் மெல்லினமும் இடையினமும் புணர்தல்.]

௧௫௮. § எண்மூ வெழுத்தீற் றெவ்வகை மொழிக்கும்
முன்வரு ஞநமய வக்க ளியல்பும்
குறில்வழி யத்தனி யைந்நொது முன்மெலி
மிகலுமாம் ணளனல வழிநத் திரியும்.

(இ - ள்.) (க) எண்மூ எழுத்து - இருபத்துநான்கு எழுத்துக்களையும், ஈறு - இறுதியாகவுடைய, எவ்வகை மொழிக்கும் - எல்லாவகைச் சொற்களுக்கும், முன் - முன்னே, வரும் - வருகின்ற, ஞ ந ம ய வக்கள் - ஞகர நகர மகர யகர வகரங்கள், இயல்பும் - இயல்பாதலும்;—(உ) குறில்வழி ய - தனிக் குற்றெழுத்தின்பின் நின்ற யகரமெய்க்கும், தனிஐ - ஓரெழுத்தொருமொழியாகிய (உயிர் உயிர்மெய்யென்னும்) ஐகாரத்துக்கும், நொது - (ஓரெழுத்தொரு மொழியாகிய) நொ என்பதற்கும் து என்பதற்கும், முன் - முன் வருகின்ற, மெலி - ஞகர நகர மகரங்கள், மிகலும் - மிகுதலும், ஆம் - ஆகும்;—(௩) ண ள ன ல வழி - ணகர ளகர னகர லகர மெய்களின்பின் வருகின்ற, ந - நகரமானது, திரியும்—; (எ - று.)

புணரியலிலே அல்வழி வேற்றுமைகளில் ஒன்றை வெளிப்படையாகவாயினும் குறிப்பாகவாயினும் கூறாத இடங்களிலெல்லாம் அவ்விரண்டையும் கொள்க.

---

* இவற்றை 'அடி தொடை முதலிய நோக்கித் தொகுக்கும்வழித் தொகுத்தலன்றி வழக்கின்கண் மரூஉப்போலச் செய்யுட்கண் மரூஉவாய் அடிப்பாடாக ஒருமொழி முதலிடைகடையென்னும் மூன்றிடத்தும் குறைந்து வருதல்' என்பர் விருத்தியுரைகாரர்.

§ ௧௦௭ - ஆஞ் சூத்திரம் பார்க்க.

'ஞநமயவக்கள்' என்றது, மெல்லின இடையினங்களில் மற்றை எழுத்துக்கள் மொழிக்கு முதலாகாவாதலால்; பின்வருஞ் சூத்திரங்களில் வலி, மெலி, இடை என்பனவும் - அந்தந்த இனங்களில் மொழிக்கு முதலில்வரும் எழுத்துக்களையே குறிக்கும்.

| (க) அல்வழி. (உதாரணம்.) | வேற்றுமை |
|---|---|
| இள + ஞாயிறு = இளஞாயிறு | வலி + ஞமலி = வலிஞமலி |
| பனை + நீண்டது = பனைநீண்டது | பூ + நீட்சி = பூநீட்சி |
| பொன் + மெலிது = பொன்மெலிது | மண + மாட்சி = மணமாட்சி |
| வோ + யாது = வோயாது | கல + யானை = கலயானை |
| எஃகு + வலிது = எஃகுவலிது | வாள் + வலிமை = வாள்வலிமை |

ஞ ந ம ய வக்கள் இயல்பாயின; மற்றை ஈறுகட்கும் இங்ஙனமே காண்க.

| (உ) அல்வழி. | வேற்றுமை. | |
|---|---|---|
| மெய் + ஞான்றது = மெய்ஞ்ஞான்றது | + ஞாற்சி = மெய்ஞ்ஞாற்சி | குறில் ய் |
| நீண்டது = மெய்ந்நீண்டது | நீட்சி = மெய்ந்நீட்சி | |
| மாண்டது = மெய்ம்மாண்டது | மாட்சி = மெய்ம்மாட்சி | |
| கை + ஞான்றது = கைஞ்ஞான்றது | + ஞாற்சி = கைஞ்ஞாற்சி | தனி ஐ |
| நீண்டது = கைந்நீண்டது | நீட்சி = கைந்நீட்சி | |
| மாண்டது = கைம்மாண்டது | மாட்சி = கைம்மாட்சி | |

குறில்வழி ய, தனி ஐ முன் மெலி மிக்கன

| | |
|---|---|
| நொ + ஞெள்ளா = நொஞ்ஞெள்ளா | து + ஞெள்ளா + துஞ்ஞெள்ளா |
| நாகா = நொந்நாகா | நாகா + துந்நாகா |
| மாடா = நொம்மாடா | மாடா + தும்மாடா |

நொ து முன் மெலி மிக்கன.* இவை வினையாதலால், அல்வழி (நொ-வருந்து. து-உண். இவை இரண்டும்-ஒருமையேவல். ஞெள்ளா முதலியன-விளிப்பெயர்.)

| (ங) அல்வழி. | வேற்றுமை. |
|---|---|
| மண் + நீண்டது = மண்ணீண்டது | மண் + நீட்சி = மண்ணீட்சி |
| முள் + நீண்டது = முண்ணீண்டது | முள் + நீட்சி = முண்ணீட்சி |
| பொன் + நீண்டது = பொன்னீண்டது | பொன் + நீட்சி = பொன்னீட்சி |
| கல் + நீண்டது = கன்னீண்டது | கல் + நீட்சி = கன்னீட்சி |

ண ள ன ல வழி ந திரிந்தது.

"ணளனலவழி நத் திரியும்" என்றது, பின் மெய்யீற்றுப்புணரியலில் வரும் "னலமுன் றனவும்" என்னுஞ் சூத்திரத்தில் விவரிக்கப்படும்.

இச்சூத்திரம், வருமொழிச்செய்கைகூறியது. சிறுபான்மை நிலைமொழி யீறுவிகாரப்படுதல், மேல அவ்வவ்வீற்றுச்சிறப்புவிதியாற் பெறப்படும் (அ)

* 'நொ து முன் மெலி மிகலுமாம்' என எண்ணினங்கண் நிற்கும் எச்சவும்மையானே, நொ து எனும் இரண்டுசொல்முன்னும் இடையினமும் மிகலுமாமெனக் கூறினாராயிற்று; அவை வருமாறு—நொய்யவனே, நொவ்வளவர்; துய்யவனே, துவ்வளவர் என வரும்'—நன்னூல் விருத்தியுரை.

[பொதுப்பெயர் உயர்திணைப்பெயர் ஈறு.]

1 கருகூ பொதுப்பெய ருயர்திணைப் பெயர்க ளீற்றுமெய்
வலிவரி னியல்பாம் ஆவி யரமுன்
வன்மை மிகாசில விகாரமா முயர்திணை.

(இ - ள்.) (க) பொதுப்பெயர் - (இருதிணைகட்கும்) பொதுவான பெயர்களுக்கும், உயர்திணைப் பெயர்கள் - உயர்திணைப் பெயர்களுக்கும், ஈறு மெய் - இறுதியிலுள்ள மெய்கள்,—வலி வரின் - (வருமொழிமுதலில்) வல்லெழுத்து வந்தால், இயல்பு ஆம் - இயல்பாகும்,—(உ) ஆவி யரமுன் - (பொதுப்பெயர் உயர்திணைப்பெயர்களின் ஈற்றில்வருகின்ற) உயிரெழுத்துக்களின் முன்னும் யகர ரகர மெய்களின் முன்னும் வருகின்ற வன்மை - வல்லெழுத்துக்கள், மிகா - மிகாவாம்;—(௩) (இவ்வாறன்றி), சில உயர்திணை - (மெய்யீறும் உயிரீறுமாகிய) சில உயர்திணைப்பெயர்கள், (நாற்கணங்களோடும் புணருமிடத்து), விகாரம் ஆம் - (நிலைமொழி வருமொழிகள்) விகாரப்பட்டு வருதலும் உண்டு; (எ - று.)

பொதுப்பெயராவது - உயர்திணை அஃறிணை இரண்டிற்கும் பொதுவாக வரும் பெயர். பொதுப்பெயர் * விரவுப்பெயர் என்பன ஒருபொருட் சொற்கள். உயர்திணை அஃறிணை இரண்டினும் கலத்தலுடைய பெயர் - விரவுப்பெயர்; விரவுதல் - கலத்தல்

'வலி' 'வன்மை' என்றது - மொழிக்கு முதலில் வரும் க ச த பக்களை.

நாற்கணமாவன - வன்கணம், மென்கணம், இடைக்கணம், உயிர்க்கணம்.

வல்லினம் வந்தால் திரிதற்கு உரிய நிலைமொழியீற்று மெய்யெழுத்துக்கள் [ண ள ன ல்] திரியாமல் இயல்பாதல்பற்றி 'ஈற்றுமெய் இயல்பாம்' என்றும், ஆவி யரக்களின் முன் மிகுதற்கு உரிய வருமொழிமுதல் வல்லெழுத்துக்கள் மிகாமல் இயல்பாதல்பற்றி 'வன்மை மிகா' என்றும் பிரித்துக் கூறினர். (முன்னது, நிலைமொழியீற்றை நோக்கியது; பின்னது, வருமொழி முதலை நோக்கியது) §

| (க) | அல்வழி (உதாரணம்) | | வேற்றுமை. |
|---|---|---|---|
| ஆண் + குறியன் = ஆண்குறியன். | | ஆண் + கை = ஆண்கை | |
| ஆண் + சிறிது = ஆண்சிறிது. | | ஆண் + செவி = ஆண்செவி. | |
| சாத்தன் + தீயன் = சாத்தன்தீயன் | | சாத்தன் + தலை = சாத்தன்தலை. | |
| சாத்தன் + பெரிது = சாத்தன்பெரிது. | | சாத்தன் + புறம் = சாத்தன்புறம். | |
| நான் + சிறியேன் = நான்சிறியேன் | | | |

எனப்பொதுப்பெயரீற்றுமெய் வலிவர இயல்பாயின; பிறவும் காண்க.

---

* இது - உருடு - ஆம் சூத்திரத்தில் வருகின்றது.

§ 'ஈற்றுமெய்' என்றும், 'முன்' என்றும் பகுத்து ஓதியது, யாண்டும் நிலைமொழி வருமொழி விகாரங்களை தெரிந்து அறிந்து கோடற்கு என்க என்பது, பழைய உரை.

'சாதகன்' என்பது - ஒருதேயவகத்தின பெயராதலாலும, மனிதாகளும் விலஙகுசகும பெயராக இடபபடுதலாலும, இருதிணைப்பொதுபபெயராம்.

| அல்வழி | வேற்றுமை |
| --- | --- |
| அவள் + குறியள் = அவள்குறியள். | தையல் + பெருமை = தையல்பெருமை. |
| மகன் + சிறியன் = மகன்சிறியன் | மகன் + தலை = மகன்றலை |
| குரிசில் + பெரியன் = குரிசில்பெரியன். | வேள் + சிறுமை = வேள்சிறுமை. |

என உயர்திணைப்பெயர்ற்று மெய் வலிவர இயல்பாயின *

| (உ) அல்வழி | வேற்றுமை. |
| --- | --- |
| பிள்ளை + சிறியன் = பிள்ளைசிறியன் | சாத்தி + கை = சாத்திகை. |
| பிள்ளை + சிறிது = பிள்ளைசிறிது | சாத்தி + செவி = சாத்திசெவி |
| நீ + குறியை = நீகுறியை | தாய் + தலை = தாய்தலை. |
| நீர் + குறியீர் = நீர்குறியீர் | தாய் + பொருள் = தாய்பொருள். |

எனப் பொதுப்பெயர்ற்று ஆவி யகர ரகரமுன் வன்மைமிகாவாயின

| அல்வழி. | வேற்றுமை, |
| --- | --- |
| நம்பி + குறியன் = நம்பிகுறியன் | நங்கை + தலை = நங்கைதலை |
| சேய் + சிறியன் = சேய்சிறியன். | சேய் + சிறுமை = சேய்சிறுமை |
| அவர் + பெரியர் = அவர்பெரியர். | அவர் + பெருமை = அவர்பெருமை. |

என உயர்திணைப்பெயர்ற்று ஆவி யகர ரகரமுன் வன்மைமிகாவாயின.

(ங) 'சிலவிகாரமாம் உயர்திணை' என்றதற்கு, வருமொழி முதலெழுத்தைச் சொல்லாமையால், நாற்கணமும் கொள்ளப்பட்டன.

| (உ-ம்) | | | |
| --- | --- | --- | --- |
| கபிலன் + பரணன் | = கபிலபரணர் | அல்வழி. |
| நம்பி + கொற்றன் | = நம்பிகொற்றன் | அல்வழி. |
| வடுகன் + நாதன் | = வடுகநாதன் | அல்வழி. |
| அரசன் + வள்ளல் | = அரசவள்ளல் | அல்வழி. |
| விராடன் + அரசன் | = விராடவரசன் | அல்வழி. |
| ஆசீவகர் + பள்ளி | = ஆசீவகப்பள்ளி | வேற்றுமை |
| மக்கள் + குணம் | = மக்கட்குணம் | வேற்றுமை |
| நளன் + வெண்பா | = நளவெண்பா | வேற்றுமை |
| குமரன் + கோட்டம் | = குமரகோட்டம், குமரக்கோட்டம் | வேற்றுமை |

என இருவழியும் உயர்திணையுட் சில தமக்கு ஏற்றபடி விகாரமாயின. (க)

[வினைப்பெயர்முன்னும் விளிப்பெயர்முன்னும் வல்லினம்.]

கரு௦. ஈற்றியல் வினைவிளிப் பெயர்முன்வலி யியல்பே.

* தோன்றல் + தீயன் — தோன்றீயன், தோன்றல் + தலை — தோன்றலை எனவும்; வேள் + தீயன் — வேடீயன், வேள் + தலை — வேடலை எனவும் லகரளகரமெய்கள் தகரம் வருமிடத்துக் கெடுதல் மயக்கவிதியின்மை பற்றியென்று அறிக; (கஎ - ஆஞ் சூத்திரம் பார்க்க) நாம் + சிறியோம் = நாஞ்சிறியோம் என மகரமெய் வலிவர இனமாகத்திரிதலும் இது: (ககடு-ஆம் சூத்திரம் பார்க்க.)

(இ-ள்.) (க) ஏறு (வினை) - இறுதியில் வருகின்ற (ஆ ஓ ஏ என்னும்) மூன்று வினைவெழுத்துக்களுக்கும், (உ) யா வினா யா என்னும் வினைப்பெயராக கும், (ந) விளிப் பெயர் - (உயிரீறும் மெய்யீறு மாகிய) விளிவேற்றுமைப் பெயர்களுக்கும், முன் மூன் வருகின்ற, வலி-வல்லெழுத்துக்கள், இயல்பே - இயல்பேயாம்; (எ - று.)

(க) (உ - ம.)

| | | | |
|---|---|---|---|
| அவனோ<br>கொற்றனோ<br>சாத்தனே | + | கொண்டான் - அவனோகொண்டான்<br>சென்றான் —அவனோசென்றான்<br>தந்தான் —அவனோதந்தான்<br>போயினான் —அவனோபோயினான் | என ஏற்றுவினைமுன் வலி இயல்பாயின. |

(உ)

| அல்வழி. | வேற்றுமை. |
|---|---|
| யா + குறியன —யாகுறியன. | + தந்தான் —யாதந்தான். |
| சிறியன —யாசிறியன | பார்த்தான் —யாபார்த்தான்; |

என யாவினாமுன் வலி இயல்பாயின; (யா - யாவை.)

| | |
|---|---|
| (ந) பொன்னே + கொள் = பொன்னேகொள் | தோழீ + தா = தோழீதா |
| பிள்ளாய + செல் = பிள்ளாயசெல் | மக்காள் + போம் = மக்காளபோம் |

என விளிப்பெயர்முன் வலி இயல்பாயின.

ஏற்றுவினை மூன்றும், விளிப்பெயரும் - அல்வழி, யாவினைப்பெயர்-அல் வழி, வேற்றுமை இரண்டிக்கும் பொது. (கo)

[முன்னிலைவினைமுன்னும், ஏவல்முன்னும் வல்லினம்.]

‡ கரு௧. ஆவி யரழ விறுதிமுன் னிலைவினை
ஏவல்முன் வல்லின மியல்பொடு விகற்பே.

(இ - ள்.) ஆவி - உயிரையும், ய ர ழ - ய ர ழ என்னும் மூன்றுமெய் களையும், இறுதி - ஈறாக வுடைய, (க) முன்னிலை வினை - முன்னிலை வினை முற்றுக்களுக்கும், (உ) ஏவல்-ஏவல்வினை முற்றுக்களுக்கும், முன் - முன்வரு கின்ற, வலலினம் - க ச த பக்கள்,—இயல்பொடு - இயல்புடனே, விகற்பு - விகல்பமுமாம் [ஒன்றுக்கே இயல்பாயும் மிக்கும் வரும]; (எ - று.)

முன்னிலைவினைக்கும் ஏவல்வினைக்கும் வேறுபாடு —முன்னிலைவினை - நடந்தாய் நடக்கின்றாய் நடப்பாய் என்றாற்போல மூன்றுகாலத்தும் தனித் தனிவருவதாய் முன்நிற்கும் பொருளினது தொழிலை உணர்த்தி ஏவற்பொ ருள் படாதது என்றும், ஏவல்வினை - நடமின் நடவும் என்றாற்போல எதிர் காலத்து மாத்திரமே வருவதாய் முன்நிற்கும பொருளைக் கட்டளையிடுவது என்றும் வேறுபாடு அறிக. ஏவலெல்லாம் முன்னிலைவினையாம்; முன்னிலை வினையெல்லாம் ஏவலாகா.

விகற்பமாவது-ஒருபுணர்ச்சிக்கே ஒருகால் ஒரு வகையாயும், மற்றொரு கால் வேறு வகையாயும் வருவது; விகற்பம், * உறழ்ச்சி, §பொருதல் என் பன - ஒருபொருட்சொற்கள்; நியதியின்மை யென்பது பொருள்.

* உoந - ஆஞ் சூத்திரம பார்க்க. §உகஙு - ஆஞ் சூத்திரம் பார்க்க.

(க) உண்டனை } + கொற்று = உண்டனை கொற்று | தேவா உண்டனை தேவா
(உ-ம) உண்டாய் } + சாததா = உண்டாய் சாததா | புலவா-உண்டாய்புலவா

உண்டா } + கொறறரே = உண்டா கொறறரே | தேவரே = உண்டா தேவரே
சாததரே = உண்டா சாததரே | புலவரே = உண்டா புலவரே

என ஆவி ய ர இறுதி முன்னிலைவினைமுன் வலி இயல்பாயின.

ழகரமெய்யீறறுவிகுதி இல்லாமைபற்றி ழகரமெய் முன்னிலைவினைக்கு ஏறுகாமையால், அதறகு உதாரணம இல்லை.

முன்னிலைவினை முன் விகற்பித்தல் வந்தவிடத்துக் காணக.

(உ) வா + கொற்று = வாகோற்று | சோ + தேவா = சோதேவா
பாய் + சாத்தா = பாயசாததா | வாழ் + புலவா = வாழ்புலவா

என ஆவி ய ர ழ இறுதி ஏவல்வினைமுன் வலி இயல்பாயின.

நட + கொற்று = நடகொற்று; நடக்கொறறு } என ஏவல்வினைமுன்
எய் + கொறறு = எய்கொறறு; எய்க்கொறறு } வலி விகற்பித்தன.

இவையெல்லாம வினைமுற்றுத் தொடராதலால, அல்வழிப் புணாசசி. (கக)

## உயிரீற்றுச் சிறப்புப் புணர்ச்சி.

புணரியல் மூன்றனுள் உயிரீற்றுபபுணரியல முதலதாதலால, அதில முதற்பதினொரு சூததிரஙகளால இதுவரையிலும புணாசசிவிதியை உயிரீற றுக்கும மெயயீறறுககும பொதுப்படக கூறி, இனி உயிரீறறுப் புணாசசிச சிறபபுவிதி கூறுகின்றா.

### [உயிாமுன் உயிா புணாதல்.]

‡ கக௩. இஈ ஐவழி யவவும ஏனை
உயிாவழி வவவும ஏமுனிவ விருமையும்
உயிாவரி னுடமபடு மெய்யென் றாகும.

(இ - ள்.) உயிாவரின்-(வருமொழிமுதலில) உயிாவந்தால்,—(க) இஈ ஐ வழி - இகர ஈகார ஐகாரஙகளின் பின்னே, யவ்வும - யகரமெயயும;—(உ) ஏனை உயிா வழி - (அ ஆ உ ஊ ஒ ஓ ஔ எனனும) இவ்வேழு உயிாகளின் பின்னே, வவ்வும - வகரமெயயும;—(௩) ஏ முன்-ஏகாரததின் பின்னே, இ இருமையும - இவ்விரணடும [யகரமெயயும் வகரமெய்யும], உடமபடுமெய் என்று ஆகும - உடமபடுமெயயாக வரும; (எ - று)—முன் - இடமுன்.

உடம்படுமெய் - நிலைமொழியீறறிலும் வருமொழிமுதலிலும் நின்ற உயிாகளை உடமபடுத்தும மெய; உடமபடுதத லென்றாலும், உடன்படுதத லெனறாலும பொருள்ஒக்கும். (உடமபு அடு எனப் பிரிததது, வரும் உயிாஏறு தற்கு உடம்பாக அடுககும மெய் என்றாலும் பொருந்தும,)

(க) அல்வழி. (உதாரணம்.) வேற்றுமை.

| | | | |
|---|---|---|---|
| மணி | அழகிது—மணியழகிது | அழகு—மணியழகு | இ ஈ ஐ முன் யகரம் வந்தது. |
| தீ | அழகிது—தீயழகிது | அழகு—தீயழகு | |
| மலை | அழகிது—மலையழகிது | அழகு—மலையழகு | |
| (உ) விள | அழகிது—விளவழகிது | + அழகு—விளவழகு | மற்றை உயிர்களின் முன் வகரம் வந்தது. |
| பலா | அழகிது—பலாவழகிது | + அழகு—பலாவழகு | |
| கடு | அழகிது—கடுவழகிது | + அழகு—கடுவழகு | |
| பூ | அழகிது—பூவழகிது | + அழகு—பூவழகு | |
| நொ | அழகிது—நொவ்வழகிது | + அழகு—நொவ்வழகு | |
| கோ | அழகிது—கோவழகிது | + அழகு—கோவழகு | |
| கௌ | அழகிது—கௌவழகிது | + அழகு—கௌவழகு | |

(ங) அவனே + அழகன் = அவனேயழகன் என இடைச்சொல் ஏமுன் யகரமும், ஏ + எலாம் = ஏவெலாம், சே + உழவு = சேவுழவு தே + அடியார் = தேவடியார் எனப்பெயர்ச்சொல் ஏ முன் இருவழியும் வகரமும்,

சே + அடி = சேயடி, சேவடி எனச் செம்மையென்னும் பண்புப்பெயரின்விகாரமாகிய 'சே' முன் யகரமும் வகரமும் உடம்படுமெய்யாக வந்தன.

(சேயடி சேவடி என்பவற்றை ''ஏறுபோதல்''என்ற சூத்திரத்து 'முன்னின்ற மெய் திரிதல்' என்றதில் அடக்குதலுமாம்.) (கஉ)

[யகரவினாமுன்னும் சுட்டுமுன்னும் நாற்கணமும் புணர்தல்]

கசுந. எகர வினாமுச் சுட்டின் முன்னர்
உயிரும் யகரமு மெய்தின் வவ்வும்
பிறவரி னவையுந் தூக்கிற் சுட்டு
நீளின் யகரமுந் தோன்றுதல் நெறியே.

(இ - ள்.) (க) எகர வினா - எகர வினாவிடைச்சொல்லுக்கும், முச்சுட்டின் - மூன்று சுட்டிடைச் சொற்களுக்கும், முன்னர்-முன்னே, உயிரும்—, யகரமும—, எய்தின் - வந்தால், வவ்வும் - வகரமெய்யும்;—பிற - யகரமொழிந்த மெய்கள், வரின் - வந்தால், அவையும் - அவ் வந்த மெய்களும்,—(உ) தூக்கில் - செய்யுளில், சுட்டு - சுட்டெழுத்து, நீளின்-நீண்டிட்டது, யகரமும் - யகரமெய்யும்,—தோன்றுதல்-மிகுதல்,—நெறி-முறையாம்; (எ - று.)

(க)(உ-ம்) அணி—எவ்வணி
யானை—எவ்யானை
எகரவினா முச்சுட்டின் முன்னர் உயிரும் யகரமும்வர வகரமெய் தோன்றிற்று.

| | | | |
|---|---|---|---|
| எ, அ, இ, உ | குதிரை—எக்குதிரை | நாடு —எந்நாடு | பிற வர அவ் வந்த மெய் தோன்றின. |
| | சேனை —எச்சேனை | மனை —எம்மனை | |
| | தண்டு —எத்தண்டு | விதம் —எவ்விதம் | |
| | படை —எப்படை | ஙனம் —எங்ஙனம் | |
| | ஞாலம் —எஞ்ஞாலம் | | |

(உ) ஆ + இடை—''ஆயிடை''—சுட்டு நீண்டவிடத்து யகரம் தோன்றிற்று.
(ஆயிடை-அவ்விடம்) சுட்டு நீளுதற்கும் இதுவே விதி.

இவையெல்லாம் இடைச்சொல் தொடராதலால், அல்வழிப் புணர்ச்சி.

'நெறி' என்ற *மிகையால்-யாங்ஙனம் என 'யா' வினாவின் முன்னும் ஆங்ஙனம், ஈங்ஙனம்,ஊங்ஙனம் என நீண்டசுட்டின் முன்னும் ஙகரம் மிகுதலும்; ஈது, ஆங்கு, ஈங்கு, ஊங்கு, ஆண்டு, ஈண்டு எனச்சுட்டுப்பெயர்களிலும், "விணவத்துக்கொட்கும்" [விண + அத்து = விணவத்து], "செலவுழிச் செல்க" [செல் + உழி = செல்வுழி] என மெய்யீற்றின் முன் உயிர்வர இப்படி உடம்படுமெய் யல்லாத வகரம் பெறுதலும் கொள்க; இவ்வாறு மெய்யீற்றின் முன் வரும் வகரத்தை, 'மெய்யீற்றுடம்படுமெய்' என்பர், ஆசிரியர் நச்சினார்க்கினியர். (கஙு)

[குற்றியலுகரத்தின் முன்னும் சில முற்றியலுகரத்தின் முன்னும் உயிரும் யகரமும் புணர்தல்.]

கசுச. உயிர்வரி னுக்குறள் மெய்விட் டோடும்
யவ்வரி னிய்யாம் முற்றுமற் றொரோவழி.

(இ - ள்.) (க) உ குறள்-குற்றிய லுகரமானது,—உயிர் வரின்—(வருமொழி முதலில்) உயிர் வந்தால், மெய்விட்டு-(தனக்கு இடமாகிய) மெய்யை விட்டு, ஓடும் - கெடும்;—ய வரின்-(வருமொழிமுதலில்) யகரம் வந்தால், இ ஆம் - (அவ்வுகரம்) இகரமாகத் திரியும்;—(உ) முற்றும் - முற்றியலுகரமும், ஒரோவழி - ஒவ்வோரிடத்து, அற்று - அவ்வாறேயாகும் [உயிர் வர உகரம் கெடுதலும் யகரம் வர உகரம் இகரமாகத் திரிதலு மாகிய அவ்விரண்டு விதியையும் பெறும்]; (எ - று)—உகுறள் - மாத்திரை குறுகிய உகரம்.

| (க) குற்றியலுகரம். (உ-ம்.) | (உ) முற்றியலுகரம். | |
|---|---|---|
| வரகு + அருமை—வரகருமை | கதவு + அருமை—கதவருமை. | வேற்றுமை. |
| + யாது வரகியாது | + யாது —கதவியாது. | அல்வழி. |

§ 'கெடும்' எனாமல் 'ஓடும்' என்றமையால்-காணபதுவும்', 'வருவதுவே' எனக் குற்றியலுகரம் ஒரோவிடத்துக் கெடாமல் "இ ஈ ஐ வழி", என்னுஞ் சூத்திரப்பொதுவிதியால் வகர உடம்படுமெய் பெறுதலும் கொள்க. ()

* மிகை - அவசியமல்லாத சொல். சூத்திரத்தில் அவசியமல்லாத பதம் காணப்பட்டால் அதனால் ஏதேனும் தக்கபொருள் கொள்ளவேண்டுமென்பது இலக்கணநூலார் துணிபு. இங்கே, 'தோன்றும்' என்றாலே அமைவதாயிருக்க, 'தோன்றுதல் நெறி' என்றதில் 'நெறி' என்றது - இன்றியமையாததனாதல் காண்க. பிறவும் இங்ஙனமே கண்டுகொள்க.

§ 'குற்றியலுகரம் சிறுபான்மை உயிர் முதல்மொழி வரும்பொழுது கெடாமல் நிற்கும்' என்ற இவ்விதியை இச்சூத்திரத்தில் அடக்காமல், மேல் பெயரியலில் இவ்வாசிரியர் "தன்முகமாகத் தானழைப்பதுவே" எனவும் "ஆறனொருமைக் கதுவுமாதுவும்" எனவும் தாமே உதாரணங்காட்டிக் கூறியதன் குறிப்பினாற் பெறவைத்தாரெனக் கொள்ளுதல் நேராமெண அறிக. இங்ஙனம் சொல்லவேண்டுவதோர் அருத்தத்தை வெளிப்படையாகச் சொல்லாமல் தான் சொல்வதன் குறிப்பினால் தெரிவித்தல், உடம்பொடுபுணர்த்தல் என்னும் உத்தி.

## உயிரின் முன் வல்லினம் புணர்தல்.

### பொது விதி.

‡ கரு௫. இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன்
கசதப மிகும் விதவா தன மன்னே.

(இ - ள்.) இயல்பினும்-இயல்பினாலாவது, விதியினும்-விதியினாலாவது, நின்ற - (மொழிக்கு ஈறாக) நின்ற, உயிர் முன்-உயிர்களின் முன், க ச த ப-(வருமொழிமுதலில் வருகின்ற) க ச த பக்கள், மன்-பெரும்பாலும், மிகும்-இரட்டிக்கும், விதவாதன-(பின்) சிறப்புவிதியிற் சொல்லாதவைகள்; (எ-று.)

இயல்புஉயிரீறாவது-விகாரப்படாமல் இயற்கையாக நின்ற உயிர் சொல்லுக்கு இறுதியாக நிற்பது; (உ - ம்.) விள, பலா, மலை முதலியன.

விதிஉயிரீறாவது-மொழிக்கு இறுதியில் இயற்கையாக நின்ற உயிராவது மெய்யாவது ஒருவிதிபற்றி நீங்கி மற்றோர் உயிர் ஈறாக நிற்பது; (உ-ம்) ஒன்று-ஒற்றை, மரம்-மர முதலியன. விதியெனினும், ஆக்கப்பாடெனினும் ஒக்கும்.

விதவாதன - விதந்துசொல்லப்படாதன. விதத்தலாவது - இன்னது இன்னவிடத்து இன்னவாறு ஆமென எடுத்துவிதித்தல். அதனை, வருஞ்சூத்திரங்களிற் காண்க.

| அல்வழி. | வேற்றுமை. |
|---|---|
| (உ - ம்.) ஆட(ச்) சென்றான் | வாழை (ப்)பழம்—இயல்புஉயிரீறு. |
| நேற்றை (ப்) பொழுது | மர (க்) கிளை—விதிஉயிரீறு. |

(க) 'பின் சிறப்புவிதியிற்சொல்லாதவை பெரும்பாலும்மிகும்' எனவே அவை சிறுபான்மை மிகா என்றும்; (உ) பின் சிறப்புவிதியிற் சொல்லாதவை பெரும்பாலும் மிகும்' எனவே, சிறப்புவிதியில் மிகாவென்றுசொன்னவை சிறுபான்மை மிகும் என்றும் கூறினாராயிற்று. அவை வருமாறு.—

(க) ஏரிகரை, மலைகிழவோன்-வேற்றுமை } பின் சிறப்புவிதியிலல்லாதவை
கூப்புகரம், நாட்டுபுகழ் - அல்வழி. } இருவழியிலும் மிகாவாயின.

(உ) நொ (க்) கொற்றா } "ஏவல்முன் வல்லினமியல்பொடுவிகற்பே" எனச்
து (க்) கொற்றா } சொன்ன சிறப்புவிதி பெறாமல் மிக்கே வந்தன.

இச்சூத்திரத்து 'க ச த ப' என்றதை, மேல்வருஞ் சிறப்புவிதிச் சூத்திரங்களில் வேண்டுமிடத்தெல்லாம் கூட்டிக்கொள்க. (கஙு)

### சிறப்பு விதி.

[உயிரீற்று மரப்பெயர்க்குச் சிறப்புவிதி.]

‡ கரு௬. மரப்பெயர் முன்ன ரினமெல் லெழுத்து
வரப்*பெறு னவுமுள வேற்றுமை வழியே.

---

* பெறுன - பெறுவன எனபன தொகுத்தல். 'பெறுந' என்பது, பழையவுரையின் பாடம். 'ந' பெயரிடைநிலை.

(இ - ள.) வேற்றுமைவழி - வேற்றுமைப்புணர்ச்சியில், மரம் பெயர் முன்னர்-(உயிரீற்றுச் சில) மரப்பெயர்கட்குமுன், இனம் மெல்லெழுத்து வர பெறுனவும் - (முன்சொன்ன பொதுவிதிப்படி வருகிற வல்லெழுத்து மிகாமல்அவற்றிற்கு) இனமாகியமெல்லெழுத்துத்தோன்றப்பெறும் தொடர்களும், உள - உள்ளனவாம்; (எ - று.)

(உ - ம.) விள + காய = விளங்காய, மா + பழம = மாம்பழம்.

'இனமெல்லெழுத்தும்' என உம்மை கொடுத்துச் சொல்லாமையால், இவ்வுதாரணங்கள் பொதுவிதியைப் பெறா வென அறிக.

'பெறுனவும்' என்ற உம்மையால, மெல்லெழுத்துப்பெறாமல் பொது விதியால் வல்லெழுத்து மிகப்பெறுவன பெரும்பாலன வெனக் கொள்க.

(உ - ம.) பலாக்காய, ஆத்திப்பூ, வாழைப்பழம, இலந்தைக்கனி முதலியன.

யாங்கோடு, யாக்கோடு, காயாங்கோடு, காயாக்கோடு, என மெல்லெழுத்துப்பெற்று விகற்பித்துவருதலை உரையாற் கொள்க; 'பெறுனவும்' என்ற உம்மையினுலேயே இவ்விகற்பமுங் கொள்ளுதலும் ஒன்று. (கசு)

## அகரவீற்றுச் சிறப்புவிதி.

[சில அகரவீற்றின் முன் வல்லினம இயல்பாதல்.]

கசுஎ. செய்பிய வென்னும வினையெச்சம் பல்வகைப்
பெயரி னெச்சமுற் றாறா னுருபே
அஃறிணைப பன்மை யமமமுன் னியல்பே.

(இ - ள.) செய்பிய என்னும் வினையெச்சம - செய்பிய என்னும வாய்பாட்டு எதிர்காலவினையெச்சத்துக்கும, பல வகை பெயரெச்சம - பல வகைப்பட்ட (அகரவீற்றுப்) பெயரெச்சங்களுக்கும், முற்று - (பலவகைப் பட்ட அகரவீற்று) வினைமுற்றுக்களுக்கும், ஆறன உருபு-ஆறுமவேற்றுமை அகரவுருபுக்கும, அஃறிணைபபன்மை-(அகரவீற்றுப) பலவின்பாற பெயர் களுக்கும, அம்ம-அம்ம என்னும உரையசை யிடைச்சொல்லுக்கும, முன்-முன்னே, இயல்பே - (வருகிற க ச த ப க்கள்) இயல்பேயாம; (எ - று.)

'பல்வகை' எனபதை 'முற்று' என்பதனோடுங் கூட்டுக.

முதலிலும இறுதியிலும் 'செய்பிய,' 'அம்ம' என்ற அகரவீற்றுச்சொற்களை வைத்ததனுல், இடையிலுள்ளபெயரெச்சம் முதலியனவும் அகரவீறென்பதும்; 'பல்வகை' என்றதனுல், வினையடி நான்கிலும பிறந்த உடன்பாடும எதிர்மறையுமாகிய எல்லாப்பெயரெச்சங்களும அவ்வாறு பிறந்த எல்லா வினைமுற்றுக்களுமை என்பதும்; முன்னே 'முற்று' என்றதில் பலவின்பால் வினைமுற்று அடங்கியதனுல், பின்னே 'அஃறிணைப் பன்மை' என்றது பலவின்பாற்பெயர் என்பதும பெறப்பட்டன, (வினையடி நான்காவன:—இயற்கையான வினையடி ஒன்றும, மற்றைப் பெயர் இடை உரி அடியாகப் பிறந்த செயற்கைவினையடி மூன்றுமாம.)

(உதாரணம்.)

உணணியதந்தான, செய்யியபோனுன—செய்யியவென்வினையெசசம அல்.
உணடகுதிரை, பெரிய பொருள —பல்வகைப பெயரிசெசசம். அல்.
உணடன குதிரைகள, வாழிய கொற்று, என்ப சிலா—பல்வகை முற்று. அல்.
தன கைகள தன தாளகள —ஆறனுருபு வேற்றுமை.
பல குதிரைகள, சில செய்தான் —இருவழியிலும அஃறிணைப்பன்மை.
அமம கொறறு. அமம தேவா —அமமஎன்னும இடைச சொல் அல்.

(உணணிய - உணணுதற்கு. செய்யிய - செய்தற்கு, வாழிய - வாழ்க)

உயிரையிற்கோடலால், அமமாகொறறு என அமம என்னுமஉரையசை யிடைச்சொல நீணடு வரினும வலி இயலபாதல் கொளக. (௧எ)

['வாழிய' என்பதற்குச் சிறப்புவிதி ]

௧௬௮. வாழிய வெனபத னீற்றி னுயிர்மெய்
ஏகலு முரித்தஃ தேகினு மியல்பே.

(இ - ள்.) (௧) வாழிய எனபதன - வாழிய எனனும வியஙகோள்வினை முற்றினுடைய. ஈற்றின - இறுதியிலுள்ள, உயிர மெய - யகரஉயிர்மெய, ஏகலும - நீஙகலும, உரிதது உரியதாம; (உ) அஃது ஏகினும - அவ்வுயிர் மெய நீஙகி (இகர ஈறாய) நின்றாலும, இயல்பே - (அதன் முன்வருகிற வல லினம பொதுவிதியால மிகாமல் சிறப்புவிதியிற கூறியபடி) இயல்பேயாம, (எ - று.)—பொதுவிதி - " இயலபினும விதியினும்" என்ற சூத்திரம. சிறப்பு விதி - "செய்யிய வென்னும வினையெசசம" என்ற சூததிரம.

(உ - ம.) (௧) ஆ வாழிய - ஆ வாழி—ஈற்று உயிர மெய் நீஙகிற்று.

(உ) வாழிய + கொற்று—வாழிகொறறு } ஈறறு உயிர்மெய் நீஙக வலி
+ சாதகா —வாழிசாததா } இயல்பாயிறறு.

இசசூததிரதது வுபலக்ஷணததால், போறறிய என்பது போற்றி'என நிற்றல் முதலியனவும் கொளக; [உபலக்ஷணமாவது - ஒருசொல்ஒழிந்த தன் இனததையும குறிபபது; பொதுவியல் எ- ஆஞ் சூததிரங காணக] (௧அ)

['சாவ' என்பதற்குச் சிறப்புவிதி.]

௧௬௯. சாவவென மொழியீற றுயிர் மெய் சாதலும்விதி. ·

(இ - ள் ) சாவ என் மொழி - சாவ என்னுஞ செயவென்வாய்பாட்டு வினையெசசததினுடைய. ஈறு - இறுதியிலுள்ள, உயிர மெய் வகர உயிர்மெய, சாதலும் - (வருமொழியோடு புணாகையில்) கெடுதலு ம, விதி விதியாம.

(உ - ம்.) சாவகுததினுன்—சாககுததினுன்.

*இசசூததுரதது உபலக்ஷணததால,'நனறாயப்படிததான்' முதலிய இட ஙகளில்.'ஆக' என்னும செயவெனெசசம் ஈறறு உயிர்மெய கெட்டு 'ஆ' என நிற்றல் போல்வனவும் கொள்க.

இப்புணர்ச்சி சாவகருததினுன என்னும புணர்ச்சி போலச சிறந்ததல் லாமையால், 'சாதலும்விதி' என இழிவுசிறப்பும்மை கொடுததுக கூறினர்.

['பல', 'சில' என்பவற்றிற்குச் சிறப்புவிதி.]

[ கஎ0. பலசில வெனுமிவை தம்முன் தாமவரின்
இயலபும மிகலும அகர மேக
லகரம றகர மாகலும் பிறவரின்
அகரம் விகற்ப மாகலு முளபிற.

(இ - ள்.) பல சில எனும இவை - பல சில என்னும இவ் விரு சொல் லும, தமமுன் தாம வரின் - தமககு முனனே தாமே வருமாயின் [பலஎன்ப தறகு முன் பல என்பதும சில என்பதறகு முன் சில என்பதும் வந்தால்], (க) இயல்பும - (வருமொழிமுதல் மெய்) இயல்பாதலும், (உ) மிகலும் மிகுத லும, (ங) அகரம ஏக லகரம றகரம ஆகலும-(நிலைமொழியிறுதியில் நின்ற அகரம் கெட லகரமெய் றகரமெய்யாகத திரிதலும;—(ச) பிற வரின் - (இவ் விரணடுசொறகளின் முன்) வேறு சொறகளி லொன்று வந்தால், அகரம்- (நிலைமொழியிறுதியில் நின்ற) அகரம, விகறபம ஆகலும - (நிற்பதும் நீஙகுவ துமாகி)விகறபிததலும்,—உள - உளளனவாம; (எ - று.)

(உ-ம.) (க) பலபல சிலசில—இயல்பாயின.

(உ) பலப்பல சிலசசில - மிககன.

(ங) பற்பல, சிறசில,—அகரமகெட லகரம றகரமாயிற்று.

| | |
|---|---|
| (ச) பலகலை, பல்கலை, சிலவளை, சில்வளை பலநாள், சின்னுள், பலவாயம, பல்லாயம | பிறவர அகரம நின்றும் நீஙகியும விகற்பிததது. |

'பிற' என்றமிகையால் - டல்பல, சில்சில எனத தம்முன்தாமவர அக ரமகெட்டு லகரம றகரமாகாமல சிறுபான்மை வருதலும; பற்பகல், சிற்கலை எனப்பிறவர அகரம கெட்டு லகரம றகரமாகத திரிதலும, இன்னும் இங குககூறிய அகரவீறறுப் புணர்ச்சியுள அடஙகாது வருவன உளவாயின் அவை யும் கொளக. (உ0)

## ஆகாரவீற்றுச் சிறப்புவிதி.

[ஆகாரத்தின்முன் வல்லினம்]

‡ கஎக. அல்வழி யாமா மியாமுற்று முன்மிகா

(இ - ள.) அலவழி - அல்வழிபபுணர்ச்சியில்,—(க)ஆ - ஆ என்னும்பெ யாகரும, மா - மா என்னும பெயாகரும, (உ) மியா - மியா என்னும முன் னிலையசை இடைசசொல்லுககும, (ங) முறறு - (ஆகாரவீற்று எதிரமறைப் பலவின்பால்) வினைமுறறுககும, முன் - முனனே, மிகா - (வருகிற வல்லி னம்) இயல்பாகும; (எ - று.)

'முறறு' எனபபொதுவாகககூறினும, ஆகாரவீறறுச சிறப்புவிதி கூற லிடமாதலால், ஆகாரவீற்றுமுற்றெனபது அதிகாரததால் விளஙகியது.

(உ-ம்.) (க) ஆ குறிது. மா சிறிது — ஆ மா, முன் வலி இயல்பாயிற்று.
உ, சேணமியா, தேவா—மியா முன் வலி இயல்பாயிற்று.
(ங) உணஞ பன்றிகள—முற்று முன் வலி இயல்பாயிற்று.

இரட்டுறமொழிதலால், காட்டுப்பசு என்னும் பொருளைத் தருகிற ஆமா என்பதன் முன்னும் ஆமா குறிது, ஆமா சிறிது, என வலி இயல்பாம் என்க.

'முற்று முன் மிகா' எனவே, அநுத்தாபத்தியால் - அவ்வினையாலணையும் பெயரின் முன்னும் அவ்வினை முற்று வினையெச்சமானவற்றின் முன்னும் மிகாமையும் கொள்க; [அநுத்தாபத்தியாவது - ஒருபொருளைக் கூறியமாத்திரத்தில் அதன் குறிப்பைக் கொண்டு கூறப்படாத மற்றொரு பொருளையும் அறிவது.]

(உ - ம்) உணஞ கிடந்தன, சென்றன, தந்தன, போயின.

இங்கே, உண்ஞ என்றது - வினையாலணையும்பெயராயின், உணஞ்தனவாகிய பிராணிகள் கிடந்தன எனவும்; வினைமுற்று வினையெச்சமாயின், உணஞ்தனவாய்க் கிடந்தன எனவும் பொருள்படும்.

இவ்வாய்பாட்டுச்சொல் - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சமாயின் உணஞக்குதிரை என்றும், ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சமாயின் உண்ஞக்கிடந்தன என்றும் உடன்பாட்டு இறந்தகால வினையெச்சமாயின் உண்ஞக்கிடந்தன என்றும் பொதுவிதியால் வலிமிக்கு வரு மென்று அறிக. இவற்றிற்கு - முறையே உணஞாத, உணஞாமல், உணஞ என்று பொருள். உணஞ்து என்ற ஒன்றன்பால்முற்று உணஞ எனத் தொகுத்தல்விகாரப்பட்டு வரும்பொழுது அதன்முன் வலி இயல்பாமென உணர்க. (உக)

[குறிலணைந்த ஆகாரத்துக்குச் சிறப்புவிதி.]

கஎஉ. குறியதன் கீழாக் குறுகலு மதனோடு
உகர மேற்றலு மியல்புமாந் தூக்கின்.

(இ - ள்.) குறியதன் கீழ் ஆ - குற்றெழுத்தின் கீழ் நின்ற ஆகாரம்,—(க) குறுகலும் - (அகரமாகக்) குறுகுதலும்,—(உ) அதனோடு - அவ்வாறு குறுகுதலுடனே, உகரம் ஏற்றலும் - உகரம் பெறுதலும்,—(ங) இயல்பும் - (அவ்விரண்டுமில்லாமல்) தன் இயல்பில் நிற்றலும்,—(ஆகிய இம்மூன்றுவிதியும்),—தூக்கின் - செய்யுளில், ஆம் - ஆகும்; (எ - று.)—தூக்கு - செய்யுள். கசுரு - ஆஞ் சூத்திரத்திலும் இது வந்தது.

(உ - ம.) (க) "நில விரி கானல்"—குறியதன்கீழ் ஆ, குறுகிற்று.
(உ) "என் செயயுமோ நிலவு"—குறுகி, உகரமேற்றது.
(ங) 'நிலா வணங்கு"—இயல்பாயிற்று.

செய்யுளில் இம்மூன்றும் ஆம் எனவே, வழக்கில் இரண்டும் ஒன்றும் ஆம் என்றாராயிற்று; குறுகி உகரமேறாமல் நிற்றல், வழக்கில் வாராது.

(உ - ம.) நிலவு, நிலா; கனவு, கனா—குறுகிஉகரமேற்றலும், இயல்பும்.
தரா, மிடா, கடா—இயல்புமாத்திரம். (இவை விகாரப்படா.)

## இகரவீற்றுச் சிறப்புவிதி.

['அன்றி', 'இன்றி' என்பன]

‡ கஎங. அன்றி யின்றியென் வினையெஞ் சிகரம்
தொடர்பினு ளுகர மாயவரி னியல்பே.

(இ - ள்) அன்றி இன்றி என் வினை எஞ்சு இகரம் - 'அன்றி' 'இன்றி' என்னும் எதிர்மறைக்குறிப்புவினையெச்சங்களின் ஈற்றிலுள்ள இகரம், தொடர்பினுள் - செய்யுளில், உகரம் ஆய வரின் உகரமாய்த்திரிந்து வந்தால்,— இயல்பு-(வருகிற கசதபக்கள்) இயல்பாகும், (எ - று.)—தொடர்பு செய்யுள்.

(உ - ம்.) "நாளன்று போகி"—அன்றி + போகி.

"உப்பின்று புற்கை யுண்க"—இன்றி—புற்கை.

உகரமாகத்திரியாவிடின், நாளன்றிப்போகி, உப்பின்றிப்புற்கை எனப் பொதுவிதிப்படி வல்லெழுத்து மிகுமெனக் கொள்க. (உங)

['நாழி' 'உரி' என்பவற்றிற்குச் சிறப்புவிதி.]

கஎச. உரிவரி னாழியி னீற்றுயிர் மெய்கெட
மருவும் டகர முரியின் வழியே
யகர வுயிர்மெய யேற்பன வரினே.

(இ - ள்) (க) உரி வரின் - உரி என்னும் முகத்தலளவுப்பெயர் (வருமொழியாக) வந்தால், நாழியின் - (நிலைமொழியாக நின்ற) நாழி என்னும் முகத்தலளவுப்பெயரினது, ஈற்று உயிர்மெய் - ஈற்றிலுள்ள 'ழி' என்னும் உயிர்மெய், கெட - நீங்க, டகரம் - டகரமெய் மருவும் - (அவ்விடத்தில்) வரும்; (உ) உரியின் வழி - (நிலைமொழியாக நின்ற) உரி என்னும் முகத்தலளவுப்பெயரின் பின், யகரஉயிர்மெய் ஆம் - யகரவுயிர்மெய் வரும் ஏற்பன - (அவ்வுயிர்மெய் வருவதற்கு) ஏற்ற மொழிகள், வரின் - (வருமொழியாக) வந்து புணர்ந்தால்; (எ - று.)

(உ - ம்.) (க) நாழி + உரி—நாடுரி— 'ழி' கெட, டகரம் தோன்றிற்று.

(உ) உரி + உப்பு—உரியவுப்பு | + மிளகு உரியமிளகு } உரிவழியகரம்
+ பயறு—உரியபயறு | + வரகு உரியவரகு } தோன்றிற்று.

(உரி இரண்டு கொண்டது, நாழி)

'ஏற்பன வரின்' எனவே, ஏலாதன வரின உரியரிசி, உரியாழாக்கு என இச்சிறப்புவிதிபெறாமற் பொதுவிதிபெறுமெனக் கொள்க. (உச)

['புளி' என்பதற்குச் சிறப்புவிதி.]

கஎரு. சுவைப்புளி முன்னின மென்மையுந் தோன்றும்.

(இ - ள்) சுவை - அறுசுவையுள் ஒன்றை யுணர்த்துகின்ற, புளி முன் - புளி என்னும் பெயரின் முன், (வல்லினம் வந்து புணர்ந்தால்),—இனமமென்மையும் - (அவ்வல்லெழுத்து மிகுதலன்றி அதற்கு) இனமாகிய மெல்லெழுத்தும், தோன்றும் - (ஒரோவிடத்து) மிகும்; (எ - று.)

(உ-ம்) புளி + கறி =புளிங்கறி | + தயிர் =புளிந்தயிர்
+ சோறு =புளிஞ்சோறு | + பாளிதம் =புளிம்பாளிதம்

புளிப்பாகிய கறி எனவும், புளிப்பையுடைய கறி எனவும் விரிக்கப்படுதலால், இவையே வேற்றுமை அல்வழி இரண்டிற்கும் உதாரணமாம்.

'மென்மையும்' என்ற இறந்தது தழுவிய இழிவு சிறப்புமமையால் புளிக்கறியெனப் பொது விதிப்படி வலிமிகுதலே சிறப்பையுடையதாமெனை அறிக.

## இகர ஐகாரவீற்றுச் சிறப்புவிதி.

களசு. அல்வழி இ ஐம முன்னராயின்
இயல்பும மிகலும் விகற்பமு மாகும்.

(இ - ள்.) அல்வழி - அல்வழிப்புணர்ச்சியில்,—இ ஐ முன்னா - (நிலைமொழியீற்று) இகர ஐகாரங்களின் முன், ஆயின-(வல்லினம) வருமாயின,—(க) இயல்பும இயல்பாதலும், (உ) மிகலும-(பொதுவிதிப்படியே) மிகுதலும், (௩) விகற்பமும-விகற்பித்தலும [ஒன்றுக்கே ஒருகால் மிகாமையும ஒருகால் மிகுதலும], ஆகும—; (எ - று)

இவவாறு பொதுப்படக்கூறினாராயினும, இயல்பு மிகுதி விகற்பங்களை இடத்துக்கு ஏற்றபடி கொள்க

ஒப்பின்முடித்தல்என்னும் உத்தியால், ஐகாரவீறும உடன் கூறினார். பொதுப்பெயா உயாதிணைப்பெயாகட்குவிதி முன்னமேஅமைந்திருத்தலால், இச்சூத்திரவிதி அஃறிணைப்பெயாக்கும வினை முதலியவற்றிற்குமாம.

(உ-ம.) (க) புலி + சிறிது =புலிசிறிது
யானை + பெரிது =யானைபெரிது
செடி + கொடி =செடிகொடி
யானை + குதிரை =யானைகுதிரை
இடி + சுவா =இடிசுவா
உரை + கல் =உரைகல்
} இ ஐ முன் அல்வழியில வலி இயல்பாயின.

(உ) மாாகழி + திங்கள் =மாாகழித்திங்கள்
ஆடி + கொண்டான் =ஆடிக்கொண்டான்
பனை + கை =பனைக்கை
} வலி மிக்கன.

(௩) கிளி + குறிது =கிளிகுறிது, கிளிக்குறிது
கடி + கமலம் =கடிகமலம், கடிக்கமலம
தினை + சிறிது =தினைசிறிது, தினைச்சிறிது
} விகற்பித்தன. (உசு)

## ஈகாரவீற்றுச் சிறப்புவிதி.

[ஆப்பீமுன் நாற்கணம.]

எஎக. ஆமுன பகரவீ யனைத்துமவரக் குறுகும
மேலன வலவழி யியல்பா கும்மே.

(இ-ள்.) ஆ முன பகரஈ-'ஆ' எனனும் பெயரின்முன் நின்ற பகாஈகாரம [ஆப்பீ], அனைத்துமவர-(இருவழியிலும்) நாற்கணமுமவந்தால், குறுகும-

குறுகி இகரமாகும்; அலவழி - அலவழியில, மேலன-மேல் "அல்வழி இஐ" என்னுஞ் சூததிரததிற் கூறியவிதி மூன்றில், இயலபு ஆகும.(குறுகிய அதன் முன் வருகிற வல்லினம) இயலபைப பெறும; (எ - று.)

(உ-ம்.) ஆபபி + அரிது = ஆபபியரிது | ஆபபி + நன்று = ஆப்பிநன்று
+ குளிருப = ஆபபிகுளிரும | + வலிது = ஆப்பிவலிது

'அல்வழி இயலபாகும்' எனவே, வேறறுமையில ஆப்பிக்குளிர்சசி, ஆப் பித்திரட்சி எனப பொதுவிதிப்படியே வலி மிகு மெனக கொளக.

இதில "பகரவீ" என்றதும வரும சூததிரததில "பவவீ" எனபதும - இடககரடக்கல். பகரஈ, பவ்வீ-பகரமெய்யினமேல் ஏறிய ஈகாரம். (ஆப்பி - பசுசசாணம.) (உஎ)

[சில ஈகாரவீற்றின்முன் வலி]

களஅ. பவவீ நீமீ முன்ன ரலவழி
இயலபாம் வலிமெலி மிகலுமாம் மீககே.

(இ - ள்.) (க) ப ஈ-(இடககரப்பெயராகிய) பகரஈகாரததுக்கும, நீ-(நீக ருதலென்னும பொருள்கொணட) 'நீ' என்ற முதனிலைதொழிற்பெயரக கும், மீ - (மேலாகிய பணபையும் மேலிடததையும உணாததும) 'மீ' என்ற சொல்லுககும், முனனா-முனனே, அலவழி-அலவழிப்புணாசசியில், இயலபு ஆம-(வருகிற வல்லினம) இயலபாகும; (உ) மீககு-(இவற்றுளளே) 'மீ' என் னுஞ் சொலலுககு, வலி மெலி மிகலும ஆம - வலலெழுதது மிகுதலும மெல லெழுதது மிகுதலும ஆகும; (எ-று.)

(உ-ம்.) (க) பீ + குறிது = பீகுறிது, சிறிது, தீது, பெரிது }
நீ + கடிது = நீகடிது, சீரிது, தீது, பாறறு } இயல்பா
மீ + கண = மீகண, செவி, தலை, புறம } யின.

(உ) மீ + கூற்று = மீக்கூறறு — வலிமிககது
மீ + தோல = மீந்தோல — மெலிமிககது (உஅ)

உகரவீற்றுச் சிறப்புவிதி.

[சில முற்றியலுகரத்தின்முன் வலி.]

‡ களகூ. மூன்றா றுருபெண் வினைத்தொகை சுட்டீறு
ஆகு முகர முன்ன ரியல்பாம்.

(இ - ள்.) மூனறு (உருபு)-('ஒடு' எனனும) மூனறுமவேற்றுமையுருபுக் கும், ஆறு உருபு - ('அது' எனனும) ஆறும வேறறுமை யுருபுககும, எண - (இயல்பாயும விகாரபபட்டும வரும) எணணுபபெயாகட்கும, வினைதொ கை - வினைதொகைககும, சுட்டு-சுடடுபபெயாகட்கும, ஈறு ஆகும-இறுதி யாகிய, உகரம் முன்னா - முற்றியலுகரததின் முன்னே, இயலபு ஆம - (வருகிற வல்லினம) இயலபாகும; (எ - று.)

(உ-ம்.) அவனொடு + கொணடான் = அவனொடுகொணடான் — மூன்றனுருபு.
பொன்னனது + செவி = பொன்னனதுசெவி — ஆறனுருபு.

{ எழு + தலை=எழுதலை—இயல்பு எண்ணுப்பெயர்;
{ ஒரு, இரு, அறு, எழு + புறம்=ஒருபுறம்—விகார எண்ணுப்பெயர்.

விடு + கணை=விடுகணை, விரவு + படை=விரவுபடை வினைத்தொகை.

{ அது + கண்டான்=அதுகண்டான்—வேற்றுமை } சுட்டுப்பெயர்.
{ இது, உது + குறிது=இதுகுறிது—அல்வழி. }

'சுட்டீறாகும்' என்றதன் உபலக்ஷணத்தால், எதுகண்டான், எதுபெரிது என வினாவீறாகும் முற்றியலுகரத்தின் முன்னும் வலி இயல்பாதல் கொள்க.

உது + காண்=உதுகாண், உதுக்காண் என இரண்டாம் வேற்றுமைத் தொகையில் விகற்பித்துவருவது, "இயல்பின் விகாரமும்" என்னுஞ்சூத்திரத்து 'அன்னபிறவும்' என்பதனால் அமையும்.

(இச்சூத்திரத்தில் 'உகரம்' எனப் பொதுப்படக் கூறியிருக்கவும், முற்றியலுகரமென்றே சிறப்பாகக்கொண்டது, இச்சூத்திரத்தைமேல் "வன்றொடரல்லன" என்பது முதலாக வரும் குற்றியலுகரச் சிறப்புவிதிச் சூத்திரங்களைச் சாரவைக்காமல் "அதுமுன்வரு மன்று" என்னும் முற்றியலுகரவிதிச் சூத்திரத்தின்முன் வைத்ததனாலென்று அறிக. அன்றியும், குற்றியலுகர வீறாகிய 'ஓடு' என்னும் மூன்றனுருபும், 'ஆது' என்னும் ஆறனுருபும், ஒன்று முதலிய எண்ணுப்பெயர்களும், வன்றொடரொழிந்த வினைத்தொகைகளும், 'அஃது' முதலிய சுட்டுப்பெயர்களும் என்பவற்றிற்கு விதி, மேல் "வன்றொடரல்லன", "இடைத்தொட ராய்தத்தொடர்" என்னும் இரண்டு சூத்திரங்களிலும் அடங்குமாறு காண்க. இதுபற்றியே, வன்றொடர்வினைத் தொகைமுன் வலியியல்பாதலை மாத்திரம் கீழ் "விதவாதனமன்" என்றதில் அடக்கியதும்.) (உக)

['அது' என்பதற்குச் சிறப்புவிதி.]

க௭0. அதுமுன் வருமன் றான்றுந் தூக்கின.

(இ - ள்.) அது முன் - 'அது' என்னுஞ் சுட்டுப்பெயரின் முன், வரும் - (வருமொழியாக) வருகிற, அன்று - 'அன்று' என்னும் எதிர்மறைக் குறிப்பு வினைமுற்று,—தூக்கின் - செய்யுளில்,—ஆன்று ஆம் - 'ஆன்று' என முதல் நீளும்; (எ - று.)

(உ - ம்.) அது + அன்று=அதான்று.

'ஆன்றேயாம்' என்னுமையால அதன்று, அதுவன்று எனநீளாமலும் வரும்.

[குற்றியலுகரத்தின்முன் வலி: அல்வழி]

‡ க௭க வன்றொட ரல்லன முன் மிகா வல்வழி.

(இ - ள்.) வன்றொடர் அல்லன முன் - வன்றொடரொழிந்த ஐந்து தொடர்க் குற்றியலுகரத்தின் முன்னும், (வருகிற வல்லினம்),—அல்வழி - அல்வழிப் புணர்ச்சியில், மிகா - இயல்பாம்; (எ - று.)

(உ - ம்.) ஆறு + தலை=ஆறுதலை —நெடிற்றொடர்.
எஃகு + பெரிது=எஃகுபெரிது—ஆய்தத்தொடர்.

வரகு + சிறிது = வரகுசிறிது — உயிர்த்தொடர்
வந்து + தந்தான் = வந்துதந்தான் — மென்றொடர்.
எய்து + பொருள் = எய்துபொருள் — இடைத்தொடர்.

'வன்றொடரல்லன முன்மிகா' என்றதனால் வன்றொடரின்முன் 'எழுத்துச் சிறிது', 'படித்துத் தந்தான்' என அல்வழியில் வலி மிகுமென்க.

ஏழாம்வேற்றுமை யிடப்பொருளுணர நின்ற அங்கு, இங்கு, உங்கு, எங்கு, ஆங்கு, ஈங்கு, ஊங்கு, யாங்கு, ஆண்டு, ஈண்டு, யாண்டு என்னும் மென்றொடர்க்குற்றியலுகரவீற்று இடைச்சொற்களின் முன் வரும் வல்லினம் மிகும்.

(உ - ம்) அங்குக்கண்டான், இங்குச்சென்றான், உங்குத்தந்தான், எங்குப்பெற்றான், ஆங்குக்கற்றான், ஈங்குச்சோர்ந்தான், ஊங்குப்பார்த்தான், யாங்குக்கண்டான், ஆண்டுச்சென்றான், ஈண்டுத்தந்தான், யாண்டுப்போயினான் என வரும்.

ஏழாம்வேற்றுமைக் காலப்பொருளுணர நின்ற அன்று, இன்று, என்று பண்டு, முந்து என்னும் மென்றொடர்க் குற்றியலுகர வீற்று இடைச்சொற்களின்முன் வரும் வல்லினம் - அன்று கண்டான், இன்றுசொன்னான், என்று தந்தான், பண்டுபோயினான், முந்துபெற்றான் என இயல்பாயே முடியும்.

இவையெல்லாம் சொல்லால் அல்வழியும் பொருளால்வேற்றுமையுமாதலால், சில அல்வழிவிதியையும் சில வேற்றுமைவிதியையும் ஏற்றன. (௩௧)

[குற்றியலுகரத்தின்முன் வலி: வேற்றுமை.]

கஅ௨. இடைத்தொட ராய்தத் தொடரொற் றிடையின்
மிகாநெடி லுயிர்த்தொடர் முன்மிகா வேற்றுமை.

(இ - ள்) இடைத்தொடர் - இடைத்தொடரும், ஆய்தத்தொடர் - ஆய்தத்தொடரும், ஒற்று இடையில் மிகா நெடில் உயிர் தொடர் - ஒற்றுஇடையேமிகாத நெடிற்றொடரும் ஒற்றுஇடையேமிகாத உயிர்த்தொடரும், முன் - ஆகிய இவற்றின் முன், வேற்றுமை மிகா-(வருகிற வல்லினம்) வேற்றுமைப் புணர்ச்சியில் இயல்பாம்; (எ - று.)

(உ - ம்.) மார்பு + கடுமை = மார்புகடுமை — இடைத்தொடர்.
எஃகு + சிறுமை = எஃகுசிறுமை — ஆய்தத்தொடர்.
நாகு + தீமை = நாகுதீமை — மிகாநெடிற்றொடர்.
வரகு + கதிர் = வரகுகதிர் — மிகாவுயிர்த்தொடர்.

'ஒற்றிடையினமிகா' என்றதை, உயிர்த்தொடரோடும் கூட்டுக. 'ஒற்றிடையின் மிகா நெடி லுயிர்த்தொடர்' என்றது, வருஞ்சூத்திரத்தாற் கூறப்படும் டகர றகர வீறுகளொழிந்த மற்றைய ஈறுகளை.

'ஒற்றிடையின் மிகா நெடிலுயிர்த்தொடர்முன் மிகாவேற்றுமை' என்றதனால், வீடு—வீட்டு, வயிறு—வயிற்று என ஒற்று இடையில் மிகும் நெடிற்

றொடர் உயிர்த்தொடர்க் குற்றியலுகரங்கட்குமுன் வரும் வல்லினம் - வீட்டுச்சுவர், வயிற்றுக்கடுப்பு என வேற்றுமையிலும், மூட்டுப்பூச்சி, வெளிற்றுப்பனை என அல்வழியிலும் மிக்குவருமென்று அறிக.

இங்குக் கூறப்படாத மென்றொடரின் முன்னும், வன்றொடரின் முன்னும் வண்டுக்கால், கொக்குச்சிறகு என வேற்றுமையில் வலிமிகு மென்க.

எனவே, ஆறுவகைக் குற்றியலுகரங்களுள் இடைத்தொடர், ஆய்தத்தொடர் (ஒற்றிடைமிகாத) நெடிற்றொடர், (ஒற்றிடைமிகாத) உயிர்த்தொடர் இவற்றுக்குமுன் வேற்றுமை அல்வழி இரண்டிலும் வலிமிகா வென்றும்; (ஒற்றிடைமிகும்) நெடிற்றொடர் (ஒற்றிடைமிகும்) உயிர்த்தொடர், வன்றொடர் இவற்றுக்குமுன் இருவழியிலும் வலிமிகுமென்றும், மென்றொடர்முன் அல்வழியில் மிகா, வேற்றுமையில் மிகுமென்றுங் கூறியதாயிற்று. (௩௨)

[டகர றகர ஈற்றுச் சில குற்றியலுகரங்கட்குச் சிறப்புவிதி.]

ஒற்றுஇடையே மிகும் நெடிற்றொடர் உயிர்த்தொடர்.

‡ கஅ௫. நெடிலோ டுயிர்த்தொடர்க் குற்றுக ரங்களுள்
டறவொற் றிரட்டும் வேற்றுமை மிகவே

(இ - ள்.) நெடிலோடு உயிர்த் தொடர் - நெடிற்றொடர்களும் உயிர்த்தொடர்களுமாகிய, குற்றுகரங்களுள் - குற்றியலுகரமொழிகளுள், டறவொற்று - (அவ்வுகரம் ஏறிநின்ற) டகர றகர மெய்கள், வேற்றுமை - வேற்றுமைப் புணர்ச்சியில், மிக - பெரும்பாலும், இரட்டும்—; (எ - று.)

வருமெழுத்தைச் சொல்லாமையால் நாற்கணமுங் கொள்க.

நெடிற்றொடர் (உ - ம்) உயிர்த்தொடர்;

ஆடு + கால் = ஆட்டுக்கால். | முரடு + மனிதன் = முரட்டுமனிதன்
சோறு + வளம் = சோற்றுவளம். | வயிறு + இடை = வயிற்றிடை.

(க) 'பெரும்பாலும் வேற்றுமையில் இரட்டும்' எனவே, ட ற ஒற்றுச் சிறுபான்மை வேற்றுமையில் இரட்டாமையும்; (உ) 'வேற்றுமையில் பெரும்பாலும் இரட்டும்' எனவே, ட ற ஒற்றுச் சிறுபான்மை அல்வழியில் இரட்டுதலும்; (௩) 'டற ஒற்றுப் பெரும்பாலும் வேற்றுமையில் இரட்டும்' எனவே பிறவொற்றுக்கள் சிறுபான்மை இருவழியிலும் இரட்டுதலுங் கொள்க.

(உதாரணம்)

(க) காடு + சென்றான் = காடுசென்றான் } வேற்றுமையில் ட ற ஒற்றுக்கள் இரட்டாவாயின.
கிணறு + மூழ்கினான் = கிணறுமூழ்கினான்

(உ) காடு + அரண் = காட்டரண் } அல்வழியில் டற ஒற்றுக்கள் இரட்டின.
களிறு + யானை = களிற்றியானை

(௩) வெருகு + கண் = வெருக்குக்கண் — வேற்றுமை } இருவழியிலும் பிறவொற்றுக்கள் இரட்டின.
,, எருது + மாடு = எருத்துமாடு — அல்வழி

இனி, 'மிக' என்பதற்கு - வருமொழிமுதலில் வரும் வல்லெழுத்து மிக எனப் பொருள் கொள்ளுதலும் ஒன்று. (௩௩)

[மென்றொடரின்முன் நாற்கணம்: இருவழி.]

‡ கஅச. மென்றொடர் மொழியுட் சிலவேற் றுமையில்
தம்மின வன்றொட ராகா மன்னே

(இ - ள்.) (க) மென்றொடர் மொழியுள் - மென்றொடர்க்குற்றியலுகரமொழிகளுள், சில - சிலசில மொழிகள் —வேற்றுமையில்—, தம் இனம் - தமக்கு இனமாகிய, வன்றொடர் - வன்றொடர்க் குற்றியலுகர மொழிகளாகத் திரியும் (உ) மன் பல, ஆகா - அவ்வாறு வன்றொடர்க்குற்றியலுகரமாகத் திரியா.

வருமெழுத்தைச் சொல்லாமையால், நாற்கணமும் கொள்க.

(உ - ம்.) (க) மருந்து பை = மருத்துப்பை
குரங்கு மனம் = குரக்குமனம்
இரும்பு வலிமை = இருப்புவலிமை
கன்று ஆ = கற்று
} வேற்றுமையில்வன்றொடராயின

(உ) வண்டு கால் = வண்டுக்கால்
பந்து நலம் = பந்துநலம்
வெண்டு வளை = வெண்டுவளை
சங்கு இனம் = சங்கினம்
} வேற்றுமையில் வன்றொடராகாதன.

'சில வன்றொடராம்' எனவே ஆகாதன பலவென்பது தானே வந்து இயையவும், 'ஆகா மன்' என்றமிகையால், (க) அல்வழியிலும் சிறுபான்மை வன்றொடராதலும், (உ) இருவழியிலும் விகற்பித்து வருதலும் கொள்க.

(உ - ம்.) (க) நஞ்சு பகைமை = நச்சுப்பகைமை
இரும்பு மனம் = இருப்பு மனம்
} அல்வழியில வன்றொடராயின.

(உ) குரங்கு குட்டி = குரங்குக்குட்டி
= குரக்குக்குட்டி
பாம்பு தோல் = பாம்புத்தோல்
= பாப்புத்தோல்
} வேற்றுமையில விகற்பித்தன.

அன்பு தளை = அன்புத்தளை
= அற்புத்தளை
} அல்வழியில் விகற்பித்தன

(இனி, இச்சூத்திரத்திற்கு மென்றொடர்க் குற்றியலுகரங்களுள் சில வேற்றுமையில் பெரும்பாலும் வன்றொடராகாதன என ஒரே வாக்கியமாகவும் உரைக்கலாம் பல வேற்றுமையில வன்றொடரா மென்றும் சில அல்வழியிலும் வன்றொடரா மென்றும் கருத்து அமையும்.) (உச)

[சில குற்றியலுகரத்துக்குச் சிறப்புவிதி]

‡ கஅரு. ஐயீற் றுடைக்குற் றுகரமு முளவே.

(இ - ள்.) ஐ - ஐகாரச்சாரியை, ஈறு உடை - இறுதியிற் பெற்றுவருகிற, குற்றுகரமும் - குற்றியலுகர மொழிகளும், உள - (சில) உண்டு; (எ-று)

மேற்சூத்திரத்தைச் சாரவைத்ததனால், மென்றொடரெனபது பெறப்படும். வருமெழுத்தைச் சொல்லாமையால், நாற்கணமும் கொள்க.

(உ - ம்.) பண்டு + காலம் = பண்டைக்காலம்
இன்று + நாள் = இற்றைநாள்.
} அல்வழி.

முந்து + வளம் — முந்தைவளம்
அன்று + அழகு — அற்றையழகு } வேற்றுமை.

மேல்சூத்திரத்தைச் சாரவைத்தாராயினும், 'ஐயீற்றுடைக் குற்றுகரம்' எனப் பொதுப்படச் சொன்னதனால் - நேற்று + பொழுது = நேற்றைப் பொழுது, நேற்று + கூலி = நேற்றைக்கூலி எனவும், பொழுது + செலவு = பொழுதைச்செலவு எனவும் பிறதொடர்களும் ஐகாரச்சாரியை பெறுதலும்; 'ஐயீற்றுடைக் குற்றுகரம்' என உடைமையாக்கிக் கூறியதனால் - வருமொழிப் புணர்ச்சியை நோக்காமலே ஒன்று - ஒற்றை, இரண்டு - இரட்டை, வேடு - வேட்டை, ஏறு - ஏற்றை எனத் தனிமொழியாக நின்று ஐகாரம் பெறுதலும்; ஓராண்டு - ஓராட்டை, ஈராண்டு - ஈராட்டை என அடையடுத்தமொழியாக நின்று ஐகாரம் பெறுதலும் கொள்க. (கூரு)

## [திசைப்பெயர்க்குச் சிறப்புவிதி.]

கசகூ. திசையொடு திசையும் பிறவுஞ் சேரின்
நிலையீற் றுயிர்மெய் கவ்வொற் றுநீங்கலும்
றகரம் னலவாத் திரிதலு மாம்பிற.

(இ - ள்) திசையொடு -(குற்றியலுகரவீறாகிய) திக்கைக்குறிக்கும் பெயரோடு, திசையும் - திக்கைக்குறிக்கும் பெயரும், பிறவும் - வேறு பொருள்களைக் குறிக்கிற பெயர்களும், சேரின் - (வருமொழியாக) வந்துபுணருமிடத்து,—நிலை ஈறு - நிலைமொழியிறுதியில் நின்ற, உயிர்மெய் - 'கு' என்னும் உயிர்மெய்யும், க ஒற்று - (அதன் அயலில் நின்ற) ககர மெய்யும், நீங்கலும் - கெடுதலும்,—றகரம் - (ஈற்றயலில் நின்ற) றகரமெய், ன ல ஆ திரிதலும் - னகரமெய்யாகவும் லகரமெய்யாகவும் திரிதலும்,—ஆம் - ஆகும்; (எ - று.)

திசைப்பெயர் - திக்கைக் குறிக்கும் பெயர்.

ஏற்புழிக்கோடல் என்னும் உத்தியால், நிலையீற்று உயிர்மெய் கவ்வொற்று நீங்குதல் - கிழக்கு குணக்கு குடக்கு வடக்கு என்பவற்றிற்கும், றகரம் னகரமாகத் திரிதல் - தெற்கு என்பதற்கும், றகரம் லகரமாகத் திரிதல் - மேற்கு என்பதற்கும் எனக் கொள்க. (குணக்கு - கிழக்கு குடக்கு-மேற்கு.)

'பிற' என்ற மிகையால், கிழக்கு என்பது ழகரத்தின் அகரம் கெட்டு முதல்நீண்டுவருதல் கொள்க.

(உ - ம்.) வடக்கு + கிழக்கு = வடகிழக்கு
குடக்கு + திசை = குடதிசை
குணக்கு + நாடு = குணநாடு } உயிர்மெய்யும், ககர மெய்யும் கெட்டு வந்தன.

தெற்கு + மேற்கு = தென்மேற்கு
+ யாறு = தென்யாறு } உயிர்மெய் கெட, றகரம் னகரமாயிற்று.

மேற்கு + காற்று = மேல்காற்று
+ ஊர் = மேலூர் } உயிர்மெய் கெட, றகரம் லகரமாயிற்று.

கிழக்கு—காறறு—கீழ்காறறு
—நாடு —கீழ்நாடு } உயிர்மெய்யும் ககரவொற்றும அக ரமும கெட்டு முதல் நீண்டது.

இன்னும் 'பிற' என்றதனுல், கீழைக்குளம, கீழைசசேரி. மேலைககுளம் மேலைசசேரி என ஐகாரம பெறுதலும; வடககூர, வடககுமலை, தெறகூர தெற்குமலை என மேறகாட்டிய விகார மின்றியும் வருதலும; திசையோடு திசை புணரும்போது தெறகுவடககு, வடககுதெறகு, கிழககுமேறகு, மேற் குககிழககு எனப் பொதுவிதி பெறுதலும கொளக. வடதிசைக காற்றுக்கு வழஙகுகிற வாடை யென்ற பெயரில் வடககு என்ற பகுதி முதல் நீணடதும இஙகேயே அமைககப்படும 'கவ்வொறறு நீஙகலும்' என்றதன குறிப்பால், வருமொழி முதல்வலி மிகாமை பெறப்படும. (௩௪)

['தேங்கு' என்பதற்குச் சிறப்புவிதி.]

† கஎ௫. தெங்குநீண் டீற்றுயிர மெயகெடுங் காய்வரின்.

(இ - ள்.) காய் வரின்-காய் என்னுஞ் சொல் (வருமொழியாக) வந்தால், தெஙகு - தெங்கு என்னும நிலைமொழி, நீணடு - (முதல்) நீணடு, ஈறு உயிர் மெய் கெடும - ஈற்றிலுள்ள 'கு' என்னும் உயிர்மெய் நீஙகும்; (எ - று.)

(உ-ம்.) தெஙகு + காய்—தேஙகாய். இது, வேறறுமைப்புணர்சசி. (௩௫)

[எண்ணுப்பெயர்கட்குச் சிறப்புவிதி]

† கஎ௬ எண்ணிறை யளவும் பிறவு மெயதின
ஒன்று முதலெட் டீறு மெண்ணுள்
முதலீ ரெண்முதல நீளும் மூன்றுறு
ஏழு - குறுகுமா றேழல் லவற்றின்
ஈறறுயிர மெயயு மேழ னுயிரும
ஏகு மேற்புழி யென்மனார புலவா.

(இ - ள்.) எண - எணணலளவுப்பெயரும, நிறை - நிறுத்தலளவுப்பெய ரும், அளவும - மறறை முகததலளவு நீட்டலளவுப் பெயாகளும், பிறவும் - பிறபெயாகளும், எய்தின் - (வருமொழியாக) வந்தால்,—ஒன்று முதல் எட்டு ஈறு ஆம் எணணுள் - (நிலைமொழியாகநின்ற) ஒன்றுமுதல் எட்டு ஈருகிய எண்களுள், முதல் ஈர எண் முதலினுள்ள (ஒனறு இரணடு எனனும்) இரண டெண்களும், முதல் நீளும - முதறகுறில் நீளும்; மூனறு ஆறு ஏழு - மூன் றும் ஆறும ஏழும், குறுகும் - (முதல்நெடில்) குறுகும; ஆறு ஏழு அல்லவற் றின் - ஆறும ஏழும அலலாத (ஒன்று இரணடு மூன்று நானகு ஐந்து எட்டு எனனும்) ஆறு எணகளினுடைய, ஈறு உயிர்மெய்யும - இறுதியிலுளள உயிர்

* 'ஏழ்' என மெய்யீற்றுப்பெயராகக கொணடார, தொல்காப்பியனார.

மெய்களும், ஏழன் - ஏழு என்பதனுடைய, உயிரும் - (இறுதியிலுள்ள) உகர உயிரும, ஏகும - கெடும ஏற்பு உழி-ஏற்கும் இடஙகளில் என்மனா புலவர் - என்று சொலவா அறிவுடையோா: (எ - று.)

இச்சூத்திரத்துக் கூறிய விகாரமும, இப்புணாச்சியை முற்றமுடித்தற் காக அடுத்த ஐந்து சூததிரஙகளிற் கூறும விகாரஙகளும பெருமபாலும் பண் புததொகைககே உரியனவாமென்பாா,'ஏற்புழி' என்றாா இன்னும் அதனல், ஏழு என்பது முதல குறுகுமிடதது உகரம கெடா தெனறும, உகரம் கெடு மிடதது முதல்குறுகா தென்றும கொளக.

ஏற்புழி' எனபதை, மேலவரும நானகுசூததிரஙகளிலும கூட்டுக.

ஏழு என்பது முற்றியலுகர வீற்றயினும 'ஒன்றினமுடித்தல் தன்னின முடித்தல்' என்னும உததியால, குற்றியலுகரஙகளோடு சோததுக கூறினா.

(உ-ம்.)

| | | | |
|---|---|---|---|
| ஆறு<br>ஏழு } + | பதது = அறுபது, எழுபது | | ஆறும ஏழும முதல் குறுகின. |
| | கழஞசு = அறுகழஞ்சு, எழுகழஞ்சு | | |
| | நாழி = அறுநாழி, எழுநாழி | | |
| | சாணை = அறுசாணை, எழுசாணை | | |
| | வகை = அறுவகை, எழுவகை | | |

ஏழு + கடல = ஏழ்கடல்—ஏழன் ஈற்றுயிா கெட்டது.

மறறவற்றிற்கு உதாரணம, பினனே அாதந்த எணகளின் சிறப்புச்சூத் திரஙகளிற் காட்டப்படும்.

இன்னும 'ஏற்புழி' என்றதனல, ஒன்றுமுதல எட்டீறும் எணகளுள் இரணடு முதலியன-இரணடு கழஞ்சு, மூனறு படி, நானகு பொருள், ஐந்து படை, ஆறு குணம, ஏழு கடல், எட்டுக கோடி எனப் பொதுவிதியால் முடி தலும; "ஒன்றுதேரினன்," "ஒனறிரண்டு" எனச சிறுபான்மை ஒன்றும்அங ஙனம் முடிதலும கொளக.

'ஏழ்குறுகும்மாறு' என்று பாடமோதுவாரு முளர். (௬அ)

[‘ஒன்று,’ ‘இரண்டு’ என்பவற்றிற்குச் சிறப்புவிதி.]

† கஙகூ. ஒன்றன் புள்ளி ரகர மாக
இரண்ட னொற்றுயி ரேகவுவ வருமே.

(இ - ள்.) ஒன்றன் - (ஈற்று உயிாமெய கெட்டுகின்ற)ஒன்று என்னும் எணணினது, புளளி - னகரமெயயானது, ரகரம் ஆக - ரகரமெய் யாக,— இரணடன்-(ஈற்றுஉயிாமெய்கெட்டுநின்ற) இரணடு என்னும் எணணினது, ஒற்று - ணகரமெய்யும, உயிா - (ரகரமெய்யின்மேல் உள்ள) அகரவுயிரும், ஏக - கெட,—உ வரும் - (அவ்விரணடும் ரகரமெய்யின்மேலும்) உகரம்வரும்; (ஏற்பு உழி) - ஏற்குமிடதது; (எ - று)

‘ஏற்புழி’ என்றதனால் - முதனீண்டவிடத்து உகரம் வாராதென்றும், உகரம் வருமிடத்து முதல் நீளாதென்றும் கொள்க. *

(உ - ம்.) ஒன்று + ஆயிரம் = ஓராயிரம்
+ கலம் = ஓர்கலம்
+ நாழி = ஓர்நாழி
+ யானை = ஓர்யானை
} ஒன்று முதல்நீண்டு ஈற்றுயிர்மெய் கெட்டு னகரம் ரகரமாயிற்று.

இரண்டு + ஆயிரம் = ஈராயிரம்
+ கலம் = ஈர்கலம்
+ நாழி = ஈர்நாழி
+ யானை = ஈர்யானை
} இரண்டு முதல்நீண்டு ஈற்றுயிர்மெய்யும் ணகரமெய்யும் அகரவுயிரும் கெட்டன.

ஒன்று, இரண்டு +
ஆயிரம் = ஓராயிரம் - இராயிரம்
கழஞ்சு = ஒருகழஞ்சு, இருகழஞ்சு
நாள் = ஒருநாள், இருநாள்
வழி = ஒருவழி, இருவழி
} முதல் நீளாமல் ரகர மெய்யின்மேல் உகரம் பெற்று வந்தன.

ஒரு + ஆயிரம் = ஓராயிரம் என உகரங்கெட்டுப் புணர்தலை "முற்றுமற் றொரோவழி" என்றதனாற் கொள்க. ஓர்கலம், ஓர்நாள், ஓர்வகை என முதல் நீளாமலும் உகரம்பெறாமலும் வருதல், உரையிற்கோடலால் அமையும் (௩௧)

[‘மூன்று’ என்பதற்குச் சிறப்புவிதி.]

† ௧௯௦. மூன்றனுறுப்பழிவும் வந்ததுமாகும்.

---

* ஒன்று இரண்டு என்னும் எண்கள் ஓர் ஈர் எனத் திரிவது வருமொழி முதலில் உயிர்வருமிடத்தே எனவும், முதனீளாது உகரம்பெற்று ஒரு இரு எனத் திரிவது மெய்வருமிடத்தே எனவும் கொண்டு, இவை மாறுபடவரின் வழுவாமென்பாருமுளர்; நன்னூலார்தாமே (௭௨) "ஆனவொன்றாதி யோர்புடை யொப்பினமே", என்றும், (௩௮௧) "வேறுவே றெண்ணினுமோர் போதுவினை வேண்டுமே" என்றும் மெய்ம்முதன்மொழிமுன் ‘ஓர்’ என உபயோகித்துள்ளாராதலால், அங்ஙனங்கொள்ளுதல் சாலாது. தொல்காப்பியத்தில் அக்காலத்துப் பெரும்பான்மைவழக்குப்பற்றி அங்ஙனம் வரையறுத்துக் கூறியிருந்ததனை நன்னூலார் ‘இறந்தது விலக்கல்’ லால் ஒழித்து இலக்கியங் கண்டு "முதலீரெண்முதல்நீளும்" என்றும், "ஒன்றன்புள்ளி ரகரமாக, இரண்டனொற்றுயிரேக உவ்வருமே" என்றும் பொதுப்படச் சூத்திரஞ்செய்திருக்க, நன்னூலுரையில் அவ்வரையறையைப்புகுத்துதல் நூற்கருத்துக்கு ஒத்ததன்றாம். "மாக்கேழ் மடநல்லா யென்றரற்றுஞ் சான்றவர், நோக்கார்கொல் நொய்யதோர் துச்சிலை - யாக்கைக்கோர், ஈச்சிறக் கன்னதோர் தோலறினும் வேண்டுமே, காக்கை கடிவதோர் கோல்" என்ற நாலடியாரில் உயிர்முதன்மொழி வருதலோடு மெய்ம்முதன்மொழி வருதலோடு பேதமற ஓர் என நின்றமை யுணர்க. "ஓர்ப்பத்தாம்," "அச்சாணி யன்னதோர் சொல்," "ஆயிரங் காக்கைக் கோர்கல்," "இருவீறு," "இருவியல்," "இருவாறு," "ஒருவாறு" என இங்ஙனம் நியதியின்றிச் சான்றோர்செய்யுள்களிலும் உரைநடைகளிலும் வந்துள்ளமை அளவிறந்தன காண்க.

(இ - ள்.) மூன்றன் - (இறுதி உயிர்மெய் கெட்டு நின்ற) மூன்று என்னும் எண்ணினது, உறுப்பு - னகரமெய்யானது, அழிவும் - கெடுதலும், வந்ததும் - (வருமொழிமுதலில்) வந்த மெய்யாகத் திரிதலும், ஆகும்— (ஏற்புழி) - ஏற்குமிடத்து; (எ - று.)

'ஏற்புழி' என்றதனால் - முதல்குறுகுதல் மெய்வருமிடத்து என்றும், அவ்விடத்து னகரமெய் வருமெய்யாகத் திரியுமென்றும்; னகரமெய்கெடுதல் உயிர்வருமிடத்து என்றும், அவ்விடத்து முதல்குறுகாது என்றும் கொள்க.

(உ - ம்.) மூன்று + ஆயிரம் = மூவாயிரம் } உயிர்வர முதல்குறுகாமல் ஈற்றுயிர்
+ உலகு = மூவுலகு } மெய்யும் னகரமெய்யும் கெட்டன.

மூன்று + கலம் = முக்கலம் } மெய்வர முதல்குறுகி ஈற்றுயிர்
+ நூறு = முந்நூறு } மெய் கெட்டு னகரமெய் வந்த
+ வட்டி = முவ்வட்டி } மெய்யாகத் திரிந்தது

இன்னும், 'ஏற்புழி' என்றதனால் - வகரம் வருமிடத்து முவ்வழி என முடிதலேயன்றி, மூவழி என முதல்குறுகாமல் னகரமெய்கெட்டு முடிதலும்; யகரம் வருமிடத்து முவ்யானை என னகரமெய் வருமெய்யாகத் திரிந்து முடிதலும் கொள்க (௬௦)

['நான்கு' என்பதற்குச் சிறப்புவிதி]

† க௮௧ நான்கன் மெய்யே லறவா கும்மே.

(இ - ள்.) நான்கன் (இறுதி உயிர்மெய் கெட்டுநின்ற) நான்கென்னும் எண்ணினது, மெய் - னகரமெய், ல ற ஆகும் - லகரமெய்யாகவும் றகரமெய்யாகவும் திரியும். (ஏற்புழி - ஏற்குமிடத்து); (எ - று.)

'ஏற்புழி'என்றதனால் - னகரமெய் லகரமாகத்திரிவது உயிரும் இடையினமும் வருமிடத்து என்றும், றகரமாகத்திரிவது வல்லினம் வருமிடத்து என்றும், மெல்லினம் வருமிடத்துத் திரியாது என்றும் கொள்க.

(உ - ம்.) நான்கு + ஆயிரம் = நாலாயிரம் } உயிரும் இடையினமும் வர ஈறு
+ வகை = நால்வகை } கெட்டு னகரம் லகரமாயிற்று.
நான்கு + கவி = நாற்கவி } வலிவர ஈறுகெட்டு னகரம்
+ பால் = நாற்பால் } றகரமாயிற்று.
நான்கு + மணி = நான்மணி } மெலிவர ஈறுகெட்டு னகரம்
+ நாழி = நானாழி } திரியாது நின்றது.

இன்னும் 'ஏற்புழி' என்றதனால் - மூவினமெய்களும் வருமிடத்து நாலு குதிரை, நாலுநாள், நாலுவழி என ஈறுகெட்டு னகரம் லகரமாய் உகரம் பெற்றுவருதலும் கொள்க.

நான்மணி, நானாழி என்றவற்றில் நால்என்றும் பிரிக்கலாம். (௬௧)

['ஐந்து' என்பதற்குச் சிறப்புவிதி.]

† க௮௨ ஐந்தனொற் றடைவது மினமுங் கேடும்.

(இ - ள்) ஐந்தன் - (இறுதிஉயிர்மெய் கெட்டு நின்ற) ஐந்து என்னும் எண்ணினது, ஒற்று - நகரமெய்யானது, அடைவதும் (வருமொழிமுதலில் வருகிற மெய்யாகத் திரிதலும், இனமும் - அதற்கு இனமாகத் திரிதலும், கேடும் - கெடுதலுமாம் (ஏற்பு உழி)-ஏற்குமிடத்து; (எ - று.)

'ஏற்புழி' என்றதனால் - நகரமெய் வருமெய்யாகத் திரிவது மெல்லினம் வருமிடத்து என்றும், இனமாகத்திரிவது வல்லினம் வருமிடத்து என்றும், கெடுவது உயிரும் இடையினமும் வருமிடத்து என்றும் கொள்க.

(உ - ம்) ஐந்து + மூன்று = ஐம்மூன்று — நகரம் வருமெய்யாகத் திரிந்தது.
ஐந்து + பால் = ஐம்பால் — வருமெழுத்துக்கு இனமாயிற்று.

ஐந்து + ஆயிரம் = ஐயாயிரம்
+ வகை = ஐவகை } நகரமெய் கெட்டது.

'அடைவதும் இனமும்' என்றமையின், அநுவாதபத்தியால் ஐந்நூறு, ஐந்தொழில் என நகர தகரங்கள் வருமிடத்து நகரமெய் இயல்பாய் நிற்கும்.

[‘எட்டு’ என்பதற்குச் சிறப்புவிதி]

† கஎஉ. எட்ட னுடம்பு ணவ்வா கும்மே.

(இ - ள்) எட்டன் (இறுதி உயிர்மெய் கெட்டு நின்ற) எட்டு என்னும் எண்ணினது, உடம்பு - டகரமெய்யானது, ண ஆகும் - (நாற்கணமும் வர) ணகரமெய்யாகத் திரியும், என்ப - என்று சொல்வர் (புலவர்); (எ - று.)

(உ - ம்.) எட்டு + ஆயிரம் = எண்ணாயிரம் | எட்டு + நாழி = எண்ணாழி
+ கழஞ்சு = எண்கழஞ்சு | + வகை = எண்வகை.

[தொண்ணூறு, தொள்ளாயிரம்.]

† கஎஈ. ஒன்பா னொடுபத்து நூறு மொன்றின்
முன்னதி னேனைய முரணி யொவ்வொடு
தகர நிறீஇப் பஃது அகற்றி னவ்வை
நிரலே ணளவாத் திரிப்பது நெறியே.

(இ - ள.) ஒன்பானொடு - ஒன்பஃதுடனே, பத்தும்-பத்து என்பதும், நூறும்-நூறு என்பதும், ஒன்றின்-(வருமொழியாகவந்து)புணருமாயின்,— முன்னதின் ஏனைய - முன்னதாகிய நிலைமொழி தவிர மற்றை வருமொழிகளாகிய பத்தையும் நூற்றையும், முரணி (முறையே நூறெனவும் ஆயிரமெனவும்) திரித்து,—ஒவ்வொடு - (நிலைமொழிமுதலிலுள்ள) ஒகரவுயிரோடு, தகரம் - தகரமெய்யை நிறீஇ (அதற்குஆதாரமாக முன்)நிறுத்தி,—பஃது - (அந்நிலைமொழியிறுதியிலுள்ள) பஃதை, அகற்றி - கெடுத்து,—னவ்வை - (அயலில்நின்ற) னகரமெய்யை, நிரலே முறையே, ண ள ஆ - (பத்தின் திரிபாகிய நூறறின் புணர்ச்சிக்கு) ணகர மெய்யாகவும் (நூற்றின்திரிபாகிய ஆயிரத்தின் புணர்ச்சிக்கு) ளகரமெய்யாகவும், திரிப்பது - திரித்துக்கொள்வது,—நெறி முறைமையாம்; (எ - று.)—முரணுதல்- ஓரிலக்கம் மேலேற்றி மாற்றுதல்.

('முன்னதின்' எனபதிலுள்ள 'இன' உருபு-ஐந்தாம வேற்றுமைநீககப் பொருளதாய. 'ஏனைய' என்னும இடைசசொல்லடியாகத்தோனறிய குறிபபு வினையாலணையும் பெயரைக கொண்டது. இனி, முனனதின - முன்னதாகிய பததினுலே, ஏனைய முரணி - மற்றை வருமொழியாகிய பததையுமநூறறையும பெருககுமாற்ருல நூறெனவும ஆயிரமெனவுந் திரிதது என்று உரைபபாருமுளா, இபபொருளுககு, 'இன்' உருபு-ஏதுபபொருளது. இனி, இதற்கு மற்று ஓா உரை வருமாறு —முன்னதின் - நிலைமொழியாகிய ஒன்பஃது என்பதனைப் போல, ஏனைய முரணி - வருமொழியாகிய பததையும நூற்றையும முறையே திரிதது என்று பொருள்; அதாவது —எட்டையடுதத எணணுகிய ஒனபஃது அலலது ஒன்பது எனபதி லுள்ள பஃது அல்லது பது என்பது அதறகு அடுதத எணணுகிய பதது எனபதன் விகாரமபோன் றிருத்தலால், அதறகு ஏற்ப, எண்பது என்பதற்கு அடுததானத்து எணணில் [ஒனபதுபததில] வருமொழியாகிய பததை அதற்கு அடுததானதது எணணுகிய நூறு என்றும, எணணூறு என்பதற்கு அடுததானதது எணணில் [ஒன்பது நூறுஎன்பதில்] வருமொழியாகிய நூறு என்பதை அதற்கு அடுததானதது எணணுகிய ஆயிரம என்றும திரிதது என்றபடி: பதது என்னுந் தானததிறகு வரமாட்டாத குறைவுடைய ஒன்பது எனபது பதுஎன்னும இறுதியைபபெறறதுபோல, நூறு என்னுந தானததிற் குறைந்தநிலையில் இருககின்ற பதது என்பது நூறுஎன்று திரிதலையும, ஆயிரமெனனுநதானததிற் குறைந்த நிலையில் இருககிற நூறு என்பது ஆயிரம எனறு திரிதலையும பெறு மென்க. இவ்வுரைககு, 'இன்' உருபு - ஒபபுப்பொருளது )

(உ - ம.) ஒனபஃது + பதது = (க) ஒனபஃது நூறு, (உ) தொனபஃது நூறு, (ங) தொனநூறு, (ச) தொணநூறு, (ரு) தொணணூறு.

ஒன்பஃது + நூறு = (க) ஒன்பஃது ஆயிரம, (உ) தொன்பஃது ஆயிரம, (ங) தொன் ஆயிரம, (ச) தொள ஆயிரம, (ரு) தொள்ளாயிரம; இது, தொளாயிரம எனவும வழஙகுகின்றது

'பஃதகற்றி' என்பதோடு பொருந்த 'ஒன்பஃதோடு' என்னுமல் 'ஒன்பானொடு' என்றமையால், ஒனபது நின்று புணரினும இவ்விதியே பெறும.

இப்புணாமொழிகள ஒாரவுயிா ஒனறு ஒழிய மறறவை யெல்லாம விகாரப்பட்டுககிடந்தமையால மரூஉவென்று கொளளாமல, தொல்லாசிரியா முடித்தவாறே முடிததுக்காட்டினே மென்பாா, 'நேறி' என்றுரெனக. (சச)

['ஒன்று' முதலிய எட்டு எண்களின்முன் 'பத்து.']

† ககரு. முதலிரு நான்கா மெண்முனர்ப பத்தின்
இடையொற் றேக லாய்த மாகல
எனவிரு விதியு மேறகு மெனப

(இ - ள்.) முதல் - முதலிலுளளவையான, இரு நானகு ஆம்எணமுனா - எட்டு எணகளின் முன்னும் வருகிற, பததின - பதது என்னுமஎணணினது,

இடை - நடுவில் நின்ற, ஒற்று - தகரமெய்யானது,—ஏகல் - கெடுதலும், ஆய்தம் ஆகல்-ஆய்தமாகத்திரிதலும், என-என்று, இறுவிதியும்-இவ்விரண்டு விதிகளையும், ஏற்கும்—, என்ப - என்று சொல்வர், (புலவர்); (எ - று.)

முத லிருநான்காம் எண் - ஒன்று முதல் எட்டு ஈறாயின.

| | | |
|---|---|---|
| ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு, எட்டு, | (உ - ம்.) + பத்து | ஒருபது, ஒருபஃது; இருபது, இருபஃது; முப்பது, முப்பஃது, நாற்பது, நாற்பஃது; ஐம்பது, ஐம்பஃது; அறுபது, அறுபஃது; எழுபது, எழுபஃது; எண்பது, எண்பஃது. |

[‘ஒருபஃது’ முதலியவற்றுக்குச் சிறப்புவிதி.]

ககூசு. ஒருபஃ தாதிமுன் னொன்றுமுத லொன்பான்
எண்ணுமவை யூர் பிறவு மெய்தின்
ஆய்த மழியவாண் டாகுந் தவ்வே

(இ-ள்) ஒருபஃது ஆதி முன்-ஒருபஃது முதலாகிய எட்டு எண்களின் முன்,—ஒன்று முதல் - ஒன்றுமுதலாகிய, ஒன்பான் எண்ணும் - ஒன்பது எண்களும்,—அவை - அவ்வெண்களை, ஊர - ஊர்ந்த. பிறவும் - மற்றவையும்,—எய்தின் - வந்து புணருமாயின்,—ஆய்தம் - (நிலைமொழியிடையிலே நின்ற) ஆய்தமானது, அழிய - கெட, த - (இயல்பாகிய) தகரம், ஆண்டு ஆகும் - அவ்வாய்தம் நின்றவிடத்து வரும்; (எ - று.)

(உ - ம) ஒருபஃது + ஒன்று = ஒருபத்தொன்று—எண்
இருபஃது + மூன்று கலம் = இருபத்துமூன்றுகலம்—எண்ணொடு பிறிது.
மற்றவையும் இப்படியே. ஐயமொழித்தற்கு, ‘அவை யூர பிறவும்’ என்றார்.

‘ஆய்தங்கெடத் தகரம் வரும்’ என்றமையின், அருத்தாபத்தியால் ஆய்தமில்லாத ஒருபது முதலானவைகளும் இவ்வாறு தகரம்பெறும் என்க. (சகூ)

[‘பத்து’, ‘ஒன்பது’ என்பவற்றின்முன் மற்றை எண்கள்.]

ககூஎ. ஒன்றுமுத லீரைந் தாயிரங் கோடி
எண்ணிறை யளவும் பிறவரிற் பத்தின்
ஈற்றுயிர் மெய்கெடுத் தின்னு மிற்றும்
ஏற்ப தேற்கு மொன்பது மினைத்தே.

(இ - ள்.) ஒன்று முதல் ஈரைந்து - ஒன்று முதலாகிய பத்து எண்களும், ஆயிரம் - ஆயிரமும், கோடி - கோடியும் ஆகிய, எண் - எண்ணுப்பெயரும், நிறை - நிறைப்பெயரும், அளவும் - அளவுப்பெயரும், பிற பிறபெயரும் வரின் - (வருமொழியாக) வந்து புணருமாயின்,—பத்தின் - (நிலைமொழியாகிய) பத்தினது, ஈறு உயிர்மெய் - இறுதியிலுள்ள ‘து’ என்னும் உயிர்மெய்யை, கெடுத்து - போக்கி, இன்னும் - இன்சாரியை யாயினும், இற்றும் - இற்றுச்சாரியை யாயினும், ஏற்பது - (அவ்விடத்திற்குப்) பொருந்துவதொன்றனை, ஏற்கும் - ஏற்றுநிற்கும்; ஒன்பதும் - ஒன்பது என்னும் நிலைமொழியும்,

இனைத்தே - இத்தன்மையதேயாம் [இவ்விரண்டு சாரியைகளில் ஒன்றை ஏற்று நிற்கும்]; (எ - று.)

(உ - ம்.) பத்து + ஒன்று = பதினொன்று, பதிற்றொன்று.
ஒன்பது + ஆயிரம் = ஒன்பதினாயிரம், ஒன்பதிற்றாயிரம்.

பதினொன்று - உம்மைத்தொகை. பதிற்றொன்று - பண்புத்தொகை. ஒன்பதினாயிரம், ஒன்பதிற்றாயிரம் இரண்டும் - பண்புத்தொகை. உம்மைத் தொகை - கூட்டலும், பண்புத்தொகை - பெருக்கலுமாம்.

'ஏற்பதேற்கும்' என்றதனால் - பதினொன்று பதினாயிரம் என இன்சாரியை உம்மைத்தொகை பண்புத்தொகை இரண்டிலும் ஏற்றபடி வருதலும், இற்றுச்சாரியை பண்புத்தொகைக்கே வருதலும், ஒன்பதன் ஈற்றுயிர்மெய் கெடாமல் நிற்றலும், பத்துக்கோடி ஒன்பதுகோடி எனப் பொதுவிதிப் படியே முடிதலும் கொள்க. (சஎ)

['பத்து' முன் இரண்டு பன்னிரண்டு.]

கசுஅ இரண்டு முன்வரிற் பத்தினீற் றுயிர்மெய்
கரந்திட வொற்றுன வாகு மென்ப.

(இ - ள்.) இரண்டு - இரண்டு என்பது, முன் வரின்-(வருமொழியாக) முன்வருமாயின்,—பத்தின் - பத்து என்னும் நிலைமொழியினது, ஈறு உயிர்மெய் - ஈற்றிலுள்ள 'து' என்னும் உயிர்மெய், கரந்திட - கெட,—ஒற்று - (நடுநின்ற) தகரமெய், ன ஆகும் - னகரமெய்யாகத் திரியும், என்ப - என்று சொல்வர்; (எ - று.)—(இங்கு 'என்ப' என்பதை அசையாகக் கொள்ளுதல் பொருத்தம்; 'என்ப' என்பதை அசையென்பர், தொல்காப்பியவுரையிலும். சீவகசிந்தாமணியுரையிலும் நச்சினார்க்கினியர்.)

(உ - ம்) பத்து + இரண்டு = பன்னிரண்டு இவ்விதி, உம்மைத்தொகைக்கே.

* பத்து + நான்கு = பன்னான்கு. பத்து + மூன்று = பன்மூன்று, பத்து + ஒன்று = பன்னொன்று எனச் சிறுபான்மை வருகலையும் இசூத்திரத்தில் அடக்கிக்கொள்க: இனி, அவற்றை மரூஉவின்பாற்படுத்தலும் ஒன்று. (சஅ)

* "கொடுத்தனன் பலிக்குத் தனையைக் குமரனென் றறிந்து குன்ற மெடுத்தவன் திதியன்றேர்க்கி னிடையுவா வின்று கென்று,"
"அட்டமியி லோதினு லாசானுக் காகாது
சிட்டருக்குப் பன்னான்கு தீதாகும்—கெட்டவுவா
வித்தைக்கு நாசமாம் வெய்ய பிரதமையிற்
பித்தரும் பேசார் பிழை" எனவும்,
"பாயிர நான்கில் லறமிருபான் பன்மூன்றே
தூய துறவறம்" எனவும்,
"அருக்கர் பன்னிருவரு மகன்றார்" எனவும் காண்க.

['ஒன்று' முதலியன தன்முன் தான்வருதல்]

† கசுக. ஒன்பா னொழித்தவெண் ணொன்பது மிரட்டின்
முன்னதின் முன்னல வோட வுயிர்வரின்
வவ்வு மெய்வரின் வந்தது மிகனெறி.

(இ - ள்.) ஒன்பான் ஒழித்த - ஒன்பது என்கின்ற எண் ஒன்றனையும் ஒழித்து நின்ற, எண் ஒன்பதும் - (ஒன்று முதல் பத்து ஈறுகிய) ஒன்பது எண்களும், இரட்டின் - இரட்டித்து [தனக்குமுன்னே தான்] வந்தால்,— முன்னதின் - நிலைமொழியினது, முன் அல - முதலெழுத்தல்லாதவைக ளெல்லாம், ஓட - கெட [முதலெழுத்து ஒன்றுமாத்திரமே நிற்க],—உயிர் வரின் - வருமொழி உயிர்முதல்மொழியாயின், வவ்வும் - வகரமெய்யும்,— மெய் வரின் - வருமொழி மெய்ம்முதல்மொழியாயின், வந்ததும் - வந்த மெய்யும், மிகல் - மிகுதல், நெறி - முறைமையாம்; (எ - று.)

(உ-ம்.) ஒவ்வொன்று, இவ்விரண்டு, மும்மூன்று, நந்நான்கு, ஐவைந்து, அவ்வாறு, எவ்வேழு, எவ்வெட்டு, பப்பத்து.

'நெறி' என்ற மிகையால்-நன்னான்கு என நான்கு குறுகுதலும் ஓரோ வொன்று, ஒன்றொன்று என இவ்வாறு வருதலும்; வேறு + வேறு = வெவ் வேறு, பாதி + பாதி = பப்பாதி எனப் பிறபெயர்கள் இரட்டிக்கும்போது இவ்வாறு விகாரமடைதலும்; இன்னும் குற்றியலுகரப்புணர்ச்சி விதியுட் கூறுதவை உளவாயின் அவையும் கொள்க. இவற்றில் வெவ்வேறு, பப்பாதி என்பவை மரூஉ மொழியுமாம். (சகக)

## ஊகாரவீற்றுச் சிறப்புவிதி.

[பூவின்முன் வல்லினம்.]

† உ00. பூப்பெயர் முன்னின மென்மையுந் தோன்றும்

(இ - ள்.) பூ பெயர் முன் - பூ என்னும் பெயர்ச்சொல்லின் முன், இனம் மென்மையும் தோன்றும் - (வருகிற வல்லினம் பொதுவிதியால் மிகுதலே யல்லாமல்) அவற்றிற்கு இனமாகிய மெல்லினமும் மிகும்; (எ - று)

(உ - ம்) பூ + கொடி = பூங்கொடி, பூஞ்சோலை, பூந்தடம், பூம்பொழில்.

இவற்றுள் - பூ என்பது மலராயின், பூவையுடைய கொடி என இரண் டாம்வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகையும்; அழகாயின், பூ வாகிய கொடி எனப் பண்புத்தொகையுமாம். (ருo)

## ஏகார ஓகார வீற்றுச் சிறப்புவிதி.

[இடைச்சொல் ஏ, ஓ முன் வலி.]

‡ உ0க. இடைச்சொல் ஏஓ முன்வரி னியல்பே.

* 'புணரும்' என்றும் பிரதிபேதம்.

(இ - ள்.) இடைச்சொல் - இடைச்சொற்களாகிய, ஏ ஓ முன் - ஏ ஓ என்பவற்றின் முன் வரின் - (வல்லினம்) வந்தால், இயல்பே - (பொதுவிதியால மிகாமல) இயல்பேயாகும்; (எ - று.)

(உ - ம.) அவனே + கண்டான் = அவனேகண்டான், அவனோகண்டான்.

வினாப்பொருளில் வரும ஏகார ஓகாரங்களின் முன் வலி இயல்பாதல் கீழ் "ஈற்றியாவினா" என்னுஞ் சூத்திரத்திற் கூறப்பட்டதனால், இவ்விதி மற்றைப்பொருள்களில் வருமிடத்து எனக் கொள்க. (௫௧)

## ஐகாரவீற்றுச் சிறப்புவிதி.

[ஐகாரத்தின் முன் மெய]

உ0உ. வேற்றுமை யாயி னைகா னிறுமொழி
ஈற்றழி வோடு மம் மேற்பவு முளவே.

(இ - ள.) ஐகான இறு மொழி - ஐகாரவீற்றுச் சொற்கள், வேற்றுமை ஆயின் - வேற்றுமைப்புணர்ச்சியில் வருமாயின், ஈறு அழிவோடும்-ஈற்று ஐகாரம் கெடுதலுடனே, அம - 'அம்' சாரியை, ஏற்பவும் - பெற்றுமுடிவனவும், உள சிலவுள்ளன; (எ - று.)

'அழிவோடும்' என்ற உம்மையால், அழியாமையோடு அம் ஏற்பவும் உள என்க. வருமெழுத்தைச் சொல்லாமையால், நாற்கணத்துள் ஏற்பன கொள்க.

| | | |
|---|---|---|
| (உ - ம்.) தாழை + பூ = தாழம்பூ<br>எலுமிச்சை + மரம் = எலுமிச்சமரம்<br>ஆவிரை + வேர் = ஆவிரமவேர் | ஐ அழிவோடு அம ஏற்றன. |
| புன்னை + கானல் = புன்னையங்கானல்<br>முல்லை + தொடை = முல்லையந்தொடை | ஐ அழியாமையோடு அம ஏற்றன. |

'ஏற்பவுமுள' என்றதனால், முல்லை + புறவு = முல்லைப்புறவு, கொல்லை = சாரல் = கொல்லைச்சாரல் எனப் பொதுவிதிபெற்றுவருதலும கொள்க. (௫௨)

[‘பனை’ என்பதற்குச் சிறப்புவிதி]

உ0௩. பனைமுன் கொடிவரின் மிகலும வலிவரின்
ஐபோ யம்முந் திரள்வரி னுறழ்வும்
அட்டுறி னைகெட் டந் நீள்வுமாம் வேற்றுமை.

(இ - ள்.) (க) பனை முன் - பனை என்னும் பெயரின் முன், கொடி வரின் - கொடி என்னும் பெயர் வருமாயின், மிகலும - (வந்த ககரம) மிகுதலும்,—(உ)வலி வரின் க ச த ப க்கள் வருமாயின், ஐ போய-(நிலைமொழியீற்று) ஐகாரம் கெட்டு, அம்மும - 'அம்' சாரியை பெறுதலும்,—(௩) திரள் வரின்-திரள் என்னும் பெயர் வருமாயின், உறழ்வும் - (வந்த தகரம மிகுந்தும ஐ போய் 'அம'சாரியைபெற்றும) விகற்பித்தலும,—(ச) அட்டு உறின் - அட்டு என்னும பெயர் வருமாயின், ஐ கெட்டு - (நிலைமொழியீற்று) ஐகாரம் கெட்டு, அ நீள்வும் - (வருமொழிமுதல) அகரம ஆகாரமாதலும,—ஆம - ஆகும:—வேற்றுமை - வேற்றுமைப்புணர்ச்சியில்; (எ - று.)

(உ - ம்.) (க) பனை + கொடி = பனைக்கொடி—மிக்கது.
(உ) பனை + காய் = பனங்காய் —ஐ கெட்டு 'அம்' பெற்றது.
(ந) பனை + திரள் = பனைத்திரள், பனந்திரள்—உறழ்ந்தது.
(ச) பனை + அட்டு = பனாட்டு—ஐ கெட்டு ஆ நீண்டது. (ருந)

உயிரீற்றுப்புணரியல் முற்றிற்று.

# ச. மெய்யீற்றுப்புணரியல்.

மெய்யெழுத்துக்களை இறுதியிலுடைய நிலைமொழிகளோடு உயிர்முதல் மொழியும் மெய்ம்முதல்மொழியு மாகிய வருமொழிகள் புணரும் விதத்தைச் சொல்லும் இயல்

## மெய்யீற்றின் முன் உயிர்.

[பொதுவிதி.]

‡ உ0ச. உடல்மே லுயிர்வந் தொன்றுவ தியல்பே.

(இ - ள்) உடல் மேல்-(நிலைமொழியின் இறுதியில்நின்ற) மெய்யெழுத்தின்மேல் உயிர் - (வருமொழிமுதலிலுள்ள) உயிரெழுத்து, வந்து ஒன்றுவது - வந்து கூடிநிற்பது,—இயல்பே-இயல்புபுணர்ச்சியேயாம்; (எ - று) *

(உ - ம.) புகழ் + அழகிது = புகழழகிது —அல்வழி.
வேல் + எறிந்தான் = வேலெறிந்தான்—வேற்றுமை (க)

[தனிக்குறில்முன் மெய்க்குச் சிறப்புவிதி.]

‡ உ0ரு. தனிக்குறில் முன்னொற் றுயிர்வரி னிரட்டும்.

(இ - ள்.) தனி குறில் முன் - தனித்த குற்றெழுத்தை யடுத்து நின்ற, ஒற்று - மெய்,—உயிர் வரின் - (வருமொழிமுதலில்) உயிர் வந்தால், இரட்டும் - இரட்டித்துநிற்கும்; (எ - று)

(உ - ம்.) மண் + அழகிது = மண்ணழகிது—அல்வழி.
பொன் + அணி = பொன்னணி—வேற்றுமை (உ)

## மெய்யீற்றின் முன் மெய்.

[யகரமொழிந்த மெய்களின் முன் யகரம்.]

‡ உ0சு. தன்னொழி மெய்ம்முன் யவ்வரி னிகரம்
துன்னு மென்று துணிநரு முளரே.

(இ - ள்.) தன் ஒழி - தன்னை [யகரத்தை] ஒழிந்த, மெய் முன் - (மொழிக்கு இறுதியில் வரும் ஞ ண ந ம ன ர ல வ ழ ள என்னும் பத்து) மெய்களின் முன்னும், ய வரின் - (வருமொழிமுதலில்) யகரம் வந்தால், இகரம் துன்னும் - இகரம் (இடையில் வந்து) சேரும், என்று—, துணிநரும் - (அருமையாகக்) கொள்பவர்களும், உளர் - (சிலர்) உண்டு; (எ - று)

* 'உடல்மேல் உயிர்வந்து ஒன்றுதல் உலகத்து முறைமை யெனினுமாம்' என்பது, பழையஉரை.

(உ - ம்.) வேள் + யாவன் = வேளியாவன் — அல்வழி.
மண் + யாப்பு = மண்ணியாப்பு — வேற்றுமை

'துணிநரும்' என்ற உம்மையால் வேளியாவன், மண்யாது எனப் பொது விதி * பெறுமென்பாரு முளரென்க. (௬)

[சில ஈற்று முதனிலைத்தொழிற்பெயர்க்கும் ஏவற்கும் சிறப்புவிதி]

உ0எ. ஞணநம லவளன வொற்றிறு தொழிற்பெயர்
§ ஏவல் வினைநனி யவ்வல் மெய்வரின்
உவ்வுறு மேவ லுறாசில சில்வழி.

(இ - ள்.) (க) ஞணநமலவளன - ஞ ண ந ம ல வ ள ன என்கிற, ஒற்று (எட்டு) மெய்களையும், இறு - இறுதியாகவுடைய, தொழிற்பெயர் - (முதனிலைத்) தொழிற்பெயர்களும், ஏவல் வினை - ஏவலொருமை வினைகளும் ஆகிய இவற்றின் முன், ய அல் மெய் - யகரத்தை ஒழிந்த (மொழிக்கு முதலில் வரும் க ச த ப ஞ ந ம வ என்னும் எட்டு) மெய்களும், வரின் - (வரு மொழி முதலில்,) வருமாயின், நனி - பெரும்பாலும், உ உறும் - உகரச்சாரியை (நிலைமொழியீற்றில்) பொருந்தும்;—(உ) சில ஏவல் - சில ஏவல்வினைகள், சில வழி சில இடங்களிலே, உறா - (அவ்வுகரச்சாரியையைப்) பொருந்தாவாம்; (எ - று.)

இங்கே - 'தொழிற்பெயர்', 'ஏவல்வினை' என்றது - பகுதிமாத்திரமே நின்று அந்தந்தப்பொருளை உணர்த்துகின்ற முதனிலைத் தொழிற்பெயர்களையும், ஒருமையேவல்களையும்.

| (க) அல்வழி. | | (உதாரணம்) | | வேற்றுமை. |
|---|---|---|---|---|
| உரிஞ் | + கடிது | = உரிஞுக்கடிது | + கடுமை | = உரிஞுக்கடுமை |
| உண் | + சிறிது | = உண்ணுச்சிறிது | + சிறுமை | = உண்ணுச்சிறுமை |
| பொருந் | + தீது | = பொருநுத்தீது | + தீமை | = பொருநுத்தீமை |
| திரும் | + பெரிது | = திருமுப்பெரிது | + பெருமை | = திருமுப்பெருமை |
| செல் | + ஞான்றது | = செல்லுஞான்றது | + ஞாற்சி | = செல்லுஞாற்சி |
| வவ் | + நீண்டது | = வவ்வுநீண்டது | + நீட்சி | = வவ்வுநீட்சி |
| துள் | + மாண்டது | = துள்ளுமாண்டது | + மாட்சி | = துள்ளுமாட்சி |
| தின் | + வலிது | = தின்னுவலிது | + வலிமை | = தின்னுவலிமை |

என இருவழியிலும் முதனிலைத்தொழிற்பெயர்கள் உகரம் பெற்றன.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| உரிஞ் | + கொற்றா | = உரிஞுகொற்றா | செல் | + ஞெள்ளா | = செல்லுஞெள்ளா |
| உண் | + சாத்தா | = உண்ணுசாத்தா | வவ் | + நாகா | = வவ்வுநாகா |
| பொருந் | + தேவா | = பொருநுதேவா | துள் | + மணிதா | = துள்ளுமணிதா |
| திரும் | + பூதா | = திருமுபூதா | தின் | + வளவா | = தின்னுவளவா |

என ஏவல்வினைகள் உகரம்பெற்றன.

(உ) உகரச்சாரியை பெற்றும் பெறாமலும் வரும் ஏவல்வினைகள் ண ன ல ள என்னும் நான்கு ஈற்றனவுமாம். (உ - ம்) உண்கொற்றா, தின்சாத்தா,

* க௩௮ - ஆஞ் சூத்திரம். § 'ஏவல்வினைமுன்னும்' என்ற பாடம் சிறக்கும்.

வெல்பூதா, துள்வளவா என உகரம பெருமல வந்தன. ஞ ந ம வ என்னும் நான்கு ஈறும, உகரமபெறறே வரும்.

சிறுபானமை உணணு, தின்னு என வருமொழிநோககாமலஉகரமபெறு தலும, வாருசாததா வாழுவளவா எனப் பிற ஈறுகள் உகரமபெறுதலும் உள ளன வென்பார, 'நனி' எனருா.

கீழ் 'யவ்வரி னிகரந் துன்னும' என்றதனுல், யகரத்தை இஙகு விலககினுா.()

[நகரவீற்றுத் தொழிற்பெயர்க்குச சிறப்புவிதி.]

உ0அ. நவவிறு தொழிறபெயாக கவவுமாம வேறறுமை.

(இ - ள) ந இறு தொழிறபெயாக்கு - நகரததைஇறுதியாகவுடையமுத னிலைத தொழிற்பெயர்கசு,—வேறறுமை வேறறுமையில்,—அவ்வும் ஆம - (உகரசசாரியையேயனறி) அகரசசாரியையும் பொருந்தும்; (எ - று.)

(உ - ம.) பொருந + கடுமை = பொருநக்கடுமை } வேறறுமையில
+ நனமை = பொருநநன்மை } அகரசசாரியை
+ வனமை = பொருநவன்மை } பெற்றது.

(பொருநுதல-ஒருவர் மறறொருவாபோலவேடமகொளளும பொருநரது தொழி லாதலால், ஒததலென்னும பொருளது; பொருநா - கூததா.) (ரு)

ணகர னகர வீறு.

[ணகர னகர வீற்றின் இயல்பும் திரிபும்.]

‡ உ0கூ. ணன வலலினம் வரட் டறவும் பிறவரின்
இயலபு மாகும வேறறுமைககு அலவழிக்கு
அனைத்துமெய் வரினு மியலபா குமமே.

(இ - ள.) (க) ண ன-ணகர னகரஙகள, வேற்றுமைககு - வேற்றுமைப் புணர்சசியில், வல்லினம் வர - (வருமொழிமுதலில) வலலினம வநதால், ட ற உம-(முறையே) டகரமாகவும றகரமாகவும, பிற வரின் - மெலலினமும் இடையினமும வநதால், இயலபும - இயல்பாகவும, ஆகும்—;—(உ) அல் வழிககு - அல்வழிபபுணாசசியில, அனைதது மெய வரினும - மூன்றினமெய் களும வந்தாலும, இயல்பு ஆகும் - இயல்பேயாம; (எ - று.)—'வேற்றுமை க்கு', 'அலவழிககு' எனபன - உருபுமயககம.

(உ-ம.)(க)கண + களிறு = கட்களிறு } வேற்றுமையில ணனவல்லி
பொன் + தகடு = பொற்றகடு } னம வரட் டற ஆயின.

மண } + மாட்சி = மண்மாட்சி, பொன்மாட்சி } வேறறுமையில் பிற
பொன } + வன்மை = மண்வன்மை, பொன்வனமை } வர இயல்பாயின.

(உ) } + பெரிது = மண்பெரிது, பொன்பெரிது } அல்வழியில
மண } + மாணடது = மண்மாணடது, பொன்மாணடது } பலவும வர
பொன் } + யாது = மண்யாது, பொன்யாது } இயலபாயின.

ஒப்பின்முடித்தல் என்னும உத்தியால், ணகரததையும் உடன்கூறினுா; பின்னேகூட்டிச்சொல்லப்படும் எழுத்துக்களுக்கும் இவ்வுததியையேகொள்க.

[ணகர னகர வீற்றின் கேடு]

I உசο. குறிலணை வில்லா ணனக்கள் வந்த
நகரந் திரிந்துழி நண்ணுங் கேடே.

(இ - ள்.) குறில் அணைவு இல்லா - (தனிக்) குற்றெழுத்தைச் சாராமல் ஒருமொழி தொடர்மொழிகளைச் சார்ந்துள்ள, ணனக்கள் - ணகர னகரமெய்யானவை,—வந்த - (வருமொழிக்கு முதலாக) வந்த, நகரம்—, திரிந்த உழி - திரிந்தவிடத்து, கேடு - தாம் கெடுதலை, நண்ணும் - பொருந்தும், (எ - று) நகரம் திரிதல்,* "னலமுன் றனவும்" என்னுஞ் சூத்திரத்தாற் கூறப்படும்.

| | அல்வழி | வேற்றுமை. |
|---|---|---|
| (உ-ம்.) | தூண் + நன்று—தூணன்று | + நன்மை—தூணன்மை |
| | பசுமண் + நன்று—பசுமணன்று | + நன்மை—பசுமணன்மை |
| | வலியன் + நன்று—வலியனன்று | + நன்மை—வலியனன்மை |
| | கோன் + நல்லன்—கோனல்லன் | + நன்மை—கோனன்மை (எ) |

[சில ணகரவீற்றுப் பெயர்க்குச் சிறப்புவிதி]

உசக. சாதி குழூஉப் பரண் கவண்பெய ரிறுதி
இயல்பாம் வேற்றுமைக் குணவெண் சாண்பிற
டவ்வா கலுமா மல்வழி யும்மே

(இ - ள்) (க) சாதி - சாதிபற்றிவரும் பெயர்கட்கும், குழூஉ - கூட்டம் பற்றிவரும் பெயர்கட்கும், பரண் கவண் பெயர்-பரண் கவண் என்னும் பெயர்கட்கும், இறுதி - ஈற்றிலுள்ள ணகரமானது, வேற்றுமைக்கு - வேற்றுமைப் புணர்ச்சியிலும், இயல்பு ஆம் - (வல்லினம் வந்தால்) இயல்பாகும்:—(உ) உணவு எண்-உணவிற்குரிய (எள் என்னும் பொருளையுடைய) எண் என்னும் பெயர்க்கும், சாண் - சாண் என்னும் (நீட்டலளவைப்) பெயர்க்கும், (ஈற்று ணகரமானது), அல்வழியும் - அல்வழிப்புணர்ச்சியிலும், ட ஆகலும் ஆம் - (வல்லினம் வந்தால்) டகரமாகத் திரிதலையும் பொருந்தும்; (எ - று)

(உ - ம்.) (க) பாண் + தொழில் = பாண்டொழில் - சாதிப்பெயர்
அமண் + சேரி = அமண்சேரி - குழூஉப்பெயர்
பரண் + கால் = பரண்கால் - பரண்பெயர்
கவண் + கடுமை = கவண்கடுமை - கவண்பெயர் } வேற்றுமையிலும் இயல்பாயின.

(உ) எண் + பெரிது = எட்பெரிது — எண்பெயர்
சாண் + கோல் = சாட்கோல் — சாண்பெயர் } அல்வழியிலும் திரிந்தன.

'டவ்வாகலுமாம்' என்ற உம்மையால், எண் + கடிது—எண்கடிது, சாண் + கோல்—சாண்கோல் என இயல்பாதலே சிறப்பா மென்க.

'பிற' என்ற மிகையால் - வேற்றுமையில் பாண் + குடி = பாணக்குடி, அமண் + சேரி = அமணச்சேரி எனச் சாதி குழூஉப் பெயர்கள் அகரச்சாரியை பெறுதலும், அட்டேண் + துழனி = அட்டேண்டுழனி எனச் சிறுபான்மை பிற பெயரிறுதி இயல்பாதலும்; மண் + குடம் = மண்குடம், மட்குடம் என விகற்

* இவ்வியலின் உச - ஆஞ் சூத்திரம்.

பிறத்துவருதலும்; இருவழியிலும் இன்னும் ணகரமெய்யீற்றுள் அடங்காதவை உண்டாயின அவையும் கொள்க. (அ)

[ணகரவீற்றுச் சாதிப்பெயர்க்குச் சிறப்புவிதி.]

உகஉ. ணஃகான் கிளைப்பெய ரியல்பு மஃகான்
அடைவு மாகும் வேற்றுமைப் பொருட்கே.

(இ - ள்.) ணஃகான் கிளை பெயர் - ணகரத்தை இறுதியிலுடைய சாதிப்பெயர்,—இயல்பும் - வல்லினம் வர (திரியாமல்) இயல்பாதலும், அஃகான அடைவும்-அகரச்சாரியையைப் பெறுதலும், வேற்றுமைப் பொருட்கு - வேற்றுமைப் புணர்ச்சியில், ஆகும்—; (எ - று.)

(உ - ம்.) எயின் + குடி = எயின்குடி, எயினக்குடி
சேரி = எயின்சேரி, எயினச்சேரி,

'பொருட்கே' என்ற மிகையால் - எயின் + மரபு = எயின்மரபு எயின் + வாழ்வு = எயின்வாழ்வு எயின் + அணி = எயினவணி என மற்றைக் கணங்கள் வரினும் அகரச்சாரியை பெறுதலும்; எயின் + பிள்ளை = எயினப் பிள்ளை, எயின் + மன்னன் = எயினமன்னன் என அல்வழியில் அகரச்சாரியை பெறுதலும் கொள்க. (கூ)

['மீன்' என்னும் மொழிக்குச் சிறப்புவிதி.]

உசங. மீன்றவ் வொடுபொ ருஉம் வேற்றுமை வழியே.

(இ - ள்.) மீன் - மீன் என்னும் பெயரின் இறுதியிலுள்ள னகரம்,— வேற்றுமை வழி - வேற்றுமைப்புணர்ச்சியில் (வல்லெழுத்து வந்தால்), றவ்வொடு - றகரத்தோடு, பொருஉம் - விகற்பித்துநிற்கும்; (எ - று.)—னகரம் றகரமாகத் திரிந்தும் திரியாமலும் வரு மென்றபடி.

(உ - ம்.) மீன் + கண் = மீற்கண், மீன்கண் } விகற்பித்தது
செவி = மீற்செவி, மீன்செவி } வாதது (௧0)

['தேன்' என்னும் மொழிக்குச் சிறப்புவிதி.]

† உகச தேன்மொழி மெய்வரி னியல்பும் மென்மை
மேவி னிறுதி யழிவும் வலிவரின்
ஈறுபோய் வலிமெலி மிகலுமா மிருவழி

(இ - ள்.) (க) தேன் மொழி - தேன் என்னுஞ் சொல், மெய் வரின் - (மூன்றினம்) மெய்களும் (வருமொழிமுதலில்) வந்தால், இயல்பும் - (இறுதியிலுள்ள னகரமெய்) இயல்பாதலும்,—(உ) மென்மை மேவின் - மெல்லினம் வந்தால், இறுதி அழிவும் - அவ்விறுதி னகரமெய் (இயல்பாதலே யன்றிக்) கெடுதலும்,—(ங) வலி வரின் - வல்லினம் வந்தால், ஈறு போய் - அவ்வீற்று னகரமெய் (இயல்பாதலேயன்றிக்) கெட, வலி மெலி மிகலும்-(வந்த) வல்லினமாவது (அதற்கு இனமான) மெல்லினமாவது மிகுதலும், ஆம் - ஆகும், இரு வழி - வேற்றுமை அல்வழி இரண்டிலும்; (எ - று.)

| அல்வழி | (உ - ம்.) | வேற்றுமை. | |
|---|---|---|---|
| (க) தேன் + கடிது = தேன்கடிது | | + செம்மை = தேன்செம்மை | இயல்பு |
| மாண்டது = தேன்மாண்டது | | மாட்சி = தேன்மாட்சி | |
| யாது = தேன்யாது | | யாப்பு = தேன்யாப்பு. | |
| (உ) தேன் + மொழி = தேன்மொழி | | + மலர் = தேன்மலர் | இயல்பும், |
| = தேமொழி | | = தேமலர் | அழிவும் |
| (ங) தேன் + குழம்பு = தேன்குழம்பு | | + குடம் = தேன்குடம் | இயல்பும், |
| = தேக்குழம்பு | | = தேக்குடம் | வலிமிகலும், |
| = தேங்குழம்பு | | = தேங்குடம் | மெலிமிகலும். |

['எகின்' என்பதற்குச் சிறப்புவிதி.]

உகரு. மரமல் லெகின்மொழி யியல்பும் அகரம்
மருவ வலிமெலி மிகலு மாகும்.

(இ - ள்.) (க) மரம் அல் - மரத்தின் பெயரல்லாத, எகின் மொழி - (அன்னப்பறவையின் பெயராகிய) எகின் என்னுஞ் சொல், இயல்பும் - (அல்வழியில் இயல்பாதலேயன்றி வேற்றுமைப்புணர்ச்சியிலும் வல்லினம் வர இறுதி னகரம்) இயல்பாதலும்;—(உ) அகரம் மருவ - (இருவழியிலும்) அகரச்சாரியை பொருந்த, வலி மெலி மிகலும் - வல்லெழுத்தாவது (அதற்கு இனமான) மெல்லெழுத்தாவது மிகுதலும், ஆகும்—: (எ - று.)

(உ - ம்.) (க) எகின் + சிறை = எகின்சிறை } வேற்றுமையில் வலிவர இயல்
தலை = எகின்றலை } பாயிற்று.

(உ) எகின் + புள் = எகினப்புள் } அல்வழியில் அகரம்வர வலி
= எகினம்புள் } மெலி மிக்கன.

எகின் + கால் = எகினக்கால் } வேற்றுமையில் அகரம்வர வலி
= எகினங்கால் } மெலி மிக்கன.

அகரம்வருதற்கு, வருமெழுத்தைச் சொல்லாமையால், நாற்கணமும் கொள்க.

(உ - ம்.) எகின் + மாட்சி = எகினமாட்சி, எகினவாழ்க்கை, எகினவழகு

['குயின்' 'ஊன்' என்னுஞ்சொற்களுக்குச் சிறப்புவிதி.]

உகசு. குயினூன் வேற்றுமைக் கண்ணு மியல்பே.

(இ - ள்.) குயின் - குயின் என்னும் பெயரும், ஊன் - ஊன் என்னும் பெயரும்,—வேற்றுமைக்கணணும் - வேற்றுமைப்புணர்ச்சியிலும், இயல்பே - (இறுதி னகரம்) இயல்பேயாகும்; (எ - று.)—(குயின்-மேகம். ஊன் - தசை )

(உதாரணம்.)

| | |
|---|---|
| குயின் + கடுமை = குயின்கடுமை | ஊன் + தீமை = ஊன்றீமை |
| சிறுமை = குயின்சிறுமை | பெருமை = ஊன்பெருமை. |

['மின்' முதலிய நான்கிற்குச் சிறப்புவிதி.]

உகஎ. மின்பின் பன்கன் றொழிற்பெய ரனைய
கன்னவ் வேற்று மென்மையோ டுறழும்.

(இ - ள்.) (க) மின் பின் பன் கன் - மின் முதலிய நான்கு சொற்களும், தொழிற்பெயர் அனைய - * முதனிலைத்தொழிற்பெயர்போல யகரமல்லாத மெய்கள் வந்தால் உகரச்சாரியை பொருந்தும்;—(உ) கன் - (இவற்றுள்) கன் என்னுஞ் சொல், அ ஏற்று - (வல்லினம்வந்தால்) உகரச்சாரியையேயன்றி அகரச்சாரியையையும் பெற்று மென்மையோடு உறழும் - மெல்லெழுத்தோடு விகற்பிக்கும் [வருகிற வல்லெழுத்தாவது அதற்கு இனமான மெல்லெழுத்தாவது மிகப்பெறும்]; (எ - று.)—(பன் - ஓர்புல், கன் - சிறுதராசுதட்டு.)

| | (க) அல்வழி. | (உ - ம) வேற்றுமை. |
|---|---|---|
| மின், பின், பன், கன் + | கடிது=மின்னுக்கடிது | கடுமை=மின்னுக்கடுமை |
| | நன்று=மின்னுநன்று | நன்மை=மின்னுநன்மை |
| | வலிது=மின்னுவலிது | வன்மை=மின்னுவன்மை |

என இருவழியிலும் தொழிற்பெயர்போல உகரம் பெற்றன.

(உ) கன் + தட்டு=கன்னத்தட்டு =கன்னந்தட்டு } அல்வழியில் அகரம்பெற்று உறழ்ந்தது.

கன் + தூக்கு=கன்னத்தூக்கு =கன்னந்தூக்கு } வேற்றுமையில் அகரம் பெற்று உறழ்ந்தது. (௧௪)

['தன்' 'என்' 'நின்' என்பவற்றிற்குச் சிறப்புவிதி]

± ௨௧௫. தன்னென் னென்பவற் றீற்றுன வன்மையோ
டுறழு நின்னீ றியல்பா முறவே.

(இ - ள்.) (க) தன் என் என்பவற்று - (தான் யான் என்பவற்றின் விகாரமாகிய) தன் என் என்னும் மொழிகளினுடைய, ஈற்று ன - இறுதியிலுள்ள னகரமெய்யானது, வன்மையோடு உறழும் - (வல்லினம்வந்தால்) தனக்கு இனவல்லெழுத்தாகிய றகரமாகத் திரிந்தும் திரியாது இயல்பாகியும் விகற்பிக்கும்;—(உ) நின் ஈறு - (நீ என்பதன் விகாரமாகிய) நின் என்னும் மொழியினது இறுதியிலுள்ள னகரமெய்யானது, இயல்பு ஆம் - (வல்லினம் வந்தால் திரியாமல்) இயல்பேயாகும்; (எ - று.)—இவ்விதி வேற்றுமைப் புணர்ச்சிக்கே யென அறிக.

(உ - ம.) (க) தன் + பகை=தன்பகை, தற்பகை } என் + பகை=என்பகை, எற்பகை } னகரம் உறழ்ந்தது.

(உ) நின் + பகை=நின்பகை—னகரம் இயல்பாயிற்று.

'உறவே' என்றமிகையால் - உன் + பகை=உன்பகை என நீ என்பதன் திரிபாகிய உன் என்பதன் னகரம் வலிவர இயல்பாதலும், மான்குளம்பு வான்சிறப்பு என வேற்றுமையிற் சிறப்புவிதி சொல்லப்பெறாதவை இயல்பாதலும்; வரின் + கொள்ளும்=வரிற்கொள்ளும் என அல்வழியில் செயின் என்னும் வாய்பாட்டு வினையெச்சம் பொருந்தியிருத்தலால் இயல்பாகாமல் திரிதலும்;(மின் பின் முதலியவை மின்கடிது, மின்கடுமை என இருவழி

* ௨௦௭ - ஆஞ் சூத்திர விதி.

யிலும் சாரியைபெறுதலும் திரிதலு மின்றி வருதலும்); இன்னும் ணகரமெய்யீற்றுள் அடங்காதவை இருந்தால் அவையும் கொள்க. (கரு)

## மகர வீறு.

### [பொதுவிதி.]

உகக. மவ்வீ றொற்றழிந் துயிரீ றொப்பவும்
வன்மைக் கினமாத் திரிபவு மாகும்.

(இ - ள்.) (க) ம ஈறு - மகரத்தை இறுதியிலுடைய சொற்கள், (நாற்கணங்களும் வந்து புணரும்பொழுது), ஒற்று அழிந்து - (இறுதியிலுள்ள) மகரமெய் கெட்டு, உயிர் ஈறு ஒப்பவும் - உயிரீற்றுச்சொற்களைப்போலப் புணர்வனவும், —(உ) வன்மைக்கு இனம் ஆ(க) திரிபவும் - (வல்லினம் வந்தால் கெடாமல்) அவற்றிற்கு இனமான மெல்லெழுத்தாகத் திரிவனவும், ஆகும்—; (எ - று.)

உயிரீறொத்தலாவது - செயற்கையுயிரீறாய் நின்று இயற்கை யுயிரீறுபோல உயிர்வந்தால் * உடம்படுமெய் பெறுதலும், வல்லினம் வந்தால் § மிகுதலும், மெல்லினமும் இடையினமும் வந்தால் || இயல்பாகப் புணர்தலுமாம்.

அல்வழி. (உ - ம) வேற்றுமை.

| | | |
|---|---|---|
| (க) வட்டம் + ஆழி = வட்டவாழி<br>கல் = வட்டக்கல்<br>நேமி = வட்டநேமி<br>வாரி = வட்டவாரி | மரம் + அடி = மரவடி<br>கிளை = மரக்கிளை<br>நார் = மரநார்<br>வேர் = மரவேர் | இரு வழியிலும் மவ்வீறு கெட உயிரீறு ஒத்தது. |

(உ) மரம் + சிறிது = மரஞ்சிறிது. நம + கை = நங்கை—இனமாகத்திரிந்தது.

'இனமாத்திரியும்' என்றமையால், மரம் + பெரிது = மரம்பெரிது, சிறியேம் + பணபு = சிறியேம்பண்பு எனப் பகரம்வருமிடத்து மகரம் பகரத்துக்கு இனமாதலின் திரியாது நிற்கும். (கசு)

### [சிறப்புவிதி.]

உஉ0 வேற்றுமை மப்போய் வலிமெலி யுறழ்வும்
அல்வழி யுயிரிடை வரினியல் பும்முள.

(இ - ள்.) (க) வேற்றுமை - வேற்றுமைப்புணர்ச்சியில், (வல்லினம் வந்தால்), ம போய் - மகரம் கெட்டு, வலி மெலி உறழ்வும் - வல்லினமாவது (அவற்றிற்கு இனமான) மெல்லினமாவது மிகுதலும்;—(உ) அல்வழி - அல்வழிப்புணர்ச்சியில், உயிர்-உயிரும், இடை-இடையினமும், வரின் - வந்தால், இயல்பும் - (கெடாது) இயல்பாதலும், உள் உள்ளனவாம், (எ - று.)

(உ - ம.) (க) குளம் + கரை = குளக்கரை } வேற்றுமையில் மப் போய் வலி
= குளங்கரை } மெலி உறழ்ந்தது.

(உ) குளம் + அழகிது = குளமழகிது } அல்வழியில் உயிர் இடை வர
மரம் + வலிது = மரம்வலிது } இயல்பாயிற்று. (கஎ)

* கசுஉ - ஆஞ் சூத்திரம். § கசுரு - ஆஞ் சூத்திரம். || கஙஅ - ஆஞ் சூத்திரம்.

['நும்' முதலிய நான்கிறகுச் சிறப்புவிதி.]

உஉக. நும்தம்,
எம்நம மீறு மவ்வரு ஞநவே.

(இ - ள்.) நும தம எம நம - நும முதலிய நான்கு விகாரமொழிகளுக்கும், ஈறு ஆம் - இறுதியாகிய, ம - மகரமெய்யானது,—வரும ஞ ந - (வரு மொழிமுதலில) வருகிற ஞகர நகரங்களாகத் திரியும்: (எ - று.)—இவை - முறையே நீ, தாம யாம, நாம எனபவற்றின விகாரங்கள்; வேற்றுமை.

(உதாரணம)

நும, தம, } + ஞாண = நுஞ்ஞாண, தஞ்ஞாண, எஞ்ஞாண, நஞ்ஞாண.
எம, நம } + நூல் = நுந்நூல், தந்நூல, எந்நூல, நந்நூல

உம + ஞாண = உஞ்ஞாண, உம + நூல = உந்நூல் என நீ எனபதன திரிபாகிய உம எனபதன ஈற்று மகரமும வரும ஞ ந வாகத் திரிதலை உரையிற்கோடலாற் கொள்க (கஅ)

['அகம்' என்பதற்குச் சிறப்புவிதி]

உஉஉ. அகமுனர்ச செவிகை வரினிடையன கெடும்.

(இ - ள) அகம முனர்-அகம எனனும உள்ளிடப்பெயரின்முன், செவி கை வரின் - செவி கை (எனனுஞ் சினைப்பெயர்கள்) வந்தால்,— இடையன - (நிலைமொழியிறுதிமகரம னமைக்கு இனமாகத்திரிதலேயனறி அதன) நடுவில் நின்ற ககரமெய்யும (அதனமேலேறிய) அகரவுயிரும, கெடும்-அழியும்.

(உ - ம) அகம + செவி = அஞ்செவி; அகம + கை = அங்கை.

'கெட்டேவரும' எனறமையால் - அகஞ்செவி, அகங்கை எனவும வரும.

ககர சகர முறைப்படி 'கைசெவி' எனறது 'செவிகை' என்று சகரத்தை முன்னேசொன்னது. அகம + சிறை = அஞ்சிறை எனச சிறுபான்மை பிறசொலலும வருவது தோன்றவெனக. (கக)

['ஈம்' 'கம் 'உரும்' என்பவற்றிற்குச சிறப்புவிதி

உஉங. ஈமும்,
கமமு முருமுந் தொழிற்பெயர் மானும்
முதலன வேற்றுமைக் கவ்வும் பெறுமே.

(இ - ள்.) (க) ஈமும் கமமும உருமும-ஈம கம உரும எனனும் மூன்று சொற்களும, தொழிற்பெயர் மானும - (இருவழியிலும) * முதனிலைத்தொழிற்பெயர்போல (யகரமலலாதமெய்கள் வந்தால்) உகரச்சாரியை பெற்றுமுடியும்;— (உ) முதலன - (இவற்றுள்) முதலில் நின்ற ஈமும கம்மும, வேற்றுமைக்கு - வேற்றுமைப்புணர்ச்சியில், அவ்வும் பெறும - (உகரச்சாரியையை யேயன்றி) அகரச்சாரியையையும் பெறும; (எ - று.)—(ஈம் - நன்காடு. கம் - தொழில் உரும் - இடி)

---

* உ0எ - ஆஞ் சூத்திர விதி.

நம் } கடிது = நமுக்கடிது, எமுக்கடிது, உருமுக்கடிது
எம் } + நீண்டது = நமுநீண்டது, எமுநீண்டது, உருமுநீண்டது } அல்.
உரும் } வலிது = நமுவலிது, எமுவலிது, உருமுவலிது

நம் } கடுமை = நமுக்கடுமை, எமுக்கடுமை, உருமுக்கடுமை
எம் } + நீட்சி = நமுநீட்சி, எமுநீட்சி, உருமுநீட்சி } வேற்.
உரும் } வன்மை = நமுவன்மை, எமுவன்மை, உருமுவன்மை

என இருவழியிலும் உகரச்சாரியை பெற்றன.

(உ) நம் + குடம் = நமக்குடம் } முதலன வேற்றுமையில் அகரச்சாரியை
எம் + குடம் = எமக்குடம் } பெற்றன (உ0)

## யகர ரகர ழகர வீறு.

### [யரழ ஈற்றின்முன் வல்லினம்]

உஉச. யரழ முன்னர்க் கசதப அல்வழி
இயல்பு மிகலு மாகும் வேற்றுமை
மிகலு மினத்தோ டுறழ்தலும் விதிமேல்.

(இ - ள்) (க) யரழ முன்னர் - யகர ரகர ழகர மெய்களின்முன், கசதப - ககர சகர தகர பகரங்கள் வந்தால்,—அல்வழி - அல்வழியில், இயல்பும் - இயல்பாதலும், மிகலும் - மிகுதலும், (உ) வேற்றுமை - வேற்றுமையில், மிகலும் - மிகுதலும், இனத்தோடு உறழ்தலும் - வல்லினமாவது மெல்லினமாவது மிகுந்து விகற்பித்தலும், விதி ஆகும்—; (எ - று)

(உ - ம்.) (க) வேய் + கடிது = வேய்கடிது | மெய் + கீர்த்தி = மெய்க்கீர்த்தி
வேர் + சிறிது = வேர்சிறிது | கார் + பருவம் = கார்ப்பருவம்
வீழ் + தீது = வீழ்தீது | யாழ் + கருவி = யாழ்க்கருவி

என அல்வழியில் இயல்பும் மிகலும் ஆயின.

(உ) நாய் + கால் = நாய்க்கால்
தேர் + தட்டு = தேர்த்தட்டு } வேற்றுமையில் வலிமிகுந்தது.
ஊழ் + பயன் = ஊழ்ப்பயன்

வேய் + குழல் = வேய்க்குழல், வேய்ங்குழல் } வேற்றுமையில்
ஆர் + கோடு = ஆர்க்கோடு, ஆர்ங்கோடு } இனத்தோடு உற
குமிழ் + கோடு = குமிழ்க்கோடு, குமிழ்ங்கோடு } ழ்ந்தன

'மேல்' என்ற மிகையால் வாய் + புகுவது = வாய்புகுவது என வேற்றுமையில் இயல்பாதலும்; பாழ் + கிணறு = பாழ்க்கிணறு பாழ்ங்கிணறு என அல்வழியில் இனத்தோடு உறழ்தலும்; வேய் + யாது = வேயாது, வேய் + யாப்பு = வேயாப்பு எனத் தனிக்குறிலைச் சாராத யகரவீறு யகரம்வர இருவழியிலும் கெடுதலும்; இன்னும் அடைகாத்தவைக ளிருந்தால் அமைப்பும் கொள்க.

### ['தமிழ்', 'தாழ்' என்பவற்றிற்குச் சிறப்புவிதி]

உஉரு. தமிழவ் வுறவும் பெறும்வேற் றுமைக்கே
தாழுங் கோல்வந் துறுமே லற்றே.

(இ - ள.) (க) தமிழ - தமிழ் என்னுஞ சொல், வேற்றுமைககு-வேற்று மைப்புணாசசியில, (நாறகணோடும வநதால), அ உறவும - அகரசசாரியை பொருநதவும, பெறும—;—(உ) தாழும - தாழ் என்னுஞ சொல்லும. கோல் வநது உறுமேல - கோல் எனனுஞ சொல் (வருமொழியாக) வநது பொருந்து மாயின், அறறே - அவ்வாறேயாம [அகரசசாரியை பெறும]; (எ - று.)

தமிழுககு வருமெழுததைச சொலலாமையால், நாறகணோடும கொள்க.

(உ - ம.) (க) தமிழ் + பிளளை = தமிழப்பிளளை. தமிழநாகன், தமிழவள வன், தமிழவரசன எனவும; உ) தாழ + கோல் = தாழககோல் எனவும்வரும.

தமிழையுடைய பிளளை தாழைததிறககுங கோல என விரியும். தாழக கோல் திறவுகோல்; தாழாகிய கோலஎன இருபெயரொட்டுபபணபுததொகை யாககொணடு, இருவழியிலும அகரசசாரியை பெறுமெனினும பொருநதும

[‘கீழ்’ என்பதறகுச் சிறப்புவிதி]

உஉகூ. கீழினமுன் வன்மை விகறபமு மாகும.

(இ - ள.) கீழின் முன்-கீழ எனனுஞ சொலலினமுனவருகிற,வனமை-வல்லினம, விகற்பமும ஆகும - (ஒருகால இயல்பாகியும ஒருகாலமிககும வருகிற) விகற்பததையும பொருநதும; (எ - று)

(உ - ம.) கீழ் + குலம = கீழகுலம, = கீழக்குலம | கீழ் + சாதி = கீழ்சாதி, = கீழ்ச்சாதி. (உ௩)

## லகர ளகர வீறு.

[பொதுவிதி]

உஉஎ லளவேற் றுமையில றடவு மலவழி
அவற்றோ டுறழவும வலிவரி னாமெலி
மேவி னணவு மிடைவரி னியலபும
ஆகு மிருவழி யானு மென்ப.

(இ - ள.) (க) லள-(மொழியிறுதியிலுளள) லகர ளகர மெய்கள்,—வலி வரின் - வல்லினம வநதால் வேறறுமையில—றட வும - (முறையே) றகர டகர மெய்களாகத திரிதலும,—(உ) அல்வழி-அல்வழியில், அவற்றோடு உறழ் வும்-அந்த றகர டகரஙகளாகத திரிந்தும திரியாமலும விகற்பிததலும, ஆம-ஆகும —(ங) இருவழியானும - வேறறுமை அல்வழி இரணடிலும, மெலி மேவின் - மெல்லினம வந்தால் ன ண வும - (முறையே) னகர ணகர மெய்க ளாகத திரிதலும,—(ச) இடை வரின - இடையினம வநதால், இயலபும - இயல்பாதலும, ஆகும— என்ப - எனறுசொல்வா (புலவா), (எ-று.)—‘இரு வழியான’ என்றது, உருபுமயககம

(உ - ம (க) கால் + குறை = காற்குறை } வேறறுமையில் வலிவர றகர
முள் + குறை = முட்குறை } டகரஙகளாகத திரிந்தன.

(உ) கால் + குறிது = காலகுறிது, காற்குறிது } அல்வழியில்வலிவர
முள + குறிது = முளகுறிது, முட்குறிது } உறழ்நது வந்தன.

(ங) வே { கல் + நெரிந்தது = கன்னெரிந்தது
வாள் + மாண்டது = வாண்மாண்டது
அ { கல் + மலை = கன்மலை
வாள் + மாண்பு = வாண்மாண்பு } இருவழியிலும் மெல்லினம் வர னகர ணகரங்களாகத் திரிந்தன.

(ச) வே { கல் + யாது = கல்யாது
முள் + வலிது = முள்வலிது
அ { கல் + யானை = கல்யானை
தோள் + வலிமை = தோள்வலிமை } இருவழியிலும் இடையினம் வர இயல்பாயின.

'அல்வழி யனைத்தும் மெல்லென னுறழ்வும்' என்றாலும், இவற்றோடு மயங்காத தகரம் வருமிடத்து ஏற்புழிக்கோடலால், கற்றீது, முட்டீது எனத் திரிந்தேவரும்.

[சிறப்புவிதி]

I உஉஎ. குறில்வழி லளத்தவ் வணையி னாய்தம்
ஆகவும் பெறூஉ மல்வழி யானே

(இ - ள்.) குறில் வழி - தனிக்குறிலின்பின் நின்ற, ல ள - லகர ளகர மெய்கள்,—அல்வழியான - அல்வழிப் புணர்ச்சியில், த அணையின் - தகரம் (வருமொழிமுதலில்) வருமாயின், ஆய்தம் ஆகவும் பெறூஉம் - (றகர டகரமெய்களாகத் திரிதலேயன்றி) ஆய்தமாகத் திரிதலையும் பொருந்தும்; (எ - று.)— 'அல்வழியான' என்பது - உருபுமயக்கம்.

(உ - ம்.) கல் + தீது = கஃறீது, முள் + தீது — முஃடீது.

இது, ஆய்தக்குறுக்கம்; கஎ - ஆம் சூத்திரத்திற் கூறியது. (உரு)

[லகரளகர வீற்றின்கேடு முதலியன.]

† உஉஅ. குறில்செறி யாலள அல்வழி வந்த
தகரந் திரிந்தபிற் கேடுமீ ரிடத்தும்
வருநத் திரிந்தபின் மாய்வும் வலிவரின்
இயல்புந் திரிபு மாவன வுளபிற.

(இ - ள்.) (க) குறில் செறியா - தனிக்குறிலைச் சாராத, ல ள - லகர ளகர மெய்கள்,—அல்வழி - அல்வழிப்புணர்ச்சியில், வந்த - (வருமொழிக்கு முதலாக) வந்த, தகரம்—, திரிந்த பின் - (* றகர டகரங்களாகத்) திரிந்த விடத்து, கேடும் - தாம் கெடுதலும்:—(உ) ஈர் இடத்தும் - அல்வழி வேற்றுமை யிரண்டிலும், வரு ந திரிந்தபின் - (வருமொழிக்கு முதலாக) வந்த நகரம் (* னகர ணகரங்களாகத்) திரிந்தவிடத்து, மாய்வும் - தாம் கெடுதலும்;— (ங) வலி வரின் - (வருமொழி முதலில்) வல்லெழுத்து வந்தால், இயல்பும் திரிபும் - (அல்வழிப்புணர்ச்சியில் விகாரப்படாமல்) இயல்பாதலும் திரிதலும் (வேற்றுமைப்புணர்ச்சியில்) திரியாமல் இயல்பாதலும், ஆவன - பொருந்துவன, உள - உண்டு; (எ - று.)

* இவ்வியலின் ௩௯ - ஆம் சூத்திரம்.

(உ - ம்.) (க) தோன்றல் + தீயன = தோன்றறீயன } அல்வழியில் வந்த தகரம்
வேள் + தீயன = வேடீயன } திரிய லள கெட்டன.

(உ) தோன்றல் + நல்லன = தோன்றநல்லன } அல்வழியில் வந்த நகரம்
வேள் + நல்லன = வேணல்லன } திரிய லள கெட்டன.

தோன்றல் + நன்மை = தோன்றன்மை } வேற்றுமையில் வந்த நகரம் திரியலள கெட்டன
வேள் + நன்மை = வேண்மை }

(௩) கால் + கடிது = கால்கடிது } அல்வழியில் வலிவர லள
மரங்கள் + கடிய = மரங்கள்கடிய } பொதுவிதிப்படி விகற்பி
வேல் + படை = வேற்படை } யாமல் இயல்பும் திரிபு
வாள் + படை = வாட்படை } மாயின

கால் + குறித்து = கால்குறித்து } வேற்றுமையில் வலிவரப் பொது
வாள் + போழ்ந்து = வாள்போழ்ந்து } விதிப்படி திரியாமல் இயல்பாயின

'பிற' என்ற மிகையால் - தோன்றன்மை, வேண்மை எனக் குறில் செறியா லள வேற்றுமையிலும் தகரந்திரியுமிடத்துக் கெடுதலும்; காற்றுணை, தாட்டுணை என அல்வழியிலும் கெடாமையும்; விற்படை எனக் குறில் செறிந்த லகரம் அல்வழியில் உறழாமல் திரிதலும்; கொல்களிறு, கொள்பொருள் எனக் குறில் செறிந்த லகர ளகரங்கள் அல்வழியில் உறழாமல் இயல்பாதலும்; அகல் + பரப்பு = அகன்பரப்பு, விழல் + காடு = விழன்காடு என இருவழியிலும் லகரம் வல்லினம் வர னகரமாகத் திரிதலும், இன்னும் இவ்விரண்டுறழ்வுள் அடங்காதன உளவாயின் அவையும் கொள்க.

(உயர்திணையிற் காட்டிய உதாரணங்கள் மயங்கவிதியிலடங்கவிட்டது வருதலால் 'சில விகாரமா முயர்திணை' என்றவற்றுள் அடங்காவாம்.) (உகூ)

[லகர ளகரவீற்றுத் தொழிற்பெயர்க்குச் சிறப்புவிதி]

உ௩0 லளவிறு தொழிற்பெய ரீரிடத்து முவ்வுறு
வலிவரி னல்வழி யியல்பு மாவனவுள.

(இ - ள்.) (க) லள இறு தொழிற்பெயர் - லகர ளகரங்களை இறுதியாகவுடைய (விகுதி பெற்ற) தொழிற்பெயரும் ளகரத்தை இறுதியாகவுடைய (முதனிலைத்திரிந்த) தொழிற்பெயரும், ஈர் இடத்தும் - இருவழியிலும், உ உறும் - (யகரமல்லாத மெய்கள் வந்தால்) உகரம் பெறுவாம்;—(உ) வலிவரின் - வல்லினம் வந்தால், அல்வழி - அல்வழியில், இயல்பும் ஆவன - (உறழாமல்) இயல்பாகும் தொழிற்பெயர்களும், உள - சில உண்டு; (எ - று.)

(உ - ம்.) (க) ஆடல்சிறந்தது, விக்குண்ணாறு, கோள்வலிது—அல்வழி.
கோட்கடுமை, ஆடன்மை, விக்குள்வன்மை—வேற்றுமை.

என இருவழியிலும் உகரச்சாரியை பெறாமல் முடிந்தன.

(உ) நடத்தல்கடிது—அல்வழியில் உறழாமல் இயல்பாயிற்று. (உள)

[வல், என்பதற்குச் சிறப்புவிதி.]

உ௩௧. வல்லே தொழிற்பெய ரற்றிரு வழியும்
பலகை நாய் வரினும் வேற்றுமைக் கவ்வுமாம்.

(இ - ள்.) (க) வல - வல என்னும பெயா, இரு வழியும - இருவழியி லும, தொழிறபெயா அற்று - * தொழிற்பெயாபோல யகரமல்லாத மெய்கள் வநதால உகரச்சாரியை பெறும;— (உ) பலகை நாய வரினும - பலகை நாய் என்னும பெயாகள வநதாலும (பிறபெயாகள வந்தாலும), வேற்றுமைக்கு - வேறறுமையில், அவ்வும ஆம-(உகரச்சாரியையேயல்லாமல) அகரச்சாரியை யும பெறும; (எ - று.)—(வல் - சூதாடுகருவி)

'வரினும்' என்ற எதிரதுதழுவிய எச்சவுமமையால் 'பிறபெயா' என்ப தும, 'அவ்வும்' என்ற இறநததுதழுவிய எச்சவுமமையால 'உகரச்சாரியையே யலலாமல' என்பதும பெறபபட்டன.

(க) அலவழி. (உ - ம) வேற்றுமை.

| | |
|---|---|
| வல் + கடிது = வல்லுககடிது | வல் + கடுமை = வல்லுககடுமை. |
| நன்று = வல்லுநன்று | நன்மை = வல்லுநன்மை, |
| வலிது = வல்லுவலிது | வலிமை = வல்லுவலிமை |

என இருவழியிலும யகரமல்லாத மெய்கள் வர உகரச்சாரியை பெற்றது.

| | |
|---|---|
| (உ) வல் + பலகை = வல்லுப்பலகை | வல் + புலி = வல்லுப்புலி |
| = வல்லபபலகை | = வல்லப்புலி |
| + நாய = வல்லுநாய | குதிரை = வல்லுக்குதிரை |
| = வல்லநாய | = வல்லககுதிரை |

என வேற்றுமையில் பலகை நாயும பிறவும வர, உகரமும அகரமும பெற் றது. இவை-வல்லினது அறைகிறிய பலகை, வல்லினுள் நாய்என விரியும்.

['நெல்' முதலிய நான்கிற்குச் சிறப்புவிதி.]

உருஉ. நெலலுஞ செலலுங் கொலலுஞ் சொல்லும்
அலவழி யானும் றகர மாகும.

(இ - ள.) நெல்லும செல்லும கொல்லும சொல்லும் - நெல் முதலிய நான்கு சொற்களின் ஈற்று லகர மெய,—அல்வழியானும - அல்வழியிலும், றகரம ஆகும-(பொதுவிதியால் உறழாமல வேற்றுமையிற்போல) றகரமெய் யாகத திரியும: (எ - று)—செல - மேகம், கொல் - கொல்லனது தொழில்.)

'நெல' முதலில் வைததது, பிறவும் பெய ரென்றறகு.

| | |
|---|---|
| (உ - ம.) நெல் + கடிது = நெறகடிது | கொல் + தீது = கொற்றீது |
| செல் + சிறிது = செற்சிறிது | சொல் + பெரிது = சொறபெரிது. |

['இல்' என்பதற்குச் சிறப்புவிதி.]

உருரு. இலலெ னின்மைச சொற்கு ஐயடைய
வன்மை விகறபமு மாகா ரத்தொடு
வன்மை யாகலும் மியல்பு மாகும்.

(இ - ள்.) (க) இல் என் - இல் என்கிற, இன்மை சொற்கு-இன்மைப் பணபை உணாததுகின்ற சொலலுககு, ஐ அடைய - ஐகாரச்சாரியை

* உ0எ - ஆஞ் சூததிர விதி.

பொருந்த, வன்மை - (அவ்விடத்து வருகின்ற) வல்லினம, விகறபமும - (மிகுதலும மிகாமலும) விகற்பித்தலும,—(உ) ஆகாரதமொடு - ஆகாரச்சாரியை பொருந்த, வன்மை ஆகலும- (அவ்விடத்துவருகின்ற) வல்லினம் மிகுதலும. (ங) இயல்பும - (இவ்விருவிதியும பெறாமல) இயல்பாதலும, ஆகும - பொருந்தும்; (எ - று.)

(உ-ம.) (க) இல் + பொருள் = இல்லைப்பொருள் } ஐகாரச்சாரியை வர
= இல்லைபொருள் } வன்மைவிகற்பித்தது

(உ) இல் + பொருள் = இல்லாப்பொருள—ஆகாரச்சாரியைபெறவலிமிக்கது.

(ங) இல் + பொருள் = இல்பொருள—இருவிதியும்பெறாமல் இயல்பாயிற்று

சாரியைக்கு வருமெழுத்தைச்சொல்லாமையால், நாற்கணமும கொளக.

| | | |
|---|---|---|
| | ஞானம = இல்லைஞானம, இல்லாஞானம | மற்றை மூக்கணமும் |
| இல் + | வன்மை = இல்லைவன்மை, இல்லாவன்மை | வரச சாரியைபெற்றது. |
| | அணி = இல்லையணி, இல்லாவணி | |

இல்பொருள என்பதுபோல இல்லைபொருள இல்லாப்பொருள் என்பனவும இருகுப் பணபுததொகையே: இவற்றுள ஐகாரமும்ஆகாரமு'ம்சாரியை.

இல்லைபொருள் என்பது - பணபுத தொகைநிலைததொடராகவும,குறிப்பு வினைமுற்றுத தொகாநிலைத தொடராகவும: இல்லாபபொருள் என்பது பணபுததொகைநிலைததொடராகவும, ஈறுகெட்ட எதிர்மறைக்குறிப்புப்பெயரெசசத் தொகாநிலைததொடராகவும கொள்ளபபடு மாதலால் இவற்றுள ஒன்றற்குஒன்று வேறுபாடு என்னவென்றால் —தொகைநிலைகள ஒருமொழிபோல விட்டிசையாமலிருததலும, தொகாநிலைகள தொடாமொழிபோல விட்டிசைததலும் வேறுபாடு என அறிக

['புள்' 'வள்' என்பவற்றிற்குச் சிறப்புவிதி]

உஙச. புள்ளும வள்ளுந் தொழிற்பெயா மானும்

(இ - ள்.) புள்ளும் வள்ளும - புள வள என்னும இரணடு சொறகளும, தொழிற்பெயா மானும் - (இருவழியிலும பொதுவிதியால் முடிதலேயலலாமலும) * தொழிற்பெயர்போல (யகரமலலாத மெய்கள வநதால) உகரச்சாரியையைப் பெற்றும புணரும; (எ - று.)

(உ-ம்.) புள + கடிது = புளளுக்கடிது, புள்ளுநன்று, புள்ளுவலிது } அல்வழி.
வள + கடிது = வளளுககடிது, வளளுநனறு, வள்ளுவலிது }

புள் + கடுமை = புளளுக்கடுமை, புளளுநன்மை, புள்ளுவன்மை } வேற்று
வள + கடுமை = வளளுககடுமை, வளளுநனமை, வளளுவன்மை } மை. ()

## வகர வீறு.

[வகரவீறறுச் சுட்டுப்பெயர்களுக்குச் சிறப்புவிதி]

‡ உஙரு. சுட்டு வகரமூ வினமுற முறையே
ஆயதமு மெனமையு மியலபு மாகும்.

* உ௦எ - ஆஞ சூததிரம.

(இ - ள்.) சுட்டு வகரம் - (அவ் இவ் உவ் என்னும் அஃறிணைப்பலவின் பாற்) சுட்டுப்பெயர்களின் இறுதியி லுள்ள வகரமெய்,—மூ இனம் உற - வல்லின மெல்லின இடையினங்கள் வர,—முறையே - முறையாக,—(க) ஆய்தமும்—, (உ) மென்மையும் - வரும் மெல்லினமும், (ங) இயல்பும்—, ஆகும்—: (எ - று.)

(உ - ம்.)(க) அவ் + கடிய = அஃகடிய—வலிவர ஆய்தமாயிற்று,
(உ) அவ் + ஞான்றன = அஞ்ஞான்றன-மெலிவர மெலியாயிற்று.
(ங) அவ் + யாவை = அவ்யாவை—இடைவர இயல்பாயிற்று.

இவ் உவ் என்பவற்றோடும் இப்படியே கூட்டுக.

'இச்சொற்கள் வேற்றுமைப்புணர்ச்சியில் அற்றுச்சாரியையைப்பெறும்' என * மேல் எடுத்துக்கூறுதலால், இவ்விதி அல்வழிக்கெனக் கொள்க (ஙஉ)

['தெவ்' என்பதற்குச் சிறப்புவிதி.]

† உஙசு. தெவ்வென் மொழியே தொழிற்பெய ரற்றே
மவ்வரின் வஃகான் மவ்வு மாகும்.

(இ - ள்.) (க) தெவ் என் மொழி - தெவ் என்னும் பெயர், தொழிற்பெயர் அற்று - § தொழிற்பெயர்போல யகரமல்லாத மெய்களோடு புணருமிடத்து உகரச்சாரியை பெற்று முடியும்;—(உ) ம வரின் - (வருமொழிமுதலில்) மகரம் வந்தால், வஃகான் - (நிலைமொழியீற்று) வகர மெய், மவ்வும் ஆகும் - (உகரச்சாரியை பெறுதலேயன்றி ஒரோவிடத்துச்சாரியைபெறாமல்) மகரமெய்யாகத் திரியவும் பெறும்; (எ - று.)

¶ தெவ் - பகைமை இது ஆகுபெயராய்,பகைவனையும் உணர்த்திநிற்கும்.

| (க) அல்வழி. | (உ - ம்.) வேற்றுமை. | |
|---|---|---|
| தெவ் + கடிது = தெவ்வுக்கடிது | + கடுமை = தெவ்வுக்கடுமை | |
| நன்று = தெவ்வுநன்று | நன்மை = தெவ்வுநன்மை | உகரம் |
| வலிது = தெவ்வுவலிது | வலிமை = தெவ்வுவலிமை | பெற்றது. |

(உ) தெவ் + மன்னர் = தெம்மன்னர்—அல்வழி. } மகரம் வர, வகரம்
தெவ் + முனை = தெம்முனை —வேற்றுமை. } மகரமாகத்திரிந்தது.

## வருமொழித் திரிபு.

[வருமொழிமுதலில் தகர நகரம் திரிதல்.]

‡ உஙஎ. னலமுன் றனவும் ணளமுன் டணவும்
ஆகுந் தநக்க ளாயுங் காலே.

(இ - ள்.) ன ல முன் - னகர லகர மெய்களின்முன், த நக்கள் - (வருகிற) தகர நகரங்கள், ற ன வும் - (முறையே) றகர னகரங்களாகவும்; ண ள முன் - ணகர ளகர மெய்களின்முன் (தகர நகரங்கள்), ட ண வும்-(முறையே) டகர ணகரங்களாகவும், ஆகும்—; ஆயுங்கால் - ஆராயுமிடத்து; (எ-று.)

* உருo-ஆஞ் சூத்திரம். § உஎo-ஆஞ் சூத்திரம். ¶ "தெவ்வுப் பகையாகும்" என்பது, தொல்காப்பியத்து உரிச்சொல்லியல்.

னகர லகரங்களின் முன் வருகிற தகரம றகரமாகவும், னகர லகரங்களின் முன்வருகிற நகரம னகரமாகவும்; ணகர ளகரங்களின் முன் வருகிற தகரம டகரமாகவும், ணகர ளகரங்களின் முன் வருகிற நகரம ணகரமாகவும் திரியு மென்றபடி.

(உ-ம்.)

| | | | | |
|---|---|---|---|---|
| பொன் | + தீது | = பொன்றீது | — அல்வழி | னகரத்தின் முன் தகரம றகரமாயிற்று. |
| | தீமை | = பொற்றீமை | — வேற்றுமை | |
| பொன் | + நன்று | = பொன்னன்று | — அல்வழி | னகரத்தின் முன் நகரம னகரமாயிற்று |
| | நன்மை | = பொன்னன்மை | — வேற்றுமை | |
| கல் | + தீது | = கற்றீது | — அல்வழி | லகரத்தின் முன் தகரம றகரமாயிற்று |
| | தீமை | = கற்றீமை | — வேற்றுமை | |
| கல் | + நன்று | = கன்னன்று | — அல்வழி | லகரத்தின் முன் நகரம னகரமாயிற்று. |
| | நன்மை | = கன்னன்மை | — வேற்றுமை | |
| மண் | + தீது | = மண்டீது | — அல்வழி | ணகரத்தின் முன் தகரம டகரமாயிற்று. |
| | தீமை | = மட்டீமை | — வேற்றுமை | |
| மண் | + நன்று | = மண்ணன்று | — அல்வழி | ணகரத்தின் முன் நகரம் ணகரமாயிற்று. |
| | நன்மை | = மண்ணன்மை | — வேற்றுமை | |
| முள் | + தீது | = முட்டீது | — அல்வழி | ளகரத்தின் முன் தகரம டகரமாயிற்று |
| | தீமை | = முட்டீமை | — வேற்றுமை | |
| முள் | + நன்று | = முண்ணன்று | — அல்வழி | ளகரத்தின் முன் நகரம் ணகரமாயிற்று. |
| | நன்மை | = முண்ணன்மை | — வேற்றுமை | |

'ஆயுங்காலே' என்றதனால், அல்வழி வேற்றுமைப் பொருள்நோக்கத்தாலல்லாமல் மயக்கவிதியில்லாமையால் இப்படிப் புணரும் முதல் ஈறு இரண்டனுள் ஒன்றாவது இரண்டுமாவது விகாரப்பட்டு மயங்குதற்கு உரியனவாகிப் புணருமென்பதும், மயக்கவிதியுள்ளனவற்றிற்கு விகாரம் அல்வழி வேற்றுமைப் பொருள்நோக்கத்தால் வருமென்பதும் பெறப்பட்டன.) (௩௪)

## வேற்றுமைப்புணர்ச்சிக்குச் சிறப்புவிதி.

[உருபுபுணர்ச்சிமுடிபைப் பொருட்புணர்ச்சிக்கும் ஏற்றுதல்]

உ௩௫. உருபின் முடிபவை யொக்குமப் பொருளினும்.

(இ - ள்.) உருபின் முடிபவை-மேல் உருபுபுணரியலில் உருபுபுணர்ச்சியிலே முடியும் முடிபுகள்,—அப் பொருளினும்-அவ்வுருபுகள் தொக்குநின்று அப்பொருள் தோன்றப் புணரும் பதப்புணர்ச்சியிலும், ஒக்கும் ஒத்துமுடியும்; (எ - று.)

(உ - ம்.) (க) எல்லாவற்றநும்—உருபுபுணர்ச்சி.

எல்லாவற்றுக்கோடும்—வேற்றுமைப்பொருட்புணர்ச்சி.

உருபுபுணர்ச்சியில் அஃறிணையில் அற்றும் உருபின்மேல் உம்மும் பெறுதல்போல, உருபுதொக்க பதப்புணர்ச்சியிலும் பெற்றன [உ௪௫ - ஆம் சூத்திரம்.]

உருபுபுணர்ச்சியாவது - வேற்றுமையுருபு வெளிப்பட்டு நிற்கப் புணரும் புணர்ச்சி; மரத்திற்கிளை என்பது போல. வேற்றுமைப்பொருட்புணர்ச்சியாவது - வேற்றுமையுருபு தொக்குநிற்க அவ்வுருபின் பொருளமையப் புணரும் புணர்ச்சி; மரக்கிளை என்பதுபோல.

(உ) எல்லாநமதும்—உருபுபுணர்ச்சி.
எல்லாநமகையும—வேற்றுமைப்பொருட்புணர்ச்சி.

* உருபுபுணர்ச்சியில் உயர்திணையில நமமும உருபின்மேல உமமும பெறுதல்போல, உருபுதொகக பதப்புணர்ச்சியிலும பெறறன.

எல்லாதமதும, எல்லாதமகையும; எல்லீருமதும, எல்லீருமகை யும; தனது, தன்கை; ஆனது, ஆனகோடு; அவறறது, அவற்றுககோடு; அதனது, அதனகோடு என உருபுபுணர்ச்சிபோலப பதபபுணர்ச்சியும முடி நதவாறு காணக. இவற்றில, முன்னது உருபுபுணர்ச்சி; பின்னது பதப் புணர்ச்சி. (௩௫)

## புணரியல்களுக்குப் புறனடை.

௨௩௬. இடையுரி வடசொலி னியம்பிய கொளாதவும
போலியு மரூஉவும பொருந்திய வாற்றிறகு
இயையப புணர்த்தல் யாவர்க்கு நெறியே.

(இ - ள்.) (க) இடை - இடைச்சொறகளுளளும, (உ) உரி - உரிசசொற களுளளும், (௩) வடசொலின் - வடசொற்களுளளும, இயமபிய - (உயிரீற றுபபுணரியல் மெய்யீற்றுப் புணரியல்களிலே தோனறல திரிதல கெடுதல இயலபாதல எனச) சொலலிய புணர்ச்சியிலககணஙகள, கொளாதவும - பொருநதாமல (வேறுபட்டு) வருவனவும (ச) போலியும-இலககணபபோலி மொழிகளும; (ரு) மரூஉவும - மரூஉமொழிகளும, பொருநதிய ஆற்றிறகு - (உலகவழககுச செயயுள வழககுகளில) நடககும் முறைமைககு, இயைய - பொருநதுமபடி, புணர்த்தல - கூட்டிமுடித்தல்,—யாவர்க்கும - (அறிவுடை யோர்) எல்லாரககும, நெறி - முறைமையாம; (எ - று.)

(உதாரணம.)

(க) ஆன் + கன்று = ஆன்கன்று; வண்டி + கால = வண்டின்கால — வேற்றுமையில் சாரியையிடைச்சொற்களின் ஈற்று னகரம இயலபாயிறறு.

(உ) மழ + களிறு = மழககளிறு; தட + தோள = தடந்தோள — உரிச்சொல்லீற்று உயிர்முன வலிவர இயல்பாயும,மெலிமிகுநதுமவநதன.

(௩) அளி + குலம = அளிகுலம; பாத + கமலம் = பாதகமலம — வடசொல்லீற்று உயிர்முன் வலிவர மிகாது இயல்பாயின.

(ச) இல் + முன் = முன்றில்; பொது + இல் = பொதியில்; வேட்கை + அவா = வேணவா — இலககணப்போலிமொழிகள் முன விதிபெறாமல் தமககு ஏறறபடி விகாரம பெறறன.

(ரு) அருமருநதன்ன = அருமநத; குணககுஉள்ளது = குணுது; சோழநாடு = சோணாடு; தஞசாவூர = தஞசை; வடுகனதநதை = வடுகநதை — மரூஉ மொழிகள முன்விதி பெறாமல் தமககு ஏறறபடி விகாரம பெறறன

* உசரு - ஆம் சூத்திரம பார்கக.

இவைகே 'இடையுரி வடசொல்' என்றது, சிலமொழிகளைப்பற்றியதென அறிக. இதனால், சிலமொழிமாத்திரம் வடமொழியாயிருந்து வடமொழிப் புணர்ச்சியில் முன்சொன்ன விதிகளுக்கு மாறிவருவனவும் இதில்அடங்கும்.

## வடமொழிப்புணர்ச்சி.

வடமொழித்தொடர்கள், தமிழில் வருமிடத்துப் பெரும்பாலும் அவ்வட நூற்புணர்ச்சியையே பெறும்; புணர்ச்சியை வடநூலார் 'சந்தி' என்பர். அது உயிரோடு உயிர் புணருகையில் தீர்க்கசந்தி, குணசந்தி, விருத்திசந்தி என மூவகைப்படும்.

### [தீர்க்கசந்தி.]

(க) அகர ஆகாரங்களில் ஒன்றன்முன் அவற்றில் ஒன்று வந்தால், அவ்விரண்டும் கெட ஓர் ஆகாரம் தோன்றும். (உ - ம்)

| | |
|---|---|
| பத + அம்புஜம் = பதாம்புஜம் | கங்கா + அம்ருதம் = கங்காம்ருதம் |
| பரம + ஆனந்தம் = பரமானந்தம் | சதா + ஆனந்தம் = சதானந்தம். |

(உ) இகர ஈகாரங்களில் ஒன்றன் முன் அவற்றில் ஒன்று வந்தால், அவ்விரண்டும் கெட ஓர் ஈகாரம் தோன்றும். (உ - ம்.)

| | |
|---|---|
| கவி + இந்திரன் = கவீந்திரன் | மகீ + இந்திரன் = மகீந்திரன் |
| கிரி + ஈசன் = கிரீசன் | நதீ + ஈசன் = நதீசன். |

(௩) உகர ஊகாரங்களில் ஒன்றன்முன் அவற்றில் ஒன்று வந்தால், அவ்விரண்டும் கெட ஓர் ஊகாரம் தோன்றும் (உ - ம்.)

| | |
|---|---|
| குரு + உதயம் = குரூதயம் | சுயம்பூ + உபதேசம் = சுயம்பூபதேசம் |
| சிந்து + ஊர்மி = சிந்தூர்மி | சுயம்பூ + ஊர்ச்சிதம் = சுயம்பூர்ச்சிதம். |

### [குணசந்தி.]

(க) அகர ஆகாரங்களில் ஒன்றன்முன் இகர ஈகாரங்களில் ஒன்று வந்தால், அவ்விரண்டும் கெட ஓர் ஏகாரம் தோன்றும். (உ - ம்.)

| | |
|---|---|
| தேவ + இந்திரன் = தேவேந்திரன் | தரா + இந்திரன் = தரேந்திரன் |
| தேவ + ஈசன் = தேவேசன் | ரமா + ஈசன் = ரமேசன். |

(உ) அகர ஆகாரங்களில் ஒன்றன்முன் உகர ஊகாரங்களில் ஒன்று வந்தால், அவ்விரண்டும் கெட ஓர் ஓகாரம் தோன்றும். (உ - ம்.)

| | |
|---|---|
| சூர்ய + உதயம் = சூர்யோதயம் | கங்கா + உத்பத்தி = கங்கோத்பத்தி |
| ஞான + ஊர்ச்சிதன் = ஞானோர்ச்சிதன் | தயா + ஊர்ச்சிதன் = தயோர்ச்சிதன். |

### [விருத்திசந்தி.]

(க) அகர ஆகாரங்களில் ஒன்றன்முன் ஏகார ஐகாரங்களில் ஒன்று வந்தால், அவ்விரண்டும் கெட ஓர் ஐகாரம் தோன்றும். (உ - ம்.)

| | |
|---|---|
| பரம + ஏகாந்தி = பரமைகாந்தி | தேவதா + ஏகத்வம் = தேவதைகத்வம் |
| சர்வ + ஐச்வர்யம் = சர்வைச்வர்யம் | தேவதா + ஐக்யம் = தேவதைக்யம் |

(உ) அகர ஆகாரங்களில் ஒன்றன்முன் ஓகார ஔகாரங்களில் ஒன்று வந்தால், அவ்விரண்டும் கெட ஓர் ஔகாரம் தோன்றும். (உ - ம்.)

| | |
|---|---|
| வன + ஓஷதி = வனௌஷதி | மகா + ஓஷதி = மகௌஷதி |
| திவ்ய + ஔஷதம் = திவ்யௌஷதம் | மகா + ஔதார்யம் = மகௌதார்யம். |

மெய்ம்முதலீற்றுமொழிப்புணர்ச்சிக்கு விதி அளவிறந்தனவாம். (௩௬)

மெய்யீற்றுப்புணரியல் முற்றிற்று



# ௫. உருபுபுணரியல்.

உயிரீறும் மெய்யீறுமான வேற்றுமையுருபுகள் நிலைமொழி வருமொழிகளோடு புணரும் விதத்தைச் சொல்லும் இயல் உயிரீறு மெய்யீறு என்றவற்றுள் அடங்குவனவற்றையே தனியே எடுத்துக்கூறுதலால், இவ்வியல் அவ்விரண்டு இயல்களின்பின் வைக்கப்பட்டது.

## உருபுகள்.

[எட்டுஉருபுகளும் சாரும் இடவகையால் இத்தனையென்பது]

௨௪௦. ஒருவ னொருத்தி பல ரொன்று பலவென
வருபெய ரைந்தொடு பெயர்முத லிருநான்கு
உருபு முறழ்தர நாற்பதா முருபே.

(இ - ள்) ஒருவன் - ஒருவனும் [ஆண்பாலும்], ஒருத்தி - ஒருத்தியும் [பெண்பாலும்], பலர்-பலரும் [பலர்பாலும்], ஒன்று-ஒன்றும் [ஒன்றன்பாலும்], பல - பலவும் [பலவின்பாலும்] என என்று, வரு - வருகின்ற, பெயர் ஐந்தொடு - ஐந்துபாற் பெயர்களோடும், பெயர் முதல் இரு நான்கு உருபும் - பெயர்வேற்றுமை [எழுவாய்] முதல் விளிவேற்றுமைவரையில் நின்ற எட்டு வேற்றுமையுருபுகளையும், உறழ்தர - பெருக்கிக் கணக்கிட, உருபு நாற்பது ஆம் - (வேற்றுமை) உருபுகள் நாற்பதாகும்; (எ - று.)

(உ - ம்.) நம்பி, நம்பியை, நம்பியால், நம்பிக்கு நம்பியின், நம்பியது, நம்பிகண், நம்பியே என ஒருவன் என்னும் வாய்பாட்டு உயர்திணை ஆண்பாற் பெயரோடு எட்டு உருபுகளும் வந்தன. கூனி, மக்கள், மரம், மரங்கள் என்னும் மற்றை நான்குவாய்பாட்டுப் பெயர்களோடும் இப்படியே கூட்டுக. (௧)

[வேற்றுமையுருபுகளின் பயனும் அவை வரும் இடமும்.]

௨௪௧ பெயர்வழித் தம்பொருள் தரவரு முருபே.

(இ - ள்.) உருபு - (வேற்றுமை) உருபுகள், தம் பொருள் தர - தமது பொருளைக் கொடுக்க, பெயர் வழி - பெயர்க்குப் பின், வரும—; (எ - று.)

தம் பொருள். - கர்த்தாப்பொருள், செயப்படுபொருள் முதலியன.

(உ - ம்.) நம்பி பெற்றான், நம்பியைப் பெற்றான் என இவ்வாறு காண்க.

## உருபுபுணர்ச்சிக்குச் சிறப்புவிதி.

[பொருட்புணர்ச்சிமுடிபை உருபுபுணர்ச்சிக்கும் ஏற்றுதல்.]

௨௪௨. ஒற்றுயிர் முதலீ றுருபுகள் புணர்ச்சியின்
ஒக்குமன் னப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பே.

(இ - ள்.) ஒற்று உயிர் முதல் ஈறு - மெய்யையும் உயிரையும் முதலும் இறுதியுமாகவுடைய, உருபுகள் - (ஐ முதலிய ஆறு) வேற்றுமையுருபுகள்,—

[1] 'தன்பொருள்' என்றும் பிரதிபேதம்.

(இடைச்சொல்லாயினும்),—புணர்ச்சியின் - (நிலைமொழிவருமொழிகளோடு) புணருமிடத்து,—வேற்றுமை புணர்ப்பு அப்பெயர் - (நடந்த இரண்டியல்களுள்ளும்) வேற்றுமைப்பொருட்புணர்ச்சியில் இயல்பாகவும் விகாரமாகவும் புணர்ந்த மெய்யுயிர்முதலீற்றுப் பெயர்களே, மன ஒக்கும் - பெரும்பாலும் ஒத்து நடக்கும்; (எ - று)

(உ - ம்.) நம்பி + கண் + வாழ்வு = நம்பிகண்வாழ்வு—இங்கே முறையே 'ஆவி யரமுன் வன்மை மிகா" என்றும், "ணன வல்லினம் வரட் டறவும் பிறவரி னியல்பு மாகும் வேற்றுமைக்கு" என்றும் சொல்லியபடியே கண்ணுருபின் முதலும் ஈறும் இயல்பாயின.

உறி + கண் + பால் = உறிக்கட்பால்—இங்கே முறையே "இயல்பினும் விதியினும் நின்ற வுயிர் முன் கசதப மிகும்" என்றும், "ணனவல்லினம்வரட் டறவும்" என்றும் சொல்லியபடியே கண்ணுருபின் முதலும் ஈறும் விகாரமாயின

'பெரும்பாலும் ஒக்கும்' என்றமையால், சிறுபான்மை ஒவ்வா வென்பதாம்.

(உ - ம்) நம்பி + கு = நம்பிக்கு—இங்கே "ஆவியரமுன் வன்மைமிகா" என்ற விதி ஒவ்வாமல் குவ்வுருபின் முதல் வலிமொற்று மிக்கது. (ா)

## சாரியை.

### [சாரியை வரும் விதம்]

உசங. பதமுன் விகுதியும் பதமு முருபும்
புணர்வழி யொன்றும் பலவுஞ் சாரியை
வருதலுந் தவிர்தலும் விகற்பமு மாகும்

(இ - ள்.) பதம் முன் - பதத்தின்முன், விகுதியும் - விகுதியாவது, பதமும் - பதமாவது, உருபும் - உருபாவது, புணர் வழி - புணருமிடத்து;(அவற்றிற்கு இடையே) சாரியை ஒன்றும் பலவும் - ஒரு சாரியையாயினும்பலசாரியைகளாயினும்,—(க) வருதலும்—(உ) தவிர்தலும் வராதிருத்தலும், (ந)விகற்பமும் (ஒன்றற்கே வருதலும் தவிர்தலுமாகிய) உறழ்ச்சியும் ஆகும்—;(எ-று.)

| | விகுதிப்புணர்ச்சி. | பதப்புணர்ச்சி | உருபுபுணர்ச்சி. |
|---|---|---|---|
| (உ-ம்) (க) | நடந்தனன் | புளியங்காய் | அவற்றை—வருதல். |
| (உ) | நடந்தான் | புளிக்கறி | தன்னை—தவிர்தல். |
| (ந) | நடந்தன } நடந்த } | நெல்லின்குப்பை } நெற்குப்பை } | ஆனை } ஆவை } விகற்பம். |

ஆவினுக்கு, மரத்தினுக்கு—சாரியைகள் பல வந்தன

மாடத்துக்கு - மாடக்கு, நிலத்துக்கு - நிலக்கு முதலியன - சாரியை வேண்டுமிடத்து இல்லாமையால், தொகுத்தலென்னுஞ் செய்யுள்விகாரமாம்.

### [பொதுச் சாரியை.]

உசச. அன் ஆன் இன் அல் அற்று இற்று அத்து அம்
தம் நம் நும் ஏ அ உ ஐ கு ன
இன்னபிறவும் பொதுச்சா ரியையே.

(இ - ள்.) அன்.. ன - அன் முதல் னகரமெய் [ன்]ஈறாகச் சொல்லப்பட்டபதினேழும், இன்ன பிறவும்-இவைபோல்வன பிறவும்,—பொது சாரியை - (விகுதி பதம் உருபு என்கிற மூன்று புணர்ச்சிகளிலும் தனிமொழிகளிலும் வருதலினாலே) பொதுவான சாரியைகளாம்; (எ - று.)

| சாரியை. | | | சாரியை. | |
|---|---|---|---|---|
| (உ - ம்.) அன் —ஒன்றன்கூட்டம் | (ப) | நம் —எல்லாநம்மையும் | | (உ) |
| ஆன் —ஒருபாற்கு | (உ) | நும—எல்லீர்நும்மையும் | | (உ) |
| இன் —வண்டின்கால் | (ப) | ஏ —ஒன்றேகால் | | (ப) |
| அல் —தொடையல் | (த) | அ —நடந்தது | | (வி) |
| அற்று—பலவற்றை | (உ) | உ —சாத்தனுக்கு | | (உ) |
| இற்று—பதிற்றுப்பத்து | (ப) | ஐ —ஒற்றை | | (த) |
| அத்து—மரத்திலே | (ப) | கு —செய்குவாய் | | (வி) |
| அம —செஞ்சம் | (த) | ன் —கோன | | (த) |

தம் —எல்லார்தம்மையும்(உ) இன்ன பிறவும்' என்றதனால்.

தன் - அவன்றனை (உ) தாம் - அவர்தாம் (த) ஆ - இல்லாப்பொருள் (ப)

தான் - அவன்றான் (த) ஆம - மணணாங்கட்டி (ப) து - நடந்தற்கு (வி)

என வருகின்றவையும், மற்றும் இப்படி வருபவையும் கொள்க. (ரு)

['எல்லாம்' என்பதற்குச் சிறப்புவிதி.]

† உசரு. எல்லா மென்ப திழிதிணை யாயின்
அற்றொ டுருபின மேலும் முற்றுமே
அன்றேல நமமிடை யடைந்தற றாகும்.

(இ - ள்.) (க) எல்லாம என்பது - எல்லாம் என்னும்இருதிணைப்பொதுப்பெயர், இழி திணை ஆயின் - அஃறிணையில் வரும்பொழுது, (அதனோடு ஆறு உருபுகளும புணர்ந்தால்) அற்றொடு உருபின்மேல் உம் உறும் - இடையிலே அற்று என்னும சாரியையையும் உருபின்மேல் முற்றும்மையையும் பெறும;—(உ) அன்றேல-அன்றாயின [உயர்திணையில் வரும்பொழுது], இடை- இடையிலே, நம அடைந்து - நம் என்னும் சாரியையைப் பெற்று, அற்று ஆகும - அவ்வாறாகும் [உருபின்மேல் முற்றும்மையையும் பெறும்], (எ - று.)

(உ - ம்.) (க) எல்லாம் + ஐ= எல்லாவற்றையும்—அஃறிணை.
(உ) + ஐ= எல்லாநம்மையும்—உயர்திணை.

'எல்லாநம்மையும் என்பதற்கு-எல்லாரையுமென்றுபொருள்; படர்க்கை.

'உயர்திணையாயின்' என்றாலும் எல்லாநம்மையும் என்பது உயர்திணைத் தன்மைக்கு மாத்திரமே வருமெனக் கொள்வர் ஒருசாரார்.

இனி, இரட்டுறமொழிதலால், இழிதிணையாய் இன் அற்றொடு எனப் பிரித்து, எல்லாவற்றினையும என அற்று, இன் என்னும் இரண்டு சாரியை வருதலும் கொள்க. மற்றை உருபுகளோடும இப்படியே கூட்டுக. (சு)

['எல்லாரும்', 'எல்லீரும்' என்பவற்றிற்குச் சிறப்புவிதி.]

உசசு. எல்லாரு மெல்லீரு மென்பவற் றும்மை
தள்ளி நிரலே தமநும் சாரப
புல்லு முருபின் பின்னரும்மே.

(இ-ள்.) (ஆறுஉருபுகளும் புணருமிடத்து), எல்லாரும் எல்லீரும் என்பவற்று - எல்லாரும் எல்லீரும் என்கிற இருபெயர்களினுடைய, உம்மை - (இறுதியிலுள்ள) முற்றும்மைகளை, தள்ளி - நீக்கி,—நிரலே - முறையே, தம்-தமஎன்னும் சாரியையும், நும - நும என்னும் சாரியையும், சார - (அவையிருந்த இடங்களிலே) பொருந்த,—உம - (அவற்றினாலே நீக்கப்பட்ட) முற்றும்மைகள், உருபின் பின்னர் புலனும் உருபுகளின் பின்னே வந்து பொருந்தும்; (எ - று.)

(உ - ம.) எல்லாரும் + ஐ = எல்லார்தம்மையும்.
எல்லீரும + ஐ = எல்லீர்நும்மையும்.

எல்லாரையும, எல்லீரையும் எனச் சாரியைபெறாமல் வருதலும உண்டு.

## [‘தான்’ முதலிய பெயர்கட்குச் சிறப்புவிதி.]

† உசஎ. தான் தாம் நாம் முதல் குறுகும் யான யாம
நீ நீர் என் எம் நின் நு மாம் பிற
குவவி னவ்வரும் நான்கா றிரட்டல.

(இ - ள.) (க) (உருபுகள் புணருமிடத்து), தான் தாம நாம இம்மூன்று பெயர்களும, முதல் குறுகும - முதலநெடில் குறுகி (முறையே தன தம நம் என) வரும; உ) யான யாம நீ நீர - இந்நான்கு பெயர்களும், என் எம நின நும ஆம (முறையே) என் எம நின் நும என வரும, (ந) குவவின் - (இவ்வேழுபெயரோடும்) குவ்வுருபு புணருமிடத்து, அ வரும (நடுவில்) அகரசசாரியை வரும; (ச) நானகு - நான்காம வேற்றுமையுருபு புணரும்போது அகரசசாரியையின உயிர் வந்தாலும ஆறு - ஆறுமவேற்றுமை யுருபுகளின முதல் உயிர்கள வந்தாலும, இரட்டல (அவ்வேழு னிகாரமொழிகளிலும இறுதியாகிய தனிககுறில் முனனொற்றுககள்) இரட்டாவாம; (எ - று)

(உதாரணம)

(க) தான + ஐ = தன்னை
தாம + ஐ = தம்மை
நாம + ஐ = நம்மை
} முதல் குறுகின.
மற்றை உருபுகளோடும் கூட்டுக.

உ) யான் + ஐ = என்னை
யாம + ஐ = எம்மை
நீ + ஐ = நின்னை
நீர + ஐ = நும்மை
} என, எம், நின், நும எனத்திரிந்தன.

(ந) தான் + கு = தனக்கு—கு வர அகரசசாரியை பெற்றது

(ச) தன் + அ + கு = தனககு
அது = தனது
ஆது = தனாது
அ = தன
} நான்காம வேற்றுமையில் அகரச்சாரியை பெறுமிடத்தும, ஆறுமவேற்றுமையுருபு உயிர்கள்புணருமிடத்தும தனிககுறிலமுன்னொற்று இரட்டாதாயிற்று,

‘தன்னுடைய’ என்பதில் உடைய என்பது சொல்லுருபாதலின். தனிககுறிலமுன்னொற்று இரட்டாமை அதற்குப பொருந்தாதாம்.

‘பிற’ என்றதனால், நீ என்பது உன் எனவும், நீர் என்பது உம் எனவும் திரிந்துவருதல் கொள்க. ‘நுன்’ என வழங்குவது, திசைச்சொல்.

இனி, நீர் என்பது 'நீம்' எனத் திரிதலும், இங்கு 'பிற' என்றதனாலேயே கொள்ளப்படவேண்டும். * நீம் என்பது - சிறுபான்மை செய்யுளில் தனியாகவும், பெரும்பான்மை செய்யுளினும் வழக்கினும் 'கள்' என்னும் விகுதியோடு சேர்ந்து 'நீங்கள்' என்றும் பயிலும். இனி, இதனை மரூஉமொழியில் அடக்குதலும் ஒன்று. (அ)

['ஆ,' 'மா,' 'கோ' என்னும் சொற்களுக்குச் சிறப்புவிதி.]

¦ ௨௪௮. ஆ மா கோ னவ் வணையவும் பெறுமே.

(இ - ள்.) ஆ - ஆ என்னும் பசுவின்பெயரும், மா - மா என்னும் மிருகத்தின்பொதுப்பெயரும், கோ கோ என்னும் தலைவனதுபெயரும்,— னவ் அணையவும் - (உருபுகள் புணருமிடத்து) னகரச்சாரியை பொருந்தவும் பெறும்—.

'அணையவும்' என்ற உம்மையால் - அணையாமலிருக்கவும் பெறுமென்றதாயிற்று; ஆகவே விகற்பித்துவருமெனக் கொள்க.

(உ - ம்.) ஆ + ஐ = ஆனை, ஆவை
மா + ஐ = மானை, மாவை
கோ + ஐ = கோனை, கோவை
} னகரச்சாரியை பெற்றும் பெறாதும் விகற்பித்தன. மற்றையுருபுகளோடும் கூட்டுக.

இன்னும், 'னவ்வணையவும்' என்ற உம்மையால் - குவ்வுருபு புணரும்பொழுது ஆனுக்கு என உகரச்சாரியையும் உடன்பெறுதலும், ஆவுக்கு என உகரச்சாரியையொன்றே பெறுதலும், ஆவினுக்கு என இன்சாரியையுடன் உகரச்சாரியை பெறுதலும், ஆவினை என மற்றையுருபுகள்புணரும்பொழுது இன்சாரியையொன்றே பெறுதலும் கொள்க. மா, கோ என்பனவும் இவ்வாறே.

இரட்டுறமொழிதலால், ஆமா என ஒருசொல்லாய்க் காட்டுப்பசுவை உணர்த்திநின்ற இடத்தும், ஆமானை, ஆமாவை, ஆமானுக்கு, ஆமாவுக்கு, ஆமாவினுக்கு, ஆமாவினை என இவ்விதி பெறுதலும் கொள்க.

அணையும் என்று நிறுத்தாமல் 'அணையவும்பெறும்' என்றதனால், ஆன், மான், கோன், ஆமான் எனத் தனிமொழியினும் னகரச்சாரியை பெறுதலும் கொள்க §. (க)

* சீவகசிந்தாமணியில், "நன்றப்பொருளே வலித்தேன்" என்ற செய்யுளில், "அன்றைப்பகலே யடியேன் வந்தடைவன் நீமே, வென்றிக் களிற்றானுழை செல்வது வேண்டுமென்றான்" என்ற இடத்து 'நீம்' என்பது வந்ததும் அச்செய்யுளுரையில் நச்சினார்க்கினியர் 'கிளந்த வல்ல செய்யுளுட்டிரிநவும்" என்றதனால், 'நும்' என்னுஞ் சொல் 'நீயிர்' என முழுவதுந் திரியாது மகரமிறபதத்திரிந்து 'நீம்'என நின்றது; இனி, நீமென்று ஓர் திசைச்சொல்லுமாம்' என உரைத்ததும் உணர்க.

§ இங்கு 'உரையிற்கோடலால், 'ஊ' என்பதும் ஊனை என னகரச்சாரியை பெறுதலும் கொள்க, என்பாரும் உளர்; அது பொருந்தாது எனெனின்:— இந்நூலாசிரியர் "குயினூன்வேற்றுமைக்கண்ணு மியல்பே" என்ற சூத்திரத்தில் 'ஊன்' என்பதை ஒரு தனிமொழியாகக் கொண்டனராதலால் அதனை ஆன் மான் கோன் என்பனபோல ஓரெழுத்தொருமொழி னகரச

['ஒருபது' முதலிய எண்ணுப்பெயர்கட்குச் சிறப்புவிதி.]

௨௪௯. ஒன்று முதலெட் டீறு மெண்ணூர்
பத்தின்முன் னான்வரிற் பவ்வொற் றொழியமேல்
எல்லா மோடு மொன்பது மிற்றே.

(இ - ள்.) ஒன்று முதல்—, எட்டு ஈறு ஆம் - எட்டுவரையி லுள்ள, எண் - எண்ணுப்பெயர்களோடு, ஊர் - புணர்ந்த, பத்தின் முன் - பத்து என்னும் எண்ணுப்பெயரின்முன் (ஆறு உருபுகள் புணருமிடத்து), ஆன் - ஆன் சாரியை, வரின் - வந்தால்,—ப ஒற்று ஒழிய - பத்து என்னும் எண்ணினது பகரமெய் ஒன்றுமே நிற்க, மேல் - அதன்மேலே நின்ற, எல்லாம் - எல்லா வெழுத்துக்களும், ஓடும் - கெடும்;—ஒன்பதும் ஒன்பது என்னும் எண்ணின் முன்னும் (உருபுகள் புணருமிடத்து ஆன்சாரியை வந்தால்), இற்றே - இவ்வாறேயாகும் [பகரமெய்மாத்திரம் நிற்க மேலேநின்ற எல்லா வெழுத்தும் கெடும்]; (எ - று)

(ஒருபது ஒருபஃது என இடையொற்றுக் கெட்டும் ஆய்தமாகத் திரிந்தும் விகாரப்பட்டுவரும் பத்து என்பார், 'எண்ணூர் பத்து' எனப் பொதுப் படக் கூறினார் அவை ஒருபது ஒருபஃது, இருபது இருபஃது, முப்பது முப்பஃது, நாற்பது நாற்பஃது, ஐம்பது ஐம்பஃது, அறுபது அறுபஃது, எழுபது எழுபஃது, எண்பது எண்பஃது என்பன )

'ஆன்வரின்'என்றதனால், ஆன்சாரியைவருதற்கும் இதுவேவிதியென்க.

'வரின்' என வருதலைப் பராமுகமாகச் சொன்னதனால், வராமலிருத்தலும் கொள்க; எனவே, விகற்பித்துவரு மென்றதாயிற்று.

(உ - ம்.) ஒருபது + ஐ = ஒருபானை, ஒருபதை, ஒருபஃதை } விகற்பித்து
ஒன்பது + ஐ = ஒன்பானை, ஒன்பதை, ஒன்பஃதை } வந்தன.

இன்னும், ஆன்வருதலைப் பராமுகமாகச் சொன்னதனால் ஒருபானுக்கு ஒருபானினை என உகரச்சாரியை இன்சாரியைகளும் வேண்டுமிடத்து வருமெனக் கொள்க. மற்றை உருபுகளோடும் இப்படியே கூட்டுக. (௪௦)

---

சாரியை பெற்றதாகக்கொள்ளும் இவ்வாசிரியர்க்கு உடன்பாடன்றென்பது தெளிவாக விளங்குமாதலின்; அன்றுபற்றியே, இங்குக்கூறாராயினார். தொல்காப்பியனார் அக்காலவழக்குப்பற்றி "ஊவெனொருபெய ராவொடு சிவணும்" என விதித்துச் சூத்திரஞ் செய்திருப்பினும் இவ்வாசிரியர் தாம் நூல்செய்த காலத்தில் ஊ என்ற வழக்குச் சிறுபான்மைப்பட்டு ஊன் என்ற வழக்கே பெரும்பான்மைப்பட்டதனால், ஊ என்ற பெயரை 'உயிர்மவி லாறும்" என்றதனால் ஒருவாறு குறிப்பித்த மாத்திரத்தோடு விட்டு 'ஊன்' என்பதனைத் தனிமொழியாகக் கொண்டன ரெனக். இது பழையன கழிதலும் புதியன புகுதலுமாம். தொல்காப்பிய நச்சினார்க்கினியத்தில் 'ஊ' என்பது தசையை யுணர்த்தி நின்ற வழக்கு. ஆசிரியர் நூல்செய்த காலத்து வழக்கு; அன்றித் 'தேயவழக்கேனும் உணர்க' என்றது, இங்கே கருதத்தக்கது.

[வகராற்றுச் சுட்டுப்பெயர்க்குச் சிறப்புவிதி.]

‡ உருo வவ்விறு சுட்டிற் கற்றுறல் வழியே.

(இ - ள்.) வ இறு சுட்டிற்கு - (அஃறிணைப் பலவின்பாலாகிய அவ் இவ் உவ் என்னும்) வகரமெய்யீற்று மூன்று சுட்டுப்பெயர்கட்கும், அற்று உறல் - (உருபுகள் புணருமிடத்து) அற்று என்னுஞ் சாரியை பொருந்துதல், வழி - முறைமையாம்; (எ - று.)

(உ - ம்.) அவ் + ஐ = அவற்றை, இவ் + ஐ = இவற்றை, உவ் + ஐ = உவற்றை } என அற்றுச்சாரியை வேண்டியே வந்தன. மற்றை வேற்றுமைகளோடும் கூட்டுக.

'உறும்' என்று நிறுத்தாமல் 'வழியே' என்ற மிகையால் - அவற்றினை, இவற்றினை, உவற்றினை என அற்றுச்சாரியையோடு இன்சாரியை வருதலும்; தனிக்குறில் முன் ஒற்று உயிர்வர இரட்டாமையும்; அவை, இவை, உவை என்னும் வையீற்றுச்சுட்டுப்பெயர்கள் அவையிற்றை, இவையிற்றை, உவையிற்றை என இற்றுச்சாரியை பெறுதலும்; எவற்றை என வினாப்பெயரும் இவ்வாறு நிற்றலும் கொள்க. (கசு)

[‘அஃது’ முதலிய சுட்டுப்பெயர்கட்குச் சிறப்புவிதி.]

† உருக சுட்டின்முன் ஆய்த மன்வரிற் கெடுமே.

(இ - ள்.) சுட்டின் முன் - (அஃது இஃது உஃது என்னும் மூன்றுசுட்டுப்பெயர்களில் மொழிமுதற்) சுட்டெழுத்தின் நின்ற, ஆய்தம் —, அன் வரின் - (அச்சுட்டுப்பெயர்களோடு உருபுகள் புணருமிடத்து) அன்சாரியை வந்தால், கெடும் —; (எ - று.)

'அன் வரின்' என்றதனால், அன்சாரியை வருதற்கும் இதுவே விதியென்க 'வரின்' என வருதலைப் பராமுகமாகச் சொன்னதனால், வராமலிருத்தலும் கொள்க; எனவே, விகற்பிக்குமென்றதாயிற்று.

(உ - ம்.) அஃது + ஐ = அதனை, அஃதை; இஃது + ஐ = இதனை, இஃதை; உஃது + ஐ = உதனை, உஃதை } எனச் சாரியை விகற்பித்தும், சாரியை வந்தவிடத்து ஆய்தம் கெட்டும் வந்தன.

'அன்' சாரியை வருதலை நோக்கி ஆய்தங்கெட்டவிடத்து அது இது உது என ஆய்தமில்லாத சுட்டுப்பெயர்களாகிப் பின்பு அன்சாரியை பெறுதலால், ஆய்தமில்லாத சுட்டுப்பெயர்கள் அது - அதனை, இது - இதனை, உது - உதனை என 'அன்' சாரியை பெறுதற்கும் இதுவே விதியென்க.

இன்னும் 'அன்' சாரியை வருதலைப் பராமுகமாகக் கூறியதனால் - குவ்வுருபு புணரும்போது அது + கு = அதற்கு என 'அன்' சாரியை தனித்துவருதலல்லாமலும், அதனுக்கு என உகரச்சாரியையுடன் வருதலும், கொள்க இன்னும் அதனால் 'அதை,' 'இதுக்கு' எனச் சாரியையின்றி வருதலும், அத்தை, அத்தால் என வழங்குதலும் கொள்க

இச்சூத்திரத்து உபலக்ஷணத்தால் - வினாப்பெயராகிய எது என்பது எதனை, எதனுக்கு, எதை என இவ்வாறு வருதலும் அமையும். (கஎ)

உருஉ. அத்தின் அகரம் அகரமுனை யில்லை.

(இ - ள்.) அத்தின் - அத்துச்சாரியையின் முதலி லுள்ள, அகரம்-அகர வுயிரானது,—அகரம் முனை - (இயல்பினாலும் விதியினாலும் நிலைமொழியீற்றில் நின்ற) அகரவுயிரின் முன் (வந்தால்), இல்லை - கெடும். (எ - று.)

உயிரீற்றுமொழியின்முன் அத்துச்சாரியை வருதற்கும் இதுவே விதி.

(உ - ம்) மக + அத்து=மகத்தை, மகத்துக்கை—இயல்பு உயிரீறு

மர + அத்து=மரத்தை, மரத்துக்குறை—விதி உயிரீறு.

'அகரமுனையில்லை' என்றதனால்-போழ்த்தது வள்ளன்மை, அவையத்துச்சென்றா எனப் பிறஉயிரீற்றின்முன் அத்தின அகரம் கெடாதென்க.

இனி, சிறுபான்மை அத்தின அகரம் விளவகத்துக்கோடு, அதவத்துக்கண் என அகரவீற்றின்முன் கெடாமலும்; நிலாத்துக்கொண்டான், துலாத்துக்கோல என ஆகாரவீற்றின் முன்னும், தேத்து என ஏகாரவீற்றின் முன்னும் கெட்டுமவரு மெனவும் அறிக

இது - * தொலகாப்பியச் சூத்திரம். (கங)

## புறனடை.

[சாரியைப் புறனடை: சாரியைகளை அறியும் வகை.]

உருங. இதற்கிது சாரியை யெனினள வின்மையின்
விகுதியும் பதமு முருபும் பகுத்திடை
நின்ற வெழுத்தும் பதமு மியற்கையும
ஒன்ற வுணர்த்த லுரவோர் நெறியே.

(இ - ள்.) இதற்கு இது சாரியை எனின் - (விகுதிப்புணர்ச்சி முதலிய புணர்ச்சிகளில்) இதற்கு இது சாரியை என்று (வரையறுத்துத் தனித்தனி) சொல்லப்புகுந்தால், அளவு இன்மையின் - அவ்வளவு இல்லாமையால்,—விகுதியும - விகுதிப்புணர்ச்சியையும், பதமும் - பதப்புணர்ச்சியையும், உருபும் - உருபுபுணர்ச்சியையும், பகுத்து - பிரித்து,—இடை நின்ற - நடுவில் நின்ற, எழுத்தும் - (ஏகாரம அகரம முதலிய) எழுத்துச்சாரியையையும், பதமும் - (அன் ஆன முதலிய)பதச்சாரியையையும், இயற்கையும்-(இவ்விரண்டு சாரியையும இலலாத) இயல்பையும், ஒன்ற உணர்த்தல் - தெரிய அறிவித்தல்,—உரவோர் நெறி - அறிவுடையோரது முறைமையாம்; (எ - று.)

| | எழுத்துச்சாரியை | பதச்சாரியை. | இயல்பு. |
|---|---|---|---|
| (உ - ம்.) | நடந்தது | நடந்தனன் | நடந்தான—விகுதிப்புணர்ச்சி. |
| | ஆ ஙகே | வண்டினகால | தனனை —பதப்புணர்ச்சி. |
| | சாத்தனுக்கு | எவற்றை | என்றால் —உருபுபுணர்ச்சி. |

இவ்வாறே மூவகைப்புணர்ச்சிகளையும் பகுத்தறிந்துகொள்க.

* தொலகாப்பியம எழுத்ததிகாரம, புணரியல் - உங.

எல்லாச்சாரியைக்கும் இடைச்சொல்லாயினும், இவ்வாறு எழுத்துச்சாரியை பதச்சாரியை எனப் பிரித்தது, அவற்றின் வேறுபாடு அறிதற்கு வைத்த குறியென அறிக. (கச)

[நால்வகைப்புணர்ச்சிக்குப் புறனடை]

உருச. விகுதி பதஞ்சா ரியையுரு பனைத்தினும்
உரைத்த *விதியி னோர்ந் தொப்பன கொளலே.

(இ - ள்.) விகுதி - விகுதிப்புணர்ச்சியும், பதம் - பதப்புணர்ச்சியும், சாரியை - சாரியைப்புணர்ச்சியும், உருபு - உருபுபுணர்ச்சியும் ஆகிய, அனைத்தினும் - நான்கு புணர்ச்சிகளிடத்தும், உரைத்த - பொதுப்படச் சொல்லப்பட்ட, விதியின் - விதிகளுள், ஓர்ந்து - (இவ்விதி இதற்குப் பொருந்தும் இவ்விதி இதற்குப் பொருந்தாது என்று) ஆராய்ந்து அறிந்து, ஒப்பன - எவ்விதி எதற்குப் பொருந்துமோ அவ்விதியே, கொளல் (அதற்குக்) கொள்க; (எ-று.)

(வரலாறு.)

விகுதிப்புணர்ச்சியுள் "றவ்வொடு உகர வும்மை நிகழ்பல்லவும்" எனப் பொதுப்பட விதித்தாராயினும், 'சென்று' என்ற இடத்து இறந்தகாலமும், 'சேறு' என்ற இடத்து எதிர்காலமும் பொருந்துமென்று கொள்க.

பதப்புணர்ச்சியுள் "அல்வழி இ ஐம் முன்னராயின் இயல்பும் மிகலும், விகற்பமு மாகும்" எனப் பொதுப்பட விதித்தாராயினும், 'யானைகுதிரைகள்' என உம்மைத்தொகையில் இயல்பாயும், 'ஆடித்திங்கள்' எனப் பண்புத்தொகையில் மிகுந்தும், கிளிகுறிது,' 'கிளிக்குறிது' எனச் சில எழுவாய்த்தொடரில் விகற்பித்தும் வருமென்று கொள்க.

சாரியைப்புணர்ச்சியுள் "பதமுன் விகுதியும் பதமு முருபும், புணர்வழி யொன்றும் பலவுஞ் சாரியை, வருதலுந் தவிர்தலும் விகற்பமு மாகும்" எனப் பொதுப்பட விதித்தாராயினும், 'நாட்டின்கண் இருந்தான்' எனக் கண்ணுருபிற்கு இன்சாரியை வருமென்றும், 'நாட்டினீங்கினான்' என இன்னுருபிற்கு இன்சாரியை பெரும்பாலும் வராதென்றும் கொள்க.

உருபுபுணர்ச்சியுள் "ஒற்றுயிர் முதலீற் றுருபுகள் புணர்ச்சியின், ஒக்கு மன்னப் பெயர்வேற் றுமைப் புணர்ப்பே" எனப் பொதுப்பட விதித்தாராயினும், 'நம்பிகண்' எனக் கண்ணுருபு மிகாதென்றும், நம்பிக்கு' எனக் குவ்வுருபு மிகுமென்றும் கொள்க. மற்றவைகளும் இப்படியே. (கரு)

[இரண்டாம்வேற்றுமைப்புணர்ச்சிக்குச் சிறப்புவிதி.]

‡ உருரு. இயல்பின் விகாரமும் விகாரத் தியல்பும்
உயர்திணை யிடத்து விரிந்துந் தொக்கும்
விரவுப் பெயரின் விரிந்தும் நின்றும்
அன்ன பிறவு மாகு மையுருபே.

* 'விதியுள்' என்றும் பிரதிபேதம்.

(இ - ள்) ஐ உருபு - இரண்டாம்வேற்றுமைப் புணர்ச்சி,—இயல்பின் விகாரமும் விகாரத்து இயல்பும்-(பொதுவிதிப்படி முடிதலே யன்றி அப்படி விதித்த) இயல்பிலே விகாரமாகியும் விகாரத்திலே இயல்பாகியும்; உயர்திணையிடத்து - உயர்திணைப்பெயரினிடத்து, விரிந்தும் - உருபு வெளிப்பட்டும், தொகும் - உருபு மறைந்தும்; விரவுப் பெயரின் - பொதுப்பெயரினிடத்து, விரிந்தும் - உருபு வெளிப்பட்டும், நின்றும் - உருபு மறைந்தும்; அன்ன பிறவும் - அவைபோல்வன பிற வேறுபாடுகளும், ஆகும் - ஆகிவரும்; (எ - று)

(உ - ம்) நின + புறங்காப்ப=’நிற்புறங்காப்ப’—“நின்னீறியல்பாம்” என இயல்பாகவேண்டுமிடத்து விகாரமாயிற்று.

மண்சுமந்தான், பொன்கொடுத்தான்—“ணன வல்லினம் வரட்டறவும்” என விகாரமாகவேண்டுமிடத்து இயல்பாயிற்று.

நம்பியைக் கொணர்ந்தான்—உயர்திணையிடத்து விரிந்தது.
மகன் + பெற்றாள்—மகற்பெற்றாள்—உயர்திணையிடத்துத் தொக்கது.
கொற்றனைக் கொணர்ந்தான்—பொதுப்பெயரிடத்து விரிந்தது.
ஆண்பெற்றாள்—பொதுப்பெயரிடத்துத் தொக்கது.

‘அன்னபிறவும்’ என்றதனால் - ‘தற்கொண்டான்’ என விகற்பிக்க வேண்டுமிடத்துத் திரிந்தேவருதலும், பிறவுங் கொள்க (தன் + கொண்டான்.)

எண்ணும்பொருளில் வந்த இறந்தது தழீஇய இழிவுசிறப்பு உம்மைகளால் - வேற்றுமைக்கு என்று விதித்த பொதுவிதியோடு ஒத்து ‘வரகுதந்தான்’ என இயல்பில் இயல்பாகியும், ‘சுக்குத்தின்றான்’ என விகாரத்தில் விகாரமாகியும் வருதலே பெரும்பான்மை யென்க (கசு)

[மூன்றாம் வேற்றுமைப் புணர்ச்சிக்குச் சிறப்புவிதி]

உருசு. புள்ளியு முயிரு மாயிறு சொல்முன்
தமதி னாகிய தொழில்மொழி வரினே
வலலினம விகற்பமு மியல்பு மாகும.

(இ - ள்) புள்ளியும் உயிரும் ஆய இறு சொல் முன் - (மூன்றாம்வேற்றுமைத்தொகையில்) மெய்யும் உயிரும் இறுதியாகநின்ற சொற்களின் முன், தமமின் ஆகிய தொழில் மொழி - கருத்தாவாகிய நிலைமொழிப்பொருள்களால் ஆகிய வினைச்சொற்கள் [செயப்பாட்டு வினைச்சொற்கள்], வரின் - (வருமொழியாக) வந்தால்,—, வல்லினம் - (அவ்விடத்து வரும்) வல்லினம், (பொதுவிதிப்படி முடிதலேயன்றி), விகற்பமும் - உறழ்ச்சியும், இயல்பும்—, ஆகும்—; (எ - று)

(உ - ம்) பேய்கோட்பட்டான், பேய்க்கோட்பட்டான்
புலிகோட்பட்டான், புலிக்கோட்பட்டான் } விகற்பம்.

பேய்பிடிக்கப்பட்டான், புலிகடிக்கப்பட்டான்—இயல்பு.

உம்மையால் - அராத்தீண்டப்பட்டான் சுறாப்பாயப்பட்டான் எனப் பொதுவிதியால் முடிவனவே பெரும்பாலனவாம். (கஎ)

## எழுத்ததிகாரத்திற்குப் புறனடை.

உருஎ. இதற்கிது முடிபென் றெஞ்சாது யாவும்
விதிப்பள வின்மையின் விதித்தவற் றியலான்
வகுத்துரை யாதவும் வகுத்தனர் கொளலே.

(இ - ள்.) இதற்கு இது முடிபு என்று - இதுக்கு இதுதான் முடிந்த இலக்கண மென்று, யாவும் - (இவ்வதிகாரத்துள் விதிக்கத்தக்கவற்றை) எல்லாம், எஞ்சாது - குறையாமல், விதிப்பு - (கணித்தணி அளவுசெய்து) விதிக்கப்புகுந்தால் அதற்கு, அளவு இன்மையின் - ஒரு வரம்பு இல்லாமையால்,— விதித்தவற்று இயலான் - வகுத்து விதித்தவற்றினுடைய இலக்கணங்களை (ஏதுவாக)க்கொண்டு, வகுத்து உரையாதவும் - வகுத்து விதிசொல்லாதவற்றையும், வகுத்தனர் கொளல் - (அநுமானப்பிரமாணத்தால்) வகுத்து விதியுரைத்துக்கொள்க; (எ - று.)

(உ - ம்) எழுத்தியலுள், "மொழிமுதற்காரணமாம் அணுத்திரளொலி எழுத்து" என ஒலிவடிவெழுத்தை உரைத்ததனால், ஒலிவடிவைக் காட்டுதற்கு ஓர் கருவியாக எழுதப்பட்டது வரிவடிவெழுத்து எனக் கொள்க.

பதவியலுள், "அன் ஆன் அள் ஆள்" என்னுஞ் சூத்திரத்தில் முறையே அன் ஆன விகுதி ஆண்பாற்கென உரைத்ததனால், 'பெருமாள்' என்னும் பதம், பெருமையையுடையா னென்னும் பொருள்தோன்ற நின்ற பெருமான் என்கிற பதத்தினது ஆன் விகுதி ஆள் விகுதியாக ஒரோவிடத்துத் திரிந்து ஆண்பாலையே யுணர்த்திநின்றதெனக் கொள்க.

உயிரீற்றுப்புணரியலுள், "இயல்பினும் விதியினுநின்ற வுயிர்முன், கசதப மிகும்" என உரைத்ததனால், "ணனவல் லினம்வரட் டறவும்" என்ற இடத்து, டகரமும் வல்லினமாதலின் மிக்கதெனக் கொள்க.

மெய்யீற்றுப்புணரியலுள், "நம்தம், எமநமவீறு மவ்வரு ஞகவே" என உரைத்ததனால், அம் என்னுஞ்சொல்லிறுதி மகரமும் தனிக்குறிலடுத்த ஒற்றாதலின் தன்னொடு மயங்காத மெல்லினம் வந்தால் அதுவாய்த்திரிந்து அந்நகை என அழகிய நகையென்னும் பொருளதாய் வருமெனக் கொள்க.

உருபுபுணரியலுள், இரண்டாம் வேற்றுமைக்கும் மூன்றாம்வேற்றுமைக்கும் புறனடை உரைத்ததனால், ஏழாம்வேற்றுமையும் மண்சோர்ந்து, விண்புகுந்து என வேற்றுமைப் பொதுவிதியை ஏலாமல் சிறுபான்மை வருமெனக் கொள்க.

இன்னும் இவ்வைந்தியலுள்ளும் வகுத்து உரையாதவற்றையெல்லாம் இதுவே இடமாக முடித்துக்கொள்க. (கஅ)

உருபுபுணரியல் முற்றிற்று.

---

"அடைவொண் பெயர்முறை தோற்றம் வடிவள வாதியந்தம்
இடைநிலை போலியென் றீரைந் தெழுத்து மிருபதமும்
படுபுணர் மூன்றி னியல்பும் விகாரமுஞ் சாரியையும்
உடனுணர் வாரை யெழுத்தறி வாரென்ப ருத்தமரே"

## எழுத்ததிகாரம் முற்றுப்பெற்றது.



## இரண்டாவது

# சொல்லதிகாரம்,

மேற்கூறிய எழுத்தினாலாகிய

பலவகைச் சொற்களின் இலக்கணங்களை உணர்த்தும் அதிகாரம்.

## க. பெயரியல்.

பெயர்ச்சொல்லின் இலக்கணங்களை உணர்த்தும் இயல்.



[ கடவுள் வணக்கமும், அதிகாரத்தொடக்கமும். ]

உ௫அ. முச்சக நிழற்று முழுமதி முக்குடை
அச்சுத னடிதொழு தறைகுவன் சொல்லே.

(இ - ள்.) முச்சகம் - (சுவர்க்கம் பூமி பாதாளம் என்னும்) மூன்றுலோகங்களுக்கும், நிழற்றும் - நிழலைச் செய்கின்ற, முழு மதி - நிறைந்த [பூரண] சந்திரனைப்போன்ற, முக் குடை - மூன்று குடைகளையுடைய, அச்சுதன் - அழியாத கடவுளாகிய அருகதேவனது §. அடி - பாதங்களை, தொழுது - வணங்கி, —சொல் - (முன்னதிகாரத்துட் சொல்லிய எழுத்தினாலாகிய) சொல்லின் இலக்கணத்தை. அறைகுவன் - சொல்லுவேன், (எ - று.)—அச்யுதன் - தன்னைச் சரணமடைந்தவர்களைக் கைவிடாதவனென்றுமாம். ஏ - ஈற்றசை.

முக்குடை - சந்திராதித்தியம் நித்தியவிநோதம், சகலபாசனம் எனப் பெயர்பெறும்: இவை, ஒன்றன்மேலொன்றாக அமைந்துள்ளன ஆனது பற்றி, 'முச்சகநிழற்றும்' என்றார். "திங்கண் மூன்றடுக்கிய திருமுக்குடைக் கீழ்" என்றார் சிலப்பதிகாரத்தும். 'சொல்' என்றது, ஆகுபெயர். (க)

* 'அஃதேல், ஒருநூற்கு எடுத்துக்கோடற்கண்ணே வணக்கஞ்சொல்லுதலன்றி அதிகாரந்தோறுஞ் சொல்லியது என்னையோ வெனின்,—நூல் ஒன்றேயெனினும் அதிகாரங்கள் பொருளான் வேறுபடுதலானும், முன்னையொருசாரார் ஓரோவதிகாரத்தை ஒருநூலாக்கிப் பாயிரம் முழுதும்பகாதலானும், "ஆதியு மந்தமு நடுவு மங்கலம், ஓதிய முறைமையி னுரைப்ப ராயிடின், ஏதமி லிருநிலக் கிழத்தி யின்புற, நீதியம் பனுவல்கள் நிலவு மென்பவே" என்பவாதலானும், 'கற்றதனாற் பயன், குற்றமற்று முற்றுமுணர்ந்த ஒற்றைநற்றவன் பொற்றாளிணைமலர் போற்றல்' என்பதனானும், சொன்னாரெனக் கொள்க' என்பது, பழைய உரை.

§ 'ஈண்டுக் காப்பது கருதி 'அச்சுதன்' என்றது, மேலையதிகாரத்துப் படைப்பதுகருதி 'நான்முகன்' என்றதுபோலும்' என்பது, நன்னூல்விருத்தி.

## சொல்லின் பொதுவிலக்கணம்.

[சொல் இன்ன தென்பது.]

உருகூ. ஒருமொழி தொடர்மொழி பொதுமொழி யென்று
இருதிணை யைம்பாற் பொருளையுந் தன்னையும்
மூவகை யிடத்தும் வழக்கொடு செய்யுளின்
வெளிப்படை குறிப்பின் விரிப்பது சொல்லே.

(இ - ள்.) ஒருமொழி - ஒருமொழியும், தொடர்மொழி - தொடர்மொழியும், பொதுமொழி - பொதுமொழியும், என்று - என்று மூன்று பிரிவை யுடையதாய்,—இரு திணை - இரண்டு திணைகளையும், ஐம் பால் பொருளையும் - (அவற்றின் கூறுபாடான) ஐந்து பால்களையும், தன்னையும் - தன்பொருளையும், மூவகை இடத்தும் - மூன்று இடங்களிலும், வழக்கொடு - உலகவழக்கத்திலும், செய்யுளின் - செய்யுள்வழக்கத்திலும், வெளிப்படை - வெளிப்படையாகவாவது, குறிப்பின் - குறிப்பாகவாவது, விரிப்பது - தெரிவிப்பது,—சொல் - சொல்லாம்; (எ - று.)—சொல் - பொருளைச் சொல்வது.

இருதிணை யைம்பாற் பொருளைத் தெரிவித்தல் - தான் இன்னதிணை இன்னபால் என்று அறிவித்தல். தன்னைத் தெரிவித்தல் - தான் இன்ன அருத்தத்தைக் கொண்டதென்று அறிவித்தல் (உ)

[மூவகைமொழிகள்]

உகூ0. ஒருமொழி யொருபொரு ளனவாந் தொடர்மொழி
பலபொரு ளனபொது விருமையு மேற்பன.

(இ - ள்) ஒருமொழி - ஒருமொழிகளாவன:—ஒரு பொருளன ஆம் - (பகாப்பதமாவது பகுபதமாவது ஒன்று நின்று தம்தம்) ஒருபொருளைத் தருவனவாம், தொடர்மொழி - தொடர்மொழிகளாவன:—பலபொருளன - (அவ்விருவகைப்பதங்களும் இரண்டு முதலியனவாகத் தொடர்ந்துநின்று ஒவ்வொரு சொல்லுக்கு ஒவ்வொரு பொருளாக இரண்டுமுதலிய) பலபொருள்களைத் தருவனவாம்; பொது - பொதுமொழிகளாவன:—இருமையும் ஏற்பன - (ஒருமொழியாக நின்று ஒருபொருளைத் தந்தும் அதுவே தொடர்மொழியாக நின்று பலபொருள்களைத் தந்தும்) இவ்விரண்டுக்கும் பொதுவாக நிற்பனவாம்; (எ - று)

(உதாரணம்.)

ஒருமொழி—நிலம், நிலத்தன; நட, நடந்தான; தில், மன்; தவ, நனி.

தொடர்மொழி—நிலம்வலிது, அதுகொல, சாலப்பகை, மண அளந்தமால்.

பொதுமொழி—எட்டு, தாமரை, வேங்கை இவை - ஒருமொழிகளாக நின்று ஒருபொருளைத் தருதலன்றியும், எள் + து [எள்ளை உண்], தா + மரை [தாவுகின்ற மான்], வேம் + கை [வேகின்ற கை] எனத்தொடர்மொழிகளாக நின்று ஒவ்வொருசொல்லுக்கு ஒவ்வொருபொருளாகப் பல பொருள்களைத் தருதலுங்காண்க.

இங்கு 'தொடாமொழி பலபொருளன' என்றது - பலசொற்கள் தொடாந்து நின்று ஒவ்வொருசொலலுககு ஒவவொருபொருளாகப் பலபொருள்களைத் தெரிவிப்பதை; இஃவியலில, கரு - ஆம சூததிரததில் "ஒருபொருள் குறிதத பலசொல்லாகியும், பலபொருள குறிதத ஒரு சொல்லாகியும்" எனக கூறுமவறறில் ஒருசொலலே நின்று பலபொருளகளைக குறிப்பதையன்று; அது - திரிசொலலாம. ஒருமொழியெனினும, தனிமொழியெனினும ஒககும. தொடாமொழியெனினும, சொற்றொடரெனினும் ஒககும. பொதுமொழி - இவ்விரண்டின தன்மையையும ஏற்றுவருபவை. (௩)

[இருதிணை]

‡ உகக. மக்கள் தேவர் நரக ருயாதிணை
மற்றுயி ருள்ளவு மில்லவு மஃறிணை.

(இ - ள) மககள் - மனிதாகளும, தேவா - தேவாகளும, நரகா - நரகர்களும், உயாதிணை - உயாதிணைப்பொருள்களாம்: மறறு உயிா உள்ளவும - மற்றை (மிருகம் பறவை முதலாகிய) உயிருளளவையும், இல்லவும் - (நிலம நீா முதலாகிய) உயிரிலலாதவையும, அஃறிணை-அஃறிணைப்பொருள்களாம.

இமமூவகையோருடைய உடம்பையும உயிரையும தனிததனிகுறிககும போது, அவ்விரணடும அஃறிணையாம; (உ - ம.) உடமபு பருததது, உயிா நீஙகிற்று.

உயா திணை - உயாநத பகுப்பு; அஃறிணை - அல் திணை அதுவல்லாத [தாழ்வாகிய] பகுபபு அஃறிணையெனினும, இழிதிணையெனினும ஒககும உயாதிணை - வினைததொகை. அஃறிணை - பணபுததொகை.

மக்கள் - பூலோகவாசிகள, தேவா - சுவாககலோகவாசிகள், நரகா - பூமியின்கீழுள்ள நரகலோகததில் வாசஞ்செயபவாகள. மனிதராயபபிறந்து புண்ணியபாவஙகளைசசெய்து புண்ணியமிகுதியால தேவராகவும் பாவமிகுதியால் நரகராகவும தோன்றுவதனுல், மககள் தேவா நரகா என முறைப்படுததிக் கூறினா.

இனி, 'சூரியன் உதிததான', 'சூரியன் உதிததது;' 'சந்திரன் மறைந்தான்', 'சந்திரன் மறைந்தது;' 'கலி நீஙகினன்" 'கலி நீஙகிற்று;' 'வந்தான கூற்றுவன்', 'வந்தது கூற்று' எனத தேவர்களையும்; 'சேடன் எழுநதான்,' 'சேடன் எழுந்தது'; 'காாககோடகன தீணடினன்', "கார்ககோடகன தீண்டிற்று' எனத தேவகணததாரையும உயாதிணையாகச சொல்வதுமல்லாமல் அஃறிணையாகச சொல்வதும உணடு.

கடவுளா உயாதிணையாகவும, அஃறிணையாகவும் சொல்லலாம்; (உ-ம்.) கடவுள் இருககிறா, தெயவம் இருககிறது. (௪)

[உயர்திணையின் பால்கள் - ௩.]

‡ உகஉ. ஆண்பெண் பலரென முப்பாற் றுயர்திணை.

(இ - ள்.) ஆண - ஆண்பாலும், பெண-பெணபாலும், பலா-பலர்பாலும், என-என்று, உயாதிணை—, முபபாற்று - மூனறு பாலகளை யுடையது.

பால் பகுப்பு ஆண்பாலும், பெண்பாலும்-ஒருமை. பலர்பால்-பன்மை.

ஆடவர் மைந்தர் முதலிய ஆண்பன்மையையும், பெண்டிர் மகளிர் முதலிய பெண்பன்மையையும், மக்கள் மாந்தர் முதலிய அவ்விருவர்பன்மையையும் அடக்கி, 'பலர்' என்றார்; வருஞ்சூத்திரத்தில் 'பல' என்பதும் அது. (ரு)

[அஃறிணையின் பால்கள் - உ.]

உகூ௬. ஒன்றே பலவென் றிருபாற் றஃறிணை.

(இ - ள்.) ஒன்றே - ஒன்றன்பாலும், பல - பலவின்பாலும், என்று—அஃறிணை—, இரு பாற்று - இரண்டுபால்களை யுடையது; (எ - று.)

அஃறிணையில் சேவல் களிறு கடுவன் முதலிய ஆண்பாலும், பெடை பிடி மந்தி முதலிய பெண்பாலும் இருந்தாலும், அப்பகுப்பு - உயிருள்ளவற்றில் புழு முதலிய சிலவற்றிற்கும், கல் முதலிய உயிரில்லாதவற்றிற்கும் இல்லாமையால், அப்பகுப்பை ஒழித்து எல்லாவற்றிற்கும் பொருந்த ஒன்று' என்றார். * ஒன்றன்பால் - ஒருமை. பலவின்பால் - பன்மை. (௬)

[திணை பால்களுக்குப் புறனடை]

† உகூ௭. பெண்மைவிட் டாணவா வுவபே டாண்பால்
ஆண்மைவிட் டல்ல தவாவுவ பெண்பால்
இருமையு மஃறிணை யன்னவு மாகும்.

(இ - ள்.) பெண்மை விட்டு-பெண்தன்மை குறைந்து, ஆண் அவாவுவ - ஆண்தன்மை மிகுந்திருப்பனவாகிய, பேடு - பேடுகள், ஆண்பால் - (உயர்திணை) ஆண்பாலாம்; ஆண்மை விட்டு - ஆண்தன்மை குறைந்து, அல்லது அவாவுவ - பெண்தன்மை மிகுந்திருப்பனவாகிய பேடுகள், பெண்பால் - (உயர்திணைப்) பெண்பாலாம்; இருமையும் - இவ்விருவகைப்பேடுகளும், அஃறிணை அன்னவும் - (உயர்திணையாவதன்றி) அஃறிணையொத்து நடப்பவையும், ஆகும்—; (எ - று.)—பேடு - நபும்ஸகம்.

இவையும் மக்கட்கதியின வேனும், அத்தன்மை நிரம்பாமையின் இவ்வாறு முடியுமென்க. ஆணிலக்கணமும் பெண்ணிலக்கணமும் கலந்து ஒருவகையாயினும் நிரம்பாமல் நிற்கும் பேடுகளை, பாற்பொதுமையின் நீக்கி, குறைந்த இலக்கணம் ஒழிய மிகுந்த இலக்கணம்பற்றி, உயர்திணை ஆண்பால் பெண்பால்களுள் ஒருபாலிற் சேர்த்துச் சொல்லுதல் தகுதி யென்றும், இவ்விலக்கணங்களைக் கருதாமல் பொதுப்படக் குறித்தபோது இருவகைப்பேடுகளும் ஆண் பெண் என்னும் இரண்டினுள் ஒன்றிற் சேர்தல் கூடாமையால் உயர்திணையாகாமல் உயிருள்ளவற்றில் ஆண் பெண் என்னும் பகுப்பு இன்றி நின்ற அஃறிணையிற் சேர்த்துச் சொல்லப்படுமென்றும் கூறியபடி.

---

* 'ஆண் பெண் என்பன அஃறிணைக்கும் ஒக்குமெனினும் அவ்விரண்டிற்கும் அஃறிணைக்கண் 'வந்தது' என்பதல்லது வழக்கினுள் வேறுபாடு இன்மையின், ஆண்பால் பெண்பால் என்னும் வழக்கு உயர்திணைக்கே ஆயெனக்' என்பது, பழைய உரை.

பெண்மைவிட்டு ஆண் அவாவுவபேடு, அலி யெனப்படும்; சிகண்டிமுதலியோர். ஆண்மைவிட்டுப் பெண் அவாவுவ பேடு, பேடி யெனப்படும்; பிருகந்நளை, வீணாபதி முதலியோர்: இவ்விருவகைக்கும் பொதுப்பெயர் - பேடு.

(உ - ம்.) 'அலி வந்தான்'
"சிகண்டி இவன்" } ஆண்பாலாகச் சொல்லப்பட்டன.

"பேடி அணியாளோ"
"தேறுநர்தாள் அந்த மெய்ப் பேடி"
"வீணாபதியென்னும் பேடி என்றாள் } பெண்பாலாகச் சொல்லப்பட்டன.

அலி வந்தது. பேடிவந்தது, பேடுவந்தது - அஃறிணையாகச்சொல்லப்பட்டன.

[மூன்று இடத்தும் சொல் திணை பால்களை உணர்த்துதல்.]

உஎரு. படர்க்கை வினைமுற்று நாமங் குறிப்பின்
பெறப்படுந் திணைபா லனைத்து மேனை
இடத்தவற் றொருமை பன்மைப் பாலே.

(இ - ள்.) படர்க்கை வினைமுற்று நாமம் - படர்க்கையிடத்து வினைமுற்றுச் சொல்லையும் படர்க்கையிடத்துப் பெயர்ச்சொல்லையும், குறிப்பின் - சொன்னால், திணை பால் அனைத்தும் - இருதிணையும் ஐம்பாலும், பெறப்படும்—; ஏனை இடத்து - ஒழிந்த தன்மை முன்னிலை யிடங்களின் (வினைமுற்றுச்சொல்லையும் பெயர்ச்சொல்லையும் சொன்னால்), அவற்று - அவ்விருதிணை ஐம்பால்களுள், ஒருமை பன்மை பாலே - ஒருமைப்பாலும் பன்மைப் பாலும் மாத்திரமே, (பெறப்படும்); (எ - று.)

* மூன்று இடங்களுள் படர்க்கையில் மாத்திரமே இருதிணை ஐம்பால் என்கிற பகுப்பு உண்டு; மற்றைத் தன்மை முன்னிலைகளில் ஒருமை பன்மை என்கிற பகுப்புமாத்திரம் உண்டேயன்றி இருதிணை ஐம்பாற் பகுப்புகள் இல்லை.

தன்மைமுன்னிலைகள், இருதிணைக்கும் பொது §

வினைமுற்று, நாமம், குறிப்பின், பெறப்படும் என்பவை - மற்றோரிடத்தும் கூட்டி உரைக்கப்பட்டன.

| | ஆண்பால். | பெண்பால். | பலர்பால். | உயர்திணை. |
|---|---|---|---|---|
| (உ - ம்.) | நடந்தான். | நடந்தாள். | நடந்தார். | —படர்க்கைவினைமுற்று. |
| | அவன். | அவள். | அவர். | —படர்க்கைப்பெயர். |

| ஒன்றன்பால். | பலவின்பால். | அஃறிணை. |
|---|---|---|
| நடந்தது. | நடந்தன. | —படர்க்கைவினைமுற்று. |
| அது. | அவை. | —படர்க்கைப்பெயர். |

எனப் படர்க்கைச்சொற்கள். திணை பால்களை யுணர்த்தின.

---

* இத்தன்மை, வினையியல் - ரு-ஆஞ் சூத்திரத்திலும் நன்குவிளங்கும்.

§ 'தன்மை உயர்திணைக்கேயன்றி அஃறிணைக்கு உரித்தாமோ? எனின்,— "பேய் பூதம் மந்தி கிளி பூவை பேசுதலா, லாகுமே தன்மை பொது" என்பதனால் ஆமென்க' என்பது, பழைய உரை.

| | | |
|---|---|---|
| ஒருமை. | தன்மை. | இருதிணைப்போது |
| நடந்தேன். | நடந்தேம். | —தன்மைவினைமுற்று. |
| யான். | யாம், | —தன்மைப்பெயர். |
| நடந்தாய் | நடந்தீர். | —முன்னிலைவினைமுற்று. |
| நீ | நீர் | —முன்னிலைப்பெயர். |

எனத் தன்மைமுன்னிலைச்சொற்கள், ஒருமைபன்மைகளை உணர்த்தின.

ஒருமை - ஒரு பொருளைக் குறிப்பது; பன்மை - ஒன்றின்மேற்பட்ட பல பொருள்களைக் குறிப்பது. வடநூலார் ஒருமையை ஏகவசனமென்றும், பன்மையைப் பகுவசன மென்றும் கூறுவர். வடமொழியிலக்கணத்திலுள்ள துவிவசநமும் [இருமையெண்ணும்], தமிழிற் பன்மையில் அடக்கப்படும். எண், வசநம், மொழி என்பன - ஒருபொருட் சொற்கள்.

(மூவிடங்களில் ஒன்றற்கு உரிய வினைமுற்றும் பெயரும் இப்படி உணர்த்து மெனவே இவ்விடங்களுக்குப் பொதுவாகிய வினைமுற்றுக்களும் பெயர்களும் சந்தர்ப்பம் நோக்கிப் பொதுமைநீங்கி ஓரிடத்திற்கு உரியனவா கியும், வினையெச்சம் முதலியனவும் இடைச்சொல்லும் உரிச்சொல்லும் பெயர்வினைகளைச் சார்ந்தும் இப்படியே திணை பால் முதலியவற்றை உணர்த் துமெனக் கொள்க. (அ)

[மூவகை இடம்]

உசுசு. தன்மை முன்னிலை படர்க்கை மூவிடனே.

(இ - ள்.) மூ இடன் - மூன்று இடங்களாவன—தன்மை தன்மையும், முன்னிலை - முன்னிலையும், படர்க்கை - படர்க்கையும் ஆகும்; (எ - று.)

தன்மை - தன்னைக் குறிப்பது. முன்னிலை - எதிரில்நிற்கும் பொருளைக் குறிப்பது. படர்க்கை - இவ்விரண்டையுங்குறியாது அயற்பொருளைக்குறிப் பது.

(உ - ம்.) யான், வந்தேன்; யாம், வந்தேம்—தன்மை

நீ, வந்தாய்; நீர், வந்தீர்—முன்னிலை

| | |
|---|---|
| அவன், வந்தான்; அவள், வந்தாள்; அவர், வந்தார்; அது, வந்தது; அவை, வந்தன. | படர்க்கை. (க) |

[வழக்கு]

உசுஎ. இலக்கண முடைய திலக்கணப் போலி
மரூஉவென் றாகு மூவகை யியல்பும்
இடக்க ரடக்கல் மங்கலங் குழூஉக்குறி
எனுமுத் தகுதியோ டாறும் வழக்கியல்.

(இ - ள்.) இலக்கணம் உடையது - இலக்கணமுடையதும், இலக்கணப் போலி - இலக்கணப்போலியும், மரூவு - மரூஉவும், என்று ஆகும் - என்று வழங்குகின்ற, மூவகை இயல்பும்-மூன்றுவகை இயல்புவழக்குகளும்; இடக் கரடக்கல் - இடக்கரடக்கலும், மங்கலம் - மங்கலமும், குழூஉக்குறி - குழூஉக் குறியும், எனும் - என்று வழங்குகின்ற, முத்தகுதியோடு-மூன்று தகுதிவழக்

குக்கனும், (ஆக), வழக்கு இடல் - வழக்கிலக்கணம், ஆறு ஆம் - அறுவகைப் படும்: (எ - று.)—குழூஉ - கூட்டம்.

(௧) இலக்கணமுடையது - இலக்கணநெறியால் வருவது.

(உ - ம்) நிலம், நீர், தீ, பொன்னன், நன்னிலம் முதலியன.

(௨) இலக்கணப்போலி - இலக்கணமில்லாததாயினும் இலக்கணமுடையது போலச் சான்றோரால் தொன்றுதொட்டு வழங்கப்படுவது.

| | | |
|---|---|---|
| (உ - ம்) இல்முன்-முன்றில் | பொதுவில்-பொதியில் | தசை-சதை |
| நகர்ப்புறம்-புறநகர் | மிஞிறு-ஞிமிறு | கோவில் கோயில் |
| இல்வாய் வாயில் | வைசாசி-வைகாசி | கண்மீ மீகண் |

(௩) மரூஉ - தொன்றுதொட்டு வருதலின்றி இடையில் எழுத்துக்கள் தோன்றியும் திரிந்தும் கெட்டும் இலக்கணஞ்சிதைந்து தானே மருவி வழங்குவது.

| | |
|---|---|
| (உ - ம்) அருமருந்தன்ன - அருமந்த | தஞ்சாவூர் - தஞ்சை |
| மலையமானாடு - மலாடு | ஆற்றூர் - ஆறை |
| சோழனாடு - சோணாடு | உறையூர் - உறந்தை |
| பாண்டியனாடு - பாண்டிநாடு | ஆயிற்று - ஆச்சு |
| தொண்டைமானாடு-தொண்டைநாடு | அ, இ, உ-அந்த, இந்த, உந்த |
| குணக்குள்ளது - குணாது | எ - எந்த |
| தெற்குள்ளது - தெனாது | யாடு - ஆடு, யாக்கை-ஆக்கை |
| வடக்குள்ளது - வடாது | யாறு - ஆறு, யானை - ஆனை |
| பொழுது - போழ்து, போது, | யாளி - ஆளி, யாமை - ஆமை |
| மரவடி - மராடி | யார் - ஆர், யாய் - ஆய் |
| குளவாம்பல் - குளாம்பல் | வருகிறது - வருகுது |
| பெயர் - பேர் | வாயில் - வாசல் |

இம்மூன்றும், எப்பொருட்கு எச்சொல் இயல்பில் அமைந்ததோ அச்சொல்லாலேயே அப்பொருளைக் கூறுதலால், 'இயல்புவழக்கு' எனப்பட்டன. *

(௧) இடக்கரடக்கல் - இடக்கான [நன்மக்களிடத்தே சொல்லத்தகாத] வார்த்தைகளை மறைத்துப் பிறவாற்றாற் சொல்லுதல், [இடக்கர் - இடக்கு என்பதன் ஈற்றுப்போலி.]

(உ - ம்) மலங்கழுவிவந்தான் கால்கழுவிவந்தான், பீ-பவ்வீ, பகாவீ

(௨) மங்கலம் - மங்கலமல்லாத சொல்லை ஒழித்து மங்கலமான சொல்லாற் கூறுவது. [மங்கலம் - சுபம்.]

| | |
|---|---|
| (உ - ம்.) செத்தான் - துஞ்சினான் | பொய்யாகிய உடம்பு - மெய் |
| சுடுகாடு - நன்காடு | செவ்வாய்க்கிழமை - மங்களவாரம் |
| ஓலை - திருமுகம் | தாலி அறுந்தது - தாலிபெருகிற்று. |

(௩) குழூஉக்குறி - ஒருகூட்டத்தார் ஒருகாரணத்தால் ஒருபொருளின் சொற்குறியை ஒழித்து வேறொருசொல்லால் அப்பொருளைக் கூறுவது.

---

* 'இவற்றுள், முதலன மூன்றும் - ஒருகாரணமின்றி இயல்பான வருதலின் இயல்புவழக்கென்றாயின; ஏனைமூன்றும்-இவ்வாறன்றி உயர்ந்தோரும் இழிந்தோரும் இவ்வாறுகொண்டு மொழிவது தக்கதென்று கொண்டு வழங்குதலின், தகுதிவழக்கென்றாயின' என்பது, பழைய உரை.

(உ - ம்.) பொன் - பறி—தட்டார் சொல்வது.

கள் - சோல்விளம்பி—வேடர்சொல்வது.

இம்மூன்றும், பொருள்களுக்கு இயல்பாய் ஏற்பட்ட சொற்களைக் ஒழித்துத் தகுதியான வேறுசொற்களால் அப்பொருள்களைக் கூறுதலால் 'தகுதி வழக்கு' எனப்பட்டன. (௧௦)

[செய்யுள்.]

† உகூ௩. பல்வகைத் தாதுவி னுயிர்க்குடல் போற்பல
சொல்லாற் பொருட்கிட னாக வுணர்வினில்
வல்லோ ரணிபெறச் செய்வன செய்யுள்.

(இ - ள்.) பல் வகை தாதுவின் - (தோல் இரத்தம் இறைச்சி எலும்பு முதலிய) எழுவகைத் தாதுக்களினாலே, உயிர்க்கு - உயிர்க்கு(இடமாகச்செய்யப்பட்ட), உடல் போல் - உடம்புபோல,—பல சொல்லால் - பலவகைச் சொற்களாலும், பொருட்கு - பொருளுக்கு, இடன் ஆக - இடமாக, உணர்வினில் - கல்வியறிவினால், வல்லோர் - (செய்யுள் செய்ய) வல்லவரால், அணி பெற - அலங்காரந்தோன்ற, செய்வன - செய்யப்படுபவை,—செய்யுள் - செய்யுளாம்: (எ - று.)

இப்படிச் சொல்லவே, (எழுத்தாலானது சொல்லாதலால்), எழுத்து சொல்பொருள் அணிஎன்னும் நான்கினாலும் ஆவதுசெய்யுள்என்றதாயிற்று.

யாக்கைக்கும் யாப்புக்கும் ஒப்புமைகூறியது, இச்சூத்திரம்.

பொருள் - அகப்பொருளும், புறப்பொருளும். அகப்பொருள் - இன்பம்; புறப்பொருள் - அறமும், பொருளும். அணி - சொல்லணியும், பொருளணியும், சொல்லணி - மடக்கு முதலியன பொருளணி - உவமை முதலியன.

யாப்பு, பாட்டு, தூக்கு, செய்யுள், தொடர்பு என்பன - ஒருபொருளன. (உ - ம்.) "அகர முதல வெழுத்தெல்லாம் ஆதி, பகவன் முதற்றே யுலகு."

இக்குறள்வெண்பா, 'கடவுள்வாழ்த்து'என்னும் பொருளுக்குஇடமாகி, எடுத்துக்காட்டுவமையணியும் பிறவும் உடையதாயிருத்தல் காண்க. (௧௧)

[குறிப்பும், வெளிப்படையும்.]

உகூகூ. ஒன்றொழி பொதுச்சொல் விகாரந்தகுதி
ஆகுபெய ரன்மொழி வினைக்குறிப்பே
முதல தொகை குறிப்போ டின்ன பிறவும்
குறிப்பிற் றருமொழி யல்லன வெளிப்படை.

(இ - ள்.) ஒன்று ஒழி பொதுச்சொல் - (இருதிணையிலும் ஆண்பால் பெண்பால்களுள்) ஒன்றை ஒழிக்கும் பொதுச்சொற்களும், விகாரம் - (வலித்தல் மெலித்தல் முதலிய ஒன்பதுவகைச் செய்யுள்) விகாரச் சொற்களும், தகுதி - (இடக்கரடக்கல்முதலிய மூவகைத்) தகுதிவழக்குச்சொற்களும், ஆகு

பெயர் - ஆகுபெயர்ச்சொற்களும், அன்மொழி - அன்மொழித்தொகைச்சொற்களும், வினைக்குறிப்பு - குறிப்புவினைச்சொற்களும், முதல - முதலிலைக்குறிக்கிற மொழியைக்குறிக்கிற சொற்களும், தொகை - பொருளினதொகையைக்குறிக்கிற சொற்களும், குறிப்போடு - (இம்முதற்குறிப்பும் தொகைக்குறிப்பு மல்லாத பலவழியாலும் குறிப்பாயவரும்) பிறகுறிப்புச்சொற்களும், இன்ன பிறவும் - இவைபோல்வன பிறவும்,—குறிப்பின் - குறிப்பினால் தரு - (பொருள்களைத்) தருகிற, மொழி - சொற்களாம்;—அல்லன - இவையல்லாதவையெல்லாம், வெளிப்படை - வெளிப்படையாற் பொருள்களைத் தருகிற சொற்களாம்.

(உதாரணம்)

ஆயிரமக்கள் பொருதார், இருமாடுகள் கறந்தன } * ஒன்றொழிபொதுச்சொல் இருதிணையிலுமொரு பாலொழித்து ஒருபாலைக் குறிப்பாற் காட்டிற்று.

“தண்டலையினிலைக்கிளி,” “மரை மலர்” } செய்யுள்விகாரச்சொற்கள் தட்டை, தாமரை என்பவற்றைக் குறிப்பாற் காட்டின.

கால்கழுவி வந்தான், திருமுகம் படி, பறி கொடு } தகுதிவழக்குகள் மலங்கழுவி, ஓலை, பொன் என்பவற்றைக் குறிப்பாற் காட்டின.

புளி தின்றான், ஊர் மகிழ்ந்தது, } ஆகு பெயர்கள் - பழம், மனிதர் இப்பொருள்களைக் குறிப்பாற் காட்டின.

தேன்மொழி வந்தாள், பெருந்தகை வந்தான் } அன்மொழித் தொகைகள் - அவற்றையுடைய பெண்ணையும் ஆணையும் குறிப்பாற் காட்டின.

இப்போது பொன்னன், முன் சிறியன் } வினைக்குறிப்புகள் - பெயர்ப்பொருளை நீக்கி, பொன்னை யுடையனாயிருக்கிறான், சிறுமையுடையனா யிருந்தான் என்னும் பொருள்களைக் குறிப்பாற்காட்டின.

ஆத்திசூடி படித்தான், வெற்றிவேற்கை படி } முதற்குறிப்புகள் - அச்சொல்லை முதலிலேயுடைய நூல்களைக் குறிப்பாற் காட்டின.

ஐவரோடு குந்தி வந்தாள், “ஐவரை அடைத்த முனி” } தொகைக்குறிப்புகள் - பாண்டவர்களையும், ஐம்பொறிகளையும் குறிப்பாற் காட்டின.

கல்லைக்கடிக்க நன்றாசமைத்தாய், பாய வேங்கை, “உவர்க்கட லன்ன செல்வர், (உப்புக்கடல்போன்ற செல்வமுள்ளோர்) } பிறகுறிப்புக்கள் - நன்றாகச் சமைக்க வில்லை, வேங்கைமரம், லோபிகள் என்பவற்றைக் குறிப்பாற் காட்டின.

(‘இன்னபிறவும்’ என்றதனால் - தெரிநிலை குறிப்பு வினையாலணையும் பெயர்களும், இருவகை வினைமுற்றாலும் வரும் முற்றெச்சங்களும், செயயு மென்னும் முற்றும், “கேட்குநபோல” முதலியனவாக அஃறிணையிடத்துச் சொல்லப்படுவனவும் ஆகிய இவை முதலானவையும் குறிப்பாற் பொருளுணர்த்துமெனக் கொள்க.)

(இப்படியல்லாமல்) நிலம், நீர், தீ காற்று, வானம், வந்தான், சென்றது என இவ்வாறு வருபவை வெளிப்படையாற பொருளுணர்த்துவனவாம். ()

* இதன் இலக்கணத்தை, ௩௫௨ - ஆம் சூத்திரத்திற் காண்க.

## [சொல்லின் பாகுபாடு]

### [சொல் இத்துணைவகைப்படு மென்பது]

1 உ௭0. அதுவே,
இயற்சொல் திரிசொ லியல்பிற் பெயர்வினை
எனவிரண் டாகு மிடையுரி யடுத்து
நான்குமாந் திசைவட சொல்லணு காவழி.

(இ - ள்.) அது - (முன்னேகூறிய) சொல்,—இயற்சொல் - இயற்சொல்லும, திரிசொல் - திரிசொல்லும் என்கிற, இயல்பின் - தன்மையையுடைய, பெயர் - பெயாசசொல்லும, வினை - வினைசசொல்லும, என-என்று, இரண்டு ஆகும - இரணடுவகைப்படும; இடை - இடைசசொல்லும, உரி - உரிசசொலலும, அடுதது - (அவறறுடன்) சோந்து, நான்கும ஆம - நானகுவகையாகவும ஆம; திசை வடசொல் - திசைசசொல்லும வடசொல்லும். அணுகாவழி - (அசசொற்களுடன்) சேராத இடததது, (எ - று.)

எனவே பெயரியற்சொல். பெயர்த்திரிசொல்; வினையியறசொல், வினைத திரிசொல். இடையியறசொல், இடைததிரிசொல்; உரியியறசொல, உரித திரிசொல் எனத தமிழ்ச்சொல் எட்டுவகைப்படு மென்றும, திசைச்சொல்லும் வடசொலலும சோநதவிடத்துப் பததுவகைப்படுமென்றும கூறியதாயிற்று.

'இயறசொல் திரிசொ லியல்பின்' என்றதை 'இடை உரி' என்பதனோடும கூட்டுக. இடைசசொல்லும உரிசசொல்லும பெயாவினைகள போலத தனிததுநடவாமல் அவற்றை அடுததேவருதலாலும இடைஉரிகளில் இயற்சொல திரிசொல் என்னும பகுப்பு அவ்வளவாகச சிறப்புடைய தன் றாதலாலும், 'இடையுரி யடுதது'எனத தனியேஎடுததும, 'நானகுமாம்' என இழிவு சிறப்பும்மைகொடுததும கூறினா 'திசைவடசொல் அணுகாவழி' எனப் பராமுகமாக இறுதியிறகூறியது, அவை இந்நான்கு சொற்களுள் அடஙகுதலால்.

பெயர்சசொல் பொருளை உணாததுதலால் முனனும வினைசசொல் அபபொருளின் தொழிலை உணாத்துதலால் அதன் பின்னும, இடைசசொல் அப்பொருளையும் தொழிலையும குறிப்பால் உணர்த்தி அவற்றை அடுததுநிற்றலால அவ்விரணடின் பின்னும வைககப்பட்டன. உரிசசொலலை இறுதியில் நிறுததியது, அது பொருளால் பெயாவினைகளில் அடஙகுதலால். வடதிசைசசொல்லைத திசைசசொல்லில் அடக்காதது, அதன் பலவகைப் பெருமையும்பற்றி.* (கரு)

### [இயற்சொல்.]

† உ௭க. செந்தமி ழாகித் திரியா தி யார்க்குந்
தமபொருள் விளக்குந் தனமைய வியறசொல.

---

* 'இஃது ஒருநிலததிறகே யுரிததன்றிப பதினெணபூமிக்கும், விணணிறகும, புவனாதிககும பொதுவாய் வருதலின், திசைசசொல்லின் அடஙகாது வேறுஓதினா ரென்க. அஃது என்னை?—'வடககண்மொழி' என்னுமாலோவெனின், ஆணடு வழககுப்பயிறசிநோக்கி அவ்வாறு கூறுப வென்ப' என்பது, பழையஉரை

(இ - ள்.) செந்தமிழ் ஆகி - செந்தமிழ்நாட்டில் வழங்குஞ் சொல்லாகி, திரியாது - திரிசொற்போலாகாமல், யார்க்கும் - படித்தவர்க்கு மாத்திரமே யன்றிப் படியாதவர்க்கும், தம் பொருள் - தமது பொருள்களை, விளக்கும் - தெரிவிக்கின்ற, தன்மைய - தன்மையையுடைய உலகவழக்கச்சொற்களே, இயற்சொல் - இயற்சொற்களாம்; (எ - று.)

செந்தமிழ்நாடு - வடபாண்டிநாடு; தமிழைவளர்த்த பாண்டியர்கட்கும் சங்கப்புலவர்கட்கும் உறைவிடமாதலால்.

இயற் சொல் - இயல்பாய [யாவர்க்கும்] பொருள் விளங்கும் சொல்.

(உ - ம்.) மண், பொன், மரம்—பெயரியற்சொல்.

நடந்தான், வந்தான்—வினையியற்சொல்.

அவனை, அவனால் (இவைகளில்உள்ள ஐ ஆல)—இடையியற்சொல்.

அழகு, அன்பு—உரியியற்சொல். (௧௪)

[திரிசொல்]

‡ ௨௭௨. ஒருபொருள் குறித்த பலசொல் லாகியும்
பலபொருள் குறித்த ஒருசொல் லாகியும்
அரிதுணர் பொருளன திரிசொல் லாகும்.

(இ - ள்.) ஒரு பொருள் குறித்த - ஒருபொருளையே தெரிவிக்கின்ற, பலசொல் லாகியும் - பல சொற்களாயும், பலபொருள் குறித்த - பலபொருள்களைத் தெரிவிக்கின்ற, ஒருசொல் ஆகியும் - ஒரேசொல்லாயும், அரிதுஉணர் பொருளன - அருமையாக [கற்றவர்களால்மாத்திரமே] அறியப்படுகிற அருத்தத்தையுடையவை,—திரிசொல் ஆகும் - திரிசொற்களாம்; (எ - று.)

திரிசொல் - இயற்சொல்லினின்று திரிந்த[வேறுபட்ட]சொல்; வேறுபடுதலாவது எளிதிற்பொருள் அறியப்படாமல் அரிதிற் பொருள் அறியப்படுதல்.

'அரிது உணர் பொருளன' என்றதனால்-ஒருபொருள்குறித்த பலசொற்களிலும் பலபொருள்குறித்த ஒருசொற்களிலும் இயற்சொல் தவிர மற்றவையே திரிசொல் லென்று கொள்க.

(உ - ம்.) கிள்ளை, தத்தை—இவை - கிளி என்கிற ஒருபொருளைக் குறித்த பல பெயர்த்திரிசொல்.

காசு—இது - குற்றம் பொன் மணி முதலிய பலபொருள்களைக் குறித்த ஒரு பெயர்த்திரிசொல்.

படர்ந்தான், ஏகினான், சென்றான்—இவை - போனான் என்கிற ஒரு பொருளைக் குறித்த பல வினைத்திரிசொல்

வரைந்தான்—இது - நீக்கினான், கொண்டான், எழுதினான் முதலிய பல பொருள்களைக் குறித்த ஒரு வினைத்திரிசொல்.

சேறும், வருதும் இவற்றில் உள்ள றும் தும் விகுதிகள்—தன்மைப்பன்மை எதிர்காலம் என்கிற ஒருபொருளைக் குறித்த பல இடைத்திரிசொல்.

கொல்—இது - ஐயம், வினை முதலிய பலபொருள்களைக் குறித்த ஓர் இடைத்திரிசொல்.

சால, உறு, தவ, நனி, கூர், கழி— இவை - மிகுதி என்கிற ஒரு பொருளைக் குறித்த பல உரித்திரிசொல்.

கடி—இது - காப்பு கூர்மை அச்சம கரிப்பு விளக்கம் சிறப்பு மணமமுதலிய பலபொருள்களைக் குறித்த ஓர் உரித்திரிசொல்.

இப்பகுப்பினவன்றி ஒருபொருள் குறித்த ஒருசொல்லாகிவரினும் அரிதுணர்பொருளுடைய சொல் திரிசொல்லேயாம், (கரு)

[திசைச்சொல்]

‡ உஎ௩. செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலத்தினும்
ஒன்பதிற் றிரண்டினில் தமிழொழி நிலத்தினும்
தங்குறிப் பினவே திசைச்சொ லென்ப.

(இ - ள்.) செந்தமிழ் நிலம் சேர் - செந்தமிழ்நாடாகிய பாண்டிய நாட்டைச் சேர்ந்த, பன்னிரு நிலத்தினும் - பன்னிரண்டு கொடுந்தமிழ் நாடுகளிலும், ஒன்பதிற்று இரண்டினில் - பதினெட்டுத் தேசங்களுள், தமிழ் ஒழி நிலத்தினும் - தமிழ்நாடு ஒழிந்த பதினேழு நாடுகளிலும், தம் குறிப்பின - வசிப்பவர்கள் தமது பேசும்பாஷைகளிலுள்ள பதங்கள் அப்பொருளோடு செந்தமிழில் வந்து வழங்குவன—திசைச்சொல் - திசைச்சொற்களாம்— என்ப - என்று சொல்வர், (புலவர்); (எ - று.)

திசைச்சொல் - திசைகளில் வழங்குகின்ற தேச பாஷைகளிலிருந்து செந்தமிழில் வந்து வழங்கும் சொற்கள்.

* கொடுந்தமிழ்நாடு பன்னிரண்டாவன.— தென்பாண்டிநாடு, குட்டநாடு, குடநாடு, கற்காநாடு, வேணாடு, பூழிநாடு, பன்றிநாடு, அருவாநாடு, அருவாவடதலைநாடு, சீதநாடு மலையமானாடு, சோழனாடு என்பன. தென்பாண்டிநாடு - செந்தமிழ்பாண்டிநாட்டுக்குத் தென்திசையிலுள்ளது.

(உ - ம்.) க பசுவைப் பெற்றம் என்பதும், சோற்றைச் சொன்றி என்பதும் } தென்பாண்டிநாட்டுச்சொல்

உ. தாயைத் தள்ளை என்பது—குட்டநாட்டுச்சொல்.

௩. தந்தையை அச்சன் என்பது—குடநாட்டுச்சொல்.

௪. வஞ்சகரைக் கையர் என்பது—கற்காநாட்டுச்சொல்.

௫. தோட்டத்தைக் கிழார் என்பது—வேணாட்டுச்சொல்.

௬. சிறுகுளத்தைப் பாழி என்பது—பூழிநாட்டுச்சொல்.

---

* "தென்பாண்டி குட்டங் குடங்கற்கா வேண்பூழி
பன்றி யருவா அதன்வடக்கு—நன்றாய
சீதம் மலாடு புனனாடு செந்தமிழ்சேர்
ஏதமில் பன்னிருநாட் டெண்"

'அன்றியருவாவதன்வடக்கு' என்று பாடமோதி, அன்றிநாடென்பாரும் உளர்.

எ. வயலைச் செய் என்பது—பனறிநாட்டுச்சொல்.

அ. சிறுகுளத்தைக் கேணி என்பது—அருவாநாட்டுச்சொல்.

கூ. புளியை எகின் என்பது—அருவாவடதலைநாட்டுச்சொல்.

கo. தோழனை எலுவன் என்பதும், தோழியை இகுளை என்பதும் } சீதநாட்டுச்சொல்.

கக. நல்லசீரை வெள்ளம் என்பது—மலையமாநாட்டுச்சொல்.

கஉ. * தாயை ஆய் என்பது—புனனாட்டுச்சொல்.

§ தமிழ்நாடு ஒழிந்த நாடு பதினேழாவன—சிங்களம், சோனகம், சாவகம், சீனம், துளுவம், குடகம், கொங்கணம், கன்னடம், கொல்லம், தெலுங்கம், கலிங்கம், வங்கம், கங்கம், மகதம், கடாரம், கௌடம், குசலம்.

மாமரத்தைக் கோக்கு என்பது—துளுவநாட்டுச்சொல்.

அகப்படுதலைச் சிக்குதல் என்பது—கன்னடநாட்டுச்சொல்.

கருத்தாக இருத்தலை எச்சரிக்கை என்பதும், சொல்லுதலைச் செப்புதல் என்பதும் } —தெலுங்கநாட்டுச் சொல்.

மற்றவையும் இப்படியே ஆங்காங்கு வருதல் கண்டுகொள்க.

ஐயோ என்பதை 'அந்தோ என்பது - சிங்களநாட்டுச்சொல்' என்று முன்னைய உரையாசிரியர் எழுதியிருந்தாலும், அது 'ஹந்த' என்னும் வடசொல்லின் சிதைவு என்று தெரிதலால் இங்குக் கொள்ளப்படவில்லை.

என்ப - பலர்பால் முற்று; அன்சாரியைபெறாத பலவின்பால் முற்றாகக் கொண்டு, திசைச்சொல்லென்று சொல்லப்படுவன என உரைப்பினும் அமையும். (கஅ)

## வடசொல்

‡ உஎச. பொதுவெழுத் தானுஞ் சிறப்பெழுத் தானும்
ஈரெழுத் தானு மியைவன வடசொல்.

(இ - ள்.) பொது எழுத்தானும் - (ஸமஸ்கிருதபாஷைக்கும் தமிழ்ப்பாஷைக்கும்) பொதுவாகிய எழுத்துக்களாலும், சிறப்பு எழுத்தானும் - ஸமஸ்கிருதத்துக்கே உரிய சிறப்பெழுத்துக்களாலும், ஈர் எழுத்தானும் - பொதுவும் சிறப்பும் ஆகிய இவ்விருவகையெழுத்துக்களாலும், இயைவன - அமைந்துள்ளனவான ஸம்ஸ்கிருதபாஷைப்பதங்கள் தமிழில் திரிந்தும் திரியாமலும் வந்து வழங்குவன,—வடசொல் - வடசொற்களாம்; (எ - று.)

வடசொல் - வடதிசைமொழியிலிருந்து செந்தமிழில் வந்து வழங்கும் சொல். ஸம்ஸ்கிருதம் ஆதியில் வடக்கே இமயமலை, பிராந்தத்தில் தங்கா

* இது, பழையவுரையிற் கண்டது.

§ "சிங்களஞ் சோனகஞ் சாவகஞ் சீனந் துளுக் குடகங்
கொங்கணங் கன்னடங் கொல்லந் தெலுங்கங் கலிங்கம் வங்கம்
கங்க மகதங் கடாரங் கவுடங் கடுங்குசலம்
தங்கும் புகழ்த்தமிழ்சூழ் பதினேழ்புவி தாமிவையே"

நீரத்தில் காசி முதலிய இடங்களில் மிககு வழங்கிவந்ததனுல், அதற்கு 'வட மொழி' என்று பெயா.

(உ - ம.) க. அமலம, காரணம, மேரு—பொதுவெழுததால இயைந்தன

உ. சுகி, போகி, சுததி—சிறப்பெழுததால இயைநதன.

ந. அரி, அரன, சயம—ஈரெழுததாலும் இயைநதன.

இவற்றில், முந்தினது - தற்சமம்; மறறையிரணடும - தற்பவம்.

இனி, இசசூததிரததில் ஆனும' என்பதை ஆயினும என்பதன் திரியா ககொணடு உரைப்பினும அமையும். (கஎ)

## பெயர்ச்சொல்.

சொல்லதிகாரததில் முதலதான இவ்வியலில் இதுவரை சொல்லிலகக ணத்தைபபொதுபபடக்கூறி, இனிபபெயாசசொல்லிலக்கணம் கூறுகின்றூர்

### [பெயாச்சொல்லின் பொதுவிலக்கணம்.]

‡ உஎரு. இடுகுறி காரண மரபோ டாக்கந்
தொடாநது தொழிலல காலந் தோற்றூ
வேறறுமைக் கிடனுயத திணைபாலிடத்தொன்று
ஏறபவும் பொதுவு மாவன பெயரே.

(இ - ள.) இடுகுறி காரணம - இடுகுறியும காரணக்குறியும் (என்னும் இரணடும்) மரபோடு ஆககம - மரபும் ஆககப்பாடும (எனனும் இரணடை யும), தொடாநது - பறறி,—தொழில் அல காலம் தோறறூ - வினையாலணை யுமபெயாக எல்லாதவை காலததைககாட்டாமல,—வேற்றுமைககு இடன் ஆய-எட்டுவேறறுமைகளும சாாதற்கு இடமாகி,—திணை - இருதிணையிலும், பால்-ஐமபாலிலும, இடதது மூவிடததிலும, ஒனறு - ஒன்றை, ஏற்பவும் - ஏறறுவருபவையும, பொதுவும - (அவ்விருதிணை யைமபால் மூவிடஙகளுள) பலவறறிறகு உரியவையும, ஆவன - ஆகிசிறபன,—பெயர் - பெயாசசொற களாம்; (எ - று.)

எனவே - இடுகுறிமரபுபபெயா, இடுகுறியாககப்பெயா, காரணமரபுப் பெயா, காரணவாககப்பெயா எனப் பெயா நான்குவகைபபடு மென்றபடி, இடுகுறி காரணஙகளுககு இலககணம, * கீழ்க கூறப்பட்டது. மரபாவது - ஒருவரால் ஆககபபடாமல் தொன்றுதொட்டு வழஙகிவருவது ஆககமாவது - புதிதாகப் புலவாகளால் உணடாககபபட்டு வருவது

(உ - ம) மரம, விள, பனை—இடுகுறிமரபு.

அவன், அவள், பறவை—காரணமரபு.

"மானவேன் முட்டைக்கு மாறுபதெவ்வாபோம, கானவேன் முட்டைக் குஙகாடு"—இப பொயயாமொழிபபுலவா பாட்டில் முருககடவுளுக்கு 'முட் டை' என்று பெயாசொன்னது, இடுகுறியாககம.

* சுஉ - ஆஞ் சூததிரம்,

(கீழ்ப்பதவியலில் "இடுகுறியாகி முன்னேயொன்றாய முடிந்தியல்கின்ற பெயர்" எனக் கூறியுள்ளதனால், காரணங் கருதாததாயும் புதிதாக ஆக்கப்படுவதாயுமுள்ள இடுகுறியாக்கப்பெயர்க்கு உதாரணம் அரிதாமென உணர்க. கடவுளர்பெயரை மனிதர்கட்கும் விலங்குகட்கும் இட்டுவழங்குதல், இடுகுறியாக்கத்தின்பாற்படும்)

பொன்னன் பூணன், மலைமகள்மகன்—இவை - காரணக்குறியாக்கம்.

நடந்தவனை. நடப்பவனால், நடக்கின்றவனோடு —வினையாலணையும் பெயர்கள் காலங்காட்டின.

'தொழிலல காலந்தோற்றா' எனப்பொதுவாகச் சொன்னதனால்-(வினையாலணையும்பெயர்கள் காலங்காட்டுவது மாத்திரமேயல்லாமல்) சிலதொழிற்பெயர்களும் காலங்காட்டு மெனபது பெறப்பட்டது

நடந்தமை, நடக்கின்றமை, செய்வது —தொழிற்பெயர் காலங்காட்டின.

மரம் முதலிய இடுகுறிப்பெயரும் அவன் முதலிய காரணப்பெயரும் - தொன்றுதொட்டு வந்தன முட்டை முதலிய இடுகுறிப்பெயரும், பொன்னன் முதலிய காரணப்பெயரும்-நடுவிலே ஒருவரால் ஆக்கப்பட்டு வருவன.

[உயர்திணை ஆண்பாற்பெயர்.]

உஎசு. அவற்றுள்,
கிளையெண் குழூஉமுதற் பலபொருள் திணைதேம்
ஊர்வா னகம்புற முதல நிலன்யாண்டு
இருது மதிநா ளாதிக காலம்
தோள் குழல் மார்புகண் காதுமுத லுறுப்பு
அளவறி வொப்பு வடிவு நிறங்கதி
சாதி குடிசிறப் பாதிப பலகுணம்
ஓத லீத லாதிப பல்வினை
இவையடை சுட்டு வினாப்பிற மற்றொடு
உற்றன வீறு நம்பி யாடூஉ
விடலை கோவேள் குரிசில் தோன்றல்
இன்னன ஆண்பெய ராகு மென்ப

(இ - ள) அவற்றுள் - மேலே 'பெயர்' என்றவற்றுள்.—கிளை - சுற்றமும் எண் எண்ணும், குழூஉ கூட்டமும், முதல முதலிய, பலபொருள் - பலபொருட்பெயர்களையும்; திணை - ஐவகைநிலங்களும், தேம்-தேசமும், ஊர் - ஊரும், வான - ஆகாயமும், அகம - உள்ளிடமும், புறம - வெளியிடமும், முதல - முதலிய, நிலன -இடப்பெயர்களையும்; யாண்டு வருடமும், இருது - பருவமும் மதி - மாதமும, நாள் - நக்ஷத்திரமும, ஆதி - முதலிய, காலம - காலப்பெயர்களையும்; தோள - தோளும், குழல் - மயிரும், மார்பு - மார்பும், கண் - கண்ணும், காது - காதும, முதல - முதலிய, உறுப்பு - சினைப்பெயர்

களையும்; அளவு - அளவும், அறிவு - ஞானமும், ஒப்பு - உவமிக்கப்படுங் குணமும், வடிவு - உருவமும், நிறம் - வாணமும், கதி - (மக்கள் தேவர் நரகர் விலங்கு என்னும் நால்வகைக்) கதிகளும், சாதி - சாதியும், குடி - குலமும், சிறப்பு - மேன்மையும், ஆதி - முதலிய, பல் குணம - பல குணப்பெயாகளை யும்; ஓதல் - படித்தலும, ஈதல்-கொடுத்தலும, ஆதி - முதலிய, பல் வினை - பல தொழிற்பெயாகளையும; இவை இவற்றை, அடை - அடுத்துவருகின்ற, சுட்டு - மூன்று சுட்டெழுத்துக்களும, வினு - மூன்று முதல்வினுவெழுத் துக்களும, பிற - பிற என்பதும மற்றேடு - மற்று என்பதுமாகிய இடைச சொற்களையும, உறற - அடியாககொணடு பிறந்த, ன ஈறு - னகரமெய் யீறறுப்பெயாகளும்: 'நமபி ஆடூஉ விடலை கோ வேள் குரிசில தோன்றல்' - இவவேழு பெயர்களும், இன்னன - இவைபோல்வன பிறவும்,—ஆண்பெயா ஆகும - உயாதிணை ஆணபாற பெயாகளாம;— என்ப - என்று சொல்வர், (புலவர்); (எ - று.)

'னவ்வீறு' எனவே-அன், ஆன், மன, மான், ன் இவ்வைந்தும் அடஙகும்.

சுட்டு முதலிய நான்கு இடைசசொற்களும் தமககென்று ஒருபொருளில் லாமல் பொருள் முதலிய ஆறில் ஒனறைக குறிப்பால் உணாதது மென்பார், 'இவையடை சுட்டு வினுப் பிற மறறு' என்றா.

## பொருளால் வரும் பெயர்கள்.

(உ - ம) தமன், நமன், நுமன், எமன்—கிளையால்வருபெயர்.

ஒருவன்—எண்ணுல்வருபெயா.

சஙகததான்—குழுஉவாலவருபெயா.

பொன்னன், முடியன்—இவை 'முதல்' என்றதனுல் வருபெயா.

## இடத்தால் வரும் பெயர்கள்.

வெறபன், பொருப்பன், சிலமபன்—குறிஞ்சிநிலததால்வருபெயர்.

மறவன், எயினன்—பாலைநிலததால்வருபெயா.

இடையன், ஆயன—முலலைநிலததால்வருபெயா.

ஊரன, மகிழ்நன, நாடன, மள்ளன்—மருதநிலததால்வருபெயா.

சேரப்பன், துறைவன், கரையான்—நெயதலநிலததாலவருபெயா.

சோழியன், தொணடைநாட்டான், சீனததான—தேசததால்வருபெயா.

சிறறூரான், மதுரையான், திருவலலிகசேணியான்—ஊரால்வருபெயா.

வானததான, விணணவன்—வானுல்வருபெயா.

அகததான், புறததான—அகம புறம் எனறவறறுல வருபெயர்.

மணணகததான், பாதலததான—'முதல' என்றதனுல் வருபெயர்.

## காலத்தால் வரும் பெயாகள.

மூவாணடினன், பிரபவன், பிலவவருடததான்—வருடத்தால்வருபெயர்.

இளவேனிலான, காரான்—பருவத்தால்வருபெயர்.

காாததிகையான், தையான—மாததததாலவருபெயர்.

உத்தரட்டாதியான் திருவோணத்தான்—நக்ஷத்திரத்தால்வருபெயர்.
நெருநலான் முற்காலத்தான், இக்காலத்தான் - 'ஆதி' என்றதனால் வரு பெயர்.

சினையால் வரும் பெயர்கள்.

திணிதோளான், சுரிகுழலன், வரைமார்பன், செங்கண்ணன், நெட்டைக் காதன்—தோள் முதலிய ஐந்து உறுப்பாலும் வருபெயர்.
குறுந்தாளன், நெடுங்கையான், பெருவயிற்றன், பல்லன், உதடன்-'முதல்' என்றதனால் வருபெயர்.

குணத்தால் வரும் பெயர்கள்.

பெரியன், சிறியன்—அளவால்வருபெயர்.
அறிஞன், புலவன்—அறிவால்வருபெயர்.
பொன்னனைப்பான், புலியனையான்—ஒப்பால்வருபெயர்.
கூனன், குறளன்—வடிவால்வருபெயர்.
கரியன், செய்யன்—நிறத்தால்வருபெயர்.
மானுடன், தேவன், நரகன், தெளிசிங்கன்—கதியால்வருபெயர்.
அந்தணன், அரசன், வணிகன், வேளாளன்—சாதியால்வருபெயர்.
கங்கன், காடவன், சேக்கிழான்—குடியால்வருபெயர்.
ஆசிரியன், படைத்தலைவன்—சிறப்பால்வருபெயர்.
நல்லன், தீயன்—'ஆதி' என்றதனால் வரு பெயர்.

தொழிலால் வரும் பெயர்கள்.

ஓதுவான், ஈவான்—'ஓதல்','ஈதல்' என்றவற்றால் வரு பெயர்
கொல்லன், தட்டான், கணக்கன், திருடன்—'ஆதி' என்றதனால் வரு பெயர்.

இடைச்சொல்லால் வரும் பெயர்கள்.

அவன், இவன் உவன்—சுட்டால்வருபெயர்.
எவன், ஏவன், யாவன்—வினாவால்வருபெயர்.
பிறன், மற்றையான்—'பிற,' 'மற்று' என்றவற்றால் வருபெயர்.
'நம்பி' முதலிய எழுபெயர்களும—சூத்திரத்திற் காட்டப்பட்டன.

'இன்னா' என்றதனால் - வில்லி, மீளி, வழுதி, கிள்ளி, சென்னி, செட்டி, சக்கிரி, காதல், செம்மல், சேய், தம்பி, எனாதி, காவிதி, குடுமி, வள்ளல், அண்ணல் இவை முதலாக உயர்திணை யாண்பாற்பொருள் குறித்து வருவனவெல்லாம் கொள்க.

[உயர்திணைப் பெண்பாற்பெயர்.]

உஎஎ. கிளைமுத லாகக் கிளந்த பொருள்களுள்
ளவ்வொற் றிகரக் கேற்ற வீற்றவும்
தோழி செவிலி மகடூஉ நங்கை
தையலோ டின்னன பெண்பாற் பெயரே.

(இ - ள்.) கிளை முதலாக - சுற்றம் முதலாக, கிளந்த - (மூன்சூத்திரத்திற்) சொல்லப்பட்ட, பொருள்களுள் - (அறுவகைப்) பொருள்களுள்ளும் இடைச்சொற்களுள்ளும் ஒன்றினடியாகப் பிறந்து, ள ஒற்று இகரக்கு - ளகர மெய்யும் இகரவுயிரும் பொருந்துதற்கு, ஏற்ற - தகுந்த, ஈற்றவும் - அவ்விரண்டீற்றுப் பெயர்களும்; 'தோழி செவிலி மகடூஉ நங்கை தையலோடு' - இவ்வைந்துபெயர்களும், இன்னன - இவைபோல்வன பிறவும்,— பெண்பால் பெயர் - உயர்திணைப் பெண்பாற் பெயர்களாம்; (எ - று.)

'ளவ்வொற்று' எனவே - அள், ஆள், ள் இம்மூன்றும் அடங்குதலறிக.

'ளவ்வொற்று இகரக்கு ஏற்ற ஈற்றவும்' என்றதனால் - சிலபெயர்கள் ளகரத்துக்கும், சிலபெயர்கள் இகரத்துக்கும், சிலபெயர்கள் இரண்டுக்கும் ஏற்றவையாக வரும்.

(உ - ம்.) பொருளால் வரு பெயர் —தமள், நமள், நுமள், எமள்—கிளை; ஒருத்தி—எண்; அவையத்தாள், அவையத்தி—குழூஉ; பொன்னினள், பொன்னி—முதல்.

இடத்தால் வரு பெயர் —குறத்தி, எயிற்றி, ஆய்ச்சி, உழத்தி, பரத்தி—ஐவகைநிலம்; சோழிச்சி, மலையாட்டி—தேயம்; கருவூராள்—ஊர்; வானத்தாள், வானத்தி—வான்; அகத்தாள், அகத்தி புறத்தாள், புறத்தி—அகம், புறம்; மண்ணகத்தாள், மண்ணகத்தி—முதல

காலத்தால் வரு பெயர் —ஐயாண்டினள்—வருடம்; இளவேனிலாள் - பருவம்; ஐப்பசியாள்—மாதம்—பூரத்தாள்—நக்ஷத்திரம்; காலையாள்—ஆதி.

சினையால் வரு பெயர் —திணிதோளாள், திணிதோளி; சுரிகுழலாள், சுரிகுழலி; நெடுமார்பாள், நெடுமார்பி; தடங்கண்ணாள், தடங்கண்ணி; குழைக்காதாள், குழைக்காதி—தோள்முதலிய உறுப்பு; குறுந்தாளி, மூக்கி—முதல்.

குணத்தால் வரு பெயர் —பெரியள்—அளவு; புலமையாள்—அறிவு; பொன்னொப்பாள்—ஒப்பு; கூனள், கூனி—வடிவு; கரியள்—நிறம்; மானுடத்தி—கதி; பார்ப்பினி—சாதி; குறுக்கையள்—குடி; மனைத்தலைவி—சிறப்பு, நல்லள்—ஆதி.

தொழிலால் வரு பெயர் —ஓதுவாள், ஈவாள்—ஓதல், ஈதல்; கொல்லத்தி, தட்டாத்தி—ஆதி.

இடைச்சொல்லால் வரு பெயர் —அவள், இவள், உவள்—சுட்டு; எவள், ஏவள், யாவள்—வினா; பிறள், மற்றையாள்—பிற, மற்று.

'தோழி' முதலிய ஐந்துபெயர்களும்—சூத்திரத்திற் காட்டப்பட்டன.

'இன்னன' என்றதனால் * பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண், இகுளை, மாது, பெண்டு இவைமுதலாக உயர்திணைப் பெண்பாற்பொருள் குறித்து வருவனவெல்லாம் கொள்க. (௨௦)

* 'பருவப்பெயரான 'பேதை' முதல் ஏழும் காலப்பெயருள் அடங்குமெனக் கொள்க' என்பது, பழைய உரை.

[உயிர்திணைப் பலர்பாற்பெயர்.]

உஎ௪. கிளந்த கிளைமுதல் லுற்றரவ் வீற்றவும்
கள்ளெ னீற்றி னேற்பவும் பிறவும்
பல்லோர் பெயரின் பகுதி யாகும்.

(இ - ள்) கிளந்த - முன்னே சொல்லப்பட்ட, கிளை முதல் - சுற்றம் முதலாகிய அறுவகைப்பொருளையும் இடைச்சொற்களையும், உற்ற - அடியாகக்கொண்டு பிறந்த, ர ஈற்றவும் - ரகரமெய்யீற்றுப் பெயர்களும், கள் என் னீற்றின் - கள் என்னும் விகுதியை ஏற்குமவுடைய பெயர்களுள், ஏற்பவும் - (இவ்விடத்துக்குப்) பொருந்திவருவனவும், பிறவும் - (இவைபோல்வன) பிறவும்,—பல்லோர் பெயரின் பகுதி ஆகும் - உயர்திணைப் பலர்பாற் பெயர்களாகும்; (எ - று.)

'ரவ்வீற்ற' எனவே - அர், ஆர், மார், ர் இந்நான்கும் அடங்கும்.

'கள்' விகுதி அஃறிணைப்பலவின்பாலுக்கும் வருதலால், 'ஏற்பவும்' என்றார்.

பொருளால் வந்த பெயர் —தமர், நமர், நுமர், எமர்—கிளை; இருவர், மூவர்—எண்; அவையத்தார்—குழூஉ—முடியர், பொருளர்—முதல்

இடத்தால்வந்தபெயர் —குறவர், எயினர், ஆயர், மகிழ்நர், கரையார் - ஐவகைநிலம்; நிடதத்தார்—தேயம்; பட்டணத்தார்—ஊர்; வானத்தார்—வான்; அகத்தார், புறத்தார்—அகம், புறம்; மணஞ்ஞோர்—முதல்.

காலத்தால் வந்த பெயர்:—ஐயாண்டினர்—வருடம்; முதுவேனிலார்—பருவம்; ஐப்பசியார்—மாதம்; திருவாதிரையார்—நக்ஷத்திரம்; காலையார்—ஆதி.

சினையால் வந்த பெயர்:—திணிதோளார், சுரிகுழலார், நெடுமார்பர், தடங்கண்ணார், குழைக்காதர்—தோள் முதலிய உறுப்பு; நெடுங்கையர்—முதல்.

குணத்தால் வந்த பெயர் —பெரியர்—அளவு; புலவர்—அறிவு; புலியொப்பர்—ஒப்பு; முடவர்—வடிவு; கரியர்—நிறம்; மானுடவர்—கதி; அந்தணர்—சாதி; குறுக்கையர்—குடி; ஆசிரியர்—சிறப்பு; நல்லர், தீயர்—ஆதி.

தொழிலால் வந்த பெயர்—ஓதுவார், ஈவார்—ஓதல், ஈதல்; கொல்லர், தட்டார்—ஆதி.

இடைச்சொல்லால் வந்த பெயர் —அவர், இவர், உவர்—சுட்டு; எவர், ஏவர், யாவர்—வினா; பிறர், மற்றையார்—பிற, மற்று.

'கள்' விகுதி - கோக்கள் மனுக்கள் என்று தனிவிகுதியாகவும், தமர்கள் நமர்கள் என * விகுதிமேல்விகுதியாகவும் வருமென்று அறிக.

'பிற' என்றதனால் - மாந்தர், மக்கள், மாக்கள் இவை முதலாக உயர்திணைப் பலர்பாற் பொருளைக் குறித்து வருவன வெல்லாம் கொள்க. (உக)

* 'ஒருசார் ரகாரஒற்றும் 'கள்' என விகுதியும் கூடிவந்தாலும், முன் நின்ற ரகாரவொற்றே பால் விளக்கும்; ஏனையது வாய்பாடுநிரம்பல்மாத்திரையேயாவது என்க' என்பது, பழைய உரை.

[அஃறிணை ஒன்றன்பாற்பெயர்.]

உஎ௯. வினாச்சுட் டுடனும் வேறு மாம்பொருள்
ஆதி யுறுதுச சுட்டணை யாய்தம்
ஒன்றனெண் ணின்னன வொன்றன் பெயரே.

(இ - ள்.) வினா சுட்டுடனும் - மூன்று முதல்வினாவும் மூன்றுசுட்டு மாகிய இடைச்சொற்களையும், வேறும் ஆம் பொருள் ஆதி - இவற்றின் வேறாகிய பொருள்முதலிய அறுவகைப்பெயர்களையும், உறு - அடியாகக்கொண்டு பிறந்த, து - துவ்விகுதி யீற்றுப் பெயர்களும், சுட்டு அணை ஆய்தம் - சுட்டெழுத்தோடு ஆய்தத்தையும் பொருந்திய துவ்விகுதியீற்றுப்பெயர்களும், ஒன்றன் எண் - ஒன்றாகிய எண்ணுப்பெயரும், இன்னன - இவைபோல்வன பிறவும்,—ஒன்றன் பெயர் - அஃறிணை ஒன்றன்பாற்பெயர்களாம்; (எ - று.)

'சுட்டணை யாய்தம்' என வேறு எடுத்துக்கூறினமையால், 'வினாச்சுட்டுடனும்' என்றது - ஆய்தமணையாத சுட்டுப்பெயர்களும், வினாப்பெயர்களுமாம்

(உ - ம்.) எது, ஏது, யாது—வினா; அது, இது, உது—சுட்டு

குழையது—பொருள். நிலத்தது—இடம். திருவாதிரையது—காலம். கொம்பினது—சினை. குறியது—குணம். ஆடலது—தொழில்.

அஃது, இஃது, உஃது—ஆய்தம் அணைந்த சுட்டு. ஒன்று—எண்.

'இன்னன' என்றதனால் பிறிது, மற்றையது என்பவை முதலாக அஃறிணை ஒன்றன்பாற்பொருள் குறித்து வருவன வெல்லாம் கொள்க.

'ஒன்றனெண்' என்பதில், அன் - அல்வழிச்சாரியை. 'ஒன்றெனெண்' எனப் பாடங்கொள்ளுதல் பொருந்தும்; 'ஒன்றெனனும் எண்ணும்' என்பது, பழைய உரை. (உஉ)

[அஃறிணைப் பலவின்பாற்பெயர்.]

உ௯0. முன்ன ரவவொடு வருவை யவவும்
சுட்டிறு வவவுங் கள்ளிறு மொழியும்
ஒன்ற லெண்ணு முள்ள விலல
பலல சில்ல வுளவில பலசில
இன்னவும் பலவின் பெயரா கும்மே.

(இ - ள்.) முன்னர் - முன்னேசொல்லப்பட்ட, அவ்வொடு-அவற்றோடு [வினா சுட்டு பொருளாதி ஆறு இவைகளோடு], வரு - (ஏற்றபடி) வருகிற, வை - 'வை' விகுதியீற்றுப்பெயர்களும், அவ்வும் - அகரவீற்றுப்பெயர்களும், சுட்டு இறு வவ்வும் - வகரமெய்யீற்றுச் சுட்டுப்பெயர்களும், கள் இறு மொழியும் - 'கள்' என்னும் விகுதி யீற்றுப் பெயர்களும், ஒன்று அல் எண்ணும் - ஒன்றல்லாத [இரண்டு முதலாகிய] எண்ணுப்பெயர்களும், 'உள்ள இல்ல பல்ல சில்ல உள இல பல சில' - இவ்வெட்டுப்பெயர்களும், இன்னவும் - இவைபோல்வன பிறவும்,—பலவின் பெயர் ஆகும் - அஃறிணைப் பலவின் பாற் பெயர்களாம்; (எ - று.)

(உ - ம்.) எவை, ஏவை, யாவை—வினு; அவை, இவை, உவை—சுட்டு. குழையவை, குழையன—பொருள் அகத்தவை, அகத்தன—இடம். மூலத்தவை, மூலத்தன—காலம். கோட்டவை, கோட்டன—சினை. கரியவை, கரியன—குணம். ஆடலவை, ஆடலன—தொழில்

அவ், இவ், உவ்—வவ்விறு சுட்டு அவைகள், யானைகள், குதிரைகள்—கள விகுதிப் பெயர்கள். (அவைகள் என்பதில், கள் - விகுதிமேல் விகுதி)

இரண்டு, பத்து நூறு, ஆயிரம—ஒன்றல்லாத எண்.

'உள்ள' முதலிய எட்டுப்பெயர்களும், சூத்திரத்திற் காட்டப்பட்டன.

'இன்னவும்' என்றதனால் யா, பிற, மற்றைய என்பவை முதலாக அஃறிணைப்பலவின்பாற்பொருள் குறித்து வருவனவெல்லாம் கொள்க. (உரு)

[பால்பகா அஃறிணைப்பெயர்.]

உ௯க பால்பகா வஃறிணைப் பெயர்கள்பாற் பொதுமைய.

(இ - ள்.) பால் பகா - ஒருமைப்பால் பன்மைப்பால்கள் பகுக்கப்படாத, அஃறிணை பெயர்கள் - அஃறிணைப் பெயர்ச்சொற்கள்,—பால் - (அத்திணையின்) இருபால்களுக்கும், பொதுமைய-பொதுவாகிய பெயர்களாம்; (எ - று.)

ஒன்றன்பாலைக் காட்டுகிற 'து' என்னும் விகுதியையும், பலவின்பாலைக் காட்டுகிற 'வை அ கள்' என்னும் விகுதிகளுள் ஒன்றையும் பெறுத அஃறிணைப்பெயர்கள் - ஒன்றன்பால் பலவின்பால் என்னும் இரண்டுபால்களுக்கும் பொதுவா மென்றபடி; இவை, முன்னும் பின்னும் வருகிற சொற்களாற் பொதுமைநீங்கி இன்னபாலென்று துணியப்படும்.

(உ - ம) பறவை வந்தது, பறவை வந்தன; அலரி மலர்ந்தது, அலரி மலர்ந்தன; வளர்ந்தது மரம், வளர்ந்தன மரம்; சென்றது குதிரை, சென்றன குதிரை. இவை - பெரும்பாலும் பகாப்பதமாகவும், சிறுபான்மை பகுபதமாகவும் வரும். (உச)

[இருதிணைப் பொதுப்பெயர்]

உ௯உ. முதற்பெயர் நான்குஞ் சினைப்பெயர் நான்கும
சினைமுதற் பெயரொரு நான்குமுறை யிரண்டும்
தன்மை நானகு முன்னிலை யைந்தும
எல்லாந் தாந்தா னின்னன பொதுப்பெயர்.

(இ - ள்.) முதற்பெயர் நான்கும - முதலைப்பற்றிவரும நால்வகைப் பெயரும், சினைப்பெயர் நான்கும - சினையைப்பற்றிவரும நால்வகைப்பெயரும, சினை முதல் பெயர் ஒரு நான்கும - சினையையும முதலையும் ஒருங்கு பற்றி வரும நால்வகைப்பெயரும், முறை இரண்டும - முறையைப்பற்றி வரும இருவகைப பெயரும, தன்மை நான்கும - தன்மைப்பெயர் நான்கும, முன்னிலை ஐந்தும - முன்னிலைப்பெயர் ஐந்தும, எல்லாம தாம தான் - இம மூன்றுபெயர்களும, (ஆகிய இருபத்தாறு பெயர்களும்), இன்னன - இவை போல்வன பிறவும.—பொதுப்பெயர் - (இருதிணைக்கும) பொதுவான பெயர்களாம்; (எ - று )—இவை, வருஞ்சூத்திரங்களால் முறையே கூறப்படும்.

'இன்னன' என்றதனால் - சூரியன் உதித்தான், சூரியன் உதித்தது; குழவி வந்தான், குழவி வந்தாள், குழவி வந்தது என ஒருபொருளே இரு திணையிலும் வரும் பொதுப்பெயர் முதலானவையும்; ஊமை வந்தான், ஊமை வந்தாள், ஊமை வந்தது, ஊமைவந்தன என உயர்திணை அஃறிணை யிருபால்களிலும் வரும் பொதுப்பெயர் முதலானவையும்; தன்மை முன்னிலை வினையாலணையும் பெயர்களும்; பிறவும் கொள்க. (௨௫)

[முதற்பெயர் முதலிய நான்கை வகுத்தல்]

௨௯௩. ஆண்மை பெண்மை ஒருமை பன்மையின்
ஆமந் நான்மைக ளாண்பெண் முறைப்பெயர்.

(இ - ள்.) அவ் - அம் முதற்பெயரும் சினைப்பெயரும் சினைமுதற் பெயரும்,—ஆண்மை பெண்மை ஒருமை பன்மையின்-ஆண்மை முதலாகிய இந்நான்குபாலும் காரணமாக, நான்மைகள் ஆம் - நந்நான்காம்; முறைப் பெயர் - முறைப்பெயர்கள், ஆண் பெண் - ஆண்மை பெண்மை என்கிற இரு பாலும் காரணமாக இரண்டாம்: (எ - று.)—அவ் - அவை.

முதற்பெயர் - சாத்தன் கொற்றன் என வழங்குதற்பயத்தனவாய்க் காரணமின்றி ஒரு பொருளைப் பற்றி வரும் இடுகுறிப்பெயர்; முதற்பெயர், இயற்பெயர் எனபன - ஒருபொருட்சொற்கள். சினைப்பெயர்-சினை [உறுப்பு] ஆகிய காரணம் பற்றி முதற்பொருளின்மேல் வரும் பெயர். சினைமுதற் பெயர் - மேற்கூறிய சினைப்பெயரும் முதற்பெயரும் சேர்ந்து ஒருபெயராய் வருவது. முறைப்பெயர் - பிறப்பினால் ஒருவர்க்கு ஒருவர் உண்டாகும் சம்பந்தத்தைப்பற்றி வரும் பெயர்.

(உதாரணம்.)

| ஆண்மை. | பெண்மை. | ஒருமை | பன்மை. | |
|---|---|---|---|---|
| சாத்தன் | சாத்தி | கோதை | கோதைகள் | - முதற்பெயர் நான்கு. |
| முடவன் | முடத்தி | செவியிலி | செவியிலிகள் | - சினைப்பெயர்நான்கு |
| முடக் கொற்றன் | முடக் கொற்றி | கொடும்புற மருதி | கொடும்புற மருதிகள் | சினைமுதற் பெயர் நான்கு. |
| தந்தை | தாய் | | | முறைப்பெயர் இரண்டு. (௨௬) |

[திணைப்பொதுப்பெயர்கள் பாற்பொதுவாதல்.]

௨௯௪. அவற்றுள்,
ஒன்றே யிருதிணைத் தன்பா லேற்கும்.

(இ - ள்.) அவற்றுள் - முதற்பெயர் முதலாகிய (பதினான்கு) பொதுப் பெயர்களுள், ஒன்றே - ஒவ்வொன்றும்,—இரு திணை - இரண்டு திணைகளி லும், தன் பால - தன்தன் பாலை, ஏற்கும் - ஏற்றுவரும்; (எ - று.)

எனவே, ஆண்மைப்பொதுப்பெயர் - உயர்திணை யாண்பாலையும், அஃறிணையாண்பாலையும்; பெண்மைப் பொதுப்பெயர் - உயர்திணைப் பெண் பாலையும், அஃறிணைப் பெண்பாலையும். ஒருமைப் பொதுப்பெயர்-உயர்திணை யொருமையாகிய ஆண்பால் பெண்பால்களையும், அஃறிணை யொன்றன்பாலை

யும பன்மைப்பொதுப்பெயர் - உயர்திணைப் பலர்பாலையும், அஃறிணைப்பல வின்பாலையும் ஏற்குமென்றதாயிற்று.

(உதாரணம்)

| உயர்திணை. | அஃறிணை. | |
|---|---|---|
| சாத்தன் இவன் | சாத்தன் இவ்வெருது | —ஆண்மைப் பொதுப்பெயர். |
| சாத்தி இவள் | சாத்தி இப்பசு | —பெண்மைப் பொதுப்பெயர். |
| கோதை இவன் / கோதை இவள் | கோதை இது | —ஒருமைப் பொதுப்பெயர் |
| கோதைகள் இவர் | கோதைகள் இவை | —பன்மைப் பொதுப்பெயர். |
| தந்தை இவன் | தந்தை இவ்வெருது | —ஆண்மை முறைப்பெயர். |
| தாய் இவள் | தாய் இப்பசு | —பெண்மை முறைப்பெயர். |
| யான் நம்பி / யான் நங்கை | யான் பறவை | —தன்மையொருமைப் பொதுப்பெயர். |
| யாம் மக்கள் | யாம்பறவைகள் | —தன்மைப்பன்மைப் பொதுப்பெயர். |
| நீ நம்பி, நீ நங்கை | நீ பறவை | —முன்னிலை யொருமைப் பொதுப்பெயர். |
| நீர் மக்கள் | நீர் பறவைகள் | —முன்னிலைப்பன்மைப் பொதுப்பெயர். |
| அவரெல்லாம் | அவையெல்லாம் | —எல்லாம் என்னும் பெயர். |
| அவர்தாம் | அவைதாம் | —தாம் என்னும் பெயர். |
| அவன்தான் / அவள்தான் | அதுதான் | —தான் என்னும் பெயர். |

மற்றவைகளையும் இப்படியே இருதிணையிலும் கூட்டுக. (உஎ)

[தன்மை முன்னிலை படர்க்கைப் பெயர்கள்.]

௨௫௫ தன்மை யான் நான்யாம் நாம் முன்னிலை
எல்லீர் நீயிர் நீவிர் நீர் நீ
அல்லன படர்க்கை எல்லா மெனல் பொது

(இ - ள்.) தன்மை - தன்மைப்பெயர் நான்காவன,—யான் நான் யாம் நாம் - என இவையாம்; முன்னிலை - முன்னிலைப்பெயர் ஐந்தாவன,-எல்லீர் நீயிர் நீவிர் நீர் நீ - என இவையாம்; அல்லன - இவ்வொன்பதுமல்லாத பெயர்களெல்லாம், படர்க்கை - படர்க்கையிடத்திற்கு உரியவைகளாம்; எல்லாம் எனல் - (அவற்றுள்) எல்லாமென்னும் பெயரொன்றும், பொது - (மூன்று இடத்திற்கும்) பொதுவாம்; (எ - று)

(உ - ம்) யாமெல்லாம், நீரெல்லாம், அவரெல்லாம்—எல்லாமென்பது மூவிடத்திலும் வந்தது. (உஅ)

[தொழிற்பெயர் வினையாலணையும் பெயர்கட்கு இடம்.]

௨௫௬. வினையின் பெயரே படர்க்கை வினையா
லணையும் பெயரே யாண்டு மாகும்.

(இ - ள்.) வினையின் பெயர் - தொழிற்பெயர்கள், படர்க்கையே - படர்க்கையிடத்திற்கே உரியவையாம்; வினையாலணையும்பெயர் - வினையாலணையும் பெயர்கள், யாண்டுமே ஆகும் - (தனித்தனி) மூன்றிடத்திற்கும் உரியவையாம்; (எ - று.)-வினைப்பெயரெனினும், தொழிற்பெயரெனினும் ஒக்கும்.

ஏகாரங்கள், பிரிந்துக கூட்டப்பட்டன.

(உ - ம.) வருகை, மறதி—தொழிற்பெயர்கள் படர்க்கை யிடத்துக்கே வந்தன; வருகை நன்று, மறதி தீது என இவ்வாறு படர்க்கையாகிய கொண்டுமுடியுஞ் சொல்லோடு கூட்டிக் காண்க.)

| | | | |
|---|---|---|---|
| உண்டேன் | [உண்ட என்னை]—தன்மை | | வினையாலணையும |
| உண்டாய்க்கு | [உண்ட உனக்கு]—முன்னிலை | | பெயர் மூவிடத்தும |
| உண்டானது | [உண்டவனுடைய]—படர்க்கை | | வந்தன. |

தொழிற்பெயர்க்கும் வினையாலணையும் பெயர்க்கும் வேறுபாடு —

தொழிற்பெயர் வினையாலணையும்பெயர் இரண்டும் வினையினின்றுபிறக் கும் பெயராதலால் தம்முள் ஒக்குமாயினும், தொழிற்பெயர் - தொழிலுக் குப் பெயராகவந்துபடர்க்கையிடத்திற்கே உரியதாம் என்றும், வினையாலணை யும் பெயர் - தொழிலையுடைய பொருளுக்குப் பெயராக வந்து மூன்றிடங் கட்கும் தனித்தனி உரியதாம் என்றும் வேறுபாடு அறிக.

யான் வந்தேன், நீ வந்தாய், அவன் வந்தான் என இடத்தால் ஒன்றுபட நின்ற எழுவாய் பயனிலை போல, யான் வருகை நீவருகை அவன்வருகை என்னு மிடங்களி லுள்ள வருகை என்னுந் தொழிற்பெயரும் எழுவாயை நோக்கி மூவிடங்கட்கும் உரியதோ என்ச் சந்தேகம் உண்டாமிடத்து, அப் பொழுதும் வருகை, எனது வருகை, நினது வருகை, அவனது வருகை என்னுமிடங்களிற் போல அத்தொழிற்பெயர்கள் படர்க்கை யிடத்துக்கே உரியனவாமென்று சந்தேகம் ஒழித்தபடி. (உகூ)

[சில இருதிணைப்பெயர்கட்கு எண்வகுத்தல்.]

‡ உருஎ. தான் யான் நான் நீ ஒருமை பன்மை தாம்
யாம் நாம் எலாம் எலீர் நீயிர் நீர் நீவிர்.

(இ - ள்.) தான் யான் நான் நீ - இந்நான்கு பெயரும், ஒருமை - ஒரு மைப் பெயர்களாம்; தாம் யாம் நாம் எலாம் எலீர் நீயிர் நீர் நீவிர் - இவ்வெட் டுப்பெயர்களும், பன்மை - பன்மைப் பெயர்களாம்; (எ - று.)

தாம் முதலிய பெயர்கள் நான்கும் - ஆண்பால் பெண்பால் ஒன்றன் பால் என்னும் ஒருமைப்பால் மூன்றுக்கும் பொதுவென்றும், தாம்முதலிய பெயர்கள் எட்டும் - பலர்பால் பலவின்பால் என்னும் பன்மைப்பால் இரண் டுக்கும் பொதுவென்றும் கூறியபடி.

தாம்முதலிய பன்மைப்பெயர்கள்-கள் என்னும் பன்மைவிகுதிபெற்று, தாங்கள் யாங்கள் எனபவை முதலாகவும் வரும். (ஙo)

[எண்ணடியாகப்பிறந்த உயர்திணைப்பெயர்க்குப் புறனடை.]

‡ உருஅ ஒருவ னொருத்தி பெயர்மே லெண்ணில.

(இ - ள்.) ஒருவன் ஒருத்தி பெயர் - (ஒன்று என்னும் எண்ணின் அடி யாக) ஒருவன் என்னும் ஆண்பாற்பெயரும் ஒருத்தி என்னும் பெண்பாற் பெயரும் (உண்டாகுமேயல்லாமல்),—மேல் எண் - (ஒன்றுக்கு) மேற்பட்ட

[இரண்டுமுதலிய] எண்களின் அடியாக, இல - (ஆண்பாற்பெயரும் பெண் பாற்பெயரும், உண்டாகாவாம்; (எ - று)

ஒன்று என்பது ஒருமையெண்ணாதலால் அதனடியாக ஒருமையாகிய ஆண்பால் பெண்பாற் பெயர்களே உண்டாகுமென்றும், பன்மையாகிய பலர் பாற்பெயர் உண்டாகா தென்றும், இரண்டுமுதலியவை பன்மையெண்க ளாதலால் அவற்றினடியாக ஒருமையாகிய ஆண்பால் பெண்பாற் பெயர்கள் உண்டாகா என்றும், பன்மையாகிய பலர்பாற்பெயரே உண்டாகுமென்றும் கூறியபடி. (ரு௧)

[இதுவும் அது]

† உ௮௯. ஒருவ ரென்ப துயரிரு பாற்றாய்ப்
பன்மை வினைகொளும் பாங்கிற் றென்ப.

(இ - ள்) ஒருவர் என்பது - ஒருவர் என்று வழங்கும் சொல்,—உயர் இரு பாற்று ஆய - உயர்திணை ஆண் பெண் இவ்விருபாலுக்கும் பொதுப்பெய ராய,—(ஒருபொருளையே உணர்த்துமாயினும்), பன்மை வினை - பலர்பால் வினையை, கொளும் - கொண்டு முடிகின்ற, பாங்கிற்று - தன்மையையுடை யது,—என்ப - என்று சொல்வர், (புலவர்); (எ - று.)

ஒருவர் என்பது - விகுதிநோக்கிப் பலர்பால் வினையைக் கொண்டு முடிந்து சொல்லாற் பன்மையேயாயினும், பகுதிநோக்கிப் பொருளால் ஒருமையேயா மென்க.

இனி, 'உய ரிரு பாற்றாய்' என்பதற்கு - (உயர்திணை முப்பால்களுள் பலர்பாலை விலக்காமல்) மற்றை ஆண்பால் பெண்பால்களுள் உயர்வைப்பற்றி வருவதாய என்றும் பொருள் கொள்ளலாம்.

(உ - ம்.) ஆடவருள் ஒருவர் அறத்தின்வழி நிற்பார்—ஆண்பால்
பெண்களுள் ஒருவர் கணவன்வழி நிற்பார்—பெண்பால் (ரு௨)

[ஆகுபெயர்]

உ௯0. பொருள்முத லாறோ டளவை சொல் தானி
கருவி காரியம் கருத்த னாதியுள்
ஒன்றன் பெயரா னதற்கியை பிறிதைத்
தொன்முறை யுரைப்பன ஆகுபெயரே.

(இ - ள்) பொருள் முதல் ஆறோடு - பொருள் இடம் காலம் சினை குணம் தொழில் என்ற ஆறும், அளவை - (எண்ணல் எடுத்தல் முகத்தல் நீட்டல் என்னும்) நாலவகை அளவும், சொல் - சொல்லும், தானி-ஸ்தானத் தையுடையதும், கருவி - காரணமும், காரியம்-காரியமும், கருத்தன் - கருத் தாவும், ஆதியுள் - இவைமுதலான பொருள்களுள், ஒன்றன் பெயரான் - ஒருபொருளின் இயற்கைப்பெயரால், அதற்கு இயை பிறிதை - அப்பொருட் குச் சம்பந்தப்பட்ட வேறொருபொருளை, தொல் முறை - பழமையாகவரும் முறைப்படியே, உரைப்பன - சொல்லிவருபவை,—ஆகுபெயர்-ஆகுபெயர்க ளாம்; (எ - று.)

'ஆதி' என்றதனால், உவமை முதலியன கொள்க.

மொழிகள் தொடருமிடத்து, ஒருமொழியின் இயற்பொருள் அதனை முடிக்கவரும் மொழியின் பொருளோடு பொருத்தமில்லாமற் போகுமிடத்து அம்மொழியில் ஆக்கப்பொருள் கொள்ளப்படும். இவ்வாறு ஆக்கப்பொருள் கொள்ளப்படும் மொழிகளே ஆகுபெயர்களாம். ஒன்றன்பெயர் மற்றொன்றற்கு ஆகுகிற பெயர், ஆகுபெயர். * ஆகுபெயரை வடநூலார் 'லக்ஷணை' என்பர்.

பொருள் முதலிய ஆறினுள் அடங்கினின்றவற்றையே பிரித்து அளவை முதலாக எடுத்துச்சொன்னதனால், 'பொருள்முத லாறு' என்றவை அவை யொழிந்தன வென்க.

'அதற்கியை பிறிதை' என்றதனால்-சம்பந்தமில்லாத பொருளை உரைத்தல் ஆகுபெயரி னிலக்கணமன் றாயிற்று; அச் சம்பந்தம் பலவகைப்படும். 'தொன்முறை' என்றதனால், புதிதுபுதிதாகத் தமதமக்கு வேண்டியவாறு உரைப்பது இலக்கணமன்றென்று அறிக.

(உ - ம்) க. பொருளாகுபெயர் —தாமரைமுகம்.
உ. இடவாகுபெயர் —ஊர் வந்தது.
௩. காலவாகுபெயர் —கார் அறுத்தது.
௪. சினையாகுபெயர் —வெற்றிலை நட்டான்.
௫. குணவாகுபெயர் —நீலம் சூடினாள்.
௬. தொழிலாகுபெயர் —வற்றல் உண்டான்
௭. எண்ணலளவாகுபெயர் —கால் நோகும்.
௮. எடுத்தலளவாகுபெயர் —வீசை தந்தான்.
௯. முகத்தலளவாகுபெயர் —நாழி கொடு.
௧௦. நீட்டலளவாகுபெயர் —முழம் தந்தான்.
௧௧. சொல்லாகுபெயர் —உரை செய்தான்.
௧௨. தானியாகுபெயர் —விளக்கு ஒடிந்தது.
௧௩. கருவியாகுபெயர் —திருவாய்மொழி ஓதினான்.
௧௪. காரியவாகுபெயர் —அலங்காரம் படி.
௧௫. கருத்தாவாகுபெயர். —திருவள்ளுவர் கற்றான்.
௧௬. உவமையாகுபெயர். —பாவை வந்தாள்.

பொருளாகுபெயர் - முதலாகுபெயரென்றும், இடவாகுபெயர் - தானவாகுபெயரென்றும், குணவாகுபெயர் - பண்பாகுபெயரென்றும், கருவியாகு பெயர் - காரணவாகுபெயரென்றும் கூறப்படும். முதலாகுபெயரோடு சினையாகுபெயரும், தானவாகுபெயரோடு தானியாகுபெயரும், காரணவாகு பெயரோடு காரியவாகுபெயரும் மாறுபாடுகொண்டதென அறிக. தொழி லாகுபெயர்க்கும் காரியவாகுபெயர்க்கும் உள்ள வேறுபாடு, அதனதன் இலக் கணத்தால் நன்குவிளங்கும்.

* 'ஆக்க ஆகும் பெயர் ஆகுபெயர் என்றாயிற்று ஆகவே, இயற்பெய ரும் ஆகுபெயருமென எல்லாப் பெயரும் இருகூற்றவாம் என்பதுவுமாயிற்று' என்பது, பழையவுரை.

க. பொருளாகுபெயராவது - முதற்பொருளின் பெயர் அதன் சினைப் பொருளுக்கு ஆகுவது. 'தாமரை முகம்' என்பதில், தாமரை என்னும் கொடியின் பெயர் அதன் மலர்க்கு ஆயிற்று. (ஆம்பல் வாய் முதலியனவும் இதற்கு உதாரணமாம்.) [சினை - உறுப்பு, அவயவம். முதல்-உறுப்பையுடையது, அவயவி.]

உ. இடவாகுபெயராவது - இடத்தின் பெயர் அவ்விடத்திலுள்ள பொருளுக்கு ஆகுவது. 'ஊர் வந்தது' என்பதில், ஊரென்னும் இடத்தின் பெயர் அதிலுள்ளவர்க்கு ஆயிற்று. (நாடு களித்தது, உள் மகிழ்ந்தான், அவை அமர்ந்தது, வான் உவந்தது முதலியனவும் இதற்கு உதாரணமாம்.)

௩. காலவாகுபெயராவது - காலத்தின் பெயர் அக்காலத்திலுள்ள பொருளுக்கு ஆகுவது. 'கார் அறுத்தது' என்பதில், கார் என்னும் மழைக் காலத்தின் பெயர் அதில் விளையும் பயிர்க்கு ஆயிற்று. (வசந்தம் அணிந்தான், கார்த்திகை [தோன்றிப்பூ] மலர்ந்தது முதலியனவும் இதற்கு உதாரணமாம்.)

௪. சினையாகுபெயராவது - சினைப்பொருளின் பெயர் அதன் முதற் பொருளுக்கு ஆகுவது. 'வெற்றிலை நட்டான்' என்பதில், இலை என்னும் சினையின் பெயர் அதன் கொடிக்கு ஆயிற்று. (மருக்கொழுந்து நட்டான் முதலியனவும் இதற்கு உதாரணமாம்.)

௫. குணவாகுபெயராவது - குணத்தின் பெயர் அதனையுடைய பொருளுக்கு [குணிக்கு] ஆவது. 'நீலம் சூடினாள்' என்பதில், நீலமென்னும் நிறக் குணப்பெயர் அதனையுடைய குவளைமலர்க்கு ஆயிற்று. (வெள்ளை உழுதது, 'வரிசையா னின்புறும் மேல்' முதலியனவும் இதற்கு உதாரணமாம்.)

௬. தொழிலாகுபெயராவது - தொழிலின் பெயர் அதனையுடைய பொருளுக்கு ஆகுவது. 'வற்றல் உண்டான்' என்பதில், வற்றலென்னும் தொழிலின் பெயர் அத்தொழிலையுடைய ஊர் உணவுக்கு ஆயிற்று. (எழுத்து எழுதினான், பாட்டுப் படித்தான், கடவுள் இருக்கிறார், செய்யுள் இயற்றினான், யாக்கை நிலையில்லாதது முதலியனவும் இதற்கு உதாரணமாம்.)

௭. எண்ணலளவையாகுபெயராவது - எண்ணியளக்கின்ற ஒன்று இரண்டு அரை கால் முதலிய எண்ணுப்பெயர் அவ்வளவைக்கொண்ட பொருளுக்கு ஆகுவது. 'கால் நோகும்' என்பதில், காலென்னும் எண்ணலளவைப் பெயர் உடம்பில் அவ்வளவைக் கொண்ட உறுப்புக்கு ஆயிற்று. (அரையில் உடுத்தான், ஒன்று கொடுத்தான் முதலியனவும் இதற்கு உதாரணமாம்.)

௮. எடுத்தலளவையாகுபெயராவது - நிறுத்தளக்கின்ற வீசை தூக்கு முதலிய பெயர் அவ்வளவைக்கொண்ட பொருளுக்கு ஆகுவது. 'வீசை தந்தான்' என்பதில், வீசை என்னும் எடுத்தலளவைப்பெயர் அவ்வளவைக் கொண்ட பொருளுக்கு ஆயிற்று. (மணங்கு கொடு முதலியனவும் இதற்கு உதாரணமாம்.)

௯. முகத்தலளவையாகுபெயராவது - மொண்டு அளக்கின்ற நாழி குறுணி கலம் முதலிய பெயர் அவ்வளவைக் கொண்ட பொருளுக்கு ஆகு

வது. 'நாழி கொடு' என்றதில், நாழி என்னும் முகத்தலளவைப்பெயர் அவ்வளவைகொண்ட பொருளுக்கு ஆயிற்று. (பதக்கு விற்றான், கலம் குத்தினான் முதலியனவும் இதற்கு உதாரணமாம்.)

கo. நீட்டலளவையாகுபெயராவது - நீட்டியளக்கின்ற முழம் சாண் யோசனை காதம் முதலிய பெயர் அவ்வளவைகொண்ட பொருளுக்கு ஆகுவது 'முழம் தந்தான்' என்றதில், முழம் என்னும் நீட்டலளவைப் பெயர் அவ்வளவைகொண்ட பொருளுக்குஆயிற்று. (காதம் கடந்தான், யோசனை சென்றான் முதலியனவும் இதற்கு உதாரணமாம்.)

கக சொல்லாகுபெயராவது - சொல்லின்பெயர் அதன் பொருளுக்கு ஆகுவது. 'இந்நூலுக்கு உரை செய்தான்' என்றதில், உரை என்னும் சொல்லின் பெயர் அதன் பொருளுக்கு ஆயிற்று. (மொழி உணர்ந்தான் முதலியனவும் இதற்கு உதாரணமாம்.)

கஉ தானியாகுபெயராவது - தானத்திலுள்ள பொருளின்பெயர் அதற்குத் தானமான பொருளுக்கு ஆகுவது. [தானி - ஸ்தானி; ஸ்தானம்-இடம்] 'விளக்கு ஒடிந்தது' என்றதில், விளக்கு என்னும் நெருப்புச் சுவாலையின் பெயர் அதற்கு இடமான தண்டுக்கு ஆயிற்று. (நெஞ்சு [மார்பு] நொந்தது, முரசு உயர்த்தவன் முதலியனவும் இதற்கு உதாரணமாம்.)

கங கருவியாகுபெயராவது - காரணத்தின்பெயர் காரியத்துக்கு ஆகுவது 'திருவாய்மொழி ஓதினான்' என்றதில், மொழியென்னும் கருவியின் பெயர், அதனாலாகிய நூலுக்கு ஆயிற்று. (திருவாசகம் படித்தான், திருக்குறள் முற்றிற்று முதலியனவும் இதற்கு உதாரணமாம்)

கச. காரியவாகுபெயராவது - காரியத்தின்பெயர் காரணத்துக்கு ஆகுவது. 'அலங்காரம் படி' என்றதில், அலங்காரம் என்னும் இலக்கணமாகிய காரியத்தின்பெயர் அதனை அறிவித்தற்குக் காரணமாகிய நூலுக்கு ஆயிற்று. (பாட்டியல் முற்றிற்று முதலியனவும் இதற்கு உதாரணமாம்.)

கரு. கருத்தாவாகுபெயராவது - செய்தவன்பெயர் அவனாற்செய்யப்பட்டதற்கு ஆகுவது. 'திருவள்ளுவர் படி' என்றதில், வள்ளுவர் என்னும் கருத்தாவின்பெயர் அவராற்செய்யப்பட்ட நூலுக்கு ஆயிற்று. (மனுமுறைவழுவாதவன் முதலியனவும் இதற்கு உதாரணமாம்.)

கசு. உவமையாகுபெயராவது - உபமானத்தின்பெயர் உபமேயத்துக்கு ஆகுவது. 'பாவை வந்தாள்' என்றதில், பாவை என்னும் உபமானத்தின் பெயர் அதுபோன்ற பெண்ணுக்கு ஆயிற்று. [பாவை - சித்திரப்பதுமை] (காளை வந்தான் முதலியனவும் இதற்கு உதாரணமாம்.)

தேவர்கள் முதலியோர் பெயரை, மனிதர்கட்கு இட்டு வழங்குவதும் ஆகுபெயரில் அடக்கப்படும்.

இவ்வாகுபெயர்-இருமடியாகுபெயர், மும்மடியாகுபெயர், அடையடுத்த வாகுபெயர் என வரவும் பெறும்.

(உ - ம்.) 'புளி தின்றான்' என்றதில், புளி என்னும் சுவைக்குணப் பெயர் அதனையுடைய பழத்துக்குக் குணவாகுபெயர். 'புளி முளைத்தது' என்றதில், புளி என்பது - சுவைப்பெயர் பழத்திற்கு ஆய், பழத்தின்பெயர் மரத்திற்கு ஆதலால், இருமடியாகுபெயர். (வரை [மலை] பிளந்தான் முதலியனவும் இதற்கு உதாரணமாம். வரை யென்னும் கணுவின் பெயர் - அதனையுடைய மூங்கிலுக்கும், பின்பு அது மூங்கில்விளையும் மலைக்கும் ஆனமை காண்க.)

'கார் பெய்தது' என்றதில், கார் என்னும் நிறக்குணப்பெயர் - அதனையுடைய மேகத்திற்கு ஆதலால், குணவாகுபெயர். 'கார் வந்தது' என்றதில், கார் என்பது - நிறத்தின்பெயர் மேகத்திற்கு ஆய் மேகத்தின்பெயர் அது பெய்யும் பருவத்திற்கு ஆதலால், இருமடியாகுபெயர். 'கார் அறுத்தது' என்றதில், கார் என்பது - நிறப்பெயர் மேகத்திற்கு ஆய், மேகத்தின் பெயர் அதுபெய்யும் பருவத்திற்கு ஆய், பருவத்தின்பெயர் அதில் விளையும் பயிர்க்கு ஆதலால், மும்மடியாகுபெயர்.

'வெற்றிலை நடு,' 'மருக்கொழுந்து நட்டான்,' 'திருவாசகம்' என்பவற்றில், வெறு மரு திரு என்னும் அடைமொழிகளால் அடுக்கப்பட்ட இலை, கொழுந்து, வாசகம் என்பன ஆகுபெயராதலால் இவை அடையடுத்த ஆகுபெயர். ('வார்சான்ற கூந்தல் [பெண்ணே!] கேள்' முதலியனவும் இதற்கு உதாரணமாம்.)

ஆகுபெயர்க்கும் அன்மொழித்தொகைக்கும் வேறுபாடு;- ஆகுபெயரும் அன்மொழித்தொகையும் தன்பொருளை உணர்த்தாமல் வேறுபொருளை உணர்த்துதலினால், இவையிரண்டுக்கும் வேறுபாடு என்னவென்றால்.—(௧) ஆகுபெயர் - ஒருசொல்லாய் வரும்; அன்மொழித்தொகை - பலசொல்லாய் வரும். (௨) ஆகுபெயர் - முதலசினை முதலிய சம்பந்தத்தால் வேறுபொருளை உணர்த்தும்; அன்மொழித்தொகை - வேற்றுமைத்தொகை முதலிய ஐவகைத் தொகையாற்றலால் வேறுபொருளை உணர்த்தும். (௩) ஆகுபெயர் - பெரும்பாலும் நியதிப்பெயராய் வரும்; அன்மொழித்தொகை - நியதிப்பெயராய் வராது. (௪) ஆகுபெயர் - தொன்றுதொட்டு வரும்; அன்மொழித்தொகை - யாதாயினும் ஒரு காரணத்தால் புதிதுபுதிதாக உண்டாக்கப்பட்டு வரும். இவையே ஒன்றற்கு ஒன்று வேறுபாடாம் என்று அறிக. (௩௩)

## வேற்றுமை.

[வேற்றுமையின் இலக்கணம்.]

‡ ௨௯௩. ஏற்கு மெவ்வகைப் பெயர்க்கு மீறாய்ப் பொருள்
வேற்றுமை செய்வன எட்டே வேற்றுமை.

(இ - ள்) ஏற்கும் - தம்மை ஏற்றுக்கொள்ளுதற்கு உரிய, எ வகை பெயர்க்கும் - எல்லாவகைப்பட்ட பெயர்கட்கும், ஈறாய் - இறுதியில்வருவனவாய், பொருள் - (அப்பெயர்களின்) பொருளை, வேற்றுமை செய்வன - வேறுபடுத்துவனவாகிய, வேற்றுமை - வேற்றுமைகள் எட்டே - எட்டேயாம்.

தன்னை ஏற்ற பெயரின் பொருளை வேறுபடுத்துவதற்குக் காரணமான உருபை 'வேற்றுமை' என்றது, காரியவாகுபெயர் வேறுபடுத்துதல் - கருத்தாப்பொருளும் செயப்படுபொருளும் கருவிப்பொருளும் முதலாக வேறு பொருள்களைத் தரச்செய்தல்; அது, மேலவரும் சிறப்புசூத்திரங்களிற் சொல்லப்படும் விளிவேற்றுமையைப் பெயராதுவிகாரமென்று முதல்வேற்றுமையில் அடக்கி வேற்றுமை ஏழென்பாரது கொள்கையை மறுத்து, அது பெயரின் விகாரமேயாயினும் படர்க்கையை முன்னிலையாக வேறுபடுத்தலுடைமையின் வேறென்றற்கு, 'எட்டே வேற்றுமை' எனத் தேற்றேகாரங் கொடுத்துக் கூறினார். (௩௪)

[வேற்றுமைகளின் பெயரும், முறைமையும்]

‡ உ௯௨. பெயரே ஐ ஆல் கு இன் அது கண்
விளியென் றாகு மவற்றின் பெயர் முறை.

(இ - ள்) அவற்றின் - அவ்வேற்றுமைகளினுடைய, பெயர் - பெயர்களும், முறை - முறையுமாவன —(க) பெயரே - பெயரும், (உ) ஐ - ஐயும், (௩) ஆல்-ஆலும், (௪) கு குவ்வும், (௫) இன் - இன்னும், (௬) அது அதுவும், (எ) கண் - கண்ணும், (அ) விளி - விளியும், என்று ஆகும—;(எ - று.)

முதலவேற்றுமை வேறு உருபு ஏற்காமல் பெயர்மாத்திரமாய் நிற்றலால் பெயர்வேற்றுமை யென்றும் எட்டாமவேற்றுமை விளித்தற்பொருள் தாதலால் விளிவேற்றுமை யென்றும் பெயர்பெறும்; விளித்தல் - அழைத்தல். ()

[எழுவாயுருபு மற்றையுருபுகளை ஏற்றல்.]

‡ உ௯௩. ஆறு னுருபு மேற்குமவ் வுருபே.

(இ - ள்.) அ உருபே - (பெயர்மாத்திரையாய் நிற்கின்ற) அவ்வெழுவாயுருபே, ஆறன் உருபும் - (ஐ முதலாகிய) ஆறு வேற்றுமை யுருபுகளையும், ஏற்கும் - ஏற்றுவரும்; (எ - று)

விளியுருபு பெயரின் விகாரமே யாதலால், அதனை நீக்கி, மற்றை ஆறு உருபுகளையும் ஏற்கு மென்றார் என்க. (௩௬)

['ஐ' முதலிய வேற்றுமையுருபுகளை ஏற்காத பெயர்கள்.]

† உ௯௪. நீயிர் நீவிர் நான் னெழுவா யலபெறா.

(இ - ள்) நீயிர் நீவிர் நான் - நீயிர் நீவிர் என்னும் முன்னிலைப்பெயர்களும் நான் என்னும் தன்மைப்பெயரும்,—எழுவாய் அல - எழுவாயல்லாத மற்றை ஏழு வேற்றுமை யுருபுகளை, பெறா - பெற்றுவாராவாம்; (எ - று.)

நும்மை நும்மால், உம்மை உம்மால் முதலியன - நீர் என்னும் முன்னிலைப்பெயரின் வேற்றுமைகளாதலாலும், என்னை என்னால் முதலியன-யான் என்னும் தன்மைப்பெயரின் வேற்றுமைகளாதலாலும், நீயிர் நீவிர் என்பவையும், நான் என்பதும் - எழுவாயவேற்றுமை யொன்றையே யன்றி மற்றை வேற்றுமைகளை ஏலா வாயின வென அறிக. (யாம் என்பது - எம் என்று வருதல்போல, யான் என்பது - என் என்று வரும்; அவ்வாறே

நாம் என்பது நம் என்று வருதல் போல, நான் என்பது - நன் என வர வேண்டும்; அங்ஙனம் வாராமையால், நான் என்பது - பிறவேற்றுமைகட்கு வாராமையை அறிக.) (௩௭)

[முதல்வேற்றுமை]

௨௯௫. அவற்றுள்,
எழுவா யுருபு திரிபில் பெயரே
வினைபெயர் வினாக்கொள லதன்பய னிலையே.

(இ - ள்.) அவற்றுள் - முன்சொல்லப்பட்ட எட்டு வேற்றுமைகளுள்,— எழுவாய் - முதல்வேற்றுமையினது, உருபு - உருபாவது,— திரிபு இல - (ஐ முதலாகிய உருபுகளை ஏற்றுத்) திரிதல் இல்லாத [ஏற்காமல் இயல்பாய் நிற்கிற], பெயரே - பெயரேயாம், வினை - வினையையும், பெயர் - பெயரையும், வினா - வினாவையும், கொளல் - கொள்ளவருதல்,— அதன் - அவ்வுருபினது, பயனிலை - பொருள்நிலையாம்; (எ - று.)

எனவே எழுவாய்வேற்றுமைக்கு வேறு உருபு இல்லை யென்பதும், வினையும் பெயரும் வினாவும் கொண்டுமுடியுஞ்சொல்லாய் வந்து நிற்க, அவற்றுக்குக் கருத்தாவாய் நிற்பதே அதன்பொருள் என்பதும் பெறப்பட்டன. திரிதலில்லாத பெயரை வேற்றுமையென்றது, தானே தன்பொருளைக் கருத்தாப்பொருளாக வேறுபடுத்துதலால். எழுவாய் வேற்றுமை, முதல்வேற்றுமை, பெயர்வேற்றுமை, வினைமுதல், செய்பவன், கருத்தா என்பன - ஒருபொருட்சொற்கள் எழுவாயெனினும், முதலெனினும் ஒக்கும். வினைமுதல் பயனிலையிற்குறிக்கும் தொழிலைச் செய்தற்கு முதலாயுள்ள பொருள். செய்பவனெனினும், கருத்தாவெனினும் ஒக்கும்; கர்த்தா - வடசொல்.

(உ - ம்.) சாத்தன் வந்தான், அவன் பெரியன்—வினைகொள வந்தன.
ஆ ஒன்று, அரசன் இவன்—பெயர்கொள வந்தன.
அவன் யார், ஆ யாது—வினாக்கொள வந்தன.

கருத்தாப்பொருளாவது - தொழிலிற் சுதந்தரமுடைய பொருளாம். பொன்னன் வந்தான் என்றதில், பொன்னன் வருகைத்தொழிலிற் சுதந்தரமுடையனாதல் காண்க.

எழுவாய்வேற்றுமைக்கு ஐ முதலானவை போன்ற உருபு இல்லாதிருந்தாலும், உரையிற்கோடல் என்கிற உத்தியால் - ஆனவன், ஆகின்றவன், ஆவான், என்றவன் என்கின்றவன், என்பவன், அவன் முதலாக ஐம்பாலிலும் வருகிறசொல்லுருபுகள் உண்டெனக் கொள்க; அவை - சாத்தனாகிறவன், சாத்தியவள், சாத்தரானவர், ஆவென்பது, ஆக்களானவை எனவரும். இன்னும் இவ்வுத்தியைப் பின்வரும் வேற்றுமைகளிற் காட்டப்படும் சொல்லுருபுகட்கெல்லாம் கொள்க.

இனி, இது தோன்றாஎழுவாயாக வருதலும் உண்டு; (உ - ம்.) செல்வாயோ சாத்தா என்றவிடத்து, நீ என்பது - தோன்றா எழுவாய். (எழுவாய் தொகுத்து.)

கருத்தா - இயற்றுதற்கருத்தா, ஏவுதற்கருத்தா என இருவகைப்படும். இயற்றுதற்கருத்தா - தானே நேராகச் செய்வது. ஏவுதற்கருத்தா - தானே நேராகச்செய்யாமல் வேறொருவனைக்கொண்டு செய்விப்பது.

(உ - ம்.) தச்சன் கோயிலைக் கட்டினான்—இயற்றுதற்கருத்தா.
அரசன் கோயிலைக் கட்டினான்—ஏவுதற்கருத்தா.

கருத்தா மூன்றாம்வேற்றுமையா யிருக்கும்போது செயப்படுபொருள் முதல் வேற்றுமையாய் வருதலால், முதலவேற்றுமைக்குச் செயப்படுபொருளும் சிறுபான்மை உண்டெனக் கொள்க.

(உ - ம்.) கடவுளால் உலகம் படைக்கப்பட்டது. (ருஅ)

[இரண்டாம் வேற்றுமை]

‡ உகூசு. இரண்டா வதனுரு பையே அதன்பொருள்
ஆக்க லழித்த லடைதல் நீத்தல்
ஒத்த லுடைமை யாதி யாகும்.

(இ - ள்.) இரண்டாவதன் - இரண்டாம் வேற்றுமையினது, உருபு - உருபாவது,—ஐயே - (முன்சொல்லப்பட்ட) ஐஒன்றுமேயாம்; அதன் - அதனுடைய, பொருள் - பொருள்களாவன —ஆக்கல் - ஆக்கப்படுபொருளும், அழித்தல் - அழிக்கப்படுபொருளும், அடைதல் - அடையப்படுபொருளும், நீத்தல் - நீக்கப்படுபொருளும், ஒத்தல் - ஒக்கப்படுபொருளும், உடைமை - உடைமைப்பொருளும், ஆதி ஆகும் - முதலியனவாம்; (எ - று)—எனவே, இரண்டாம் வேற்றுமையின் பொருள் செயப்படுபொருளென்றதாயிற்று.

(உ - ம்.) குடத்தைச் செய்தான்—ஆக்கப்படுபொருள்.
கோட்டையை இடித்தான்—அழிக்கப்படுபொருள்.
ஊரைச் சேர்ந்தான்—அடையப்படுபொருள்.
வீட்டை விட்டான்—நீக்கப்படுபொருள்.
புலியைப் போன்றான்—ஒக்கப்படுபொருள்.
பொன்னை உடையான்—உடைமைப்பொருள்.

செயப்படுபொருளாவது - கருத்தாவினது தொழிலின் பயனை அடைவது. 'குடத்தைச் செய்தான்' என்றதில், செய்தல்-கருத்தாவினது தொழில்; செய்யப்படுதல் - அத்தொழிலின் பயன்; அப்பயனை அடைவது குடம்: ஆதலால், குடம் செயப்படுபொருள். செயப்படுபொருள், செயபொருள், கருமம், காரியம் என்பன - ஒருபொருட்சொற்கள். கர்மம், காரியம் - வடசொற்கள்.

§ 'ஆதி' என்றதனால் - வீட்டை விரும்பினான், நூற்பொருளை அறிந்தான் என விரும்பப்படுதலும் அறியப்படுதலும் முதலானவையும் கொள்க. இவையெல்லாம் ஆக்கல்முதலிய ஆறுபொருள்களுள் ஒருவாறு அடங்குதல் அறிக. *

---

* 'ஆதி' என்றதனால், ஒவ்வாமை முதலானவும் இவற்றின் பரியாய மொழிகளும் கொள்க.' 'உடைமை - வினைக்குறிப்பு. அவனையொவ்வான்; நின்னைப்போலான் என்றற் றொடக்கத்தன - ஒவ்வாமை. அறத்தைக் காத்தான் வளர்த்தான் பெருக்கினான் படைத்தான் என்றற் றொடக்கத்தன - ஆக்கமொழிப்பரியாயம்; பிறவற்றிற்கும் இவ்வாறே வருவன கண்டுகொள்க' என்பன, பழைய உரை.

இனி அரசன பகைவரைச சிறைச்சாலையை அடைவித்தான், சாத்தன பசுவைப பாலைக கறந்தான் என இரண்டு செயப்படுபொருள்கள் சில இடங்களிலே தன்வினை பிறவினை இரண்டிலும வருதலும உண்டு. * (ருக)

[மூன்றும் வேற்றுமை.]

[ உகூஎ மூன்றா வதனுரு பாலா னொடொடு
கருவி கருத்தா உடனிகழ் வதன்பொருள்.

(இ - ள்.) மூன்றாவதன் - மூன்றாம வேற்றுமையினுடைய, உருபு - உருபுகளாவன,—ஆல ஆன ஓடு ஒடு-(முன்சொலலப்பட்ட) ஆல எனபதேயனறி ஆனும ஓடும ஒடுவும் ஆகும; அதன - அதனுடைய, பொருள்-பொருளகளாவன —கருவி - கருவியாதலும, கருத்தா-வினைமுதலாதலும, உடனிகழ்வு - உடனிகழச்சியுமாம, (எ - று.)

இவவாறு பொதுப்படக கூறினாராயினும, ஏற்புழிக்கோடல் என்கிற உத்தியால் - ஆல் ஆன் உருபுகளுககுக கருவிப்பொருளும் கருத்தாப்பொருளும, ஓடு ஒடு உருபுகளுககு உடனிகழ்ச்சிப்பொருளும சிறந்தன வென்க.

(உ - ம்.) வாளால வெட்டினன், வாளான் வெட்டினன்—கருவி.
அரசனா லாககபபட்ட கோயில், அரசனானாக்கப்பட்டகோயில்—கருத்தா.
மகனோடு தந்தை வந்தான, மகனொடு தந்தை வந்தான்—உடனிகழ்ச்சி.

கருவியாவது - கருத்தாவின தொழிலுககுச சாதனமா யிருப்பது. 'வாளாற் பகைவனை வெட்டினன்' என்றதில, வெட்டுதல் - கருத்தாவின தொழில; அவ்வெட்டுதற்குச சாதனமா யிருப்பது - வாள் ஆதலால, அது கருவிப்பொருளாம; அக்கருவி-முதற்கருவியும், துணைக்கருவியும் என இருவகைப்படும. முதற்கருவியாவது - காரியமாக மாறி அதினின்றும வேறுபடாதது; துணைக்கருவியாவது - முதறகருவி காரியப்படுமளவும அதறகுத துணையாய நின்று பின்பு பிரிவது. முதற்கருவி—முதற்காரணம் துணைககருவி—துணைக்காரணம்.

(உ - ம்.) மண்ணாற் குடத்தை வனைந்தான—மண் முதற்கருவி.
தண்டசக்கரங்களாற் குடத்தை வனைந்தான்—தண்டசக்கரம்-துணைக்கருவி

கருத்தாப்பொருள் இன்னதென்று எழுவாய்ச சூத்திரவுரையிற காட்டப்பட்டது. இதுவும - இயற்றுதற்கருத்தா, ஏவுதற்கருத்தா என இருவகை
(உ - ம) தச்சனால கோயில கட்டப்பட்டது—தச்சன் - இயற்றுதற்கருத்தா.
அரசனால கோயில கட்டப்பட்டது—அரசன் ஏவுதற்கருத்தா

முதல்வேற்றுமைக் கருத்தாவுக்கும் மூன்றும் வேற்றுமைக் கருத்தாவுக்கும் வேறுபாடு என்னவென்றால,—முதலவேற்றுமைக கருத்தா -தனனோடு திணை பால் இடங்களில ஒத்த செயவினைப்பயனிலையைக கொண்டுமுடியும. மூன்றாமவேற்றுமைககருத்தா - செயப்படுபொருளோடு திணை பால இடங்களில ஒத்த செயப்பாட்டு வினைப பயனிலையைக கொண்டுமுடியும கருத்தா முதலவேற்றுமையா யிருக்குமபோது, செயப்படுபொருள இரண்டாம வேற்

* இதனை வடநூலார 'தவிகாம காததரி பரயோகம' எனபர.

றுமையாய் வரும்; கருத்தா மூன்றாமவேற்றுமையா யிருக்கும்போது, செயப்படுபொருள் முதல்வேற்றுமையாய் வரும.

(உ - ம.) தசசன் கோயிலைக கட்டினன்—முதல்வேற்றுமைக்கருத்தா. *

தசசனாற் கோயில கட்டப்பட்டது—மூன்றாம்வேற்றுமைககருததா. §

உடனிகழ்ச்சிப்பொருளாவது - வினை கொணடு முடிகின்ற பொருளின் தொழிலைத தன்னிடததும உடன் நிகழ்கிறதாக வுடையது. 'மகனோடு தநதை வநதான' என்றதில, தநதை - வினைகொணடுமுடிகிற பொருள்; வருதல - அப்பொருளின தொழில; அததொழிலைத தன்னிடததும உடன் நிகழ்கிறதாகவுடைய பொருள - மகன ஆதலால், அது - உடனிகழ்சசிப் பொருள்.

சிறுபானமை, ஆல ஆன் உருபுகள - உடனிகழ்சசிபபொருளிலும ஓடு ஒடு உருபுகள் - கருவிபபொருள் கருததாப்பொருள்களிலும் அருமையாக வரும.

(உ - ம.) "தூவகுகையா லோநகுநடைய," "உறழுமணியா னுயாமருப்பின"-

இவற்றில், ஆல ஆன உருபுகள் - உடனிகழ்சசிப்பொருளில வநதன; கையால் - கையோடு, மணியான்-மணியோடு என்று பொருள.

"கொடியோடு துவககுணடான," 'ஊசியொடுகுயின்ற தூசும பட்டும்"-

இவற்றில, கொடியோடு எனபதில - ஓடு உருபுகருததாப்பொருளிலும், ஊசியொடு எனபதில - ஒடு உருபு கருவிபபொருளிலும வந்தன; கொடியோடு - கொடியால, ஊசியொடு - ஊசியால என்று பொருள.

இனி, ஒரோவிடதது, ஆல் ஆன் உருபுகள் - தோறும என்கிற பொருளையும, ஓடு ஒடு உருபுகள் - அடைமொழிப்பொருளையும தரும.

(உ - ம.) ஊராலொருகோயில்—இது, ஊர்தோறும் எனப் பொருள் படும.

கோபததோடு வந்தான்—கோபம் - வருதற்கு விசேஷண மாதலால், அடைமொழிப பொருள; கோபமுடையனாய வநதா னென்க.

கருவிபபொருளில 'கொண்டு' எனபதும, உடனிகழ்சசிப்பொருளில 'உடன்' எனபதும சொல்லுருபாக வரும.

(உ - ம்.) வாளகொணடு வெட்டினன், மகனுடனதநதை வந்தான்.(சா)

[நான்காமவேற்றுமை.]

‡ உகூஅ. நான்கா வதற்குரு பாகும் குவவே
கொடை பகை நேர்ச்சி தகவது வாதல்
பொருட்டுமுறை யாதியி னிதற்கிதெனல பொருளே.

(இ - ள்.) நானகாவதற்கு - நான்காம வேற்றுமைக்கு, உருபு உருபாவது,—குவ்வே ஆகும - (முனசொலலப்பட்ட)கு ஒன்றுமேயாம; பொருள் - அதன பொருள்களாவன —கொடை - கொடுததலும, பகை - பகையும், நேர்சசி - நட்பும, தகவு - தகுதியும, அது ஆகல் - அதுவாதலும்,பொருட்டு-

* இதனை வடநூலார 'காததரி ப்ரயோகம' எனபா.

§ இதனை வடநூலார 'காமணி பரயோகம' எனபா.

பொருட்டும், முறை - உறவுமுறையும், ஆதியின - முதலான பொருளில், இதற்கு இது எனல் - இதற்கு இது வென்பது பட வருதலாம்; (எ - று.)— 'இதற்கிதெனல் பொருள' என்றதனால், நான்காம் வேற்றுமையின் பொருள் ஏற்றுக்கொள்ளுதற்பொரு ளென்றதாயிற்று.

கொடை யெனவே கொள்ளுதற்பொருளும், பகையெனவே பகைதொடர்பொருளும், நேசமெனவே நட்புத்தொடர்பொருளும், தகுதி யெனவே தகுதியுடைப்பொருளும், அதுவாத லெனவே முதற்காரண காரியப்பொரு ளும், பொருட்டு எனவே நிமித்தகாரண காரியப்பொருளும், முறையெனவே முறைக்கு இயைபொருளும் குவ்வுருபின பொருள்களா மெனக.

(உ - ம) யாசகர்க்குப் பொன்னைக் கொடுத்தான்—கொள்ளுதற்பொருள்.

பாம்புக்குப் பகை கருடன்—பகைத்தொடர்பொருள்

சாத்தனுக்கு நண்பன் கொற்றன்—நட்புத்தொடர்பொருள்.

அரசர்க்கு இவ்வாபரணம் உரியது—தகுதிஉடைப்பொருள்.

குண்டலத்திற்குப் பொன்—முதற்காரணகாரியப்பொருள்.

கூலிக்கு வேலைசெய்தான்—நிமித்தகாரணகாரியப்பொருள்.

பொன்னனுக்கு மகன் இவன்—முறைக்கு இயைபொருள்.

'ஆதி' என்றதனால், மயிலைக்கு வடக்குத் திருவல்லிக்கேணி, சாத்தனுக் குச் சிறந்தவன் கொற்றன் என எல்லைப்பொருளில் வருதலும், பிறவும் கொள்க.

பொருட்டுப்பொருளில் குவ்வுருபு சிறற்கு உரிய சில இடங்களில் பொருட்டு, நிமித்தம் என்பவையும், குவ்வுருபின்மேல் ஆக என்பதும் சொல் லுருபுகளாக வரும். (உ - ம.) கூலியின்பொருட்டு வேலைசெய்தான், கூலிநி னிமித்தம் வேலை செய்தான், கூலிக்காக வேலைசெய்தான். (௬௪)

[ஐந்தாம் வேற்றுமை]

௨௯௯. ஐந்தா வதனுரு பின்னு மில்லும்
நீக்கலொப் பெல்லை யேதுப் பொருளே

(இ - ள்.) ஐந்தாவதன - ஐந்தாம்வேற்றுமையினுடைய, உருபு - உருபுக ளாவன—இன்னும் இல்லும் - (முன்சொல்லப்பட்ட) இன் என்பதேயன்றி இல் என்பதும் ஆகும்; பொருள் - அதன் பொருள்களாவன—நீக்கல் - நீங்குதற்பொருளும், ஒப்பு - உவமைப்பொருளும், எல்லை - எல்லைப்பொருளும், ஏது - ஏதுப்பொருளும் ஆகத் தன்னையேற்ற பெயர்ப்பொருளை வேறு படுத்தல்; (எ - று.)

(உ - ம.) மலையினின் வீழருவி—நீக்கப்பொருள்.

காக்கையிற் கரிது களம்பழம்—ஒப்புப்பொருள்.

மதுரையின் வடக்குச் சிதம்பரம்—எல்லைப்பொருள்.

கல்வியிற் பெரியன் கம்பன்—ஏதுப்பொருள்.

எல்லைப்பொருள் - மதுரையின் வடக்குச் சிதம்பரம் எனத் திசையள வும், 'கச்சியில் திருத்தணிகை மூகக்காவதம்' என வழியளவும், சாத்தனில் இரண்டு ஆண்டு மூத்தவன் கொற்றன் எனக் காலவளவும், 'அரசிற் பெரி யர் அந்தணர்' எனப் பண்டளவும் முதலியன பற்றி வரும்.

'காக்கையிற் கரிது களம்பழம்' என உபமானமும் உபமேயமு மாக வருமிடத்தில், காக்கையின் - காக்கைபோல என்ப் பொருள்கொண்டால், ஒப்புப்பொருள்; இதனை உவமைப்பொரு ளென்பர். காக்கையின் - காக்கையைக் காட்டிலு ம் எனப் பொருள் கொண்டால், எல்லைப்பொருளாம்; இதனை உறழ் பொரு ளென்பர்.

நீக்கப்பொருளிலும், எல்லைப்பொருளிலும் - இன், இல் உருபுகளின் மேல நின்று, இருந்து என்பவை சில இடத்துச் சொல்லுருபுகளாக வரும்.

(உ - ம்) ஊரினின்று நீங்கினான், ஊரிலிருந்து போனான், காட்டினின்று ஊர் காதம், காட்டிலிருந்து ஊர் காதம். (சஉ)

## [ஆறாம் வேற்றுமை.]

| ௯00. ஆறனொருமைக்கு அதுவும் ஆதுவும்
பன்மைக்கு அவ்வும் உருபாம் பண்பு உறுப்பு
ஒன்றன் கூட்டம் பலவி னீட்டம்
திரிபி னாக்க மாம்தற் கிழமையும்
பிறிதின் கிழமையும் பேணுதல் பொருளே.

(இ - ள்.) ஆறன் ஒருமைக்கு - ஒருமையாகிய வருமொழியையுடைய ஆறாம்வேற்றுமைக்கு, அதுவும் ஆதுவும் - (முன்சொல்லப்பட்ட) அது என்ப தேயன்றி ஆது என்பதும், பன்மைக்கு - பன்மையாகிய வருமொழியையுடைய ஆறாம்வேற்றுமைக்கு, அவ்வும் - அ என்பதும், உருபு ஆம் - உருபுகளாகும்; பொருள் - (அதன்) பொருள்களாவன —பண்பு - (குணமும் தொழிலுமாகிய) பண்பும், உறுப்பு - அவயவமும், ஒன்றன் கூட்டம் - ஒரு பொருட் கூட்டமும், பலவின் ஈட்டம் - பலபொருட்டிரட்சியும், திரிபின் ஆக்கம் - ஒன்று திரிந்து மற்றொன்றாதலும், ஆம் - ஆகிய, தற்கிழமையும் - (ஐந்து) தற்கிழமைப் பொருள்களையும், பிறிதின்கிழமையும் (அவையல்லாத பொருள் இடம் காலம் ஆகிய மூன்று)பிறிதின் கிழமைப்பொருள்களையும், பேணுதல் - உடையதாய் வருதலாம்; (எ - று.)

தற்கிழமையாவது - தன்னோடு ஒற்றுமையுடைய பொருளின் சம்பந்தம். பிறிதின்கிழமையாவது தன்னின் வேறாகிய பொருளின் சம்பந்தம். பொருள் இடம் காலம் சினை குணம் தொழில் என்ற ஆறனுள், குணம் தொழில் என்ற இரண்டும் 'பண்பு' என்ற ஒன்றில் அடக்கப்பட்டன. அவ்வாறனுள் பின்தின மூன்றும் தற்கிழமைப்பொருள் எனவே, இவையல்லாத பொருள் இடம் காலம் ஆகிய மூன்றும் பிறிதின்கிழமைப்பொரு ளென்பது பெறப்பட்டது. ஆகவே, இப்படி பலவகையாலும் வருகிற சம்பந்தப்பொருளே ஆறாம் வேற்றுமையின் பொரு ளென்றதாயிற்று.

(உ - ம்) சாத்தனது கருமை —(குணப்) } பண்புத்தற்கிழமை.
சாத்தனது வரவு —(தொழிற்) }
சாத்தனது கை —உறுப்புத் தற்கிழமை.
மாந்தரது தொகுதி —ஒன்றன்கூட்டத் தற்கிழமை.

பறவைகளது கூட்டம்—பலவினீட்டத் தற்கிழமை.
நெல்லினது பொரி —திரிபினாக்கத் தற்கிழமை.
சாத்தனது பசு —பொருட்பிறிதின்கிழமை.
சாத்தனது வீடு —இடப் பிறிதின்கிழமை.
சாத்தனது நாள் காலப் பிறிதின்கிழமை.

எனது கை, நினது வரவு, தனது பொருள்—அது உருபு.
என கைகள், நின வீடுகள், தன பொருள்கள்—அகர உருபு

ஆறனுருபு-'எனதுஉயிர்,' 'இராகுவினதுதலை', 'பூமியினதுதலம்' என உடையதும் உடைமைப்பொருளும் வேறுகாத ஒற்றுமைக்கிழமைப்பொருளிலும் வரும்; யான் என்பதும் உயிரென்பதும், இராகுஎன்பதும், தலைஎன்பதும், பூமிஎன்பதும், தலமென்பதும் ஒருபொருளேயாதலால், இவை ஒற்றுமைக்கிழமை.

சிறுபான்மை 'அது' உருபு 'நினது அடியார்,' 'எனது கைகள்' என வருமொழி பன்மையாயிருக்கும்பொழுது வரும்; பிற உருபுகளும் மாறிவருதலு முண்டு.

இவ்வேற்றுமைக்கு 'உடைய' என்பது - சொல்லுருபாக வரும்.

(உ - ம்.) என்னுடைய வீடு, அவனுடைய தம்பி. (சா௩)

[ஏழாம் வேற்றுமை.]

௩௦௩ ஏழ னுருபு கண்ணாதி யாகும்
பொருண் முதலா றோரிரு கிழமையின்
இடனாய் நிற்ற லிதனபொரு ளென்ப

(இ - ள்.) ஏழன் - ஏழாம் வேற்றுமையினுடைய, உருபு - உருபுகளாவன,—கண் ஆதி ஆகும் - (முன் சொல்லப்பட்ட கண் என்பதேயன்றி) அகம் கண் முதலிய பிறவுமாம்; இதன் - இதனுடைய, பொருள்-பொருளாவது·—பொருள் முதல் ஆறும் - (தன்னை ஏற்ற) பொருள் இடம் காலம் சினை குணம் தொழில் என்னும் ஆறுவகைப்பெயர்களும், ஓர் இரு கிழமையின் - தற்கிழமை பிறிதின்கிழமை என்னும் இரண்டு பொருள்களுக்கும், இடன் ஆய் நிற்றல் - இடமாய் நிற்றலாம், என்ப - என்றுசொல்வர், (புலவர்); (எ - று.)—எனவே, இடப்பொருள் ஏழாம்வேற்றுமையின் பொருளென்றதாயிற்று.

'ஆதி' என்றதனாற் குறித்த உருபுகள், வருஞ் சூத்திரத்திற் கூறப்படும்.

(உதாரணம்)

| | | |
|---|---|---|
| மணியின்கண் இருக்கின்றது ஒளி | —தற்கிழமை | பொருள் இடமாயிற்று. |
| மரத்தின்கண் வாழ்கின்றது பறவை | —பிறிதின்கிழமை | |
| ஊரின்கண் உள்ளது வீடு | —தற்கிழமை | இடம் இடமாயிற்று. |
| ஆகாயத்தின்கண் பறக்கின்றதுபருந்து | —பிறிதின்கிழமை | |
| நாளின்கண் நாழிகை உள்ளது | —தற்கிழமை | காலம் இடமாயிற்று. |
| வேனிலின்கண் பாதிரி பூக்கும் | —பிறிதின்கிழமை | |
| கையின்கண் உள்ளது விரல் | —தற்கிழமை | சினை இடமாயிற்று. |
| கையின்கண் விளங்குகின்றது வளை | —பிறிதின்கிழமை | |

நிறத்தின்கண் உள்ளது அழகு — தற்கிழமை } குணம் இடமாயிற்று.
இளமையின்கண்வாய்த்தது செல்வம் — பிறிதின்கிழமை }
ஆட்டத்தின்கண் உள்ளது அபிநயம் — தற்கிழமை } தொழில் இடமாயிற்று. (௪௪)
ஆட்டத்தின்கண் பாடப்பட்டது பாட்டு — பிறிதின்கிழமை }

[ஏழாம் வேற்றுமை யுருபுகள்.]

‡ ௩0௨. கண் கால் கடை இடை தலை வாய் திசை வயின்
முன் சார் வலம் இடம் மேல் கீழ் புடை முதல்
பின் பாடு அளை தேம் உழை வழி உழி உளி
உள் அகம் புறம் இல் இடப்பொரு ளுருபே.

(இ - ள்) கண் . . இல் - இவ்விருபத்தெட்டும், இடப்பொருள் உருபு - இடப்பொருளுக்கு உரிய ஏழாம்வேற்றுமையின் உருபுகளாம்; (எ - று.)

இதையும் 'கண்' உருபைக் கூட்டிச்சொன்னது, தொடர்ச்சி தோன்ற.

(உதாரணம்.)

| | | |
|---|---|---|
| கால்-'ஊர்க்கால்.' | வலம்.'கைவலம்.' | தேம்-'கோடாய்தேத்து' |
| கடை-'வேலின்கடை.' | இடம்-'இல்லிடம்.' | உழை-'அவனுழை.' |
| இடை-'நல்லாரிடை.' | மேல்-'தன்மேல்' | வழி-'நிழல்வழி.' |
| தலை 'வலைத்தலை' | கீழ்-'நிழற்கீழ்' | உழி-'உறையுழி.' |
| வாய்-'கடல்வாய்' | புடை 'எயிற்புடை' | உளி-'காவுளி.' |
| திசை-'தோட்டிசை' | முதல்-சுரன்முதல்' | உள்-'குவட்டுள்' |
| வயின் 'அவர்வயின்' | பின் 'காதலிபின்.' | அகம்-'பல்லாரகத்து.' |
| முன்- கற்றார்முன்' | பாடு-'நம்பாடு' | புறம்-'உயிர்ப்புறத்து' |
| சார்-'காட்டுச்சார்' | அளை-'கல்லளை' | இல்-'ஊரில்.' |

(இல் - வீடு. எயில் - மதில். சுரன் - பாலைநிலம். காதலி - மனைவி. கோடாய் - செவிலித்தாய். கா - சோலை. குவடு - மலையுச்சி.)

இன்னும், 'முன்சூத்திரத்து ஆதி' என்றதனால்-பக்கல், பாங்கர், முகம், மாடு, பால், இன முதலானவைகளும் உருபுகளாக வரும்; (உ - ம்.) சாத்தன் பக்கல், காட்டுப்பாங்கர், போர்முகத்து, யாவர்மாட்டும், அவன்பால், நாட்டின்

இனி, கண் கால் முதலானவை - உருபாகாமல் இடவேறுபாடுகளை யுணர்த்தும் சொற்களாயும் வரும்; (உ - ம்) கண்ணகலுலகம், அகத்தி விருந்தான், புறத்திற் போனான், மேல் நின்றான் என இவ்வாறு காண்க. ()

[எட்டாம் வேற்றுமை]

† ௩0௩. எட்ட னுருபே யெய்துபெய ரீற்றின்
திரிபு குன்றல் மிகுதல் இயல்பயல்
திரிபு மாம் பொருள் படர்க்கை யோரைத்
தன்முக மாகத் தானழைப் பதுவே *

* 'எய்துபெயரெனவே, எய்தாத பெயரும் உள என்பதாம்; அவை போக்கிச் சொல்லுதும் படர்க்கையோரை யெனவே, முன்னிலைத் தன்மையார் ஈண்டே விலக்கப்பட்டாராம் படர்க்கையோரை என்றாரேனும், "ஒருமொழி யொழி தன்னினங் கொளற் குரித்தே" என்பதனால், படர்க்கையிடத்து ஐம்பாலும் கொள்க. பெயருருபிற்கும் இயல்பான விளியுருபிற்கும் உருபான் வேற்றுமையின்றேனும், பொருளான் உண்டெனக் கொள்க. தான் என்பது, சந்தவின்பப்பொருட்டு வந்தது' என்பது, பழையஉரை.

(இ - ள்.) எட்டன் - எட்டாம் வேற்றுமையினுடைய, உருபு - உருபுகளாவன,—எய்து பெயர் - (விளியை) அடையும் பெயரினது, ஈற்றின் திரிபு - இறுதி திரிதலும், குன்றல் - இறுதிகெடுதலும், மிகுதல் இறுதியில் ஓரெழுத்து மிகுதலும், இயல்பு இயல்பாதலும், அயல் திரிபும் ஈற்றெழுத்துக்குமுந்தின எழுத்துத் திரிதலும் ஆம் ஆகும்; பொருள் - பொருளாவது,—படர்க்கையோரை - படர்க்கையிடத்துப் பொருளை, தன் முகம் ஆக - தனக்கு எதிர்முகமாக, அழைப்பது - அழைத்தலாம்; (எ - று)—எனவே, விளிக்கப்படுபொருள் எட்டாம்வேற்றுமையின் பொருளென்றதாயிற்று. இது, விளிவேற்றுமையெனவும்படும். தான் அசை 'ஈற்றின்' என்பதைப் பிறவிடத்தும் கூட்டுக.

(உ-ம்) தந்தை-தந்தாய் நல்லாள்-நல்லாய், தோழி-தோழீ— ஈறுதிரிபு.

| | |
|---|---|
| அரசன் - அரச, சோழன் - சோழ | —ஈறுகுன்றல் |
| மகன் - மகனே, தந்தை - தந்தையே | —மிகுதல் |
| நம்பி, தோழி, சாத்தன், நங்கை | —இயல்பு. |
| மக்கள் - மக்காள், புலவர் - புலவீர் | —அயல்திரிபு. |

இவற்றுள் பலஉருபுகள் தொடர்ந்தே ஏற்றுவருதலும் உண்டு

(உ - ம்.) அப்பன் - அப்பா—ஈறுகுன்றலும், அயல்திரிபும்

அண்ணன் - அண்ணாவோ ஈறுகுன்றலும், அயல்திரிபும், மிகுதலும்

சிறுபான்மை அளபெடையும் விளியுருபாம்

(உ - ம்.) வேள் - வேஎள், அம்மான் - அம்மாஅன். (௬௪)

[விளிக்கப்படு பெயர்கள்.]

௩௦௪. இ உ ஊவோடு ஐ ஓ ன ள ர ல
யவ்வீற் றுயர்திணை ஓ ர அல் லவற்றொடு
ணஃகா னாவீ றாகும் பொதுப்பெயர்
ஞ ந ஒழி யனைத்திற் றஃறிணை விளிப்பன.

(இ - ள்.) இ உ ஊவோடு ஐ ஓ ன ள ர ல ய - இ உ ஊ ஐ ஓ என்கிற உயிர்களும் ன ள ர ல ய என்கிற மெய்களும் ஆகிய பத்தெழுத்துக்களையும், ஈறு - இறுதியிலுடைய, உயர்திணை (பெயர்)-உயர்திணைப்பெயர்களும் ஓ ர அல - (அவற்றுள்) ஓகாரஉயிரும் ரகரமெய்யும் ஒழிந்த, இவற்றொடு - மற்றை எட்டு எழுத்துக்களுடனே, ணஃகான் ஆ - ணகரமெய்யும் ஆகாரவுயிரும் ஆகிய பத்தெழுத்துக்களும், ஈறு ஆகும் இறுதியாகிய, பொதுப்பெயர் இருதிணைப் பொதுப்பெயர்களும்; ஞ ந ஒழி - (மொழிக்கு ஈறாகு மென்ற இருபத்துநான்கு எழுத்துக்களுள்) ஞகர நகரங்களும் (அளபெடையில் மாத்திரமே ஈறாகும் எகரமும் நொ கொ வெள என விளைக்கு ஈறுதலேயன்றிப் பெயர்க்கு ஈறாகாத ஒகரமும் ஔகாரமும்) ஒழிந்த, அனைத்து - பதினொன்பது எழுத்துக்களையும், ஈறு - இறுதியிலுடைய, அஃறிணை (பெயர்)- அஃறிணைப்பெயர்களுமே,—விளிப்பன - அழைக்கப்படுவனவாம்; (எ - று.)—அனைத்து - எல்லாம். விளிப்பன - விளியேற்பன.

ஏனையீற்றுப்பெயர்கள் விளியேலா என்றவாறு.

இதனுள் 'பெயா' என்பதனை இருதிணையிடத்தும் வருவித்துக் கொள்க.

(உ - ம) உயாதிணைப்பெயர்கள் —நம்பி, வேந்து, ஆடூ, விடலை, கோ, ஐயன். வேள், வணிகா, தோன்றல, சேய, என முறையே இங்குககாட்டிய பதது ஈறுகளும் காணக

பொதுப்பெயாகள்:—சாததி. கூறறு, அழிதூ [பேடு], தந்தை, சாத்தன், கடவுள், தூஙகல [பிள்ளை], தாய, ஆண, பிதா, என முறையே இங்குக்காட்டிய பதது ஈறுகளும காணக

அஃறிணைப்பெயாகள —மக, புறா, கிளி, தீ, முசு, பூ, சே. நாரை' சோ, மஙா, காாம் அலவன், நாய், தகா, குயில், தெவ், பூழ், புள், வணடு என முறையே இங்குக்காட்டிய பதினொன்பது ஈறுகளும் காணக.

இஙகு 'ஞ ந வொழி யனைத்தீற் றஃறிணை' என நகரவீற்று அஃறிணைப்பெயா விலக்கப்பட்டிருத்தலால், முதுகு என்னும் பொருளை யுணாத்துகிற வெள் வெரின் என்ற சொற்களைச சிறப்பு னகாவீறுகவே கொணடனரென்றும், வெந் வெரிந எனப் பொதுநகரவீறுக் கொண்டிலரென்றம அறியலாம். (சஎ)

[மூவகைப்பெயர்க்கும் பொதுவிளியுருபு.]

௩0௫. இமமூப பெயாககண இயல்பும ஏயும
இகர நீட்சியும உருபாம மனனே.

(இ - ள.) இ மூப் பெயாக்கண - (விளிக்கப்படுமென்ற) இந்த மூவகைப் பெயர்களிடததும,—இயலபும - இயல்பாதலும, ஏயும் - ஏகாரம மிகுதலும, இகரம நீட்சியும - இகரம ஈகாரமாகத திரிதலும், மன் - பெருமபாலும், உருபு ஆம - விளியுருபுகளாம; (எ - று.)

| | | |
|---|---|---|
| (உ - ம.) | முனி கூறுய, மாந்தா கூறீா—இயல்பு<br>கோவே கூறுய, மககளே கூறீா—ஏ மிகல<br>நம்பீ கூறுய், தோழீ கூறுய—இகர நீட்சி. | உயர்திணை. |
| | அன்னை கூறுய, ஆண் கூறுய்—இயல்பு.<br>பிதாவே கூறுய, பெணணே கூறுய—ஏ மிகல்.<br>சாததீ கூறுய், கொறறீ கூறுய்—இகரநீட்சி. | பொதுப்பெயர். |
| | மான் கொடியாய, கிளி நலலாய—இயல்பு.<br>மயிலே ஆடாய, புறுவே வாராய்—ஏ மிகல.<br>மநதீ கொடியை தும்பீ வா—இகர நீட்சி. | அஃறிணை |

காட்டாதொழிந்த பெயாகளும இவ்வாறே வரும். 'பெரும்பாலும' என்றதனுல் - இவ்வுருபுகள் சிலவற்றிற்குப பொருந்தாமை கொள்க. (சஅ)

[ஐகாரவீற்றுப் பெயர்களின் விளியுருபு.]

௩0௬. ஐயிறு பொதுபபெயாககு ஆயும் ஆவும
உருபாம் அல்லவற் றுயு மாகும்.

(இ - ள்.) ஐஇறு பொதுப்பெயர்க்கு - ஐகார ஈற்றுப் பொதுப்பெயர்க்கு, ஆயும் ஆவும் - (இயல்பும் ஏகாரமமிகுதலு மன்றி ஐகாரம்) ஆய்ஆகவும் ஆ ஆகவும் திரிதலும், உருபு ஆம் - உருபுகளாம்; அல்லவற்று - அல்லாத உயர்திணை அஃறிணைப் பெயர்க்கட்கு, ஆயும் - (இயல்பும் ஏகாரம் மிகுதலு மல்லாமல் ஐகாரம்) ஆய் ஆகத் திரிதலும், ஆகும் - விளியுருபாம்; (எ - று)

(உ - ம்) அன்னை—அன்னாய் } பொதுப்பெயர்க்கு ஆயும் ஆவும்
அம்மை—அம்மா } வந்தன.

விடலை—விடலாய் } உயர்திணைப்பெயர்க்கும், அஃறிணைப்
நாரை—நாராய் } பெயர்க்கும் 'ஆய்' வந்தது

இனி, உரையிற்கோடலால் - 'அன்னே,' 'அம்மே' எனப் பொதுப் பெயரின் ஈற்று ஐகாரம் ஏகாரமாகத் திரிதலும் கொள்க. (சகூ)

[னகரவீற்று உயர்திணைப்பெயர்களின் விளியுருபு.]

௩0எ. ஒருசார் னவ்வீற் றுயர்திணைப் பெயர்க்கண்
அளபீ றழிவய னீட்சி யதனோடு
ஈறு போத லவற்றோ டோவுறல்
ஈறழிந் தோவுறல் இறுதியவ் வாதல்
அதனோ டயல்திரிந் தேயுற லீறழிந்து
அயலே யாதலும் விளியுரு பாகும்.

(இ - ள்.) (பொதுவிதியால் இயல்பும் ஏகாரம் மிகுதலு மன்றி),—ன ஈறு உயர்திணை பெயர்க்கண் - னகரமெய்யீற்று உயர்திணைப்பெயர்களுள், ஒருசார் - சில, அளபு - அளபெடுத்தலும், ஈறு அழிவு - இறுதி கெடுதலும், அயல் நீட்சி - ஈற்றயல் நீளுதலும், அதனோடு ஈறுபோதல்-ஈற்றயல் நீண்டு ஈறுகெடுதலும், அவற்றோடு ஓ உறல் - ஈற்றயல் நீண்டு ஈறுகெட்டு ஓகாரம் மிகுதலும், ஈறு அழிந்து ஓ உறல்-ஈறுகெட்டு ஓகாரம் மிகுதலும், இறுதி ய ஆதல் - ஈற்று னகரமெய் யகரமெய்யாகத் திரிதலும், அதனோடு அயல் திரிந்து ஏ உறல் - ஈற்று னகரமெய் யகரமெய்யாகத் திரிந்து அதன் அயலில் நின்ற ஆகாரம் ஓகாரமாகி ஏகாரம் மிகுதலும், ஈறு அழிந்து அயல் ஏ ஆதலும் - ஈறுகெட்டு அதன் அயலில் நின்ற அகரம் ஏகாரமாதலும், விளி உருபு ஆகும் - விளியுருபுகளாம்; (எ - று.)

'ஒருசார்' என்பதை அடுத்த சூத்திரங்கட்கும் கூட்டுக.

(உதாரணம்.)

| | | |
|---|---|---|
| சேக்கிழான் | - சேக்கிழாஅன் | —அளபெடுத்தது. |
| புலவன் | - புலவ | —ஈறு அழிந்தது. |
| நம்பன் | - நம்பான் | —ஈற்றயல் நீண்டது. |
| மன்னன் | - மன்னா | —ஈற்றயல் நீண்டு ஈறுகெட்டது |
| ஐயன் | - ஐயாவோ | —ஈற்றயல்நீண்டு ஈறுகெட்டுஓகாரம்மிக்கது. |

ஐயன் -ஐயவோ —ஈறு அழிந்து ஓகாரம் மிக்கது.
கோயிலான -கோயிலாய —இறுதி யவ்வாயிற்று.
வாயிலான -வாயிலோயே } — இறுதி யவ்வாய் ஈற்றயல் ஆகாரம ஓகாரமாய் ஏகாரம மிககது.
ஐயன் —ஐயே —ஈறு அழிநது அயல் அகரம் ஏகாரமாயிறறு. (௫0)

[ளகரவீற்று உயர்திணைப் பெயர்களின் விளியுருபு.]

௩0௪ ளஃகா னுயர்பெயர்க் களபீ றழிவயல
நீட்சி யிறுதி யவவொற் றுதல
அயலி லகரமே யாதலும் விளித்தனு.

(இ - ள்.) (பொதுவிதியன்றி),—ளஃகான் உயர் பெயர்க்கு - ளகர மெய்யீற்று உயர்திணைபபெயர்களுள் சிலவறறிற்கு, அளபு - அளபெடுத தலும, ஈறு அழிவு - ஈறுகெடுதலும, அயல் நீட்சி - ஈற்றயல் நீளுதலும், இறுதி ய ஒறறு ஆதல் - ஈறறு ளகரமெய யகரமாதலும், அயலில் அகரம ஏ ஆதலும - ஈறறயல் அகரம ஏகாரமாதலும, விளி தனு - விளியுருபுகளாம்; (எ - று)

(உ - ம) வேள் -வேஎள —அளபெடுததது.
எல்லாள -எல்லா —ஈறு அழிநதது.
மகள -மகாள — ஈறறயல நீணடது.
குழையாள -குழையாய—ளவ்வொறறு யவ்வொறறாயிற்று.
அடிகள் -அடிகேள—ஈறறயலில அகரம ஏகாரமாயிறறு. (௫க)

[ரகரவீற்று உயர்திணைப்பெயர்களின் விளியுருபு]

௩0௫. ரவவீற் றுயர்பெயாக களபெழ லீற்றயல்
அகரம இ ஈ யாத லண்மை ஆ
ஈயாத லதனோ டேயுற லீறறுஏ
மிககயல யாகெட்ட தனயல நீடல
ஈறறி னீருற லிவையுமீண் டுருபே.

(இ - ள) (பொதுவிதியன்றி) —ர ஈறு உயர் பெயர்க்கு - ரகர மெய யீற்று உயர்திணைப பெயர்களுள் சிலவறறிற்கு,—அளபு எழல் - அளபெடுத்தலும, ஈறு அயல் அகரம இ ஈ ஆதல் - ஈற்றயல் அகர மானது இகரமாதலும் ஈகாரமாதலும், அணமை ஆ ஈ ஆதல் - ஈற றயல் ஆகாரம் ஈகாரமாதலும், அதனோடு ஏ உறல் - சில ஈறறயல் ஆகா ரம ஈகாரமாய ஏகாரம ஏறறலும், ஈறு ஏ மிகசு அயல் யா கெட்டு அதன் அயல் நீடல - ஈறறில ஏகாரம மிகுந்து அயலில 'யா' கெட்டு அதனயல் இகரம் ஈகார மாதலும, ஈறறின ஈர் உறல் - இறுதியில 'ஈர' அடை தலும, இவையும - ஆகிய இவையும,—ஈணடு - இவ்விடதது, உருபு - விளியுருபுகளாம; (எ - று.)

(உ ம்.) சிறார - சிறாஅர்—அளபெடுததது.
முதலவா தெவிர்—ஈறறயல அகரம் இகரமாயிறறு.

வணிகர் -வணிகீர்—ஈற்றயல் அகரம் ஈகாரமாயிற்று.

சான்ருர் -சான்றீர்—ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாயிற்று.

கணியார் -கணியீரே—ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாய் ஏகாரம் மிக்கது.

நம்பியார் - நம்பீரே— { ஈற்றில் ஏகாரமமிக்கு அயல் 'யா' கெட்டு அதன் அயல் இகரம் ஈகாரமாயிற்று.

எமர் - எமரீர் —'ஈர்'ஏற்றது

'ஈண்டு' என்ற மிகையால், கடலாரே, கடலீரே எனவும்; சாத்தியாரே சாத்தியீரே எனவும் அஃறிணைப் பெயர் பொதுப்பெயர்களைச் சிறப்பித்து ரவ்வீற்று உயர்திணைப் பெயர்போலக் கூறினும் இவ்வுரு பேற்றல் கொள்க. (௫௨)

[லகர யகர வீற்று உயர்திணைப்பெயர்களின் விளியுருபு]

௱௪0. லகாரவீற் றுயர்பெயர்க் களபய னீட்சியும்
யகார வீற்றிற் களபுமா முருபே.

(இ - ள்.) (பொதுவிதியன்றி),—லகார ஈறு உயர் பெயர்க்கு - லகர மெய்யீற்று உயர்திணைப் பெயர்களுள் சிலவற்றிற்கு, அளபு - அளபெடுத்தலும், அயல் நீட்சியும் - ஈற்றயல் நீளுதலும்; யகார ஈற்றிற்கு - யகரமெய்யீற்று உயர்திணைப் பெயர்களுள் சிலவற்றிற்கு, அளபும் - அளபெடுத்தலும்,—உருபு ஆம் - விளியுருபுகளாம், (எ - று)

(உ - ம்.) மால் - மாஅல் —அளபு.
மடவரல் - மடவரால்—அயல்நீட்சி. } சேய் - சேஎய்— அளபு.

'யகார வீற்றிற்கு' எனப் பொதுப்படக் கூறியதனால் - சிலவிடத்தில் தாய் - தாஅய், பேய் - பேஎய் என யகரவீற்றுப் பொதுப் பெயர்க்கும் அஃறிணைப் பெயர்க்கும் அளபெடுத்தல் விளியுருபாதலுங்கொள்க (௫௩)

[ணகரவீற்று அஃறிணைப்பெயர் பொதுப்பெயர்களின் விளியுருபு]

௱௪௧ ணவ்வீற் றுயர்திணை யல்லிரு பெயர்க்கண்
இறுதி யழிவத னோடய னீட்சி

(இ - ள்.) (பொதுவிதியன்றி),—ண ஈறு உயர்திணை அல் இரு பெயர்க்கண் - ணகரமெய்யீற்று உயர்திணைப் பெயரல்லாத அஃறிணைப் பெயர் பொதுப் பெயர்களுள் சிலவற்றிற்கு, இறுதி அழிவு - ஈறுகெடுதலும், அதனோடு அயல் நீட்சி - ஈறுகெட்டு அதன் அயல் நீளுதலும், (விளியுருபுகளாம்); (எ - று.)

அலவன் - { அலவ —இறுதி அழிவு
அலவா—இறுதி அழிந்து அயல்நீட்சி } அஃறிணைப் பெயர்.

சாத்தன் - { சாத்த— இறுதி அழிவு
சாத்தா—இறுதி அழிந்து அயல்நீட்சி. } பொதுப் பெயர். (௫௪)

[லகர ளகர வீற்று அஃறிணைப்பெயர் பொதுப்பெயர்களின் விளியுருபு]

௱௪௨. ளவீற் றஃறிணைப் பெயர் பொதுப் பெயர்க்கண்
ஈற்றயல் நீட்சியு முருபா கும்மே.

(இ - ள்.) லளவீற்று அஃறிணைப்பெயர் பொதுப் பெயர்களுள் - லகர ளகர மெய்யீற்று அஃறிணைப் பெயர் பொதுப் பெயர்களுள் சிலவற்றிற்கு,—ஈறு அயல் நீட்சியும் - (பொதுவிதியன்றி) ஈற்றயலெழுத்து நீளுதலும், உருபு ஆகும் - விளியுருபாம்; (எ - று.)

(உ - ம்.) முயல் - முயால், கிளிகள் - கிளிகாள்—அஃறிணைப் பெயர்.
தூங்கல் - தூங்கால் பிள்ளைகள் - பிள்ளைகாள்—பொதுப் பெயர்.

[விளியுருபுகளுக்குப் புறனடை.]

‡ ௩௧௩. அண்மையி னியல்பு மீறழிவுஞ் சேய்மையின்
அளபும் புலம்பின் ஓவு மாகும்.

(இ - ள்.) (முன் சொல்லப்பட்ட விளியுருபுகளுள்),—அண்மையின் - சமீபத்திலிருக்கிற பொருளை அழைக்குமிடத்து, இயல்பும் - இயல்பாதலும், ஈறு அழிவும் - ஈறு கெடுதலும்; சேய்மையின் - தூரத்திலிருக்கிற பொருளை அழைக்குமிடத்து, அளபும் - அளபெடுத்தலும், புலம்பின் - அழுகையில் ஒரு பொருளை அழைக்குமிடத்து, ஓவும் - ஓகாரம் மிகுதலும், ஆகும் - வரும்; (எ - று.)

எனவே, மற்றை விளியுருபுகள் இம்மூன்றிடங்களிலும் கலந்து வரும்.

(உ - ம்) க. அண்மைவிளி—தம்பி, அரச
உ. சேய்மைவிளி—மாஅல, சிறூஅர்.
௩. புலம்பல்விளி—அப்பாவோ. (ருசு)

[விளியடையாத பெயர்கள்.]

‡ ௩௧௪. நுவ்வொடு வினாச்சுட் டுற்ற னளர
வை துத் தாம் தான் இன்னன விளியா.

(இ - ள்.) நுவ்வொடு - நு என்பதையும், வினா - (எ ஏ யா என்னும் மூன்று முதல்) வினாவையும், சுட்டு - (அ இ உ என்னும் மூன்று) சுட்டையும், உற்ற - (முதலாகப்) பொருந்திய, ன ள ர - ன ள ர என்னும் மூன்று மெய்யீற்று உயர்திணை மூப்பாற் பெயர்களும், வை து - வை து என்கிற இரண்டு ஈற்று அஃறிணையிருபாற் பெயர்களும், தாம் தான் - இந்த இரண்டு பொதுப்பெயர்களும், இன்னன - இவைபோல்வன பிறவும், விளியா - விளிக்கப்படுவனவல்ல; (எ - று)—ன, ள, ர, - அன், அள், அர் விகுதிகள்.

முன் 'படர்க்கையோரைத் தன்முகமாகத் தானழைப்பது' என்றதனால், தன்மை முன்னிலைப்பெயர்கள் விளியுருபை யேலாமை அமைந்து கிடந்தது. ஆகவே, படர்க்கைப்பெயர்களுள் விளியுருபை யேலாதவற்றை இங்குக் கூறினார்.

வை து என்கிற இரண்டும் நுவ்வொடு பொருந்தா வென்பார், அதனை 'ஒடு' கொடுத்துப் பிரித்துக் கூறினார். *

* சூத்திரத்தில் 'நுவ்வொடு' என்றமாத்திரமே கூறினாராயினும் அதனோடு விகுதிகளைச் சேர்க்கும்போது மகரமெய்யை இடையிடுதல் வேண்டும்; "தநநு எம்முதல் மகரமிடையிட்டு, ன ள ர வா மீற்றன சுற்றுப் பெயரே" எனபது காண்க.

(வரலாறு.) யான், யாம், நாம், நீ, நீர், எல்லீர் எனவும்; நுமன், நுமள், நுமர் எனவும்; எவன், எவள், எவர், எது, எவை: யாவன், யாவள், யாவர், யாது, யாவை ஏவன், ஏவள், ஏவர், ஏது, ஏவை என வும்; அவன், அவள், அவர், அது, அவை இவன், இவள், இவர், இது, இவை: உவன், உவள், உவர், உது, உவை எனவும்; தாம் எனவும், தான் எனவும் வருகின்ற இப்பெயர்கள் விளியை ஏலாமை காண்க.

'இன்னவை' என்றதனால் - மற்றையான், எல்லாம் முதலியன கொள்க.

ஓசையின்பம் நோக்கி, 'வை து' என மாற்றிக் கூறினர். (௫எ)

[முதற்பெயர் சினைப்பெயர்களின் வேற்றுமைக்குப் புறனடை]

† ௩௪௫ முதலை ஐ உறின் சினைகைக் கண்ணுறும்
அதுமுதற் காயின் சினைக்கு ஐ யாகும்.

(இ - ள்) முதலை முதற்பெயரை, 'ஐ' உறின் - இரண்டனுருபு பொருந்தினால், சினையை - சினைப்பெயரை, 'கண்' - ஏழனுருபு, உறும் - பொருந்தும்; 'அது' - ஆறனுருபு, முதற்கு - முதற் பெயர்க்கு, ஆயின் - வந்தால், சினைக்கு - சினைப் பெயர்க்கு, 'ஐ' - இரண்டனுருபு, ஆகும் - வரும்; (எ - று.)

இன்னும் இரட்டுறமொழிதல் என்கிற உத்தியால் - அது என்பதைச் சுட்டாக்கி, அது - அக்கண்ணுருபு எனவும் பொருளுரைத்துக்கொள்க.

(உ-ம்.) க. யானையைக் காலின்கண் வெட்டி ⎫ ௩. யானையின்கண்
னன்.] ⎬
உ. யானையது காலை வெட்டினன். ⎭ காலை வெட்டினன்.

எனவே, யானையைக் காலை வெட்டினன் என முதல் சினை இரண்டி லும் ஐயுருபு வருதல் அவ்வளவாகச் சிறப்பன்று என்க. * (௫அ)

[முதல் சினைகளுக்கும், பிண்டப்பொருளுக்கும் புறனடை.]

௩௪௬. முதலிவை சினையிவை யெனவே றுளவில
உரைப்போர் குறிப்பின அற்றே பிண்டமும்.

(இ - ள்.) முதல் இவை சினை இவை என - முதற் பொருள்கள் இவை சினைப் பொருள்கள் இவை என்கிறதற்கு, வேறு உள இல - (இரண்டாக) வேறு உள்ளன இல்லவாம்; உரைப்போர் - (ஒரு பொருளையே இரண்டா கப் பகுத்துச்) சொல்வோரது, குறிப்பின - குறிப்பினளவேயாம்; பிண்ட மும் - பிண்டப்பொருளும், அற்றே - அத்தன்மையதேயாம்; (எ - று.)

'அற்றே பிண்டமும்' என்றதனால், முன்சூத்திரப்பொருளையும் இச் சூத்திரப்பொருளையும் பிண்டப்பொருளுக்கும் ஏறச்செய்தார்.

யானையைக் குறித்தபோது, யானை உள்ளதாக அதனுடைய கை கால் கொம்புமுதலியவை வேறு இல்லையாம்; அவ்வவயவத்தைக் குறித்த போது, அவை உள்ளனவாக யானை வேறு இல்லையாம். ஒருபொருளின்

---

* முதலை ஐ உறும்' என்றது, 'ஐ உறின்' என்றதனன், யானை யைக் கோட்டைக் குறைத்தான் எனவும் ஆமெனக்கொள்க' என்பது, பழைய உரை.

பிரிவுகளாதலால, இவ்வாறு கூறப்பட்டன. பிண்டப்பொருள்—நெல்லைப் பொலியின கண வாரினுன, நெல்லினது பொலியை வாரினுன் என வரும. பிண்டித்த பொருளாகிய பொலி [குவியல]யும், பிண்டிக்கப்பட்ட பொருளாகிய நெல்லும வேருகாமையால, அவ்விரண்டிலும ஐயுருபு வருவது சிறப்பன்றெனக.

இனி, இசசூததிரததிற்கு - உலகததில் முதற்பொருள்கள் இவை சினைப் பொருள்கள இவை எனத தனிததனி வெவ்வேறு பொருளகள இலலையாம்; சொலலுவான்குறிப்பால், முதற்பொருளே சினைப்பொருளாயும், சினைப்பொருளே முதற்பொருளாயும மாறுபட்டு வரும் கை எனபது - மனிதனை நோககச சினையாயும, விரலை நோக்க முதலாயும்; விரல் என்பது - கையைநோககச சினையாயும், நகததை நோகக முதலாயும் வருதல் காணக. பிண்டபபொரு [தொகுதிப்பொரு]ளும், அவ்வாறே தொகுததபொருளிவை தொகுககபபட்ட பொருளிவை என வெவ்வேறு பொருள்களுடையனவலல சொலலுவான் குறிப்பால், பிண்டிததபொருளே பிண்டிககப்பட்ட பொருளாயும், பிண்டிக்கப்பட்ட பொருளே பிண்டிததபொருளாயும வரும; படைகள என்பது - தொகுதியை நோக்கப் பிண்டிககபபட்ட பொருளாயும், வேல வாள் வில் முதலிய உட்பகுதிகளை நோக்கப் பிண்டப்பொருளாயும வருதல் காணக; என இவ்வாறு பொருளகொளளுதலும் ஒன்று. (௬௧)

[உருபுமயககம்.]

௬௧எ. யாத னுருபிற் கூறிற் றாயினும
பொருள்செல் மருங்கின் வேறறுமை சாரும்.

(இ - ள்.) யாதன் உருபின் கூறிற்று ஆயினும் - எந்த வேற்றுமையுருபால் (எந்த வேற்றுமைப்பொருள) சொலலப்பட்டதாயினும்,—(உருபுசென்ற வழியே பொருள சேராமல), பொருள் செல் மருங்கின் - அப்பொருள சென்ற வழியே, வேறறுமை - அவ்வுருபு, சாரும் - சேரும.

எனவே, வேற்றுமையுருபு பொருளுககு இயையாமல மாறிவந்தால், அவ்வுருபைப பொருளுககு இயைநத உருபாகத் திரிததுககொள்க. உருபு மயகக மெனினும, வேறறுமை மயக்கமெனினும ஒககும. *மயக்கம - மாறுதல்.

(உ - ம.) "இந்நகர்க்கே வாழ்கினறேம" —இஙகு நகர - எறறுககொள்ளுதற்பொருளாகாமல இடப்பொருளாய் நிற்கையால், நகாககண் வாழ்கின்றேம எனக குவ்வுருபைக கணணுருபாகத திரிததுகொளக. "ஞனவலலினமவர" எனற சூததிரததில, 'வேற்றுமைககு' 'அல்வழிககு' என்பன - வேறறுமையில, அல்வழியில எனப பொருள் படுதலும இது.

"காலத்தினுற் செயத நன்றி" —இஙகுக் காலம - கருவி கருததாப் பொருளாகாமல இடப்பொருளாய நிறகையால், காலத்தின் கண்செயத நனறி என ஆலுருபைக கணணுருபாகத திரிததுககொள்க. "குறில் வழிலள" என்ற சூததிரததில, 'அல்வழியான' எனறது - அல்வழியில் எனப்பொருள்படுதலும இது.

---

* பொருள்மயககம், ௬எ௩ - ஆறு சூததிரததிற கூறப்படும.

அழுக்காறுடையானைச் செய்யவள் தவ்வையைக் காட்டிவிடும்"— இதில் தவ்வை - செயப்படு பொருளாகாமல் வேறாகக் கொள்ளுதற்பொருளாய சிறப்பையாலதவ்வைக்குக் காட்டிவிடும் என ஐ உருபைக் குவ்வுருபாகத் திரித்துக்கொள்க. (பொறாமை யுள்ளவனை இலக்குமி மூதேவிக்குக் காட்டி விடுவள் என்பது இதன் பொருள்.)

"புலியொடு ஒத்தான்"—இதில் புலி - உடனிகழ்ச்சிப் பொருளாகாமல் செயப்படு பொருளாய சிறப்பையால, புலியைப் என ஒடு உருபை ஐ உருபாகத் திரித்துக்கொள்க

மற்றும் இப்படி வருவனவற்றை ஆராய்ந்து அறிந்துகொள்க.

இச்சூத்திரம், * தொல்காப்பியத்தினின்று எடுத்துக்கொள்ளப்பட்டது. (௬0)

[சில வேற்றுமையுருபுகள் செய்யுளில் திரிந்துவருதல்]

௩௯௯ ஐயானகுச் செய்யுட் கவ்வு மாகும
ஆகா அஃறிணைக்கு ஆனல்லாதன.

(இ - ள்.) ஐ ஆன கு - ஐயும் ஆனும் குவ்வும் ஆகிய மூன்று உருபுகளும், செய்யுட்கு - செய்யுளில், அவ்வும் ஆகும் - (சில இடத்தில்) அகரமாக வரவும் பெறும்; அஃறிணைக்கு - அஃறிணையில், ஆன் அல்லாதன ஆகா - ஆன் உருபு மாத்திரம் அகரமாக வருமே யன்றி அல்லாத ஐயும் குவ்வும் (அகரமாக) வாராவாம்; (எ - று.)—எனவே, உயர்திணையில் மூன்று உருபும் திரியு மென்றதாயிற்று. செய்யுட்கு, அஃறிணைக்கு என்பன - உருபுமயக்கம்.

'ஐ ஆன கு அவ்வாகும்' எனப் பொதுப்படக்கூறினாராயினும், ஐ உருபு அகரமாகத் திரியவும், ஆன் உருபும் கு உருபும் - அகரத்தைச் சார்ந்து நிற்கவும் பெறு மெனப் பொருள் கொள்க

(உ - ம்.) 'காவலோனக் களிறஞ்சுமமே'—காவலோனை } உயர்திணை
'புலவரான' —புலவரான்
'கடிநிலையின்றே ஆசிரியற்க' —ஆசிரியற்கு
'புள்ளினான' —புள்ளினான்—அஃறிணை.

'உம்மை எதிர்மறை யாகலின், அவ்வாறு திரிதல் சிறுபான்மை யெனக் கொள்க' என்பது பழையஉரை. (௬௧)

[எட்டுவேற்றுமைகட்கும் முடிக்குஞ்சொல்.]

௩௧௬. எல்லை இன்னும் அதுவும் பெயர்கொளும
அல்ல வினைகொளும் நான்கே ழிருமையும
புல்லும் பெரும்பாலு மென்மனார் புலவர்.

(இ - ள்.) எல்லை இன்னும் - எல்லைப்பொருளில் வருகிற ஐந்தாம் வேற்றுமையும். அதுவும் - ஆறாம் வேற்றுமையும், பெயர் - பெயரை.

* தொல்காப்பியம் சொல்லதிகாரம் - வேற்றுமைமயங்கியல் - உ௩.

கொளும் - கொண்டு முடியும; அல்ல - மற்றை எழுவாய் முதலிய வேற்றுமைகளெல்லாம, வினை - வினையை, கொளும - கொண்டு முடியும்; நான்கு ஏழ் - நான்காம் வேற்றுமையும் ஏழாம வேற்றுமையும், இருமையும் - இரண்டையும் [வினையையும வினையோடு பொருந்தும பெயரையும்], புல்லும - கொண்டு முடியும, பெரும்பாலும்—,—என்மனா - என்று சொல்வா, புலவா - அறிவுள்ளோா; (எ - று.)

அல்ல - முதல், இரண்டு, மூன்று, நான்கு, (எல்லைப்பொருளொழிந்த பொருளில் வரும்) ஐந்து, ஏழு, எட்டு ஆகிய வேற்றுமைகள்.

'பெரும்பாலும்' என்றதனால் வினைகொளற்கு உரியன சிறுபான்மை தொழிற்பெயரையும வினையாலணையும பெயரையும் கொண்டு முடிதலும, எழுவாய் வேற்றுமை வினைகொண்டு முடிதலேயன்றிச சிறுபான்மை பெயரையும வினாவையும கொண்டு முடிதலும் கொளக.

(உ - ம்.) கருவூரின் கிழக்கு / சாத்தனது கை } எல்லை இன்னும, அதுவும் - பெயர்கொண்டன.

| | |
|---|---|
| சாத்தன் வந்தான், சாத்தன் கரியன்<br>குடத்தை வனைந்தான், குடத்தை யுடையவன்.<br>வாளால வெட்டினான, வாளால் வலியவன.<br>சாத்தனுக்குக கொடுத்தான, சாத்தனுக்கு நலலவன<br>நோயின நீங்கினான், காக்கையின் கரிது.<br>அவையின்கண இருந்தான், அவையின் கண்பெரியன்.<br>கொற்றா கொள், கொற்றா வலியை. | மற்றவை - தெரிநிலையும் குறிப்புமாகிய வினைகளைக் கொண்டன. |

மணியின் கண ஒளி / பிணிக்கு மருந்து } நான்கும, ஏழும - வினையையே யன்றிப் பெயரையும கொண்டன.

இப்பெயர்கள இன் அது உருபுகள் கொண்டுமுடிந்த பெயர்கள் போலாகாமல் பிணிக்கு (ககொடுக்கும) மருந்து, மணியின்கண (இருக்கும) ஒளி என வினையைவேண்டி நிற்பதனால், வினையோடு பொருந்தும பெயர்களாயின.

சாத்தன் வருதல் / குடத்தை வனைந்தவன் } வினைகொள்வன-தொழிற் பெயரையும், வினையாலணையும பெயரையும் கொண்டன.

சாத்தன் அவன் / சாத்தன் யாவன } எழுவாய வேற்றுமை - பெயரையும், வினாவையும் கொண்டது. (௬உ)

பெயரியல் முற்றிற்று.

---

# உ. வினையியல்.

வினைச்சொல்லின் இலக்கணத்தைச் சொல்லும் இயல்.

## வினைச்சொல்.

[க. தெரிநிலைவினை]

‡ ௩உ0. செய்பவன் கருவி நிலம் செயல் காலம்
செய்பொரு ளாறுந் தருவது வினையே.

(இ - ள்.) செய்பவன் - கருத்தாவும், கருவி - கருவியும், நிலம் - இடமும், செயல் - தொழிலும், காலம் - காலமும், செய்பொருள் - செய்யப்படு பொருளும் ஆகிய, ஆறும் - அறுவகைப் பொருளையும், தருவது - காட்டுவது,—வினை - தெரிநிலை வினைச்சொல்லாம்; (எ - று.)

'வினை' எனப் பொதுப்படக் கூறினாராயினும், வருஞ் சூத்திரத் தாற் குறிப்புவினை கூறுதலால், இது தெரிநிலைவினை யெனப் பெறப் பட்டது. தெரிநிலைவினை - செயலையும் காலத்தையும் வெளிப்படை யாகக் காட்டும் வினை. அங்ஙனமன்றி அவற்றைக் குறிப்பாகக் காட்டு வது, குறிப்புவினை.

'செய்பவன்' என ஒருபாலிற் சொன்னாராயினும், 'ஒருமொழி யொழி தன்னினங் கொளற் குரித்தே' என்பதனால் ஐம்பாலுங் கொள்க.

(உ - ம்.) 'வனைந்தான்' என்றால், அதில் - குயவனாகிய கருத்தா வும், மண்ணாகிய முதற்காரணமும், தண்டம் சக்கரம் முதலிய துணைக் காரணங்களும், வனைந்த இடமும், வனைதல்தொழிலும், இறந்தகாலமும், குடம் முதலிய செய்யப்படுபொருளுந் தோன்றுதல் காண்க.

இந்த ஆறையுந் தருவது - செயப்படுபொருள் குன்றாத [உள்ள] வினை; செயப்படுபொருள் குன்றிய [இல்லாத] வினை, அச்செயப்படு பொருள் ஒழிந்த ஐந்தையுமே காட்டும்; (உ - ம்) வந்தது

முற்றுவினைகளில் பகுதியால் செயலும், விகுதியால் கருத்தாவும், இடைநிலை முதலியவற்றால் காலமும், பெயரெச்ச வினையெச்சங்களில் இம்முறையே செயலும் காலமும் வெளிப்படையாகத் தோன்றுதலால், மற்றவை கருத்தாகத் தோன்றுமென்று கொள்க (க)

[உ. குறிப்புவினை]

‡ ௩உக. பொருள்முத லாறினுந் தோற்றிமுன் னாறனுள்
வினைமுதல் மாத்திரை விளக்கல் வினைக்குறிப்பே.

(இ - ள்.) பொருள் முதல் ஆறினும் - பொருள் இடம் காலம் சினை குணம் தொழில் என்னும் ஆறையும் அடியாகக்கொண்டு, தோற்றி - பிறந்து, முன் ஆறனுள் - முன்சூத்திரத்திற் சொல்லப்பட்ட (செய்ப வன் கருவி நிலம் செயல் காலம் செய்பொருள் என்ற) ஆறனுள், வினை முதல் மாத்திரை - கருத்தா ஒன்றையே, விளக்கல்-காட்டுதல்,—வினைக் குறிப்பு - குறிப்புவினையின் இலக்கணமாம்; (எ - று.)

(உதாரணம்.)

| | |
|---|---|
| குழையன், பொன்னன் —பொருள். | காலன், கணணன் —சினை. |
| அகததினன், ஊரன் —இடம் | கரியன், நல்லன் —குணம். |
| ஆதிரையான், ஓணததான் —காலம். | நடையன, சொல்லன்—தொழில். |

இவற்றில, விகுதிபால செயபவன் விளஙகிற்று. மறறவை குறிப பாக உணடெனக கொள்க. (உ)

[வினைச்சொற்களின் பகுப்பு]

ரூஉஉ. அவைதாம,
முற்றும் பெயர்வினை யெச்சமு மாகி
ஒன்றற குரியவும பொதுவு மாகும.

(இ - ள.) அவை தாம - (முன் இரணடு சூததிரஙகளாலும தெரி நிலை குறிபபு எனற) அவ்வினைசசொற்கள,—முற்றும - வினைமுற்றும், பெயா வினை எசசமும - பெயரெசசமும வினையெசசமும், ஆகி - என்று மூன்று வகையாகி, ஒன்றற்கு உரியவும - (திணை பால் இடஙகளுள) ஒவ்வொன்றற்குச சிறபபாக வருவனவும, பொதுவும - (பலவறறிறகுப்) பொதுவாக நிற்பனவும, ஆகும—; (எ - று.)

இவற்றிற்கு உதாரணம், பின வருஞ் சிறப்புச சூததிரஙகளிற காணக.

இனி, பிறவழிகளால ஒன்றற்கு உரியவும பொதுவுமாக நிற்பனவும் சில உணடென்று கொள்க

(உ - ம்.) தனவினைக்கும பிறவினைககும பொதுவினை·—வெளுத் தான், தேற்றுதவர் இவை - தான வெளுததான், அறியாதவா என்று பொருள் படுமபோது, தனவினை; ஒன்றை வெளுக்கசசெயதான், அறி வியாதவா என்று பொருளபடுமபோது, பிறவினை. (இவையே, செயப படுபொருள் குனறியவினைககும செயப்படுபொருள் குன்றாவினைககும பொதுவினைககும உதாரணமாம்.)

உடன்பாட்டுககும எதிரமறைககும் பொதுவினை.—சாவான், செய் யாய். இவை - இறப்பான், செய் என்று பொருளபடுமபோது, உடன் பாட்டுவினை; இறவான, செய்யமாட்டாய என்று பொருள்படும்போது, எதிரமறை வினை. உடன்பாட்டுவினை யெனினும, விதிவினை யெனினும ஒக்கும். எதிரமறைவினையெனினும், மறைவினையெனினும் ஒககும.

செய்வினைககும செயப்பாட்டுவினைககும் பொதுவினை:—கோன்ற யானை, விழுங்கிய மீன் இவை - கொல்லுதலைச செய்த, விழுஙகுதலைச செய்த எனப பொருளபடும்போது, செயவினை; கொல்லப்பட்ட, விழுங கப்பட்ட எனப பொருளபடும்போது, செயப்பாட்டுவினை.

இன்னும் பலவகையால் வரும் பொதுவினை·—

உணடு—(க) தன்மை யொருமை வினைமுற்று [உணடேன்], (உ) இறநதகாலவினையெசசம [புசிததது], (ங) குறிப்பு வினைமுற்று [உளது.]

ஓதுவான்—(க) தொழிற்பெயர் [படித்தல்], (உ) எதிர்காலவினை முற்று [படிப்பான்], (௩) எதிர்காலவினையெச்சம் [படிக்க.]

தழைப்ப—(க) பலர்பால் வினைமுற்று [தழைப்பர்], (உ) பலவின்பால் வினைமுற்று [தழைப்பன], (௩) செயவெனெச்சம் [தழைக்க.]

தேடிய—(க) இறந்தகாலவினைமுற்று [அவைதேடின], (உ) வியங்கோள் வினைமுற்று [தேடுக], (௩) இறந்தகாலப் பெயரெச்சம் [தேடின சாத்தன்], (௪) எதிர்காலவினையெச்சம் [தேடுதற்கு]. பிறவும் இவ்வாறே காண்க. (௩)

## க. வினைமுற்று.

### [வினைமுற்றின் இலக்கணம்]

† ௩உ௩. பொதுவியல் பாறையுந் தோற்றிப் பொருட்பெயர் முதலறு பெயரல தேற்பில முற்றே.

(இ - ள்.) பொது இயல்பு ஆறையும் - (பலவகை வினைகளுக்கும்) பொதுவாகிய (செய்பவன் முதலிய) ஆறையும், தோற்றி - தோன்றச் செய்து, பொருள்பெயர் முதல - பொருள் முதலிய, அறு பெயர் அலது - ஆறுவகைப்பெயரல்லாத மற்றொன்றையும், ஏற்பில - ஏற்காதன,— முற்று - (தெரிநிலையும் குறிப்புமாகிய) வினைமுற்றுக்களாம்; (எ - று.)

எனவே, அவ்வினைமுற்றுக்கள் அந்த ஆறு பெயர்களையும் கொண்டு முடியுஞ் சொல்லாகப்பெற்று வேறொன்றையும் வேண்டாது வரும் என்றதாயிற்று.

எச்சவினைகள் போலக் குறைந்து நில்லாமல் முடிந்து நிற்றலால், 'முற்று' எனப்பட்டது.

| (உ-ம்) தெரிநிலை. | குறிப்பு. | | அறுபெயர். |
|---|---|---|---|
| செய்தான் மகன் | பெரியன் மகன் | —மகன் | —பொருள். |
| குளிர்ந்தது நிலம் | வலியது நிலம் | —நிலம் | —இடம். |
| வந்தது கார் | கரியது கார் | —கார் | —காலம். |
| குவிந்தது கை | சிறியது கை | —கை | —சினை. |
| வந்தது நன்மை | உள்ளது நன்மை | —நன்மை | —குணம். |
| ஒழிந்தது பிறப்பு | * கொடியது பிறப்பு | —பிறப்பு | —தொழில். |

மற்றைத் திணை பால் இடம் காலங்களதோறும் இவ்வாறே ஒட்டுக. (௪)

### [தெரிநிலை வினைமுற்றின் பாகுபாடு.]

௩உ௪. - ஒருவன் முதலைந் தையுமுப் படர்க்கை யிடத்தும்
ஒருமை பன்மையைத் தன்மைமுன் னிலையினும்
§ முக்கா லத்தினு முரண முறையே
மூவைந் திருமூன் றுறழ முற்று
வினைப்பத மொன்றே மூவொன் பானும்.

* இத்தன்மை, பெயரியல் அ - ஆஞ்சூத்திரத்திலும் கூறப்பட்டது.
§ 'முக்காலத்தொடு' என்றும் பிரதிபேதம்.

(இ - ள்.) ஒருவன முதல ஐந்தையும - ஆண்பால் முதலிய ஐந்து பால் வினைமுற்றுக்களையும், படர்க்கை இடத்தும - படர்க்கையிடத்திலும், ஒருமை பன்மையை - ஒருமை பன்மை வினைமுற்றுக்களை, தன்மை முன்னிலையிலும - தன்மையிடத்திலும முன்னிலையிடத்திலும (வைத்து), முக்காலத்திலும - மூன்று காலங்களாலும, முரண - பெருக்கிக்கணக்கிட, முறையே - (சொல்லப்பட்ட) முறைப்படி, மூ ஐந்து - (படர்க்கைவினைமுற்றுப) பதினைந்தும, இரு மூன்று - (தன்மை வினைமுற்று) ஆறும், ஆறு - (முன்னிலை வினைமுற்று) ஆறும, ஆய - ஆகி,—முற்றுவினை பதம ஒன்றே - தெரிநிலை வினைமுற்றுச சொல் ஒன்று தானே, மூ ஒன்பான ஆம - இருபத்தேழாகும்: (எ - று)

| | இறந்தகாலம. | நிகழ்காலம் | எதிர்காலம | |
|---|---|---|---|---|
| ஆண்பால. | நடந்தான | நடக்கின்றான | நடப்பான. | படர்க்கை கரு |
| பெண்பால். | நடந்தாள | நடக்கின்றாள் | நடப்பாள | |
| பலர்பால. | நடந்தார | நடக்கின்றார | நடப்பார. | |
| ஒன்றன்பால. | நடந்தது | நடக்கின்றது | நடப்பது. | |
| பலவின்பால. | நடந்தன | நடக்கின்றன | நடப்பன. | |
| ஒருமை. | நடந்தேன் | நடக்கின்றேன | நடப்பேன. | தன்மை-சு |
| பன்மை. | நடந்தேம | நடக்கின்றேம | நடப்பேம. | |
| ஒருமை. | நடந்தாய | நடக்கின்றாய | நடப்பாய. | முன்னிலை சு. |
| பன்மை. | நடந்தீர | நடக்கின்றீர | நடப்பீர். | |

ஆகத் தெரிநிலைவினைமுற்று இருபத்தேழாம எனவே, குறிப்புவினைமுற்று, காலம் விளங்காததனால ஒன்பதாம் என்றதாயிற்று. (ரு)

### [க. ஆண்பாற படர்க்கை வினைமுற்று]

‡ ஙஉரு. அன ஆ னிறுமொழி ஆண்பாற் படர்க்கை.

(இ - ள்) அன ஆன இறு மொழி - அன் ஆன் என்கிற இரண்டு விகுதியையும இறுதியிலுடைய மொழிகள்,—ஆண்பால படர்க்கை - உயர்திணை யாண்பாற படர்க்கைத் தெரிநிலைமுற்றும குறிப்புமுற்றும் ஆம்; (எ - று.)

| (உ-ம்) | இறப்பு. | நிகழ்வு. | எதிர்வு | குறிப்பு. | |
|---|---|---|---|---|---|
| அன். | நடந்தனன் | நடக்கின்றனன் | நடப்பன் | குழையன் | அவன். |
| ஆன். | நடந்தான | நடக்கின்றான் | நடப்பான | குழையான் | (சு) |

### [உ. பெண்பாற படர்க்கை வினைமுற்று]

‡ ஙஉசு. அள ஆ ளிறுமொழி பெண்பாற படர்க்கை.

(இ - ள்.) அள ஆள இறுமொழி - அள் ஆள் என்கிற இரண்டு விகுதியையும இறுதியிலுடைய மொழிகள்,—பெண்பால படர்க்கை - உயர்திணைப்பெண்பாற படர்க்கைத் தெரிநிலை முற்றும் குறிப்புமுற்றும ஆம்; (எ - று.)

| (உ - ம்.) | இறப்பு | நிகழ்வு. | எதிர்வு. | குறிப்பு. | |
|---|---|---|---|---|---|
| அள். | நடந்தனள் | நடக்கின்றனள் | நடப்பள் | குழையள | அவள். |
| ஆள். | நடந்தாள | நடக்கின்றாள் | நடப்பாள் | குழையாள் | (எ) |

[௩. பலர்பாற் படர்க்கை வினைமுற்று.]

† ௩௨௭. அர் ஆர் பவ்வூ ரகர மாரீற்ற
பல்லோர் படர்க்கை மார்வினை யொடுமுடிமே.

(இ - ள்.) அர் ஆர் ப ஊர் அகரம் மார் ஈற்ற - அர் ஆர் ப மார் என்கிற நான்கு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள்,—பல்லோர் படர்க்கை - உயர்திணைப் பலர்பாற் படர்க்கைத் தெரிநிலைமுற்றும் குறிப்புமுற்றும் ஆம்;—மார் (இவற்றுள்ளே) 'மார்' ஈற்று வினைமுற்று,—வினையொடு முடிமே - (பொதுவிதியாற் பெயருடன் முடிவதேயன்றி) வினையுடனும் முடியும்; (எ - று.)

மார், ப விகுதிகள் - தாமே காலங்காட்டுதலால், குறிப்புவினைக்கு வாரா.

| (உ - ம்) | இறப்பு. | நிகழ்வு. | எதிர்வு. | குறிப்பு. | |
|---|---|---|---|---|---|
| அர். | நடந்தனர் | நடக்கின்றனர் | நடப்பர் | குழையர் | அவர். |
| ஆர். | நடந்தார் | நடக்கின்றார் | நடப்பார் | குழையார் | |
| ப. | *நடப்ப | ———— | *நடப்ப | ——— | |
| மார். | ———— | ———— | கொண்மார் | ——— | |

'கொண்மார் [கொள்வார்] வந்தார்' என மார் - வினையொடு முடிந்தது.

இனி, 'மார் வினையொடு முடிமே' என்பதற்கு - 'மார்' என்ற விகுதி வினைப்பகுதிக்கு மாத்திரமே வருமென்றும் மற்றைப் பெயர் இடை உரிப் பகுதிகளுக்கு வராதென்றும் உரைப்பாரும் உளர்: அது பொருத்தமுடையதே. 'மார்' என்ற விகுதி கொண்மார் செய்மார் என வினைப்பகுதியோடு மாத்திரம் வருதலும், மற்றைவிகுதிகள் குழையர் குழையார் என்ப சால்ப எனப் பெயர் இடை உரிப்பகுதிகளோடும் வருதல்போல மார்விகுதி வாராமையுங் காண்க. குருமார் தேவிமார் என மார்விகுதி பெயரோடு கூடிவருமிடத்து வினைமுற்று விகுதி யன்றிப் பெயர்விகுதியாதல் உணர்க. (அ)

[௪. ஒன்றன்பாற் படர்க்கை வினைமுற்று.]

‡ ௩௨௮. து று டுக் குற்றிய லுகர வீற்ற
ஒன்றன் படர்க்கை டுக் குறிப்பி னாகும்.

(இ - ள்.) து று டு குற்றியலுகரம் ஈற்ற - து று டு என்கிற குற்றியலுகரவீற்று மூன்று விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள்,—ஒன்றன் படர்க்கை - அஃறிணை ஒன்றன்பாற் படர்க்கைத் தெரிநிலைமுற்றும் குறிப்புமுற்றும் ஆம்: டு - (இவற்றுள்) டு என்கிற விகுதி,—குறிப்பின் ஆகும் - குறிப்புவினைமுற்றில் வரும் [தெரிநிலை வினைமுற்றிற்கு வாராது]; (எ - று.)

'று' விகுதி - தெரிநிலையில் நிகழ்கால எதிர்காலங்களுக்கு வாராது.

---

* நடந்தார், நடப்பார் என்று பொருள். நடப்பன என்ற பொருளில் - அ என்ற பலவின்பால் விகுதி பகரவிடைநிலை பெற்றதாம்.

| (உ-ம்.) | இறப்பு. | நிகழ்வு. | எதிர்வு. | குறிப்பு. | |
|---|---|---|---|---|---|
| து | நடந்தது | நடக்கின்றது | நடப்பது | குழையது | அது. |
| று | ஆயிற்று | ——— | ——— | குழையிற்று | |
| டு | ——— | ——— | ——— | பொருட்டு | |

(பொருட்டு - பொருளையுடையது.) (௯)

[௫. பலவின்பாற் படர்க்கை வினைமுற்று.]

† ௩௨௯. அ ஆ ஈற்ற பலவின் படர்க்கை
ஆவே எதிர்மறைக் கண்ணது ஆகும்.

(இ-ள்) அ ஆ ஈற்ற - அ ஆ என்கிற விகுதிகளை இறுதியிலுடைய மொழிகள்,—பலவின் படர்க்கை - அஃறிணைப் பலவின்பாற் படர்க்கைத் தெரிநிலை முற்றும் குறிப்புமுற்றும் ஆம்; ஆ - (இவற்றுள்) ஆ என்கிற விகுதி,—எதிர்மறைக்கண்ணது ஆகும் - எதிர்மறையில் மாத்திரமே வரும் [உடன்பாட்டில் வராது]; (எ-று.)—ஏகாரம், பிரித்துக் கூட்டப்பட்டது.

| (உ-ம்.) | இறப்பு. | நிகழ்வு. | எதிர்வு. | குறிப்பு. |
|---|---|---|---|---|
| அ | நடந்தன | நடக்கின்றன | நடப்பன | குழையன—அவை. |
| ஆ | நடவா—(ஆகாரவிகுதி, எதிர்மறையில் வந்தது.) | | | |

(௧௦)

[இருதிணைப் பொதுவினை.]

‡ ௩௩௦. தன்மை முன்னிலை வியங்கோள் வேறுஇல்லை
உண்டு ஈரெச்சம் இருதிணைப் பொதுவினை.

(இ-ள்.) தன்மை - தன்மை வினைமுற்றுக்களும், முன்னிலை - முன்னிலை வினைமுற்றுக்களும், வியங்கோள் - வியங்கோள் வினைமுற்றுக்களும், வேறு இல்லை உண்டு - இம்மூன்று குறிப்புவினைமுற்றுக்களும், ஈர் எச்சம் - பெயரெச்சங்களும் வினையெச்சங்களும்,—இருதிணை பொது வினை - இரண்டு திணைகளுக்கும் பொதுவாகிய வினைகளாம்; (எ-று.)—இல்லை - இல்லை; ஐகாரம்.

செய்யுமென்னும் முற்று, பெயரெச்சவாய்பாடு கொண்டிருந்த லால், அதுவும் இருதிணைப்பொது வினையாதலை இங்கேயே அமைத்துக் கொள்க. (௧௧)

[தன்மையொருமை வினைமுற்று]

‡ ௩௩௧. கு டு து று என்னுங் குன்றிய லுகரமோடு
அல் அன் என் ஏன் ஆகும் ஈற்ற
இருதிணை முக்கூற் றொருமைத் தன்மை.

(இ-ள்.) கு டு து று என்னும் குன்றியலுகரமோடு - கு டு து று என்கிற நான்கு விகுதிகளையும் இறுதியிலுடைய குற்றியலுகரமாகிய மொழிகளும், அல் அன் என் ஏன் ஆகும் ஈற்ற - அல் அன் என் ஏன் என்கிற நான்கு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகளும்,—இரு திணை முக்கூறு ஒருமை தன்மை - உயர்திணை ஆண்பால் பெண்பால் அஃறிணை ஒன்றன்பால் என்னும் மூன்றுக்கும் பொதுவாகிய தன்மையொருமைத் தெரிநிலைமுற்றும் குறிப்புமுற்றும் ஆம்; (எ-று.)

கு டு து று என்கிற நான்கும் - தாமே காலங்காட்டுதலால, குறிப்பு வினைக்கு வாரா. அல் விகுதி, இடைநிலையோடு சேராது தெரிநிலையில எதிர்காலத்திலே மாத்திரம் வரும்.

| (உ - ம) | இறப்பு. | நிகழ்வு. | எதிர்வு. | குறிப்பு. | |
|---|---|---|---|---|---|
| கு | — | — | உண்கு | — | யான். |
| டு. | உண்டு | — | — | — | |
| து | வந்து | — | வருது | — | |
| று. | சென்று | — | சேறு | — | |
| அல். | — | — | செய்வல் | — | |
| அன் | உண்டனன் | உண்கின்றனன் | உண்பன் | குழையன் | |
| என் | உண்டெனன் | உண்கின்றெனன் | உண்பென் | குழையென் | |
| ஏன். | உண்டேன் | உண்கின்றேன் | உண்பேன் | குழையேன் | |

இவை ஒரு புருஷனுக்கும், ஒரு பெண்ணுக்கும், ஒரு விலங்குக்கும் தனித்தனி உரியதாதல் காண்க. முன்னிலை யொருமைமுற்றும் இத் தன்மையதே. (௧௨)

[தன்மைப் பன்மை வினைமுற்று]

௩௩௨. அம் ஆம் எனபன முன்னிலை யாரையும்
எம ஏம ஓம இவை படர்க்கை யாரையும்
உம ஊர க ட த ற இருபா லாரையும்
தன்னொடு படுக்குந் தன்மைப பன்மை.

(இ - ள்.) அம் ஆம் என்பன - அம ஆம் என்கிற இரண்டு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள், முன்னிலையாரையும - முன்னிலை யிடத்தாரையும; எம ஏம் ஓம் இவை - எம ஏம ஓம எனகிற மூனறு விகுதிகளையும இறுதியிலுடைய மொழிகள், படர்க்கையாரையும - படர்க்கை யிடத்தாரையும; உம ஊர க ட த ற - கும டும தும றும எனகிற நான்கு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள, இருபாலாரையும - (முன்னிலை படர்க்கை என்னும) இரண்டிடத்தாரகளையும, தன்னொடு படுக்கும் - தன்னுடன் கூட்டுகின்ற, தனமை பனமை - தன்மைப்பனமை வினைமுற்றும் குறிப்புமுற்றும ஆம; (எ - று)—தன்மைபபனமை என்பது - தன்னொடு சார்ந்தாரையும கூடடியலலது தனித்து இயலாமையால், இவ்வாறு கூறினார்; இவற்றை உளப்பாட்டுத் தன்மைப்பன்மை யென்பர.

| (உ - ம்.) | இறப்பு. | நிகழ்வு. | எதிர்வு. | குறிப்பு. | |
|---|---|---|---|---|---|
| அம். | உண்டனம | உண்கினறனம | உண்பம | குழையம | யாம் [யானும் நீயும்.] |
| ஆம். | உண்டாம | உண்கின்றாம | உண்பாம | குழையாம | |
| எம். | உண்டெனம | உண்கின்றெனம | உண்பெம | குழையெம | யாம [யானும், அவனும்] |
| ஏம். | உண்டேம | உண்கினறேம | உண்பேம | குழையேம | |
| ஓம். | உண்டோம | உண்கின்றோம | உண்போம | குழையோம் | |
| கும். | — | — | உண்கும் | — | யாம் [யானும், நீயும், அவனும்.] |
| டும். | உண்டும் | — | — | — | |
| தும். | வந்தும | — | வருதும | — | |
| றும். | சென்றும் | — | சேறும் | — | |

இவை சிறுபான்மை இமமுறையின்றி மாறிவருதலும் உண்டு. இயல்பு பற்றிய தனித்தன்மைப பன்மையும, உயாவுததன்மைப்பன்மையும் இவ் விகுதிவரையறையை வேணடாமல ஏற்றபடி பெற்றுவருமென்று அறிக. ()

[வினையுடனும முடியும் தன்மைவினை முற்றுக்கள்.]

ிிி. செயகெ னொருமையும செயகுமென் பன்மையும்
வினையொடு முடியினும் விளமபிய முற்றே.

(இ - ள.) செய்குஎன ஒருமையும - செயகு என்கிற வாய்பாட்டுத தன்மையொருமை முற்றும, செயகும என் பன்மையும - செய்கும என்கிற வாய்பாடடுத தனமைபபனமை முறறும், வினையொடு முடியினும - (பெயருடன் முடிதலே யல்லாமல் வினைசொணடும முடியும) முடிநதாலும, விளம்பிய - முனசொல்லப்படட, முறறே முறறுககளேயாம் [வினையெசசமெனப்படா.]

(உ - ம.) உணகு வநதேன் ; உணகும வநதோம. (கச)

[உளபபாட்டு முன்னிலைப்பன்மை வினைமுற்று]

† ிிச. முன்னிலை கூடிய படாககையும முன்னிலை.

(இ - ள) (தனமையோடு கூடிய முனனிலை படாககைகள் தன்மை யானறபோல),—முன்னிலை - முனனிலையிடததுச சொல்லோடு, கூடிய - சோந்த, படாககையும் - படாகக்கையிடததுசசொல்லும்,—முன்னிலை - முன்னிலையாம் ; (எ - று)

(உ - ம.) உணடனிா, உணமின், குழையீா—நீா [நீயும அவனும.]

இசசூததிரம, முன்னிலைப்பன்மைவினைமுற்றைக கூறுமிடததுக கூறு மல் நின்றினமுடித்தல் தன்னினமுடித்தல் எனகிற உததியால் இஙகே கூறப் படடது. (கரு)

[முன்னிலை யொருமை வினைமுற்று]

‡ ிிரு. ஐ ஆய இகர வீற்ற மூனறும்
ஏவலின வருஉ மெல்லா வீறறவும
முபபா லொருமை முன்னிலை மொழியே.

(இ - ள் ) ஐ ஆய இகரம ஈறற மூன்றும - ஐ ஆய இ என்கிற மூன்று விகுதிகளை இறுதியிலுடைய மொழிகளும, ஏவலின வருஉம் எல்லா ஈற்ற வும (விகுதிபெருமலும பெறறும) ஏவலில்வருகிற இருபததுமூன்று ஈற்று மொழிகளும,—முப்பால்-(ஆணபால் பெணபால ஒன்றன்பால் என்னும) மூன்றுககும பொதுவாகிய, ஒருமை முன்னிலை மொழி - முன்னிலை யொரு மைத தெரிநிலைமுறறும குறிபபுமுறறும ஆம் ; (எ - று.)

இகரவிகுதி, எதிர்காலததை இடைநிலையில்லாமல் தானே காட்டும்

ஏவல்வினைமுற்று, தெரிநிலையில மாததிரமே யல்லாமல் குறிப்பில் இல்லாமையால, உமமை கொடுத்துப பிரிததாா.

எல்லா ஈறு - "நட வா மடி சீ" என்னுஞ் சூத்திரததிற் கூறியன.

| (உ - ம்.) | இறப்பு | நிகழ்வு. | எதிர்வு | குறிப்பு. | |
|---|---|---|---|---|---|
| ஐ | உண்டனை | உண்கின்றனை | உண்பை | குழையை | } நீ. |
| ஆய் | உண்டாய் | உண்கின்றாய் | உண்பாய் | குழையாய் | |
| இ. | உண்டி | உண்ணுகின்றி | சேறி | வில்லி | |

ஆய், இ, அல் ஏல, ஆல எனகிற விகுதிகளை இறுதியிலுடையவினைச் சொற்களும், 'ஆய' விகுதி இல்லாமல் பகுதிமாத்திரமாய் நிற்கிற வினைச் சொற்களும், ஏவலொருமை முற்றுககளாம்; இவ்விகுதிகளுள், அல், ஏல, ஆல் எனபவை - எதிர்மறையில் மாத்திரமே வரும்

(உ - ம்.) உண்ணாய் உண்ணுதி உண
உண்ணல உண்ணேல் மருல் } நீ

எதிர்மறை ஏவலொருமை முற்றுககள் - எதிர்மறை ஆகார இடைநிலையின்முன் தகரஎழுத்துப்பேற்றுடன ஏ இ எனகிற விகுதிகளுள் ஒன்றைப்பெற்றும் வரும்; (உ-ம்.) உண்ணாதே, உண்ணாதி (கசு)

[சில ஏவல்வினைமுற்றுககுச் சிறப்புவிதி.]

௩௩௬. முன்னிலை முன்னர் ஈயும ஏயும
அந்நிலை மரபின மெய்யூர்ந்து வருமே.

(இ - ள்) முன்னிலை முன்னர் - முன்னிலை யேவலொருமை முற்றிற்குமுன, ஈயும ஏயும - ஈகாரமும ஏகாரமும், அந் நிலை மரபின மெய ஊர்ந்து - அவ்விடத்து நிற்றற்கு உரிய தன்மையையுடைய (யாதாயினும ஒரு) மெய்யின்மேல் ஏறி, வரும—;(எ - று.)

(உ - ம்.) செல் - சென்றீ எனவும், நில - நின்மே எனவும வரும

இங்கே செல், நில என்பன - மயக்கவிதியில்லாததனால, ஈறுதிரிந்தன. இந்த ஈகார ஏகாரங்கள், விகுதிகளல்ல; 'ஆய' விகுதியிலலாத ஏவலில் வருகின்ற முன்னிலையசைகளாம. றகரமெய்யும், மகரமெய்யும எழுத்துப்பேறு. *

[முன்னிலைப் பன்மை வினைமுற்று]

‡ ௩௩௭. இர் ஈர் ஈற்ற இரண்டு மிருதிணைப
பன்மை முன்னிலை மின் அவற்றேவல.

(இ - ள்.) இர் ஈர் ஈற்ற இரண்டு - இர் ஈர் எனகிற இரண்டுவிகுதிகளையும இறுதியிலுடைய மொழிகள்,—இரு திணை - இருதிணைகளுககும பொதுவாகிய, பன்மை முன்னிலை - முன்னிலைப்பன்மைத் தெரிநிலைமுற்றும குறிப்புமுற்றும் ஆம்; மின்-' மின் ' விகுதியை இறுதியிலுடைய மொழிகள்,—அவற்று ஏவல் - முன்னிலை ஏவற் பன்மை முற்றும; (எ - று )

ஏவற்பன்மைக்கு ஈர் உம விகுதிகளும், புதியனபுகுதலால வரும.

| (உ - ம்.) | இறப்பு. | நிகழ்வு | எதிர்வு. | குறிப்பு. | |
|---|---|---|---|---|---|
| இர். | உண்டனிர் | உண்கின்றனிர் | உண்பிர் | குழையிர் | } நீர் |
| ஈர். | உண்டீர் | உண்கின்றீர் | உண்பீர் | குழையீர் | |

உண்மின், உண்ணீர், உண்ணும என ஏவற்பன்மைவினைமுற்றுககள் வந்தன.

---

* 'இது புணர்ச்சிவிதியன்மையின், ஈண்டுவைத்தாரெனக' என்பது, பழைய உரை.

[வியங்கோள் வினைமுற்று.]

‡ ௩௩௨. கயவொடு ரவ்வொற் றீற்ற வியங்கோள்
இயலு மிடம்பா லெங்கு மென்ப.

(இ - ள்) க ய ஒடு - க ய என்கிற இரண்டு உயிர்மெய்களுடன், ர ஒற்று - ரகரமெய்யையும், ஈற்ற-இறுதியிலுடையமொழிகள்,—வியங்கோள்-வியங்கோள் வினைமுற்றுக்களாம்; (அவை), இடம் பால் எங்கும் - மூன்றிடங்களிலும் ஐம்பால்களிலும், இயலும் - செல்லும், என்ப - என்று சொல்வர், (புலவர்); (எ - று)—இது, எதிர்காலத்துக்கு மாத்திரம் வரும்.

'ரவ்வொற்று' என்றதனால், முன்னைய இரண்டும் உயிர்மெய்யென்பது பெறப்படும். 'கயவொடு' என உயிர்மெய்களை 'ஒடு' என்னும் இடைச்சொற் கொடுத்துப்பிரித்ததனால், ரகரமெய் அவைபோலத் தனித்து நில்லாமல்யகரத் தோடுகூடி நிற்கப்பெறுமெனக்கொள்க. க ய இரண்டனுள் யகாரத்தைப்பின்னே வைத்தது, அது தனித்துவாராமல் இகரச்சாரியை பெற்றே வருதலால்.

(உ - ம்) வாழ்க, வாழிய, வாழியர் } யான், யாம்; நீ, நீர்; அவன்,
உண்க, உண்ணிய, நிலீயர் } அவள், அவர், அது, அவை.

உரையிற்கோடலால் - ஓங்க, எழூஉதருள் என 'அ' என்பதும், ஒரால் [ஒருவுக] என 'ஆல' என்பதும்; 'மாசில ளுதல்' [ஆகுக] என 'தல்' என்பதும்; "அஞ்சாமை [அஞ்சற்க] அஞ்சுவது" என 'மை' என்பதும்; "மகக்ட் பதடியெனல்" [எனக்] என உடன்பாட்டிலும், "மகனெனல்" [என்னற்க] என எதிர்மறையிலும் 'அல்' என்பதும் வியங்கோள் வினைமுற்று விகுதிகளாய் வருமென்க. 'காட்டி - இகரவீற்றுவியங்கோள்' என்பதும், 'வேண்டும் என்பது - உம் ஈற்றால் வந்ததோர் ஏவல்கண்ணிய வியங்கோள்' என்பதும் நச்சினார்க்கினியர் கொள்கை.

வியங்கோள் - வெல்க, சிறக்க என வாழ்த்துதற் பொருளிலும்; வருக, உண்க என விதித்தற் பொருளிலும்; அருளுக, ஏக என வேண்டிக்கொள்ளுதற் பொருளிலும்; கெடுக, அழிக என வைதற்பொருளிலும் வருமென்க. மற்றைப் பொருள்களையும் இவற்றில் அடக்கிக்கொள்க.

வியங்கோள் - காரணப்பெயர்; ஏவுதலைக் கொள்வதென்று பொருள்; வியம் - ஏவல்; இப்பொருளதாதலை 'வியவர்' என்பதிலும் காண்க. *

ஏவலுக்கும் வியங்கோளுக்கும் வேறுபாடு—(க) ஏவல் - கட்டளைப் பொருளில் மாத்திரமே வரும்; வியங்கோள் - வாழ்த்துதல் முதலிய பல பொருள்களில் வரும். (உ) ஏவல் - முன்னிலையில் மாத்திரமே வரும்; வியங்கோள் - ஐம்பால் மூவிடங்களிலும் வரும். (௩) ஏவலில் ஒருமை பன்மை என்ற பகுப்பு உண்டு; வியங்கோளில் அப்பகுப்பு இல்லை.

---

* 'வியவர் - ஏவல்செய்வார்; வியங்கோள் போல' என்றதும், 'வியம் - ஏவலாதலின், போகின்மேற்று' என்றதும் - சீவகசிந்தாமணி - நச்சினார்க்கினியருரை.

வியங்கோளும் ஒருவகை ஏவற்பொருள்பற்றியதே யாயினும், முன்னிலையில் மாத்திரமே வருவதை ஏவலென்றும், ஐம்பால் மூவிடங்களிலும் வருவதை வியங்கோளென்றும் பிரித்துக் கூறுவது, தொன்றுதொட்டு வரும் முறைமை யென்க. 'வியங்கோள் மூவிடத்து வருதலின், ஏவலுள் அடங்காதென்க' என்பது, பழையஉரை. (௧௧)

[ஐம்பால் மூவிடத்துக்கும் பொதுவாகிய குறிப்பு வினைமுற்று]

‡ ௩௩௯. வேறில்லை யுண்டைம் பான்மூ விடத்தன.

(இ - ள்.) வேறு இல்லை உண்டு - இம்மூன்று குறிப்புவினைமுற்றுக்களும், ஐம் பால் மூ இடத்தன - ஐம்பால்களுக்கும் மூன்றிடங்களுக்கும் உரியன.

(உ - ம்.) வேறு, இல்லை, உண்டு. } யான், யாம்; நீ, நீர்; அவன், அவள், அவர், அது, அவை (௨௦)

## ௨. பெயரெச்சம்.

[பெயரெச்சத்தின் இலக்கணம்]

‡ ௩௪௦. செய்த செய்கின்ற செய்யுமென் பாட்டில
காலமுஞ் செயலுந் தோன்றிப் பாலொடு
செய்வ தாதி அறுபொருட் பெயரும்
எஞ்ச நிற்பது பெயரெச் சம்மே.

(இ - ள்.) செய்த செய்கின்ற செய்யும் என் பாட்டில் - செய்த செய்கின்ற செய்யும் என்று சொல்லப்படுகின்ற மூன்றுவகை வாய்பாட்டுச்சொற்களிலே, காலமும் - (முறையே இறப்பு நிகழ்வு எதிர்வு என்கிற மூன்று) காலங்களும், செயலும் - தொழிலும், தோன்றி - தோன்றப்பெற்று,—பாலொடு - பாலும், செய்வது ஆதி அறு பொருள் பெயரும் - செய்பவன் கருவி நிலம் செயல் காலம் செயப்படுபொருள் என்கிற அறுவகைப் பொருட்பெயர்களும், எஞ்சநிற்பது - ஒழிய நிற்பன,—பெயரெச்சம் - தெரிநிலைப்பெயரெச்சமும் குறிப்புப்பெயரெச்சமும் ஆம்; (எ - று)—நிற்பது - சாதியொருமை.

பெயரெச்சம் - பெயரைக் கொண்டு முடிவதாகிய குறைந்து நிற்குஞ் சொல். எஞ்சுவது, எச்சம்.

பால் எஞ்சி நிற்றல் - கொண்டுமுடியுஞ்சொல்லின் பாலன்றித் தனக்கென்று ஒருபா லில்லாமை. அறுபொருட்பெயர் எஞ்சி நிற்றல் - ஆறுவகைப் பொருட்பெயருள் ஒன்று கொண்டுமுடியுஞ் சொல்லாக நிற்கப் பெறுதல். மேல் வினையெச்சசூத்திரத்தில், 'பால் வினை யொழிய நிற்பது' என்பதற்கும் இவ்வாறு கொள்க.

ஏற்புழிக்கோடலால்-இச்சூத்திரத்தில் 'தோன்றி' என்பது வரையிலும் தெரிநிலைக்கும், மற்றையது தெரிநிலை குறிப்பு இரண்டுக்கும் கொள்க.

(உ-ம்.) இறப்பு, உண்ட } பொன்னன—செய்பவன். } ஊண—செயல.
நிகழ்வு, உண்கிற } கலம் —கருவி. } பகல்-காலம். [ருள்.
எதிர்வு, உண்ணும் } வீடு —நிலம். } சோறு - செய்பொ

குறிப்பு - உள்ள, பெரிய, புதிய, இல்லைய, முகத்த—வேல.

தெரிநிலைப்பெயரெச்சம் காலமும் செயலும் தோன்றநிற்றலும், இருவகைப் பெயரெச்சமும் பாலும் கொண்டுமுடியும்பெயரும் குறையநிற்றலும் காண்க.

உண்ணாத, செய்யாத-எதிர்மறைத்தெரிநிலை பெயரெச்சம். இல்லாத, அல்லாத - எதிர்மறைக் குறிப்புப்பெயரெச்சம் (உண்ணாத, செய்யாத என்பவை காலங்காட்டாதனவாயினும், அவற்றின் உடன்பாடாகிய உண்ட செய்தமுதலியவை காலங்காட்டுதலால், இவையும் தெரிநிலையாம்)

எதிர்மறைப் பெயரெச்சம், உண்ணா செய்யா இல்லா அல்லா என்று ஈறுகெட்டும் நிற்கும்.

உண்ணாத செய்யாத என்பவற்றில், உண் செய் என்ற பகுதிகள் உடன்பாட்டுக்கு உரியவை யாதலால், ஆ - எதிர்மறையிடைநிலை; இல்லாத, அல்லாத என்றவற்றில் இல் அல் என்ற பண்படிப்பகுதிகளே எதிர்மறைகாட்டுதலால், ஆ - சாரியை: இது, எதிர்மறை வினையெச்சத்துக்கும் பொருந்தும். இல்லாத, அல்லாத என்றவற்றிலும் ஆ - எதிர்மறை யெனக் கொண்டால், இரண்டு எதிர்மறை ஒருடன்பாட்டை உணர்த்தவேண்டுமாதலின், அங்ஙனங்கொள்ள இடமில்லாமை காண்க

பெயரெச்சம் - சங்குசுட்ட சுண்ணாம்பு, உண்ட இளைப்பு எனக் காரணப்பொருளிலும் நோய்தீர்ந்த மருந்து, நினைக்கக்காணும் அவர் எனக் காரியப்பொருளிலும் வரு மென்று அறிக. (சுட்ட - சுட்டதனா லாகிய. உண்ட - உண்டதனா லாகிய. தீர்ந்த - தீர்தற்குக் காரணமான. காணும் - காணவேண்டுமென்ற என்று பொருள்.) (உக)

[செய்யுமென்னும் வாய்பாட்டுச் சொல்லுக்குச் சிறப்புவிதி]

‡ ௩௪௧. செய்யுமெ னெச்சவீற் றுயிர்மெய் சேறலும்
செய்யுளு ளுமுந் தாகலு முற்றேல
உயிரு முயிர்மெய்யு மேகலு முளவே.

(இ - ள்.) செய்யும் என் எச்சம் - செய்யும் என்னும் வாய்பாட்டுப்பெயரெச்சத்தினுடைய, ஈறு - இறுதியிலுள்ள, உயிர்மெய் - உயிர்மெய்யெழுத்து, சேறலும் - கெடுதலும்; செய்யுளுள் - செய்யு ளிடத்து, உம் - ‘உம்’ விகுதி, உந்து ஆகலும் - உந்து எனத்திரிதலும் முற்றேல் - (அது) செய்யுமென்னும் வாய்பாட்டு முற்றாயின், உயிரும் - (இறுதியில் உள்ள) உயிராயினும், உயிர்மெய்யும் - உயிர்மெய்யாயினும், ஏகலும் - கெடுதலும், உள - உள்ளன; (எ - று.)

‘செய்யுளுள் உம் உந்தாம்’ எனவே, மற்றை விதிகள் வழக்கிலும் செய்யுளிலும் ஏற்றபடி வருமெனக் கொள்க

| | | |
|---|---|---|
| ஆகும்பொருள் - ஆம்பொருள் | தாவும்மரை-தாமரை | எச்சத்து உம் |
| போகும்போது - போம்போது | வாவும்பரவி-வாம்புரவி | மெய்கெட்டது. |
| பாயும் —“பாயுந்து” | | செய்யுளில் எச்சத்து உயிர் |
| கூப்பெயர்க்கும் —“கூப்பெயர்க்குந்து” | | உந்து ஆயிற்று. |

| | | |
|---|---|---|
| கலுழும | "—கலுழ்மே" | } செய்யுளில் முற்றில் உயிர் கெட்டது. |
| போலும | "—மீகானும போன்ம" | |
| மொழியும | "—அவனொடுமொழிமே" | } செய்யுளில் முற்றில் உயிர்மெய் கெட்டது. |
| முடியும | "—வினையொடு முடிமே" | |
| குணமாகும | —குணமாம | } வழக்கில் முற்றில் உயிர்மெய் கெட்டது. |
| பொழுதுபோகும | —பொழுதுபோம் | |

'செய்யும் என் படர்க்கை முற்று' என்றாயினும், 'செய்யும்என் ஏவல் முற்று' என்றாயினும் கூறாமல் பொதுப்பட 'முற்றேல்' என்று கூறியத னால், கேளுமோ - "வருகுவம் கேண்மோ", உரையுமோ - 'முன்னியதுரை மோ" என ஏவல் முற்றில் உயிரும் உயிர்மெய்யும் கெட்டுவருதலும் கொள்க. * (௨௨)

## ௩. வினையெச்சம்.

### [வினையெச்சத்தின் இலக்கணம்.]

‡ ௩௪௨. தொழிலுங் காலமுந் தோன்றிப் பாலவினை
ஒழிய நிற்பது வினையெச் சமமே.

(இ - ள்.) தொழிலும் - செயலும், காலமும்—, தோன்றி - விளங்கி,— பால்-பாலும், வினை - (கொண்டுமுடியும்) வினையும், ஒழிய நிற்பது-குறைய நிற்பன, வினையெச்சம் - தெரிநிலை வினையெச்சமும் குறிப்பு வினையெச்ச முமாம். (எ - று.)

வினையெச்சம் - வினையைக் கொண்டுமுடிவதாகிய குறைந்துநிற்கும் சொல்.

'வினை' எனப் பொதுப்படக் கூறியதனால் - உடன்பாடும் எதிர்மறை யும் பற்றிவருகிற தெரிநிலையும் குறிப்பு மாகிய வினைமுற்றும், பெயரெச் சமும், வினையெச்சமும், வினையாலணையும் பெயரும், தொழிற் பெயரும் ஆகிய பலவகை வினைச்சொற்களையும் கொண்டுமுடியுஞ் சொல்லாகப் பெற்றுவரும்.

ஏற்புழிக்கோடலால் தொழிலும் காலமுந்தோன்றுதல் - தெரிநிலைக் கும், பால் வினை ஒழிய நிற்றல் - தெரிநிலை குறிப்பு இரண்டுக்கும் கொள்க.

(உ - ம்.) செய்துபோ - தெரிநிலை. இன்றிக் காண - குறிப்பு.

இங்ஙனே, தெரிநிலைவினையெச்சம் தொழிலும் காலமும் தோன்ற நிற்ற லும், இருவகை வினையெச்சமும் பால் வினை ஒழிய நிற்றலுமகாண்க. (௨௩)

### [தெரிநிலைவினையெச்ச வாய்பாடுகள்.]

‡ ௩௪௩. செய்து செய்பு செய்யாச் செய்யூச்
செய்தெனச் செயச் செயின் செய்யிய செய்யியர்
வான் பான் பாக்கு இன வினையெச்சம் பிற
ஐந்தொன் றாறு முக்காலமும் முறைதரும்.

(இ - ள்) செய்து .செய்யியர் - செய்து என்பது முதல் செய்யியர் என்பது வரையிலுள்ள ஒன்பதுவாய்பாடுகளால் வருவனவும், வான்பான்

* 'உம்மையான், இவை இவ்வாறு வருதல் ஒருதலையல்ல வெனக்கொள்க' என்பது, பழைய உரை.

பாகு - இம்மூன்று விகுதிகளைப் பெற்றுவருவனவும், இன பிற - இவை போல்வன பிறவும், வினையெச்சம் - தெரிநிலை வினையெச்சங்களாம்; (இப் பன்னிரண்டினுள்), ஐந்து (முதலிலுள்ள) ஐந்தும், ஒன்று - (நடுவிலுள்ள) ஒன்றும், ஆறு - (இறுதியிலுள்ள) ஆறும்,—முறை - முறையே, முக்கால மும் - இறந்தகால நிகழ்கால எதிர்காலங்களை, தரும் - காட்டும்; (எ - று)

இவற்றுள், செய்து என்பது - இடைநிலையினாலும், மற்றவை - விகுதி யினாலும் காலங்காட்டுவன வென்று அறிக.

| (உ - ம்.) இறப்பு. | நிகழ்வு. | எதிர்வு. |
|---|---|---|
| க. நடந்து வந்தான். | க. நடக்க வல்லன். | க. வரின் கொள்ளும். |
| உ. உண்டு போனான். | | உ. ஆடிய வந்தான். |
| ௩. பெய்யாக் கொடுக்கும். | | ௩. உண்ணியர் வருவான். |
| ௪. காணா மகிழ்ந்தான். | | ௪ கொல்வான் சென்றது. |
| ௫. உண்டெனப் போனான். | | ௫ தின்பான் புகுந்தது. |
| | | ௬. செய்பாக்கு வந்தான். |

(உண்குபு - உண்டு. பெய்யா - பெய்து. காணா - கண்டு. உண்டென - உண்டதனால். வரின் - வந்தால். ஆடிய - ஆடுதற்கு. உண்ணியர் - உண்ணு தற்கு. கொல்வான்-கொல்லுதற்கு. தின்பான்-தின்னுதற்கு. செய்பாக்கு - செய்தற்கு.) 'செய்யூஉ' என அளபெடையோடுகூடிய பாடமும் உண்டு.

வான், பான், பாக்கு என்பன - அந்தந்த விகுதிகளையுடைய சொற் களை உணர்த்தி நின்றன. வான், பான் என்பவற்றில், ஆன் - வினையெச்ச விகுதி, வ, ப் - எதிர்கால இடைநிலை என்பது, ஒருசாரார் கொள்கை.

இன - இன்ன என்பதன் தொகுத்தல்.

'இன்ன' என்றதனால்-இறந்தகாலத்திற்கு இ ய உம் என்பனவும், எதிர காலத்திற்கு ஆல் கால் கு கடை வழி இடத்து என்பனவும், எதிர்மறைக்கு மல் மை மே என்பனவும், குறிப்புவினையெச்சத்துக்கு அ றி ஆல் முதலி யனவும், பிறவும் விகுதிகளாக வருமெனக் கொள்க. அவையெல்லாம் பத வியலில் காட்டப்பட்டன.

இடையில் ஆகாரம் பெற்ற உண்ணாமல் இல்லாமல் முதலிய வினை யெச்சங்கள் ஈறுகெட்டு உண்ணா இல்லா, என்று நிற்றலும் உண்டு.

உரையிற்கோடலால் - நிகழ்காலத்திற்குக் காட்டிய செயவெனெச்சம் காரணப்பொருளதாம்பொழுது இறந்தகாலத்திலும், உடனிகழ்ச்சிப்பொ ருளதாம்பொழுது தனக்கு உரிய நிகழ்காலத்திலும், காரியப்பொருளதாம் பொழுது எதிர்காலத்திலும் வருமெனக் கொள்க. அதனால், இது - சிறு பான்மை 'முக்காலத்துக்கும் பொதுவான வினையெச்சம்' எனவும் படும்.

(உ - ம்.) மழை பெய்ய நெல் விளைந்தது— இறந்தகாலம்.

சூரியன் உதிக்கச் சாத்தன் வந்தான்—நிகழ்காலம்.

நெல் விளைய மழை பெய்தது—எதிர்காலம்,

இவற்றுள் பெய்ய என்பது - (பெய்தலால் எனப் பொருள்பட்டு) விளைதலுக்குக் காரணமாகியும், உதிக்க என்பது - (உதிக்கையில் எனப்பொருள் பட்டு) வருதலோடு உடன் நிகழ்கிறதாகியும், விளைய என்பது - (விளையும் படி எனப் பொருள்பட்டுப்) பெய்தற்குக் காரியமாகியும் நிற்றல் காண்க.

இன்னும், இவ்வுத்தியால், வான்முதலிய மூன்றும்-யான் வருவானேன, அவன் நடப்பானேன, படிப்பாக்கிறந்து என (முறையே) வருதல், நடத்தல், படுதல் எனப்பொருள்பட்டுத் தொழிற்பெயர் விகுதிகளாக வருதலும் கொள்க.

வினையெச்சம், சிறுபான்மைத்தொழிற்பெயர்ப்பொருளினும்வரும் (உ-ம்.) வரக் கண்டேன்; (இது வருதலைக்கண்டேனென்று பொருள்படும்.) (உச)

[வினையெச்சங்களின் முடிபுவேறுபாடு]

† ௩௪௪. அவற்றுள்,
முதலில் நான்கும் ஈற்றில் மூன்றும்
வினைமுதல்கொள்ளும் பிறவு மேற்கும் பிற.

(இ - ள்.) அவற்றுள் - (முன்சூத்திரத்திற்சொல்லிய பன்னிரண்டு வாய்பாட்டு) வினையெச்சங்களுள், முதலில - முதலிலுள்ள, நான்கும் - செய்து செய்பு செய்யா செய்யூ என்ற) நான்கும், ஈற்றில - இறுதியிலுள்ள, மூன்றும்-(வான் பான் பாக்கு என்கிற விகுதிகளையுடைய) மூன்றும், வினைமுதல - தன்கருத்தாவின் வினையை, கொள்ளும் - கொண்டுமுடியும் பிற - நடுவிலுள்ள (செய்தென செய செயின் செய்திய செய்தியர் என்ற) ஐந்தும், பிறவும் - (தன்கருத்தாவின் வினையை மாத்திரமேயன்றிப், பிறகருத்தாவின் வினையையும், ஏற்கும் - கொண்டு முடியும்.

| | | | |
|---|---|---|---|
| (உ - ம்) ௧. உ. | இராமன் நடந்துவந்தான் | | முதலில் நான்கும், ஈற்றில் மூன்றும்- தன் கருத்தாவின் வினையைக் கொண்டு முடிந்தன. |
| ௨. பு | பொன்னன் உண்குபு போனான் | | |
| ௩. ஆ | புயல் பெய்யாக் கொடுக்கும் | | |
| ௪. ஊ | மகள் காணூ மகிழ்ந்தாள் | | |
| ௧. வான். | புலி கொல்வான் சென்றது | | |
| ௨. பான். | வேடர் அலைப்பான் புகுந்தனர் | | |
| ௩. பாக்கு. | வள்ளல் தருபாக்கு வருவான் | | |
| ௧. என. | சாத்தன் உண்டென மகிழ்ந்தான் | சாத்தன் உண்டென யான் மகிழ்ந்தேன் | இடையில் ஐந்தும் - தன் கருத்தாவின் வினையையும், வேறு கருத்தாவின் வினையையும் கொண்டு முடிந்தன. |
| ௨. அ. | பொன்னன் உண்ண வருகிறான் | சாத்தன் உண்ண நீ காணாய் | |
| ௩. இன். | இராமன் உண்ணின் மகிழ்வான் | வறியன் உண்ணின் வள்ளல்கொடுப்பான் | |
| ௪. இய. | மகன் உண்ணிய வருவான் | மகள் உண்ணிய தாய் கொடுப்பாள் | |
| ௫ இயர். | தந்தை உண்ணியர் போவான் | பிறன் உண்ணியர் தான் வழங்குவான் | |

'இடையிலைந்தும்' என்னாது 'பிற' என்றதனால்-கீழ்ச்சூத்திரத்து 'இன' என்றதனாற் கொண்ட வினையெச்சங்களுள், செய்து என்னும் வாய்பாடு

பற்றிவருகிற இகர யகர வீற்று வினையெச்சங்களும், உடன்பாட்டுக் குறிப்பு வினையெச்சமும், தன்கருத்தாவின் வினையையும், மற்றவைதன்கருத்தாவின் வினையையும், பிறகருத்தாவின் வினையையும் கொள்ளுமெனக் காண்க.

(உ-ம்.) மகன் ஓடி வந்தான்
மகள் போய்க் கண்டாள்
தான் வலியப் பேசினான் } தன்கருத்தாவின் வினைகொண்டன.

அவன் உண்டால் உய்க்கும் | மழை இன்றிப் பொய்ப்பின்
யான் உண்டால் பசி தீரும் | விருந்தின்றி அவன் உண்ணான்

என இருவகைக் கருத்தாவின் வினை கொண்டன பிறவும் இவ்வாறே. (உரு)

[கீழ் 'வினைமுதல்கோள்ளும்' என்றதற்குப் புறனடை.]

† ௩௪௫. சினைவினை சினையொடும் முதலொடும் செறியும்.

(இ - ள்) சினை வினை - ('முதலில்நான்கும் ஈற்றில் மூன்றும்' என்ற வினையெச்சங்கள்) உறுப்பின் வினையாயின (அவை),—சினையொடும் -(முன் 'வினைமுதல்கொள்ளும்' என்ற விதியினால்) உறுப்பின் வினையுடன் முடிதல் மாத்திரமேயல்லாமல், முதலொடும் - உறுப்பியின் வினையுடனும், செறியும்- (ஒற்றுமைநயம்பற்றி) முடியும்; (எ - று)

சினை - அவயவம், உறுப்பு. முதல் - அவயவி, உறுப்பி.

(உ-ம்.) கால் ஒடிந்து வீழ்ந்தது
கண் சிவந்து நொந்தது } சினைவினை அச்சினையின் வினையோடு முடிந்தது

சாத்தன் காலொடிந்து வீழ்ந்தான்
பொன்னன் கண்நொந்து கிடந்தான் } சினைவினை அச்சினைக்கு உரியமுதல் வினைவினையோடு முடிந்தது. (உசு)

[வினையெச்சவாய்பாடுகள் திரிதல்]

† ௩௪௬. சொல்திரியினும் பொருள் திரியா வினைக்குறை.

(இ - ள்) வினைக்குறை - வினையெச்சவாய்பாடுகள்,—சொல் திரியினும் - (வேறுவாய்பாடுகளாகச்) சொல் மாறிவந்தாலும், பொருள் - (அவற்றின்) பொருள்கள், திரியா - வேறுபடாவாம்; (எ - று.)

என்றது - தன்கருத்தாவின் வினையைக் கொண்டுமுடிதற்கு ஏற்ற 'முதலில் நான்கும் ஈற்றில் மூன்றும்' என்ற வினையெச்ச வாய்பாடுகள் வேறுகருத்தாவின் வினையைக் கொண்டுமுடிந்தால், அவ்விடங்களில், அவற்றை, வேறு கருத்தாவின் வினையையும் கொண்டு முடிதற்கு ஏற்ற வினையெச்சங்களின் திரிபாகக் கொள்க என்றதாயிற்று. (இது, உருபு மயக்கம்போல்வது.)

மழைபெய்து நெல்விளைந்தது. யான் கோள்வான் பொன்கொடுத்தான்—இவற்றில், பெய்து, கொள்வான் என்பவை - வேறுவினைகொண்டு முடிதற்கு ஏலாமையால், அவற்றை முறையே பெய்ய கோள்ள என்னுஞ் செயவெனெச்சத்தின் திரிபாகக் கொள்க.

இனி, 'வினைக்குறை' எனப்பொதுப்படக் கூறியதனால் எவ்வகைவினையெச்சசொல்லும் பொருளுக்கு இயையாமல் மாறிவருமாயின், அதனைப் பொருளுக்கு இயைந்த வினையெச்ச சொல் திரிந்துவந்ததாகக் கொள்க.

(உ - ம்.) "தொழூஉத் தொழுது எழுவாள்" - தொழாநின்று என்னும் நிகழ்கால வினையெச்சம், தொழுது எனத் திரிந்து நின்றது "இல்லாகி யாங்கு" - ஆனால் என்னும் எதிர்கால வினையெச்சம், ஆகி எனத் திரிந்து நின்றது. (௨௭)

ஒழிபு

[குறிப்புவினைக்குப் புறனடை]

௪௪௭. ஆக்க வினைக்குறிப் பாக்கமின் றியலா.

(இ - ள்.) ஆக்கம் - (ஆதல் என்னும்) ஆக்கத்தைக்கொண்ட, வினைக் குறிப்பு - குறிப்புவினைச்சொற்கள்,—ஆக்கம் இன்று - (அந்த) ஆக்கச்சொல் இல்லாமல், இயலா - வாராவாம்; (எ - று.)

வேற்றுமைப்புணர்ச்சிக்கு வேற்றுமையுருபுகள் விரிந்தாயினும் மறைந் தாயினும் அதற்கு உரிமையாக நிற்பதுபோல, ஆக்கவினைக் குறிப்புக்கு ஆக் கச்சொல் விரிந்தாயினும் மறைந்தாயினும் அதற்கு உரிபதாக நிற்கும்.

(உ-ம்.) பகைவன் நல்லனாயினன் / கல்வியாற் பெரியனாயினன் } ஆக்கச்சொல் விரிந்து நின்றது.

சாத்தன் நல்லன் / கல்வியாற் பெரியன் } ஆக்கச்சொல் மறைந்து நின்றது

எனவே - இயற்கைவினைக்குறிப்பாயின 'ஆக்கச்சொல்' மறைந்துவருத லும் விரிந்துவருதலு மில்லாமல் தந்தைநல்லன், குலத்தாற் பெரியன என்றே வருமெனக் கொள்க.

இங்ஙனமாகவே, குறிப்பு வினை - ஆக்கவினைக் குறிப்பு, இயற்கை வினைக்குறிப்பு என இரண்டு வகைப்படுமென்றும், அவை இவ்வாறு நடக்குமென்றும் கூறினாராயிற்று (௨௮)

['செயயும்' என் முற்றுக்குச் சிறப்புவிதி]

‡ ௪௪௮. பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையில்
செல்லா தாகும் செய்யுமென் முற்றே.

(இ - ள்.) செய்யும் என் முற்று - 'செய்யும் என்னும் வாய்பாட்டுவினை முற்று,—பல்லோர் படர்க்கை - படர்க்கைப் பலர்பாலிலும், முன்னிலை - முன்னிலையிலும், தன்மையில - தன்மையிலும், செல்லாது ஆகும் - வாரா தாம்; (எ - று.)

எனவே, படர்க்கையில் பலர்பால் ஒழிந்த ஆண்பால் பெண்பால் ஒன்றன்பால் பலவின்பால்களில் செல்லுமென்றதாயிற்று

(உ - ம்.) அவன் உண்ணும், அவள் உண்ணும், அது உண்ணும், அவை உண்ணும்.

இவ்வாய்பாட்டு முற்று - 'நீர் உண்ணும்' என முன்னிலையில் பன்மை யேவலாக வருதல் புதியனபுகுதலாதலால் இதைக் கூறாராயினர் (௨௯)

['யார்' என்னும் குறிப்புவினைமுற்றுக்குச் சிறப்புவிதி]

‡ ௪௪௯. யாரென வினாவினைக் குறிப்பு உயர் முப்பால்.

(இ - ள்.) யார் என் - 'யார்' என்கிற, வினா - வினாப்பொருளைத் தருகிற, வினைக்குறிப்பு - குறிப்பு வினைமுற்று, - உயர் முப்பால் - உயர்திணைப்பாலாக்கை மூன்று பால்களுக்கும் பொதுவாம்; (எ - று.)

(உ - ம்.) அவன் யார், அவள் யார், அவர் யார்

இது, இங்குப் பலர்பால் முற்றன்று; உயர்திணைப்பொதுக் குறிப்பு முற்று. இதில், ர் - பொதுவிகுதி

இனி, நான் யார், நாம் யார், நீ யார், நீர் யார் எனத் தன்மை முன்னிலைகளில் வருதல் - புதியனபுகுதல்; 'என்னெனும் ஆர்' என அஃறிணைக்கு வருதலும் அது. (ஆர் - யார் எனபதன் மரூஉ) (௩௦)

['எவன்' என்னும் குறிப்புவினைமுற்றுக்குச் சிறப்புவிதி]

‡ ௩௫௦. எவனென வினாவினைக் குறிப்பு இழி யிருபால.

(இ - ள்) எவன் என - எவன்' என்கிற, வினா - வினாப்பொருளைத் தருகிற, வினைக்குறிப்பு - குறிப்புவினைமுற்று, - இழி இருபால - அஃறிணைப்பாலாக்கை இரண்டுபால்களுக்கும் பொதுவாம்; (எ - று)

இது, இங்கு ஆண்பால் முற்றன்று; அஃறிணைப் பொதுக்குறிப்பு முற்று எது என்றும், எவை என்றும் பொருள்படும் இதில், அன் - பொதுவிகுதி.

(உ - ம்) அது எவன், அவை எவன், இது - என் என விகாரப்பட்டும், அது, பின்பு என்னை என்ன என்னே என்னோ என என்ப பலவாறு விகாரப்பட்டும் வரும் (௩௧)

[முற்றெச்சம்.]

† ௩௫௧. வினைமுற்றே வினை யெச்சமாகலும்
குறிப்புமுற் றீரெச்ச மாகலு முளவே.

(இ - ள்.) வினைமுற்றே - (தெரிநிலை) வினைமுற்றுச்சொல்லே, வினையெச்சம் ஆகலும் - வினையெச்சப்பொருள்தாக வருதலும் குறிப்புமுற்று - குறிப்பு வினைமுற்றுச் சொல், ஈர் எச்சம் ஆகலும் வினையெச்சப்பொருளும் பெயரெச்சப்பொருளும் உடையதாக வருதலும், உள - உண்டு; (எ - று)

(உ - ம்) க. — 'கண்டனன் வணங்கினன்' என்பது - கண்டு வணங்கினான் என்றும், 'காணான் போனான்' என்பது காணாமற் போனான் என்றும் பொருள்படுதலால், தெரிநிலை முற்று வினையெச்சமாதல் காண்க.

உ. — 'சாத்தன் வில்லினன் வந்தான்' என்பது - வில்லையுடையனாய் வந்தான் எனப் பொருள்படுதலால் குறிப்புமுற்று வினையெச்சமாகியும், 'குழையினன் கொற்றன் வந்தான்' என்பது - குழையையுடைய கொற்றன் வந்தான் எனப் பொருள்படுதலால் குறிப்பு முற்றுப்பெயரெச்சமாகியும் வருதல் காண்க.

இனி, 'வினையெச்சமாகலும்' என்ற (எண்ணின்ற எதிரதுதழுவிய எச்ச) உம்மையால் - 'உண்டான் சாத்தன் (ஊர்க்குப்போனான்), என்பதில் - உண்ட சாத்தன் எனப் பொருள்பட்டு, தெரிநிலை முற்றுப்பெயரெச்சமாக வருதலும் கொள்க. (௩௨)

வினையியல் முற்றிற்று

# ௩. பொதுவியல்.

முன்சொன்ன பெயர்ச்சொல்லுக்கும் வினைச்சொல்லுக்கும், பின் சொல்லும் இடைச்சொல்லுக்கும் உரிச்சொல்லுக்கும் பொதுவான இலக்கணங்களைச் சொல்லும் இயல் இது சிங்கநோக்காக நான்கு இயல்களுக்கும் நடுவில் வைக்கப்பட்டதென அறிக (சிங்கம், முன்னும் பின்னும் பார்த்துக்கொண்டே செல்லும்.)

[ஒன்றொழி பொதுச்சொல்.]

† ௩௫௨. இருதிணை யாண்பெ ணுளொன் றனை யொழிக்கும்
பெயரும் வினையும் குறிப்பி னானே.

(இ - ள்.) இரு திணை - இரண்டு திணைகளிலும், — பெயரும் - (ஆண்பால் பெண்பால்களுக்குப் பொதுவாகிய) பெயர்ச்சொற்களும், வினையும் - (அவ்விருபால்களுக்கும் பொதுவாகிய) வினைச்சொற்களும், — ஆண் பெண்ணுள் - அவ்வாண்பால் பெண்பால்களுள், ஒன்றனை - ஒருபாலை, குறிப்பினான் - குறிப்பினால், ஒழிக்கும் - நீக்கி மற்றொருபாலை விளக்கும்; (எ - று.)

(உ - ம்) (க) ஆயிர மக்கள் போர் செய்யப் போயினர் — இதில், மக்கள் என்னும் உயர்திணை ஆண் பெண் இருபாற்கும் பொதுப்பெயரும் போயினர் என்னும் பொதுவினையும், போர் என்னும் குறிப்பினால் பெண்பாலை ஒழித்து ஆண்பாலைக் காட்டின; (மக்கள் - மனிதர்) இது - உயர்திணைப்பெண்ணொழி பெயரும், வினையும்.

பெருந்தேவி கருவுயிர்த்தக் கட்டிலின்கீழ் நால்வர் மக்கள் உளர் — இதில், மக்கள் என்னும் பொதுப்பெயரும், உளர் என்னும் பொதுவினையும், கருவுயிர்த்த என்னும் குறிப்பினால் உயர்திணை ஆண்பாலை ஒழித்துப் பெண்பாலைக் காட்டின. (கருவுயிர்த்தல் - பிரசவித்தல்) இது - உயர்திணை ஆணொழி பெயரும், வினையும்.

(௨) இப்பெற்றங்கள் உழவு ஒழிந்தன — இதில் பெற்றங்கள் என்னும் அஃறிணை ஆண் பெண் இருபாற்கும் பொதுப்பெயரும், ஒழிந்தன என்னும் பொதுவினையும், உழவு என்னும் குறிப்பினால் பெண்பாலை ஒழித்து ஆண் பாலைக் காட்டின. (பெற்றம் - மாடு, இங்கே எருது) இது - அஃறிணைப் பெண்ணொழி பெயரும், வினையும்.

இப் பெற்றங்கள் பால் சொரிந்தன — இதில், பெற்றங்கள் என்னும் பொதுப்பெயரும் சொரிந்தன என்னும் பொதுவினையும், பால் என்னும் குறிப்பினால் ஆண்பாலை ஒழித்துப் பெண்பாலைக் காட்டின. (பெற்றம் - இங்கே, பசு) இது - அஃறிணை ஆணொழி பெயரும், வினையும். (௧)

[செய்யுளில் சில பெயர்வினையின் ஈற்றயல் திரிதல்]

‡ ௩௫௩. பெயர்வினை யிடத்து னளரய வீற்றயல்
ஆ ஓ வாகலும் செய்யுளு ளுரித்தே.

(இ - ள்.) பெயர் வினை இடத்து - பெயரிடத்தும் வினையிடத்தும், னளரயஈறு அயல ஆ - னகர ளகர ரகர யகர வீற்றிற்கு அயலில் உள்ள விகுதி முதல் ஆகாரம், ஓ ஆகலும் - ஓகாரமாகத் திரிதலும்,— செய்யுளுள் - செய்யுளிடத்து, உரித்து - உரியதாம்; (எ - று)

| பெயர். | | (உ - ம்.) | வினை. | |
|---|---|---|---|---|
| வில்லான் | = "வில்லோன்." | படைத்தான் | = | "படைத்தோன்" |
| தொடியாள் | = "தொடியோள்." | பெயர்த்தாள் | = | "பெயர்த்தோள்." |
| நல்லார் | = "நல்லோர்" | சென்றார் | = | சென்றோர்" |
| பெரியாய் | = "பெரியோய்" | வந்தாய் | = | "வந்தோய்" |

வினையாலணையும்பெயரிடத் தல்லது வினையிடத்தும் ஒரோவிடத்து ஆ ஓ வாகத் திரிந்துவருதலால், அதனையும் உடன் கூறினார்

'ஆகலும்' என்ற எதிர்மறை உம்மையால், செக்கான் வண்ணான் என ஆ ஓ ஆகாமையையும் கொள்க. இனனும், ஆ ஓவாதலும்' என்ற உம்மையை ஆக்கவும்மையாகக்கொண்டு, கிழவன் - கிழவோன், இருவர் - இருவோர், புலவர் - புலவோர், சிலர் - சிலோர், பலர் - பல்லோர் எனச் சிலவிடத்து அகரம் ஓகாரமாதலையும் அமைத்துக்கொள்க (உ)

[உருபும் வினைவிகுதியும் எதிர்மறையினும் திரியாமை ]

ை௩௪. உருபும் வினையும் எதிர்மறுத் துரைப்பினும்
திரியா தத்தமீற் றுருபி னென்ப.

(இ - ள்.) உருபும் - எட்டு வேற்றுமை யுருபுகளும், வினையும் மூவகை வினைச்சொற்களும்,—எதிர் மறுத்து உரைப்பினும் - எதிர்மறையாகச் சொல்லுமிடத்தும், தமதம ஈறு உருபின் - தம்தமது விகுதியி னின்றும் தம தமது உருபினின்றும், திரியா - வேறுபடா, என்ப - என்று சொல்வர், (புலவர்). (எ - று)

உருபு உருபினினறும திரியாவெனறும, வினை ஈற்றினின்றும திரியா வென்றும் * எதிர்நிரனிறையாகப் பொருள்கொள்க.

உருபில் எதிர்மறுத்தல், அவற்றின் பயனிலைகளி லெனக் காண்க.

(உ - ம்.) சாத்தன் வாரான், கூழ்தனை வினையான், வாளால் எறி யான், புலவர்க்குக் கொடான், நிலையின் நீங்கான், பொருளினது இன்மை, தீயர் கண் சேரான், சாத்தா போகேல் என முறையே எட்டு வேற்றுமையுருபுகளும் எதிர்மறையிலும் தமதம் உருபு மாறுபடாவாயின.

நடவான், நடவாத, நடவாக்கால் என முறையே மூவகை வினைச் சொற்களும் - எதிர்மறையிலும் தம தம விகுதி மாறுபடாவாயின.

உரையிற்கோடலால், செய்ய - செய்யாமல், செய்யாது, செய் யாமே, செய்யாமை என வினையெச்சமும்; நடத்தல் - நடவாமை என

---

* எதிர்நிரனிறை, இவ்வியலின் கூ௩ - ஆம் சூத்திரத்தில் விளங்கும்.

தொழிற் பெயரும்; உண்ணாய், - உண்ணேல், உண்ணாதே என ஒருமை யேவலும்; மற்றும் சிலவும் ஈறு திரிந்தும் வருமெனக் கொள்க. (௩)

[உருபும் வினையும் அடுக்கி முடிதல்]

௩௫௫ உருபுபல அடுக்கினும் வினைவே றடுக்கினும்
ஒருதம் மெச்ச மீற்ற முடியும்.

(இ - ள்) உருபு - எட்டு வேற்றுமை யுருபுகளும், பல அடுக்கினும் - (விரிந்தும் தொக்கும் தம்முள் விரவியாயினும் வெவ்வேறாக வாயினும்) பல அடுக்கி வந்தாலும், வினை - (மூவகை) வினைச்சொற்களும் வேறு அடுக்கினும் - வெவ்வேறு பல அடுக்கி வந்தாலும், ஒரு தம் எச்சம் - தாம் தாம் கொண்டு முடியும் சொல் ஒன்று, ஈறு உற - இறுதியில் வர, முடியும் (எல்லாம் அதனோடு) முடியும்; (எ - று.)

(உ - ம்.) (௧) அரசன் பகைவனை வாளால் வெட்டினான்—உருபுகள் விரிந்து விரவிப் பல அடுக்கி ஒருவினை கொண்டன.
வாள் கைக் கொண்டான்—உருபு தொக்கு அவ்வாறு வந்தன.

(௨) சாத்தனையும் கொற்றனையும் வாழ்த்தினான், சாத்தனுக்கும் கொற்றனுக்கும் தந்தை—ஐ உருபும், கு உருபும், விரிந்து வேறு பல அடுக்கி முறையே ஒரு வினையும், ஒரு பெயரும் கொண்டன. அருளற முடையான்—உருபுதொக்கு அவ்வாறு வந்தன.

(௩) ஆடினன் பாடினன் சாத்தன், இளையள் மெல்லியள் மடந்தை—தெரிநிலை வினைமுற்றும், குறிப்புமுற்றும் வேறு பல அடுக்கி முறையே ஒவ்வொரு பெயர் கொண்டன.

(௪) கற்ற கேட்ட பெரியோர், நெடிய பெரிய மனிதன்—தெரிநிலைப் பெயரெச்சமும், குறிப்புப்பெயரெச்சமும் - வேறு பல அடுக்கி முறையே ஒவ்வொரு பெயர் கொண்டன.

(௫) கற்றுக் கேட்டு அறிந்தார், விருப்பின்றி வெறுப்பின்றி இருந்தார்—தெரிநிலைவினையெச்சமும், குறிப்புவினையெச்சமும், வேறுபல அடுக்கி முறையே ஒவ்வொரு வினை கொண்டன. (௪)

[இடைப்பிறவரல்.]

‡ ௩௫௬. உருபுமுற் றெச்சம் கொள்ளும்
பெயர்வினை யிடைபிற வரலுமா மேற்பன.

(இ - ள்.) உருபு - எட்டு வேற்றுமை யுருபுகளும், முற்று - வினைமுற்றுக்களும், ஈர் எச்சம் - பெயரெச்சங்களும் வினையெச்சங்களும் ஆகிய இவற்றுக்கும், கொள்ளும் - இவை கொண்டுமுடிகிற, பெயர் வினை - பெயர்ச்சொற்களுக்கும் வினைச்சொற்களுக்கும், இடை - நடுவில், ஏற்பன - (அவ்வவ்விடத்துக்குப்) பொருந்துவனவாகிய, பிற - வேறு சொற்கள், வரலும் - வருதலும், ஆம் - ஆகும்; (எ - று)

(உ - ம்) (௧) சாத்தன் (வயிறு நிரம்ப) உண்டான்
அறத்தை (அழுது பெற்றுச்) செய்தான்.
வாளால் (மாய) வெட்டினான்
தேவர்க்குச் (செல்வம் வேண்டிச்) சிறப்பு எடுத்தான்
மலையினின்று (உருண்டு) வீழ்ந்தான்.
சாத்தனது (பருங்கை) யானை.
ஊர்க்கண் (உயர்ந்த ஒளி) மாடம்
இராமா (விரைந்து ஓடி) வா

} வேற்றுமை

(௨) வந்தான் (அவ்வூர்க்குப் போனான்) சாத்தன் — வினைமுற்று.

(௩) வந்த (வடகாசி) மன்னன் — பெயரெச்சம்.

(௪) வந்து (சாத்தன் அவ்வூர்க்குப்) போயினான் — வினையெச்சம்.

'ஏற்பன வரலுமாம்' என்றதனால், எல்லாம் இடையில் வரப் பெறாவாம்.

[முடிக்குஞ்சொல் நிற்குமிடம்.]

௩௫௭. எச்சப் பெயர்வினை எய்தும் ஈற்றினும்.

(இ - ள்.) எச்சம் - (வேற்றுமையுருபுகளும் வினைமுற்றுக்களும் பெயரெச்சங்களும் வினையெச்சங்களும்) கொண்டு முடியுஞ் சொல்லாகிய, பெயர்வினை - பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும், ஈற்றினும் - (அவ்வுருபு முதலியவற்றிற்கு) இறுதியிலும், எய்தும் - வரும்; (எ - று.)

'ஈற்றினும்' என்ற எச்ச உம்மையால் முதலிலும், வருதல்கொள்க *

| | ஈறு | முதல் |
|---|---|---|
| (உ - ம்.) | சாத்தன் வந்தான் | வந்தான் சாத்தன் |
| | மரத்தைக் குறைத்தான் | குறைத்தான் மரத்தை |
| | சாத்தனால் வந்தான் | வந்தான் சாத்தனால் |
| | சாத்தனுக்குக் கொடுத்தான் | கொடுத்தான் சாத்தனுக்கு |
| | சாத்தனின் நீங்கினான் | நீங்கினான் சாத்தனின் |
| | சாத்தனது ஆடை | ———— |
| | சாத்தன்கண் சென்றான் | சென்றான் சாத்தன்கண் |
| | மணியில் ஒளி | ———— |
| | சாத்தா வா | வா சாத்தா |

} உருபுகளின் கொண்டு முடியுஞ் சொற்கள் இரண்டிடத்தும் வந்தன.

| | | |
|---|---|---|
| வந்தான் சாத்தன் | சாத்தன் வந்தான் | } முற்றெச்சங்களின் கொண்டு முடியும் சொற்கள் இரண்டிடத்தும் வந்தன. |
| வந்த சாத்தன் | ———— | |
| வந்துபோயினான் | போயினான் வந்து | |

'எய்து மீற்றின்' என்றாற்போல முதலில் வருதலை எடுத்துச்சொல்லாமல் 'ஈற்றினும்' என்றதால் தழுவிக்கொண்டதனால் - ஆறாம் வேற்றுமை யுருபும் ஏழாம்வேற்றுமையுருபும் பெயரெச்சமும் கொண்டு முடிகிற பெயர்ச்சொற்கள் அவற்றிற்கு இறுதியில் மாத்திரம் வருமேயல்லாமல் முதலில் வாரா என்பதும், மற்றவை முதலில் வந்தாலும் இறுதியில் வருவனபோலச் சிறப்புடையனவல்ல என்பதும் தோன்றுமாறு அறிக

* 'உம்மையான், வரல் ஒருதலையல்லவெனக' என்பது, பழைய உரை.

(சாத்தனது ஆடை என்பது - ஆடை சாத்தனது என மாறினால், சாத்தனது என்பது - ஆறாம்வேற்றுமையாகாது குறிப்புவினைமுற்றாம்.)

[ஒருமொழி, தன் இனத்தையும் உணர்த்துதல் உபலக்ஷணம்.]

‡ ௩௫௪. ஒருமொழி ஒழிதன் இனங்கொளற் குரித்தே.

(இ - ள்) ஒருமொழி-(நால்வகைச் சொற்களுள்) ஒருசொல்,—(தன்னை உணர்த்துவதோடு) ஒழி - ஒழிந்துநின்ற, தன இனம் - தன் இனங்களையும், கொளற்கு - தழுவிக்கொள்ளுதற்கு, உரித்து - உரியதாம்; (எ - று.)

(உ - ம்) சோற்றை உண்டான் என்றால் - அதனோடு கறியைத் தின்றான் என்பது முதலியனவும், வெற்றிலை தின்றான் என்றால் - அதனோடு பாக்குச் சுண்ணாம்புகளைத் தின்றான் என்பதும், நஞ்சு உண்டவன் சாவான் என்றால் - நஞ்சுண்டவள் சாவாள், நஞ்சுண்டவர் சாவார், நஞ்சுண்டது சாம் நஞ்சுண்டவை சாம் என்பனவும் கூறாமலே அமைதலால், இவற்றுள் சோறு என்னும் பெயர்ச்சொல் - ஒழிந்த கறி முதலிய தன் இனங்களையும், உண்டான் என்னும் வினைச்சொல் - தின்றான் முதலிய தன் இனங்களையும், வெற்றிலை என்னும் பெயர்ச்சொல் - மற்றைப் பாக்குச் சுண்ணாம்புகளையும், உண்டவன் சாவான் என்னும் ஆண்பாற் பெயர் வினைகள் - மற்றை நான்குபாற் பெயர்வினைகளையும் கொள்ளுதற்கு உரியனவாக நின்றமை காண்க. (எ)

[பெயர்வினைகள் திணைபால் இடம் காலங்களின் பொதுமை நீக்கும் விதம்.]

† ௩௫௫. பொதுப்பெயர் வினைகளின் பொதுமை நீக்கும் மேல்வருஞ் சிறப்புப் பெயர்வினை தாமே.

(இ - ள்) பொது - (திணை பால் இடம் காலங்களுக்குப்) பொதுவாகிய பெயர் வினைகளின் - பெயர்ச்சொற்கள் வினைச்சொற்கள் என்பவற்றினுடைய, பொதுமை - (அத் திணை முதலியவற்றிற்குப்) பொதுவாயிருக்குந் தன்மையை,—மேல் வரும் - மேலே வருகிற, சிறப்பு - (ஒரு திணை பால் இடம் காலத்துக்கே) சிறப்பாகிய, பெயர் வினைதாமே - பெயர்ச்சொற்களும் வினைச்சொற்களும், நீக்கும் - நீக்கி ஒரு திணை பால் இடம் காலத்துக்கே உரிமைசெய்யும் (எ - று)

ஒன்றற்கு முன் பின் என்னும் இரண்டு இடமும் 'மேல்' எனப்படுதலால், சிறப்புப்பெயர் வினை எவ்விடத்து வந்தாலும் கொள்க.

| | | |
|---|---|---|
| பொதுப்பெயர். | சாத்தன் இவன்<br>சாத்தன் இது | பெயர்த்திணைப்பொதுமையைப் பின்வந்த சிறப்புப்பெயர் நீக்கி ஒருதிணைக்கு உரிமைசெய்தது. |
| | சாத்தன் வந்தான்<br>சாத்தன் வந்தது | பெயர்த் திணைப் பொதுமையைப் பின்வந்த சிறப்புவினை நீக்கி ஒரு திணைக்கு உரிமைசெய்தது |
| | ஒருவர் எந்தாயார்<br>ஒருவர் எந்தகப்பனார் | பெயர்ப்பாற் பொதுமையைப் பின்வந்த சிறப்புப்பெயர் நீக்கி ஒருபாலுக்கு உரிமை செய்தது |
| | மரம் வளர்ந்தது<br>மரம் வளர்ந்தன | பெயர்ப்பாற் பொதுமையைப் பின்வந்த சிறப்புவினை நீக்கி ஒருபாலுக்கு உரிமைசெய்தது. |
| | யாமெல்லாம் வந்தோம்<br>நீரெல்லாம் வந்தீர்<br>அவரெல்லாம் வந்தார் | பெயரிடப் பொதுமையை முன்வந்த சிறப்புப்பெயரும், பின்வந்த சிறப்புவினையும் நீக்கி ஓரிடத்துக்கு உரிமைசெய்தன. |

பொது வினை.

| | | |
|---|---|---|
| வாழ்க-அவன் அவள் அவர் அது அவை நான் நாம் நீ நீர் | | வினைத் திணைபாலிடப் பொதுமையைப் பின்வந்த சிறப்புப்பெயர்கள் நீக்கி ஒருதிணைபால் இடத்துக்கு உரிமை செய்தன. |
| உண்டு - வந்தான் வந்தாள் வந்தார் வந்தது வந்தன வந்தேன் வந்தோம் வந்தாய் வந்தீர் | | வினைத் திணைபாலிடப் பொதுமையைப் பின்வந்த சிறப்பு வினைகள் நீக்கி ஒன்றற்குஉரிமை செய்தன. (அ) |

[எச்சங்களின் முடிபு]

௩௬௦. *பெயர்வினை உம்மைசொற் பிரிப்பென ஒழியிசை*
*எதிர்மறை இசையெனும் சொல்லொழி பொன்பதும்*
*குறிப்பும் தத்த மெச்சம் கொள்ளும்.*

(இ - ள்.) பெயர் - பெயரெச்சமும், வினை - வினையெச்சமும், உம்மை-உம்மையெச்சமும், சொல - சொல்லெச்சமும், பிரிப்பு - பிரிநிலையெச்சமும், என - எனவெச்சமும், ஒழியிசை - ஒழியிசையெச்சமும், எதிர்மறை - எதிர்மறையெச்சமும், இசை - இசையெச்சமும், எனும் - என்கிற, சொல் ஒழிபு ஒன்பதும் - சொல்லெச்சங்கள் ஒன்பதும், குறிப்பும் - குறிப்பெச்சமும்,—தத்தம் எச்சம் கொள்ளும் - தமதமது எஞ்சிநின்ற சொற்களைக் கொண்டு முடியும்; (எ - று)—எஞ்சுதல் - குறைதல்.

எனவே, எச்சங்கள் சொல்லெச்சம், குறிப்பெச்சம் என இருவகைப்படும்.

இந்தப் பத்து எச்சங்களுள்ளும், பெயரெச்சம் வினையெச்சம் எனவெச்சம் என்னும் மூன்றற்கும் எச்சச்சொற்கள் வாக்கியங்களில் வெளிப்பட்டு நிற்கும்; மற்றவற்றிற்கு எச்சச்சொற்கள் வருவித்து உரைக்கப்படும்.

(உதாரணம்.)

(க) செய்த சாத்தன், நல்ல சாத்தன் என்பன பெயரெச்சங்கள் - தம் எச்சமாகிய சாத்தன் என்னும் பெயரைக் கொண்டன.

(உ) செய்து வந்தான், மெல்ல வந்தான் என வினையெச்சங்கள் - தம் எச்சமாகிய வந்தான் என்னும் வினைமுற்றைக் கொண்டன.

(௩) சாத்தனும் வந்தான் என்னும் உம்மையெச்சம் - 'முன்னே கொற்றனும் வந்தான்' என்ற தன் எச்சத்தைக் கொண்டது.

(௪) நல்லவனென்றான் என்னும் சொல்லெச்சம் - நல்லவனென்று சொன்ஞன் எனச் சொல் என்னும் தன் எச்சத்தைக் கொண்டது.

(௫) சாத்தனே கொண்டான், சாத்தனோ கொண்டான் என்னும் பிரிநிலையெச்சங்கள் - 'பிறர் கொண்டிலர்' என்ற தம எச்சத்தைக் கொண்டன. கொள்ளுதலாற் சாத்தனினின்று பிறர் பிரிக்கப்பட்டாராதலின் பிரிநிலை.

(௬) கடல் ஒல்லென ஒலித்தது, நரம்பு விண்ணென இசைத்தது என்னும் எனவெச்சங்கள் - தம் எச்சமாகிய வினையைக் கொண்டன; மிகவும் ஒலித்தது, மிகவும் இசைத்தது என்பன இவற்றிற்குப் பொருளாமாதலால். இவ்வெனவெச்சம், விகுதிப்பொருளைத் தருவதோர் இடைச்சொல்லாம்.

(எ) கூறியதோர் வாளமர், படித்தற்கோ வந்தான் என்னும் ஒழியிசை யெச்சங்கள் - முறையே 'இப்பொழுது ஒடிந்தது,' 'விளையாட வந் தான்' எனத் தம் எச்சத்தைக் கொண்டன.

(அ) மறப்பினும் ஓதிக்கொளலாகும், யானோ செய்தேன் என்னும் எதிர் மறை யெச்சங்கள் - முறையே 'மறக்கலாகாது,' 'யான் செய்தி லேன்' எனத் தம் எச்சத்தைக் கொண்டன.

(க) "கற்றதனாலாய பயனென்" என்பதில் - (நூலைக்) கற்றதனால் என ஒரு சொல்லும், "அந்தாமரையன்னமே நின்னை யானகன் றாற்று வனோ?" என்பதில் - (என் உயிரினும் சிறந்த) நின்னை யெனப் பல சொற்களும் வருவிக்கப்படுதலால், இவ்விசையெச்சங்கள் - தம் எச் சங்களைக் கொண்டன. (இசையெச்சமாவது - வாக்கியங்களில் அவ்விடத்திற்கு ஏற்ப ஒருசொல்லும் பலசொற்களும் வருவித்து உரைக்கப்படுதல்.)

(௧0) குறிப்பெச்சமாவது - பெயரியலிற் பன்னிரண்டாஞ் சூத்திரத்திலே "ஒன்றொழி பொதுச்சொல்" முதலாக "இன்ன பிறவும்", வரை கூறும் சொல்லப்பட்டவை: ஆயிரம் மக்கள் பொருதார் என்பதில், மக்கள் என்னும் பொதுப்பெயர் - ஆடவர் என்னும் சிறப்புப் பெய ரைக் கொண்டது. பிறவும் அச்சூத்திரவுரையிற் காண்க.

குறிப்பெச்சமொழிந்த ஒன்பதில், சொல்லெச்சம் - சொல் என்கிற சொல் ஒன்றே குறைந்து நிற்பது என்றும், இசையெச்சம் - பெயர் முத லிய சொற்களுள் ஒன்றாயினும் பலவாயினும் குறைந்து நிற்பது என்றும் வேறுபாடு அறிக. (௯)

## தொகைநிலைத் தொடர்மொழிகள்.

[தொகைநிலைத்தொடர்மொழிகளின் இலக்கணம்.]

‡ ௩௬௧. பெயரொடு பெயரும் வினையும் வேற்றுமை
முதலிய பொருளி னவற்றி னுருபிடை
ஒழிய விரண்டு முதலாத் தொடர்ந்தொரு
மொழிபோல நடப்பன தொகைநிலைத் தொடர்ச்சொல்

(இ - ள்.) பெயரொடு - பெயர்ச்சொல்லோடு, பெயரும் - பெயர்ச் சொல்லும், வினையும் - வினைச்சொல்லும், வேற்றுமை முதலிய - (பின் சொல்லப்படும்) வேற்றுமை முதலாகிய, பொருளின் - அறுவகைப் பொ ருட்புணர்ச்சியில், அவற்றின் உருபு - அவற்றினுடைய உருபுகள், இடை ஒழிய - நடுவில் தொக்கு நிற்க, இரண்டு முதலா (க) தொடர்ந்து - இரண்டு சொற்கள் முதலாகப் பலசொற்கள் தொடர்ந்து, ஒரு மொழி போல நடப்பன - ஒருசொல்போல் நடப்பவை,—தொகைநிலை தொடர் சொல் - தொகைநிலைத் தொடர்ச்சொற்களாம்; (எ - று.)—தொகை - இங்கே, உருபு மறைதல். (௧0)

[தொகைநிலைத்தொடர்கள் இத்தனை யென்பது.]

‡ ௩௬௨. வேற்றுமை வினை பண்பு உவமை உம்மை
அன்மொழி என அத்தொகை யாறாகும்.

(இ - ள்.) வேற்றுமை - வேற்றுமைத்தொகையும், வினை - வினைத்தொகையும், பண்பு - பண்புத்தொகையும், உவமை - உவமைத்தொகையும், உம்மை - உம்மைத்தொகையும், அன்மொழி - அன்மொழித் தொகையும், என - என்று, அ தொகை - முன்சொன்ன தொகைநிலைத் தொடர்மொழிகள், ஆறு ஆகும் - அறுவகைப்படும்; (எ - று.) (௧௧)

[க. வேற்றுமைத் தோகை.]

† ௩௬௩. இரண்டு முதலா மிடையா றுருபும்
வெளிப்பட லில்லது வேற்றுமைத் தொகையே.

(இ - ள்.) இடை - (எழுவாயகரும் விளிக்கும்) நடுவில் நின்ற, இரண்டு முதல் ஆம் ஆறு உருபும் - இரண்டாவது முதலிய ஆறு வேற்றுமை யுருபுகளும், வெளிப்படல் இல்லது - வெளிப்படாமல் மறைந்து நிற்கும் தொடர் மொழிகள்,—வேற்றுமைத்தொகை - வேற்றுமைத் தொகைகளாம்; (எ - று.)

(உ-ம்.) நிலம் கடந்தான் [ ஐ ] இரண்டாம்வேற்றுமைத் தொகை.
தலை வணங்கினன் [ஆல்] மூன்றாம்வேற்றுமைத் தொகை.
சாத்தன் மைந்தன [ கு ] நான்காம்வேற்றுமைத் தொகை.
ஊர் நீங்கினன் [இன்] ஐந்தாம்வேற்றுமைத் தொகை.
சாத்தன் கை [அது] ஆறாம்வேற்றுமைத் தொகை.
குன்றக் குகை [கண்] ஏழாம்வேற்றுமைத் தொகை.

யானைக் கோட்டு நுனி குறைத்தான்—பன்மொழித் தொடர்.

இனி, 'ஆறு உருபும்' என்ற முற்றும்மையை எச்சவும்மை யாக்கி, கைக்களிறு, பொற்குடம் என உருபும் பொருளும் உடன்தொக்கனவும் வேற்றுமைத்தொகை யெனக்கொள்க; அவை - கையையுடைய களிறு, பொன்னாற் செய்த குடம் என விரியும்.

இனி, ஆசிரியர் தொல்காப்பியனார், "ஐயும் கண்ணு மல்லாப்பொருள் வயின, மெய்யுருபு தொகா இறுதி யான" எனக் கூறுதலால், ஐயுருபும் கண்ணுருபு மல்லாத நான்கு உருபும் - இடையிலன்றி இறுதியிலே தொகா வெனவும், அந்த ஐயுருபும் கண்ணுருபும் - கடந்தான் நிலம், இருந்தான் குன்றத்து என இறுதியிலும் தொகு மெனவும் கொள்க.

வேற்றுமையுருபுகள் இடையிலே தொகுமென்று ராயினும், அவை விரிந்துநிற்குமிடத்து எப்பொருள்படுமோ அப்பொருள்படுமிடத்தே தொகநிற்கும்; அப்பொருள் படாவிடத்தே தொக்கு நில்லாவாம்.

(உ - ம்.) சாத்தனை அடித்தான், சாத்தனோடு வந்தான் என ஐயுருபும் ஓடுஉருபும் விரிந்துநிற்குமிடத்துச் செயப்படுபொருளும் உடனிகழ்ச்சிப் பொருளும் படுதல் போல, சாத்தன் அடித்தான், சாத்தன் வந்தான் என அவ்வுருபுகள் தொக்குநிற்குமிடத்து அப்பொருள்படாததனால் இப்படிப்பட்ட இடங்களில் உருபு தொகாது நில்லாவென அறிக. (௧௨)

[உ. வினைத்தொகை]

† ஙசுச. காலங் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை.

(இ - ள்.) காலம் - காலங்காட்டும் வினையுருபாகிய இடைநிலையும் விகுதியும் முதலியன, கரந்த - மறைந்துநின்ற, பெயரெச்சம் - பெயரெச்சங்கள்,—வினைத்தொகை - வினைத்தொகைகளாம்; (எ - று.)

எனவே, பெயரெச்சவினையின் உருபாகிய விகுதியும் இடைநிலையும் முதலியன தொக்குநிற்கப் பகுதிமாத்திரமாய் நின்று முக்காலத்துக்கும் பொதுவாய பெயரெச்சப்பொருளை உணர்த்திப் பெயர்கொண்டு முடிவது வினைத்தொகை யென்றபடி.

காலங் காட்டுவனவற்றை 'காலம்' என்றது, காரியவாகுபெயர்.

(உ - ம்.) தோய்தயிர், பெய்மழை, அழிபொருள், உழுபடை.

இவை - முன்னும் பின்னும் வருகின்ற சொற்களின் குறிப்பால், நேற்றுத் தோய்ந்த தயிர், இன்று பெய்கிற மழை, நாளை அழியும் பொருள், முக்காலத்தும் உழுத உழுகிற உழும் படை என ஒருகாலம் பற்றியும் முக்காலம் பற்றியும் விரியும்.*

வருவழி, தருபொருள், அலமருநெஞ்சம் எனச் சிலவினைத்தொகை பகுதிவிகாரப்பட்டும் வரும். சிலபகுதிகள், வினைத்தொகையாக வாரா. (சஎ)

[ங. பண்புத்தொகை.]

‡ ஙசுரு. பண்பை விளக்கும் மொழிதொக் கனவும்
ஒருபொருட்கு இருபெயர் வந்தவும் குணத்தொகை.

(இ - ள்.) பண்பை விளக்கும் - பண்போடு பண்பிக்கு உள்ள ஒற்றுமையை விளக்குதற்கு வருகிற, மொழி - ('ஆகிய' என்னும்) பண்புருபு, தொக்கனவும் - மறைந்து நிற்பவையும், ஒரு பொருட்கு இருபெயர் வந்தவும் - (அப்பண்புருபு தொக்குநிற்க) ஒருபொருளுக்கு (சிறப்புப் பெயரும் பொதுப்பெயருமான) இருபெயர்கள் வந்தவையும்,—குணத்தொகை-பண்புத்தொகைகளாம்; (எ-று)—பண்பு-குணம்; அதனை யுடையது, பண்பி[குணி].

'பண்பு' எனப் பொதுப்படச் சொன்னதனால் - வண்ணம், வடிவு, அளவு, சுவை முதலியன எல்லாம் கொள்க. (வண்ணம் - நிறம். வடிவு - உருவம். அளவு - எண் முதலியன. சுவை - உருசி.) ஒரு பொருட்கு இருபெயர் வந்தது, இருபெயரொட்டுப் பண்புத்தொகை - யெனப்படும்; இதில் சிறப்புப்பெயர் முன்னும், பொதுப்பெயர் பின்னும் நிற்கும்.

(உ - ம்.) செந்தாமரை, கருங்குதிரை—வண்ணப் பண்புத்தொகை.

வட்டக்கல், சதுரப்பலகை—வடிவுப் பண்புத்தொகை.

* 'காலங்கரந்த பெயரெச்சம் வினைத்தொகை' என்றமையால், 'காலம் தோன்றும் பெயரெச்சம் தொகாநிலையா மென்க' என்பது பழையவுரை.

ஒருபொருள, முகக்குணம - அளவுப் பண்புத்தொகை.

துவாககாய, இனசொல்—சுவைப பண்புத்தொகை.

ஆயன்சாததன்,சாரைப்பாமபு—இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

செந்நிறக்குவளை, கருமபுருவசசிலை—பனமொழித்தொடர்.

இவை - செமமையாகிய தாமரை, வட்டமாகிய கல, ஒன்றாகிய பொருள, துவாப்பாகிய காய், ஆயனாகிய சாததன், செமமையாகிய நிற மாகிய குவளை என விரியும். செம்மையாகிய தாமரை யென்ற வாயபாட் டால விரிககபபட்டாலும, செந்நிறமுளளதாகிய தாமரையென்றே கரு தது. செமமையையுடைய தாமரையென வேற்றுமைபபொருள்பட விரி ததல், பொருளுககு ஒக்குமாயினுமம், சொல வியல்புககு ஒவ்வாது. (௪௪)

[௪. உவமத்தொகை]

¦ ௩௬௬. உவம வுருபிலது உவமத தொகையே.

(இ - ள்.) உவம உருபு - (வினை பயன் மெய உரு என்பவற்றைபபற்றி வருகிற) 'போல' முதலிய உவமவுருபுகள, இலது - மறைந்துநின்ற தொடாமொழிகள்,—உவமத தொகை - உவமததொகைகளாம; (எ - று.)— (வினை - தொழில. பயன - பிரயோசனம. மெய - வடிவம். உரு - நிறம.)

எனவே, உபமேபததுககும உபமானத்துககும இருககினற ஒபபுமையை விளக்குகினற 'போல' முதலிய உருபுகள் இடையிலே தொககுநிறக உபமானசசொல்லும உபமேயசசொலலும தொடாவது, உவமததொகையாம.

(உ-ம்.) புலிககொற்றன், குருவிகூப்பிட்டான—வினையுவமததொகை

மழைக்கை, கற்பகவள்ளல்—பயனுவமததொகை.

துடியிடை, வேயததோள்—மெய்புவமததொகை.

காாககூநதல், பவளவாய—உருவுவமததொகை.

மரகதககிளிமொழி, இருள்மழைககை—பன்மொழித்தொடர்.

இவை - புலிபோலுமகொறறன், மழைபோலும்கை, துடிபோலும் இடை, காாபோலும் கூநதல், மரகதமபோலும கிளிபோலும மொழி என விரியும்.

(துடி - உடுககை. வேய் - மூஙகில். மரகதம-பசசையிரததினம்.) (௪௫)

[உவமவுருபுகள்.]

‡ ௩௬எ. போலப புரைய ஒபப உறழ
மானக் கடுபப இயைய ஏய்ப்ப
நேர நிகர அன்ன இன்ன
என்பவும பிறவும உவமத் துருபே.

(இ - ள்.) போல ....நிகர 'போல' முதலிய வினையெச்சம் பத்தும், அன்ன இன்ன என்பவும - இபபெயரெசசம் இரண்டும், பிறவும - இவை போல்வன பிறவும,—உவமத்து உருபு - உவமவுருபுகளாம்; (எ - று)

'பிற' என்றதனால, போல், புரை முதலிய வினையடிகளும, அவ்வடியாற் பிறததற்கு உரிய மற்றை வினையெச்சஙகளும, வினைமுற்றுக்களும,

பெயரெச்சங்களும், பொருவ, ஏற்ப, அனைய, இகல, எதிர, சிவண, மலைய முதலியவையும் கொள்க. (௧௬)

[ரு. உம்மைத்தொகை]

† ௩௬௫. எண்ண லெடுத்தல முகத்தல நீட்டல
எனுநான் களவையு ளும்மில தத்தொகை.

(இ - ள்.) எண்ணல் எடுத்தல முகத்தல நீட்டல் எனும நான்கு அளவையுள - எண்ணலளவை எடுத்தலளவை முகத்தலளவை நீட்டலளவை என்கிற நால்வகை அளவைகளாற பொருளகளை அளக்குமிடத்துத் தொடாகிற அவ்வளவைப பெயாகளுள, உம இலது - 'உம்' எனனும இடைச்சொல் தொக்கு நிற்பவை,—அததொகை - அவவுமமைததொகை களாம; (எ - று.)

(உ-ம.) ஒன்றேகால், கபிலபரணா—எண்ண லுமமைததொகை.
கழஞ்சேகால், தொடியேகஃசு—எடுதத லும்மைததொகை.
கலனேகுறுணி, நாழியாழாக்கு—முகதத லும்மைததொகை.
சாணங்குலம், சாணரை—நீட்ட லுமமைததொகை.
சேரசோழபாணடியா, புலிவிறகெணடை—பன்மொழிததொடா.

இவை - ஒன்றும காலும, கழஞ்சும காலும், கலனும் குறுணியும, சாணும அங்குலமும், சேரனும சோழனும பாணடியனும் என விரியும. (கழஞ்சு, தொடி, கஃசு - சில எடையளவுகள)

இததொகையில் உமமை இடையிலமாததிரமே யனறி இறுதியிலும தொக்குநிற்பதனால, இதனை, இடையில தொகுமெனனும வேற்றுமைத தொகை முதலிய நானகிற்கும, இறுதியில தொகுமெனனும அனமொ ழிததொகைக்கும நடுவிலே வைததாரெனறு அறிக.

வினைததொகையும் பணபுததொகையும விரிநதால் தெரிநிலைப பெயரெச்சத தொகாநிலைததொடரும, உவமததொகை விரிநதால் சில விடத்து வினையெச்சத தொகாநிலைததொடரும, சிலவிடததுப் பெயரெச சததொகா நிலைத தொடரும, உமமைததொகை விரிநதால் இடைச்சொல தொகாநிலைத தொடருமா மெனக் காணக. (௧எ)

[௬. அன்மொழித்தொகை.]

‡ ௩௬௬. ஐந்தொகை மொழிமேற் பிறதொக லன்மொழி.

(இ - ள்.) ஐந்தொகை மொழிமேல் - (வேற்றுமைததொகை முதலிய) ஐவகைத தொகைநிலைத தொடாமொழிகளுக்கும புறததில். பிறதொகல - அவையல்லாத [பிறமொழிகளாகிய] உருபுகள் தொக்கு நிற்பவை,— அனமொழி - அனமொழித தொகைகளாம; (எ - று.)—(ஐந்துதொகைகளுக்கும் உரியன) அல்லாத மொழி தொக்குநிற்பது, அன்மொழிததொகை.

(உதாரணம்.)

(க) பூங்குழல்—இரணடாமவேற்றுமைததொகைப் புறததுப் பிறந்த அன் மொழித்தொகை; பூவையுடைய குழலை யுடையாள் என விரியும

பொற்றொடி—மூன்றும் வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை; பொன்னாலாகிய தொடியையுடையாள் என விரியும்.

அணியிலக்கணம்—நான்காம் வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை; அணிக்கு இலக்கணஞ் சொன்ன நூல் என விரியும்.

பொற்றாலி—ஐந்தாம் வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை; பொன்னினாலாகிய தாலியையுடையாள் என விரியும்.

சேரன்குடி—ஆறும்வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை சேரனது குடிமக்க ளிருக்கும் ஊர் என விரியும்.

கீழ்வயிற்றுக்கழலை—ஏழாம் வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை; கீழ்வயிற்றின்கண் எழுந்த கட்டிபோல்வான் என விரியும்.

(உ) தாழ்குழல்—வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை: தாழ்ந்த குழலையுடையாள் என விரியும்

(௩) ஆண்டகை—பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை; ஆண்மையாகிய தகுதியை [குணத்தை] யுடையான் என விரியும்.

(௪) துடியிடை—உவமத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை; துடிபோலும் இடையை யுடையாள் என விரியும்.

(௫) உயிர்மெய்—உம்மைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை, உயிரும் மெய்யும் கூடிப்பிறந்த எழுத்து என விரியும்.

தகரஞாழல்மார்பு—பன்மொழித்தொடர்; தகரமும் ஞாழலும் கூடி உண்டாகிய சாந்தை அணிந்த மார்பை யுடையான் என விரியும். (தகரம் - ஒருவகை வாசனைப்பொருள். ஞாழல் - குங்குமப்பூ)

இனி, பன்மொழித்தொடரில் அறுவகைத்தொகைகளும் கலந்து தொகுமாறு,—'திகழ் செவ் வான மதித் திருமுகப் பூங் குழல்' என வரும். இது, திகழுகிற செம்மையாகிய வானத்தின்கண் எழுந்த மதிபோலும் திருமுகத்தினையும் பூவையணிந்த குழலினையு முடையாள் என விரியும். (௧௮)

[தொகைநிலைத் தொடர்மொழியில் பொருள்சிறக்கும் இடம்]

௩௭௦. முன்மொழி பின்மொழி பன்மொழி புறமொழி
எனுநான் கிடத்தும் சிறக்கும் தொகைப்பொருள்.

(இ - ள்.) * முன் மொழி - முன்னின்ற மொழியும், பின்மொழி - பின் நிற்கும் மொழியும், பல மொழி - எல்லாமொழிகளும், புறம் மொழி - (இம்மொழிகளல்லாமல்) இவற்றின் புறத்திலவரும் மொழியும், எனும் - என்கிற,

* 'ரண்டு 'இடம்' என்றதனால், காலமுன் கொள்ளாது இடமுன் கொள்க' என்பது, பழைய உரை.

நான்கு இடத்தும் - நான்கு இடங்களுள் ஒன்றிலே, தொகை பொருள் சிறக்கும் - தொகைநிலைத்தொடர்மொழிகள் பொருள்சிறந்து நிற்கும்; (எ - று)

பொதுப்பட நான்கிடத்தும் பொருள்சிறக்கு மென்றாராயினும், உவமைத் தொகை பலமொழியினும், அன்மொழித்தொகை புறமொழியினும், மற்றை நான்கு தொகையும இடத்துக்கு ஏற்றபடி முன்மொழியிலாயினும் பின மொழியிலாயினும் பொருள் சிறக்கு மெனக் கொள்க

(உதாரணம்.)

(க) குடம வனைந்தான் விரி பூ செந் தாமரை, வேற் கண் என்பவற்றில் - குடம முதலிய முனமொழிகள பானை முதலிய தமஇனத்தை விலக்கி நிற்றலால், முனமொழியிற் பொருள் சிறந்தன.

(உ) நிலம உழுதான், சுடு நீ, செஞ்ஞாயிறு, புலி பாய்ந்தான் எனப வற்றில் - உழுதான் முதலிய பினமொழிகளைக் கூறியமாத்திரத்தில் நிலம முதலிய முனமொழிகள் தாமேவந்து இயைதலால், பினமொழியிற் பொருள் சிறந்தன.

(ங) இராப்பகல், சேரசோழபாண்டியா இவை முதலிய உவமைத் தொகைகளில - எல்லாமொழிகளிலும பொருள சிறந்தன.

(ச) பூங்குழல், உயிர்மெய் இவை முதலிய அன்மொழித்தொகைகளில் சொலலுவோனது கருத்து இவவிருமொழிப பொருளின் மேலுமாகாமல் உடையாள முதலிய புறமொழிப பொருளின மேல தாதலால், அவற்றிற பொருள சிறந்தன (௧௯)

[இடத்தொகை பெயர்த்தொகைகளுக்கு வேறுபாடு]

ஙஎ௧. வலலொற்று வரினே இடத்தொகை யாகும்
மெல்லொற்று வரினே பெயர்த்தொகை யாகும்.

(இ - ள்.) வல் ஒற்று வரின் - வலலெழுத்து (நிலைமொழி வருமொழிகளின் இடையே) வந்தால், இடத்தொகை ஆகும-இடப்பொருளில தொக்க ஏழாமவேற்றுமைத் தொகையாம; மெலலொற்று வரின்-மெல்லெழுத்து (இடையில்) வந்தால், பெயர்த்தொகை ஆகும - பெயர்கள தொக்க இருபெயரொட்டுப பண்புத்தொகையாம; (எ - று.)

(உ - ம.) (க) வடுகக்கண்ணன், துளுவச்சாத்தன், கன்னடக்கொற்றன் என இவை - வல்லொற்றுவந்த தொகையாதலால் வடுகநாட்டிற் பிறந்த கண்ணன், துளுவநாட்டிற்சாத்தன், கன்னடத்திற் கொற்றன் என விரியும.

(உ - ம்.) வடுகங்கண்ணன, துளுவஞ்சாத்தன், கன்னடங்கொற்றன் என இவை மெலலொற்றுவந்த தொகையாதலால், வடுகனாகிய கண்ணன், துளுவனாகிய சாத்தன, கன்னடனாகிய கொற்றன் என விரியும. இனி, சிறுபான்மை மெலலொற்றுவந்தபோது, வடுகனுக்குமகனாகிய கண்ணன் என இவ்வாறும் விரியும் எனறு அறிக.

வல்லொற்று முதல்மொழி வந்து புணர்ந்தபொழுது, "சிலவிகாரமாமுயர்திணை" என்றதனால் ஈறுகெட்டு அவ்வல்லொற்றும அதற்கு இனமான

மேலெலொற்றுமிகப்பெற்று, வேற்றுமைத்தொகையோ பண்புத்தொகையோ என ஐயப்பட நின்றபோது, இசைகுறியினால் துணியப்படுமென்றதாயிற்று. வடுகநாதன், வடுகவண்ணக்கன், வடுகவரசன் எனப் பிறமுதல்மொழிகள் வந்து புணராதால், சொல்லுவான் குறிப்பாலன்றி இவ்வாறு துணியப்படாவென்க.

[உம்மைத்தொகைக்குப் புறனடை]

‡ ௩௭௨. உயர்திணை யும்மைத் தொகை பல ரீறே.

(இ - ள்.) உயர்திணை உம்மைத்தொகை - உயர்திணை யொருமையில் வருகிற உம்மைத்தொகைகள், பலரீறே - (ரகரமெய்யும் 'கள்' என்பதுமாகிய) பலர்பால் விகுதிகளை ஈற்றிலுடையனவேயாம்; (எ - று.)
(உ-ம்.) கபிலபரணர் நபுலவிபுலர், சேரசோழபாண்டியர், தேவன்தேவிகள்.

'பலரீறே' என்ற தேற்றேகாரத்தால் - அஃறிணை யொருமையிலும் பொதுத்திணையொருமையிலும் வருகிற உம்மைத்தொகைகள் தம்தம் பன்மையீறாகவே வரவேண்டுமெனகிற நியதியில்லாமல், உண்மையின்மைகள், உண்மையின்மை, இராப்பகல்கள், இராப்பகல் எனவும்; தந்தைதாயர், தந்தைதாய், சாத்தன் சாத்தியர், சாத்தன்சாத்திகள், சாத்தன்சாத்தி எனவும் பன்மையீற்றாலும், ஒருமையீற்றாலும் வருமென்றதாயிற்று. (௨௧)

[தொகைநிலைத் தொடர்மொழிகள் பலபொருள் படுதல்]

௩௭௩. தொக்குழிமயங்குந இரண்டு முதலேழ்
எல்லைப் பொருளின் மயங்குமென்ப.

(இ - ள்.) தொக்க உழி - (வேற்றுமையுருபு முதலியன) தொக்குநின்ற இடத்து, மயங்குந - (பொருள்களால்) மயங்குதற்கு உரிய தொடர்மொழிகள், இரண்டுமுதல் ஏழ் எல்லை பொருளின் - இரண்டுமுதல் ஏழுவரையில் உள்ள பொருள்களால், மயங்கும் —, என்ப - என்று சொல்வர், (புலவர்); (எ - று.)

இது, பொருள்மயக்க மெனப்படும்.

தொகைநிலைத் தொடர்மொழிகள் விரித்துப் பொருள் கொள்ளப்படுமிடத்து ஒருபொருள் கொள்ளப்படுவதுமன்றி இரண்டுபொருள்முதல் ஏழு பொருள்வரையில் பலபொருள்களும் கொள்ளப்படுமென்றபடி. [மயங்குதல் - இணங்குதல்] தொக்குழி - தொக்கவுழி என்பதன் விகாரம்.

'பொருள்' எனப் பொதுப்படச் சொன்னதனால், பெரும்பாலும் தொகைநிலைப்பொருளாலும், சிறுபான்மை தொகாநிலைப் பொருளாலும் மயங்கும்.

(உதாரணம்.)

தெய்வவணக்கம் - தெய்வத்தை வணங்கும் வணக்கம், தெய்வத்துக்கு வணக்கம் என இரண்டு பொருள்களால் மயங்கியது.

தற்சேர்ந்தார் - தன்னைச் சேர்ந்தார், தன்னொடு சேர்ந்தார், தன்கண் சேர்ந்தார் என மூன்று பொருள்களால் மயங்கியது.

‡ ௩-௬

சொல்லிலக்கணம் - சொல்லுக்கு இலக்கணம், சொல்லினது இலக்கணம், சொல்லின்கண் உள்ள இலக்கணம், சொல்லிலக்கணம் சொன்ன நூல் என நான்குபொருள்களால் மயங்கியது.

பொன்மணி - பொன்னையுடைய மணி, பொன்னாலாகிய மணி, பொன்னொடு சேர்ந்த மணி, பொன்னின்கண் உள்ள மணி, பொன்னும் மணியும் என ஐந்து பொருள்களால் மயங்கியது.

மரவேலி - மரத்தைக்காக்கும் வேலி, மரத்தாலாகிய வேலி, மரத்திற்கு வேலி, மரத்தினது வேலி, மரத்தின் புறத்து வேலி, மரமாகிய வேலி என ஆறுபொருள்களால் மயங்கியது

சொற்பொருள் - சொல்லாலறியப்படும் பொருள், சொற்குப் பொருள், சொல்லினது பொருள், சொல்லின்கண் பொருள், சொல்லாகிய பொருள், சொல்லும் பொருளும், சொல்லானது பொருள் என ஏழுபொருள்களால் மயங்கியது. (சொல்லானது பொருளென்றது, தொகாநிலைப் பொருளான எழுவாய்த்தொடர்).

புலி கொல் யானை என்னும் பன்மொழித்தொடர் - புலியைக் கொன்ற யானை, புலியானது கொன்ற யானை, புலியினால் கொல்லப்பட்ட யானை என மூன்று பொருள்களால் மயங்கியது.

இவ்வாறு எளிதிற் பொருள்கொள்ளாமல், வலிதிற் பொருள்கொள்ளப் புகுந்தால் எழுத்திலையென்னும் வரம்பில் நில்லாமல் பலவாமாகலின் அது மரபன்று என்பார், 'எனப' எனப் புலவர்மேல் ஏற்றிக் கூறினார் (உஉ)

## தொகாநிலைத் தொடர்மொழிகள்.

### [தொகாநிலைத் தொடர்மொழி இத்தனையென்பது]

‡ ௩எச. முற்றீ ரெச்ச மெழுவாய் விளிப்பொருள்
ஆறுரு பிடையுரி அடுக்கிவை தொகாநிலை.

(இ - ள்) முற்று - வினைமுற்றும், ஈர் எச்சம் - பெயரெச்சமும் வினையெச்சமும், எழுவாய் - எழுவாயும், விளி - விளியும் ஆகிய, பொருள் வகைப்பொருளில் (பெயர் வினைகள் புணரும் புணர்ச்சியும்), ஆறு உருபு - (வேற்றுமைப்பொருளில் அவற்றின் உருபுகளாகிய இரண்டாவது முதலிய) ஆறு உருபுகளும் (இடையில் விரிந்து நிற்கப் பெயர் வினைகள் புணரும் புணர்ச்சியும), இடை - இடைச்சொற்புணர்ச்சியும், உரி - உரிச்சொற்புணர்ச்சியும், அடுக்கு - ஒருசொல் அடுக்கிவரும் புணர்ச்சியும், இவை - ஆகிய இவ்வொன்பதும்,—தொகாநிலை - தொகாநிலைத் தொடர்மொழிகளாம்; (எ - று.)

தொகாநிலைத் தொடர்மொழிகளாவன - நிலைமொழி வருமொழிகளின் இடையில் வேற்றுமையுருபு முதலியன தொக்குநில்லாமலும், ஒருமொழித் தன்மைப்படாமலும் சொற்கள் தொடர்வன.

(உ - ம்.) (க) உண்டான் சாத்தன் (தெரிநிலை) } வினைமுற்றுத்தொடர்.
பெரியன் கொற்றன் (குறிப்பு) }

(உ) உண்டசாத்தன் (தெரிநிலைப்) } பெயரெச்சத்தொடர்
சரிய சாத்தன் (குறிப்புப்)

(ரு) உண்டு வந்தான் (தெரிநிலை) } வினையெச்சத்தொடர்.
விருந்தின்றிஉண்ணுன் (குறிப்பு)

(சு) சாத்தான் வந்தான்—எழுவாய்த்தொடர்.

(ரு) சாத்தா வா —விளித்தொடர்.

(சு) குடத்தை வனைந்தான்
வாளால் வெட்டினுன்
இரப்போர்க்கு ஈந்தான்
மலையின் இழிந்தான்
சாத்தனது கை
மணியினகண் ஒளி.
— வேற்றுமைத் தொகாநிலைத் தொடர்

(எ) மற்று ஒன்று—இடைச்சொல்தொடர்.

(அ) நனி பேதை—உரிச்சொல் தொடர்.

(க) பாம்பு பாம்பு—அடுக்குத் தொடர்.

இவையெல்லாம் நிலைமொழிநோக்கி யுணர்க. (உரு)

## வழு, வழாநிலை, வழுவமைதி.

[வழுக்கள் - எ]

ரு எரு திணையே பாலிடம பொழுது வினஇறை
மரபா மேழும் மயங்கிளும வழுவே.

(இ - ள்.) திணையே - இருதிணையும், பால - ஐம்பாலும், இடம-மூவிடமும, பொழுது - மூக்காலமும, விஞ-விஞவும், இறை - விடையும, மரபு - (பலவகை) மரபுகளும, ஆம - ஆகிய, ஏழும—, மயஙகின் - தம் தம முறை தவறிவந்தால, வழு ஆம - வழுவாகும்; (எ - று.)—ஆகையால், இவ்வாறே எழுவகை வழுககளையும அறிந்து, வழக்கிடத்தும செய்யுளிடத்தும் அவை வாாமல் நீக்குக.

திணை முதலிய ஆறும மரபா மாஞலும், இஙகே ஒகோகாதொழிந்தவற்றையே மரபெனறு கொளக வெனபார, அதனை இறுதியிற் கூறிஞா.(மரபு - தொன்றுதொட்டு வழஙகும முறைமை; இறை - எதிாமொழி, விடை.)

சொற்கள தொடருமிடத்து, முடிக்கப்படும் சொறகளோடு முடிக்கும் சொறகள் திணை பால இடம் காலம விஞ விடை மரபு என்னும இவ்வேழிலும மாறுபடாமல் தொடாந்துநிறபது, முறைமையாம; அவ்வாறு தொடாநது நிறபன, ‘வழாநிலை’ எனப்படும. வழாநிலையாவது - இலககணக்குற்றமிலலாதது. அததிணை பால் முதலியவறறில் மாறிநிறபன, ‘வழு’ வாம். வழுவாவது - இலககணக குறற முள்ளது. அவற்றில மாறிநின்று இலக்கணககுறற முளளதாகக காணப்பட்டாலும், முன்ஞேபோல இருக்கலாமென்று ஏறறுககொணடு அமைககப்பட்டன, ‘வழுவமைதி’ யாம. இம்மூன்றனுள், வழு நீககப்படும , மற்றை இரணடும் கொளளப்படும

(உ - ம்.) (க) அவன் வந்தது—திணை வழு.
(௨) அவன் வந்தாள்—பால் வழு.
(௩) யான் வந்தான்—இட வழு.
(௪) நாளை வந்தான்—கால வழு.
(௫) கறக்கிற எருமை பாலோ சினையோ?—வினா வழு.
(௬) பட்டுக்கோட்டைக்கு வழி எது? என்றால் கொட்டைப்பாக்கு எட்டுப்பணம் என்பது. } விடை வழு
(௭) யானை செலுத்துபவனை இடையனென்பது-மரபுவழு. (௨௪)

[வினாவிடைகள் திணைபால்களில் வழுவாமை.]

† ௩௭௬. ஐயந் திணைபா லவ்வப் பொதுவினும்
மெய்தெரி பொருள்மே லன்மையும் விளம்புப.

(இ - ள்.) திணை பால் ஐயம் - திணைப்பொருளிலும் பாற்பொருளிலும் ஐயம் (சந்தேகம்) தோன்றியவிடத்து அதனை,—அவ்வப்பொதுவினும் அத்திணைகளுக்கும் பால்களுக்கும் பொதுவாகிய சொல்லாலும்—மெய் தெரி பொருள்மேல் - உண்மையாகத் துணிந்த பொருளின்மேல், அன்மையும் - அல்லாத தன்மையை வைத்தும்,—விளம்புப-சொல்வார், (அறிவுடையோர்.)

(உதாரணம்.)

வினா. (க) திணையில் ஐயம் தோன்றுகிறபோது, 'குற்றியோ மகனோ அவ்விடத்துத் தோன்றுகிற உரு' எனப் பொதுச்சொல்லால் வினவுக. குற்றிக்கும் மகனுக்கும் பொதுப்பட நிற்றலால், உரு - பொதுச்சொல்லாயிற்று. (குற்றி - கட்டை) இவ்வாறு கூறாமல் தோன்றுகின்றது. தோன்றுகின்றான் எனச் சிறப்புச்சொல்லாற்கூறின், திணைவழுவும் வினாவழுவுமாம்.

(௨) க. உயர்திணையிற் பால் ஐயம் தோன்றியபோது, 'ஆண்மகனோ பெண்மகளோ அங்கே தோன்றுகிறவர்' எனப் பொதுச் சொல்லால் வினவுக. ஆண் பெண் இரண்டல்லது பலர்பாலென வேறொன்று இல்லாமல் அவ்விருபாலுக்கும் பொதுப்பட நிற்றலால், தோன்றுகிறவர் என்பது - பொதுச் சொல்லாயிற்று. தோன்றுகிறவன் தோன்றுகிறவள் எனச் சிறப்புச்சொல்லாற்கூறின், பால்வழுவும் வினாவழுவுமாம்.

௨. அஃறிணையிற் பால் ஐயம் தோன்றியபோது, 'ஒன்றோ பலவோ இவ்வயல்புகுந்த மாடு' எனப் பொதுச்சொல்லால் வினவுக. மாடு என்பது - பால்பகா அஃறிணைப்பெயராய், அத்திணை யிருபாலுக்கும் பொதுச்சொல்லாயிற்று. புக்கது புக்கன எனச் சிறப்புச்சொல்லாற்கூறின், பால்வழுவும் வினாவழுவுமாம்.

விடை. (க) குற்றியோ மகனோ என்று ஐயப்பட்டு வினவியபோது, துணிந்த பொருள் குற்றியாயின் 'மகனன்று' என்றும் மகனாயின் 'குற்றி

யல்லன்' என்றும் துணிந்த பொருளின்மேல் மற்றொன்றல்லாத தன்மையை வைத்துக் கூறுக.

(உ) க ஆண்மகனோ பெண்மகளோ என்று ஐயப்பட்டு வினாவியபோது துணிந்தபொருள் ஆண்மகனாயின் 'பெண்மகளல்லன்' என்றும், பெண்மகளாயின 'ஆண்மகனல்லள்' என்றும் துணிந்த பொருளின்மேல் மற்றொன்றலலாத தன்மையை வைத்துக் கூறுக.

உ. ஒன்றோ பலவோ என்று ஐயப்பட்டு வினாவியபோது, துணிந்த பொருள் ஒன்றாயின 'பலவன்று' என்றும், பலவாயின் 'ஒன்றல்ல' என்றும் துணிந்தபொருளினமேல் மற்றொன்றலலாத தன்மையை வைத்துக் கூறுக.

'மகனலலன், அவ்வுருக் குற்றி' என இவ்வாறு கூறினல், சொல்பெருகுத லென்னும் விடைவழுவாம். (உரு)

[திணை வழுவமைதி.]

‡ ருஎஎ உயர்திணை தொடர்ந்த பொருள்முத லாறும்
அதனொடு சார்த்தி னத்திணை முடிபின.

(இ - ள்) உயர்திணை - உயர்திணையெழுவாயை, தொடர்ந்த தொடர்ந்து வந்து தானும் எழுவாயாக நிற்கின்ற, பொருள் முதல் ஆறும் - (அஃறிணையாகிய) பொருள் இடம் முதலிய ஆறும், அதனொடு சார்த்தின - அவ்வுயர் திணையோடு சேர்த்து முடிக்கப்பட்டால், அத் திணை முடிபின - அவ்வுயர் திணைமுடிபைப் பெறுவனவாம்; (எ - று)

தொடர்தலாவது - அஃறிணையாகிய பொருள் முதலிய ஆறும் உயர் திணைக்குச் சம்பந்தப்பட்டதாக நிற்றல். சார்த்தலாவது - அஃறிணையாகிய பொருள் முதலியவற்றின் தன்மையை அவற்றையுடைய உயர்திணையின் மேல் ஏற்றிக்கூறுதல்

(உ - ம.) நம்பி பொன் பெரியன் —பொருள்
நம்பி நாடு பெரியன —இடம
நம்பி வாழ்நாள் பெரியன்—காலம
நம்பி மூக்குக் கூரியன —சினை
நம்பி குடிமை நல்லன —குணம்
நம்பி நடை கடியன —தொழில்

இங்கே உயர் திணையெழுவாயின பயனிலையோடு அஃறிணை யெழுவாயும் முடிந்தமை அறிக.

பொன் என்னும அஃறிணையெழுவாய், நம்பி என்னும் உயர்திணை யெழுவாயினது பயனிலையாகிய பெரியன என்னும உயர்திணைவினையைக் கொண்டு முடிதலால் வழுவாகி, தொடர்புண்டாயிருத்தலபற்றிச் சார்த்தி முடித்தலால் வழுவமைதியாயிற்று அஃறிணையாகிய பொன்னினது தன்மையான பெருமை, அதனையுடைய உயர்திணையாகிய நம்பியின்மேல் ஏற்றப்பட்டது.

இனி, இனைறு நீர் ஊற்றிற்று, மாடு கோடு கூரிது என அஃறிணையோடு சேர்ப்பின் அஃறிணைமுடிபினவாதலும் கொள்க.

'சார்த்தின்' எனவே, சார்த்தாவிட்டால வழாநிலையாக நம்பிக்குப் பொன் பெரிது, நம்பிக்கு வாழ்நாள் பெரிது எனத் தம முடிபு கொள்ளும். (உசு)

[பலபொருள்கலக்கையில் திணை பால் மரபு வழுவமைதி.]

‡ ௩௭௯ திணை பால பொருள் பல விரவின சிறப்பினும்
மிகவினு மிழிபினு மொருமுடி பினவே.

(இ - ள்.) திணை - திணைகளும், பால்-பால்களும், பல பொருள்-(வெவ்வேறு வினைகளுக்கு உரிய) பலபொருள்களும், விரவின-கலந்து ஒருதொடரால் வருவனவாயின அவை,—சிறப்பினும் - சிறப்பினாலும், மிகவினும் - மிகுதியினாலும், இழிபினும் - இழிவினாலும், ஒரு முடிபின - ஒருமுடிபைப் பெறுவனவாம், (எ - று.)

(உதாரணம்.)

திணை (க) 'பொன்னனும் குதிரையும் வந்தார்கள்' என்பதில் - இருதிணையும் கலந்து, சிறப்பினால் 'வந்தார்கள்' என்னும் உயர்திணை முடிபைப் பெற்றன. உயர்திணையாயிருத்தல், இங்கே சிறப்பு.

(உ) 'பார்ப்பார் தவரே சுமந்தார் பிணிப்பட்டார், மூத்தார் சிறியார் பசுப் பெண்டி ரென்றிவர்கட்கு'' என்பதில் இருதிணையும் கலந்து, மிகுதியால் 'இவர்கள்' என்னும் உயர்திணைமுடிபைப் பெற்றன. பசு என்ற அஃறிணைப்பொருள் ஒன்றேயாக, பார்ப்பார் முதலிய உயர்திணைப்பொருள் ஏழாதல், இங்கே மிகுதி.

(௩) 'மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா' என்பதில் - இருதிணையும் கலந்து இழிவினால் 'விடா' என்ற அஃறிணைமுடிபைப் பெற்றன. விடத்தக்கதை விடாமை, இங்கே இழிவு.

பால் "தானும் தன்தையலும் தாழ்சடையோ னுண்டிலனேல்'' என்பதில் - ஆண்பாலும் பெண்பாலும் கலந்து, சிறப்பினால் 'உண்டிலன்,' என்னும் ஆண்பால் முடிபைப் பெற்றன. பெண்ணினும் ஆண் உயர்ந்தமை, இங்கே சிறப்பு.

இனி, கலவாமல் எண்ணிமுடிக்கும்போது, 'தோழனும் தானும் வந்தான்,' 'தோழியும் தானும் வந்தாள்' என ஒருமைமுடிபையேற்றலும் கொள்க.

மரபு. கறியும் சோறும் உண்டான், மாலையும் முடியும் கவித்தான் என்பவற்றில்-வெவ்வேறு வினைகளுக்கு உரிய பலபொருள்கள்கலந்து, சிறப்பினால் 'உண்டான்,' 'கவித்தான்' என ஒருபொருளுக்கு உரிய வினைமுடிபைப் பெற்றன. உண்ணலென்னும் வினைக்கு உரியசோறு - தின்னலென்னும் வினைக்கு உரிய கறியினும் தலைமையுடைமையும், கவித்தலென்னும் வினைக்கு உரிய முடி - சூடுதலென்னும் வினைக்கு உரிய மாலையினும் தலைமையுடைமையும், இங்கே சிறப்பு.

(இங்கே இறுதியிற் சொல்லிய மரபுவழுவமைதி, "வேறுவினைப் பல பொருள்'' என மேல்வருஞ் சூத்திரத்தோடு மாறுகொள்ளக்கூறலன்றோ வெனின்;—சிறப்பு முதலியன குறியாமல் எண்ணியபோது முடியும் மரபு அங்கே கூறுதலால், மாறுகொள்ளக்கூறலன் றென்க. (உஎ)

[திணை பால் வழுவமைதி.]

‡ ௩எகூ உவப்பினு முயர்வினுஞ் சிறப்பினுஞ் செறலினும்
இழிபபினும் பாலதிணை இழுக்கினு மியலபே.

(இ - ள) உவப்பினும - மகிழ்ச்சியினுலும, உயர்வினும - மேன்மைப் படுத்திச சொலலுதலினுலும, சிறப்பினும - சிறப்பினுலும, செறலினும - கோபத்தினுலும, இழிபபினும - பழிபபினுலும, பால திணை - பாலும திணை யும, இழுக்கினும - வழுவிவந்தாலும, இயலபே - அமைதியேயாம; (எ - று.)

பால் (க) தன் புதலவனை 'என் அம்மை வந்தாள்' எனபது உவப்பி னுல ஆணபால் பெணபாலாயிறறு.

(உ) ஒருவனை 'அவர் வந்தார்' எனபது, உயர்த்திச சொலலுத லால் ஒருமைபபால பனமைபபாலாயிறறு.

(௩) "மகிழ்வாரகும அலலாரகும தாயாகித் தலையளிக்கும தணடுறை யூரன்" எனபது சிறப்பினுல் ஆணபால் பெண பாலாயிற்று.

(௪) "எனைததுணையராயினு மென்னும தினைததுணையும், தேரான் பிறனில புகல" என்பது, கோபத்தினுல் பன்மைப பால ஒருமைப்பாலாயிறறு

(ரு) பெணவழிச செலபவனை 'இவன பெண்' எனபது, இழிவி னுல் ஆணபால் பெணபாலாயிறறு.

திணை. (க) ஒரு பசுவை 'என அம்மைவந்தாள்' என்பது, உவப்பினுல் அஃறிணை உயர்திணையாயிறறு.

(உ) 'பசுவகிளியார் சென்றார்க்கு' என்பது, உயர்த்திச சொல லுதலால் அஃறிணை உயர்திணையாயிற்று. (கிளியார - கிளி.)

(௩) "தமபொரு ளென்ப தமமக்கள்" என்பது சிறப்பினுல உயர்திணை அஃறிணையாயிற்று.

(௪) "எவவும செயகலான் தான்தேரா னவ்வுயிர், போஒமளவு மோர் நோய்" என்பது, கோபத்தினுல உயர்திணை அஃ றிணையாயிற்று.

(ரு) 'நாம கடவுளுடைமை' என்பது, இழிவினுல் உயர்திணை அஃறிணையாயிற்று. இங்கே, இழிவு - தமது பணிவு.

இனி, மகனை 'அப்பன் வநதான' என்றும், மகளை 'அம்மை வந் தாள்' என்றும வழஙகும மரபுவழுவமைதிகளும கொள்க. (உஅ)

[பால் இட வழுவமைதி]

‡ ௩அ0 ஒருமையிற் பன்மையும் பன்மையி னொருமையும்
ஓரிடம் பிறஇடந் தழுவலு முளவே.

(இ - ள்.) ஒருமையின் பனமையும ஒருமைப்பாலில் பன்மைப்பாற சொல்லையும், பன்மையின் ஒருமையும் - பனமைப்பாலில் ஒருமைப்பாற்

சொல்லையும், ஓர் இடம் பிற இடம் - ஓரிடத்தில் பிற இடச்சொல்லையும், தழுவலும் - தழுவிக்கூறுதல்களும், உள - உளவாம். (எ - று.)

(உதாரணம்.)

பால். (க) 'வெயிலெல்லாம் மறைத்தது மேகம்' என்பதில், வெயில் என்னும் ஒருமைப்பாலில் எல்லாம் என்னும் பன்மைப்பாற்சொல் சேர்த்துச் சொல்லப்பட்டது. (வெயில் முழுவதையும் என்று கருத்து.) இது, ஒருமைப்பன்மை மயக்கம்.

(உ) 'இரண்டு கண்ணும் சிவந்தது' என்பதில், இரண்டு என்னும் பன்மைப்பாலில் சிவந்தது என்னும் ஒருமைப்பாற்சொல் சேர்த்துச் சொல்லப்பட்டது. (தனித்தனி சிவந்தது என்று கருத்து.) இது, பன்மையொருமைமயக்கம்.

இடம். (க) 'சாத்தன் தாய் இதைச் செய்வேனே' என்பதில், யான் எனச் சொல்லவேண்டும் தன்மையில் தாய் எனப் படர்க்கைச் சொல் சேர்த்துச் சொல்லப்பட்டது, 'சாத்தன் தாயாகிய யான்' என்பது பொருள். இது, தன்மைப் படர்க்கை.

(உ) 'எம்பியை யீங்குப்பெற்றேனே'' என்பதில், தன் தம்பியை முன்னிலைப்படுத்தி அவனையே நோக்கிக் கூறுதலால் நின்னை எனச் சொல்லவேண்டும் முன்னிலையில் எம்பியை எனப் படர்க்கைச் சொல் சேர்த்துச் சொல்லப்பட்டது. இது, முன்னிலைப் படர்க்கை.

நீயோ அவனோ யார் இது செய்தார், யானோ அவனோ யார் இது செய்தார், நீயோ யானோ யார் இது செய்தார், நீயோ அவனோ யானோ யார் இது செய்தார், எனக் கலந்து ஓரிடத்தில் பிற இடம் வருதலும் கொள்க. (உக)

[இடம் வழுவாமற் காத்தல்.]

௱௰௯. தரல் வரல் கொடை செலல் சாரும் படர்க்கை
எழுவா யிரண்டும் எஞ்சிய வேற்கும்.

(இ - ள்) தரல் வரல் கொடை செலல் - இந்நான்கு சொற்களும், படர்க்கை - படர்க்கையை, சாரும் - அடையும்; எழுவாய் இரண்டும் - (இவற்றுள்) முதலில் நின்ற (தரல் வரல் என்னும்) இரண்டு சொற்களும், எஞ்சிய ஏற்கும் - ஒழிந்த தன்மை முன்னிலைகளையும் ஏற்கும்; (எ - று)—இங்கே, 'எழுவாய்' என்னும் சொல், முதலென்னும் பொருளது.

தரல் முதலியன - அந்தந்தப்பகுதிகளை உணர்த்திநின்றன வாதலால், அப்பகுதிகளாற் பிறக்கும் வினைகளையெல்லாம் கொள்க.

(உதாரணம்.)

அவனுக்குத் தந்தான் } அவனுக்குக் கொடுத்தான் } நான்கும் படர்க்
அவனிடத்து வந்தான் } அவனிடத்துச் சென்றான் } கையைச் சார்ந்தன.

எனக்குத் தந்தான், உனக்குத் தந்தான் } முதலிரண்டும் மற்ற
என்னிடத்து வந்தான், உன்னிடத்து வந்தான் } வைகளை ஏற்றன.

தரல் வரல் என்னும் இரண்டையும் தன்மை முன்னிலைகளுக்கும் கூட்டியதனால் - படர்க்கைக்கே சிறந்தன-கொடை செலல் என்னும் இரண்டும் என்பதும், மற்றைத் தரலும் வரலும் படர்க்கைக்கு அவ்வளவாகச் சிறந்தனவல்ல என்பதும், கொடை செலல்கள் தன்மை முன்னிலைகளுக்கு வாரா என்பதும் பெறப்படும் இது, பெரும்பான்மைபற்றிய பழைய வழக்கு.

இவை - சிறுபான்மை இம்முறை தவறி எனக்குக் கொடுத்தான், நின்பால் சென்றான் என மாறி வருதலும் உண்டு: அவை முன்கூறிய இடவழுவமைதியின் பால் படும்.

வினைச்சொல் பால்குறிக்கும் விகுதியால் மூன்றிடங்களுக்கும் உரிய தாதலை வினையியலிற்கூறி, தரல் முதலிய நான்கும் பகுதிதானே இடங்குறித்து நிற்றலால், இங்குக் கூறினார், அவற்றுள் அடங்காமையின்.

'ஈங்கு' முதலியன தன்மையிலும், 'ஆங்கு' முதலியன படர்க்கையிலும் வருதலையும் இங்கே அமைத்துக்கொள்க. (௯௦)

[காலம்.]

௯௪. இறப்பெதிர்வு நிகழ்வெனக் காலம் மூன்றே.

(இ - ள்.) காலம் - (முன்சொல்லப்பட்ட) காலம்,—இறப்பு - இறந்த காலமும், எதிர்வு - எதிர்காலமும், நிகழ்வு - நிகழ்காலமும், என - என்று, மூன்று - மூன்றாம்; (எ - று.)

இறப்பு - நடந்தது. எதிர்வு - நடக்கப்போகிறது. நிகழ்வு - நடக்கிறது. நிகழ்காலச்சொல் மற்றையகாலங்களுக்கும் உரியதாகுந் தன்மையைக் கருதி, அதனை இறுதியில் வைத்தனர் எனக. (௯க)

[கால வழுவமைதி.]

| ௯௫. முக்கா லத்தினு மொத்தியல் பொருளைச்
செப்புவர் நிகழும் காலத் தானே.

(இ - ள்.) முக்காலத்தினும் ஒத்து இயல் பொருளை-மூன்று காலங்களிலும் (தம்தொழில் இடைவிடாமல்) ஒரு தன்மையாக நடக்கின்ற பொருள்களை, நிகழும் காலத்தான் நிகழ்காலத்தினால், செப்புவர்-சொல்லுவர்;(எ று)

(உ - ம்.) மலை நிற்கின்றது, தெய்வம் இருக்கின்றது, கடவுள் அளிக்கின்றார். (மலைக்கு நிற்றலும், தெய்வத்திற்கு இருத்தலும், கடவுளுக்கு அளித்தலும் முக்காலத்திலும் உள்ளனவாதல் காண்க.) (௯உ)

[இதுவும் அது]

‡ ௯௬. விரைவினு மிகவினுந் தெளிவினு மியல்பினும்
பிறழவும் பெறூஉமுக் காலமு மேற்புழி.

(இ - ள்) விரைவினும் - விரைவினாலும், மிகவினும் - மிகுதியினாலும், தெளிவினும் - தெளிவினாலும், இயல்பினும் - (இம்மூன்று காரணங்களு மில்லாமல்) இயல்பினாலும், முக் காலமும் - மூன்று காலங்களும், பிறழவும்

பெரூஉம - ஒன்று மற்றொன்ருக மாற்றிச சொலலபபடவும் பெறும் ஏற்பு உழி - ஏற்குமிடதது; (எ - று.)—மிகுதி - பெரும்பானமை.

(உதாரணம்.)

(க) உணடுபோவதறகு இருப்பவனை விரைவில் உடன் அழைததுக்கொணடுபோகவேணடிய மறறொருவன் 'இன்னும உணடிலையோ?' என்ருல, அவன் 'உணடே னுணடேன்' என்பான். உணகிறவனை அவவாறு வினவினுல் அவனும 'உணடே னுணடேன்' என்பான். இஙகே விரைவினுல், எதிர்காலமும, நிகழ்காலமும - இறந்தகாலமாகச சொல்லப்பட்டன.

(உ) அககாட்டில போனுல் கூறை பறிகொடுததான், பறிகொடுக்கிருன்; களவுசெய்தால் கையறுககப்பட்டான், கையறுககபபடுகிருன என்பவற்றில், மிகுதியினுல், எதிர்காலம - இறந்தகாலமும் நிகழ்காலமுமாகச சொல்லப்பட்டது. கூறை பறிகொடுத்தலும், கையறுககபபடுதலும் சிறுபான்மை தப்பினுலும தப்புமாதலால், மிகுதி யெனப் பட்டன.

(௩) அறம்செய்தால் சுவாககம் புகுந்தான், புகுகின்ருன்; எறும்பு முட்டை யெடுததுக்கொணடு மேடேறினுல் மழைபெய்தது, பெயகின்றது என்பவறறில், தெளிவினுல், எதிர்காலம-இறந்தகாலமும், நிகழ்காலமுமாகச சொல்லப்பட்டது. சுவாககமபுகுதற்கு அறஞ்செய்தல் காரணமென்பது சாஸதிரப்பிரமாணததினுலும், மழை பெயதற்கு எறும்பு முட்டையெடுததுககொணடு மேட்டில ஏறுதல் அறிகுறி யெனபது பிரதியக்ஷ பிரமாணததினுலும் தெளியப்பட்டதனுல், தெளிவாயின.

(௪) யாம் முன்னே விளையாடுவது இசசோலை, விளையாடுகிறது இசசோலை என்பவற்றில், வேறொருகாரணமு மில்லாமல, இயலபினுல், இறந்தகாலம - எதிர்காலமும் நிகழ்காலமுமாகச சொலலபபட்டது. (௩௩)

[அறுவகை வினு.]

1 ௩௮௫. அறிவு அறியாமை ஐயுறல கொளல் கொடை
ஏவல் தரும் வினு ஆறு மிழுக்கார்.

(இ - ள்.) அறிவு - அறிதலும, அறியாமை - அறியாமையும், ஐயுறல் - சந்தேகப்படுதலும, கொளல - வாஙகிககொளளுதலும, கொடை - கொடுததலும், ஏவல் - ஏவுதலும் ஆகிய அறுவகைப பொருளையும, தரும் - தருதலால் வருகின்ற, வினு ஆறும - ஆறுவகை வினுக்களையும, இழுககார - தவருமல கொள்வா, (புலவா); (எ - று.)

(உதாரணம்.)

(க) ஆசிரியன் 'இசசூததிரததிற்குப் பொருளயாது?' என்பது - அறிவினு.

(உ) மாணுககன் 'இசசூததிரததிற்குப் பொருள்யாது?' என்பது - அறியாவினு.

(௩) 'குற்றியோ? மகனே?' என்பது - ஐயவினு.

* 'இழுக்கா' என்றும் பிரதிபேதம்.

(ச) 'பயறு உள்ளதோ வணிகரே?' என்பது - கொளல்வினா.
(ரு) 'சாத்தனுக்கு ஆடையில்லையோ?' என்பது - கொடைவினா.
(சு) 'சாத்தா! உண்டாயா?' என்பது - ஏவல்வினா.

(அறிவினா - தான் ஒருபொருளை அறிந்திருந்து அப்பொருளை பிறர்க்குத் தெரியுமாவென்பதை அறிதற்பொருட்டு அதனைக்குறித்துப் பிறரைக்கேட்பது. அறியாவினா - தான் அறியாத ஒரு பொருளை அறிந்து கொள்ளுதற் பொருட்டுப் பிறரைக் கேட்பது. ஐயவினா - தனக்குச் சந்தேகமாயிருப்பதொரு பொருளை அச்சந்தேகம் தீர்த்துக் கொள்ளுதற் பொருட்டுப் பிறரைக் கேட்பது. கொளல்வினா - தான் ஒருபொருளை வாங்கிக் கொள்ளுதற்பொருட்டு அப்பொருள் இருத்தலைப்பற்றிப் பிறரைக் கேட்பது. கொடைவினா - தான் ஒருபொருளைக் கொடுத்தற்பொருட்டு அப்பொருள் இருத்தலைப்பற்றிப் பிறரைக் கேட்பது. ஏவல்வினா - தான் ஒருதொழிலைச் செய்யும்படி ஏவுதற் பொருட்டு அத்தொழிலின் நிகழ்ச்சியைப்பற்றிப் பிறரைக் கேட்பது.) (௩௪)

[எட்டுவகை விடை.]

௩௫௬. சுட்டு மறை நேர் ஏவல் வினாதல்
உற்ற துரைத்த லுறுவது கூறல்
இனமொழி யெனுமெண் ணிறையு ளிறுதி
நிலவிய ஐந்துமப் பொருண்மையின் நேரப.

(இ - ள்.) சுட்டு - குறித்துக்காட்டிக் கூறுதலும், மறை-எதிர்மறுத்துக் கூறுதலும், நேர - உடன்பட்டுக்கூறுதலும், ஏவல் - எதிராக ஏவுதலும், வினாதல் - எதிராக வினவுதலும், உற்றது உரைத்தல் - நேர்ந்ததைச் சொல்லுதலும், உறுவது கூறல் - இனி நேர்வதைச் சொல்லுதலும், இனம் மொழி - (வினவியதற்கு) இனமானதைச் சொல்லுதலும், எனும்-என்ற, எண் இறையுள் - இவ்வெட்டுவகை விடைகளுள், இறுதி நிலவிய ஐந்தும - கடையில நின்ற (ஏவல்முதலிய) ஐந்தும, அப்பொருண்மையின் - அவ்விடைப்பொருளைக் குறிப்பால் தருதலினால், நேரப-(விடைகளென்று) தழுவிக்கொள்வார், (புலவர்); (எ - று.)

எனவே - முதல் மூன்றும வெளிப்படை விடையும, மற்றை ஐந்தும் எதிர்மறைப்பொருள் தரும குறிப்புவிடையுமா மென்றதாயிற்று.

உதாரணம்.

(க) 'உறையூர்க்கு வழி யாது?' என்று வினவினால், 'இது' என்பது - சுட்டு விடை.
(உ) 'இது செய்வாயா?' என்று வினவியபோது, 'செய்யேன்' என்பது - மறை விடை.
(௩) 'இது செய்வாயா?' என்று வினவியபோது, 'செய்வேன்' என்பது நேர்விடை.
(ச) 'இது செய்வாயா?' என்று வினவியபோது, 'நீ செய்' என்பது - ஏவல விடை.

(ரு) 'இது செய்வாயா?' என்று வினவியபோது, 'செய்யேனோ?' என்பது - வினவெதிர் வினுதல் விடை.

(சு) 'இது செய்வாயா?' என்று வினவியபோது, 'உடம்புநொந்தது' 'நோவா நின்றது' என்பன - உற்றதுரைத்தல் விடை.

(எ) 'இது செய்வாயா?' என்று வினவியபோது, 'உடம்பு நோம்' என்பது - உறுவது கூறல் விடை.

(அ) 'இது செய்வாயா?' என்று வினவியபோது, 'மற்றையது செய்வேன்' என்பது - இனமொழி விடை.

வினவெதிர் வினுதல் விடையாவது - தான் ஒரு வினவிற்குச் சொல்லும் உத்தரம் வேறொரு வினவடிவமாய் இருப்பது.

உறுகின்றதுரைத்தலும், உற்றதுரைத்தலில் அடக்கப்பட்டது.

"இனி, 'நிலவிய' என்ற மிகையானே, வினு இனறியும் செப்புவருவனவும் உள வென்க. அறிவானொருவன் 'இன்னநாள் காற்று அடிக்கும், இன்ன நாள் மழை பெய்யும், இன்னநாள் வாழ்வுவரும்' என்றலும், இரப்பவனொருவன் 'கங்கையாடிப் போந்தேன், ஒருபிடிசோறு தம்மின், ஓராடை தம்மின்' என்றலும் காண்க; பிறவும் அன்ன" என்பது, பழைய உரை. (௩௫)

[வினவிடைகளில் முதல் சினை வழுவாமை.]

௩௭ள வினவினும் செப்பினும் விரவா சினைமுதல.

(இ - ள்.) வினவினும் - வினவுதலினும், செப்பினும் - விடைகொடுத்தலினும், சினை முதல் - சினையும் முதலும், விரவா-(ஒற்றுமைப்பற்றிச்சினையும் முதலும் ஒன்று என்றெண்ணி முதலொடு சினையும் சினையொடு முதலுமாக) மயங்கச் சொல்லப்படாவாம்; (எ - று.)

(உ - ம்.) கண் பிறழ்ந்ததோ கயல் பிறழ்ந்ததோ எனவும், சாத்தன் நல்லனோ கொற்றன் நல்லனோ எனவும் இவ்வாறு சினையும் முதலும்பற்றி வினவியவாக்கு - கண் பிறழ்ந்தது, கயல் பிறழ்ந்தது எனவும், சாத்தன் நல்லன், கொற்றன் நல்லன் எனவும் விடை கொடுக்கப்படும்; எனவே - அதனை உடையாளைக் கருதி இவள் பிறழ்ந்தாளோ கயல் பிறழ்ந்ததோ என வினவுதலும், இவள் பிறழ்ந்தாள் என விடைகொடுத்தலும் வழுவாமென்றதாயிற்று. (௩௬)

[மரபு]

† ௩௭அ. எப்பொருளெச்சொலி னெவ்வா றுயர்ந்தோர
செப்பின ரப்படிச் செப்புதல் மரபே.

(இ - ள்) எப் பொருள்-எந்தப்பொருளை, எச் சொலின் - எந்தச்சொல்லால், எ ஆறு - எவ்வழியால், உயர்ந்தோர் - அறிவுடையோர், செப்பினர் - சொன்னார்களோ, அப்படி செப்புதல் - (அப்பொருளை அச்சொல்லால்) அவ்வழியால் சொல்லுதலே, மரபு - மரபாம்; (எ - று.)

(உ - ம்) குதிரைக்குட்டி, யானைக்குட்டி எனவும்; யானைக்கன்று, பசுவின் கன்று எனவும்; யானையிலத்தி, எருமைச்சாணம் எனவும்; யானைப்

பாகன், ஆட்டிடையன் எனவும் வரும். பசுவின்குட்டி குதிரைக்குஞ்சு, யானைச்சாணம், ஆட்டுப்பாகன் எனக்கூறினால், மரபுவழுவாம். (கஎ)

[பொதுவினை மரபு வழாநிலை]

கஅக. வேறுவினைப் பலபொருள் தழுவிய பொதுச்சொலும்
வேறவற் றெண்ணுமோர் பொதுவினை வேண்டும்

(இ - ள்.) வேறு வினை - வெவ்வேறுவினைகட்கு உரிய, பல பொருள் - பல பொருள்களையும், தழுவிய - ஒருசேரத் தழுவி நிற்கின்ற, பொது சொலும் - ஒரு பொதுச்சொல்லும், வேறு அவற்று எண்ணும் - வெவ்வேறு வினைக்கு உரிய பொருள்களை எண்ணிநிற்கும் பல சிறப்புச்சொற்களும், ஓர் பொதுவினை - (தமக்குள் ஒன்றற்கு உரிய சிறப்புவினையை வேண்டாமல்) எல்லாவற்றிற்கும் உரியதொரு பொதுவினையை, வேண்டும் - கொண்டு முடிந்து நிற்கும்; (எ - று)

(உதாரணம்.)

(க) அடிசில் என்பது - உண்பன தின்பன நக்குவன குடிப்பன வற்றிற்கெல்லாம் பொதுச்சொல்லாதலால், அடிசில் அயின்றார் மிசைந்தார், என்றும்; அணி என்பது - கவிப்பன கட்டுவன இடுவன பூண்பனவற்றிற்கெல்லாம் பொதுச்சொல்லாதலால், அணி யணிந்தார், அணி தரித்தார் என்றும்; இயம் என்பது கொட்டுவன ஊதுவன வற்றிற்கெல்லாம் பொதுச்சொல் லாதலால, இயம் இயம்பினர், இயம் படுத்தார் என்றும்; படை என்பது - எய்வன எறிவன வெட்டுவன குத்துவனவற்றிற் கெல்லாம் பொதுச்சொல்லாதலால், படை வழங்கினர், படை தொட்டார் என்றும் பொதுவினையால் முடிக்க. (அடிசில்- உணவு. அணி - ஆபரணம். இயம் - வாத்தியம் படை - ஆயுதம். அயின்றார், மிசைந்தார் - உண்டார். அணிந்தார் - தரித்தார். இயம்பினார், படுத்தார் - முழங்கினார். வழங்கினார். தொட்டார் - பிரயோகித்தார்.)

(உ) இனி, சிறப்புச் சொற்களை எண்ணும்பொழுது, சில நாள் சோறும் சில நாள் மாவும் சிலநாள் நீரும் சிலநாள் சருகும் அயின்றார், அல்லது மிசைந்தார், முடியும் குழையும் மோதிரமும் அரைநாணும் அணிந்தார், பறையும் குழலும் இயம்பினர், வாளும் வேலும் வழங்கினர் என்று பொதுவினையால் முடிக்க. (கஅ)

[சிறப்புவினை மரபு வழாநிலை]

ககூ0. வினைசார் பினமிட மேவி விளங்காப்
பலபொரு ளொருசொற் பணிப்பார் சிறப்பெடுத்தே.

(இ - ள்.) வினை-(குறித்தபொருளை விளக்கும்) வினையும், சார்பு சார்பும், இனம் - இனமும், இடம் - இடமும் முதலிய சொற்களை, மேவி-பொருந்தி, விளங்கா - பொருள் விளங்காத, பல பொருள் ஒரு சொல் - பல பொருள்களைக்குறிக்குமொருசொல்லை, சிறப்புஎடுத்து - சிறப்புச்சொல்லோடுகூட்டி, பணிப்பர் - சொல்வர், (புலவர்), (எ - று.)

எனவே வினைமுதலியவற்றுள் ஒன்றைப் பொருந்திப் பொருள் விளக்கிக்கிடந்த பலபொருளொருசொல்லை வாளா [சிறப்புச்சொல்லோடு கூட்டாமல்] கூறுவர்; வினை முதலியவற்றுள் ஒன்றைப் பொருந்தியாயினும் பொருந்தாமலாயினும் குறித்த பொருளை விளக்காமல் நிற்கின்ற பலபொருளொருசொல்லைச் சிறப்புச்சொற்கொடுத்துச் சொல்வர் என்றதாயிற்று.

(உதாரணம்)

(க) மா என்பது - மாமரத்திற்கும் வண்டிற்கும் குதிரைக்கும் திருமகளுக்கும் பொதுவாகிய பலபொருளொருசொல். இப்பொருள்களுள் - 'மாப் பூத்தது' என்றவிடத்து, மரமென்பது வினையால் விளங்கிற்று. 'மா வீழ்மலர்' என்றவிடத்து, வண்டென்பது சார்பால் விளங்கிற்று. 'தேர் கரி மாக காலாள்' என்றவிடத்து, குதிரை யென்பது இனத்தால் விளங்கிறது. 'மா வாழ் மார்பன்' என்ற விடத்து, திருவென்பது இடத்தால் விளங்கிற்று. இவை - சிறப்புச்சொல் கொடாமல் கூறப்பட்டன.

(உ) இனி, மா ஏறினன், மா யாது என்றவிடத்து, குறித்த பொருள் விளங்காமையால், விளங்குதற்பொருட்டு, பாய்மாஏறினன், மாமரம் ஏறினன், பாய்மா யாது, மாமரம் யாது எனச் சிறப்புச் சொல்லோடு கூட்டிக் கூறுக. பிறவும் இவ்வாறே. (ருகூ)

[தொடர்மொழிகள் இசைவேறுபாட்டாற் பொருள் துணியப்படுதல்.]

† ருகூக. எழுத்தியல் திரியா பொருள்திரி புணர்மொழி
இசைத்திரிபால் தெளிவெய்து மென்ப.

(இ - ள்.) எழுத்து இயல் திரியா - எழுத்தின் தன்மை வேறுபடாமல், பொருள் திரி - பொருள் வேறுபட்டுச் சொல்லும் பொருளும் ஐயப்பட நிற்கின்ற, புணர்மொழி - தொடர்மொழிகள்,—இசை திரிபால் - (குறிக்கப்பட்ட சொற்களின் இறுதியும் முதலும் தோன்ற) இசையறுத்துச் சொல்லும் வகையினால், தெளிவு எய்தும் - பொருள் துணியப்படும், என்ப - என்று சொல்வர், (புலவர்); (எ - று.)—இது, வழாநிலை.

எனவே, அவ்வாறு இசையறுத்துக்கூறுதல் மரபு என்றதாயிற்று.

(உ - ம்.) செம்பொன் பதின்பலம், குறும்பரம்பு, புத்தியிலாதவன் என வருகின்ற இவை - செம்பொன் பதின்பலம் என இசையறுத்துக்கூறினால் செம்பொன் பத்துப்பலம் என்றும், செம்பொன்பதின் பலம் என இசையறுத்துக் கூறினால் செம்பு ஒன்பதுபலம் என்றும்; குறும் பரம்புஎன இசையறுத்துக் கூறினால் குறுநிலமன்னருடைய அம்பு என்றும், குறும பரம்பு என இசையறுத்துக் கூறினால் குறுமையாகிய கழனிதிருத்தும் பலகை என்றும்; புத்தி யிலாதவன் என இசையறுத்துக் கூறினால் அறிவுகெட்டவனென்றும், புத்தியி லாதவன் என இசையறுத்துக்கூறினால் ஞானத்திற் சூரியனென்றும் பொருள் துணியக் கிடத்தல் காண்க. (சுo)

[மரபு வழாநிலையும், வழுவமைதியும்.]

† ௩௬௨. ஒருபொருள் மேற்பல பெயர்வரி னிறுதி
ஒருவினை கொடுப்ப தனியு மொரோவழி.

(இ - ள்.) ஒரு பொருள்மேல் - ஒருபொருளின்மேலே [ஒருபொருளைக் குறித்து], பல பெயர் வரின் - பலபெயர்கள் வருமாயின், இறுதி ஒரு வினை கொடுப்ப - (பொருளொன்றே என்பது தோன்ற) அவற்றின் இறுதியில் ஒரு முடிக்குஞ் சொல்லைக் கொடுத்துக்கூறுவர்; ஒரோவழி - சில இடத்தில் [பொருளொன்றே என்பது தெளிய நின்ற விடத்தில்], தனியும் - பெயர் தோறும் தனித்தனி ஒரு முடிக்குஞ்சொல்லைக் கொடுத்தும் (கூறுவர், புலவர்); (எ - று.)

'ஒருவினைகொடுப்ப' என்பதைப் பின்னும் கூட்டுக.

வினை என்றது - கொண்டுமுடியுஞ்சொல் என்ற மாத்திரமாய் நின்றது; ஆதலால், ஒரு பெயர் கொடுத்து முடித்தலும் கொள்க.

[உதாரணம்.]

(க) 'ஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் கூறினார்' எனவும், 'பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி இவன்' எனவும் வரும் இவை - இறுதியில் ஒரு வினையும் பெயரும் கொடுக்கப்பட்டன.

(உ) 'கொண்டல் வண்ணா விங்கே போதராயே கோயிற்பிள்ளா யிங்கே போதராயே, தெண்டிரைசூழ் திருப்பேர்க் கிடந்த திருநாரணா விங்கே போதராயே' என்பதில் - கொண்டல்வண்ணன், கோயிற்பிள்ளை, திருநாரணன் என்பன - கண்ணனென்றும் ஒருபொருளே யென்பது தெளிய நின்றதனால், பெயர்தோறும் போதராய் என ஒருவினை கொடுக்கப்பட்டது பெயர்தோறும் தனித்தனி கொடுக்கப்படுகிற வினை வந்த வினை யாகவே இருக்கவேண்டுமென அறிக. (௬௪)

[சிறப்புப்பெயர்களின்பின் இயற்பெயர் வருதல்.]

௩௬௩. திணை நிலஞ் சாதி குடியே உடைமை
குணந் தொழில் கல்வி சிறப்பாம் பெயரொடு
இயற்பெய ரேற்றிடின் பின்வரல் சிறப்பே.

(இ - ள்.) திணை - (குறிஞ்சி முதலிய ஐவகைத்) திணையும், நிலம் - தேசமும், சாதி - குலமும், குடி - குடியும், உடைமை - உடைத்தாயிருக்கும் பொருளும், குணம் - குணமும், தொழில் - செயலும், கல்வி - வித்தையும், (ஆகிய இவற்றைப்பற்றி வருகிற), சிறப்பு ஆம் பெயரொடு - சிறப்பாகிய பெயருடனே, இயற்பெயர் - இயற்கையாகிய பெயரை, ஏற்றிடின் - (ஒரு பொருள் ஒருசேர) ஏற்குமாயின், பின் வரலே - (அவ்வியற்கைப்பெயர்) பின்னே வருதலே, சிறப்பு - சிறந்த மரபாம்; (எ - று.)

'பின்வரல் சிறப்பே' என்றதனால் இயற்பெயர் பின்வருதல் வழாநிலை யென்றும், முன்வருமாயின் அது வழுவமைதி யென்றும் பெறப்பட்டது.

(இயற்பெயர் - இயற்கைப்பெயர், சிறப்புப்பெயர்-யாதாயினும் ஒரு காரணம் பற்றிக் கூறும் பெயர்)

| | பின் இயற்பெயர். | முன் இயற்பெயர். | |
|---|---|---|---|
| (உ-ம்) | குன்றவன் கோற்றன் | கோற்றன் குன்றவன் | —திணை. |
| | சோழியன் சாத்தன் | சாத்தன் சோழியன் | —நிலம். |
| | பார்ப்பான் துரோணர் | துரோணர் பார்ப்பான் | —சாதி. |
| | பாண்டியன் குலசேகரன் | குலசேகரன் பாண்டியன் | —குடி. |
| | பொன்னன் நம்பி | நம்பி பொன்னன் | —உடைமை. |
| | கரியன் கம்பன் | கம்பன் கரியன் | —குணம். |
| | நடையன் நாகன் | நாகன் நடையன் | —தொழில். |
| | புலவன் திருவள்ளுவர் | திருவள்ளுவன் புலவன் | —கல்வி. |

இன்னும் இயற்பெயர் முன்வருமிடத்து, ஒட்டக்கூத்தப் புலவன், அகத்திய முனிவன் என இறுதி விகாரப்பட்டு வருதலும் காண்க (௪௨)

[சுட்டுப்பெயர் வருமிடம்]

† ௩௯௪. படர்க்கைமுப் பெயரோ டணையிற் சுட்டுப்
பெயர்பின் வரும்வினை யெனிற்பெயர்க் கெங்கும்
மருவும் வழக்கிடைச் செய்யுட் கேற்புழி.

(இ - ள்) படர்க்கை முப்பெயரோடு - படர்க்கை யிடத்தையுடைய (உயர்திணைப்பெயர் அஃறிணைப்பெயர் பொதுப்பெயர் என்னும்) மூவகைப் பெயர்களோடு, சுட்டுப்பெயர்—, அணையின்-சேர்ந்தால்,—வினை எனின் - (அவ்விடத்தே) வினையாகிய முடிக்குஞ்சொல் வருமாயின், பின் வரும் - (அச்சுட்டுப்பெயர் அம்மூவகைப் பெயர்க்கும்) பின்னே வரும்; பெயர்க்கு எங்கும் மருவும் - (அம்முடிக்குஞ்சொல் இல்லையாயின்) அப்பெயர்க்குப் பின்னும் முன்னும் (சுட்டுப்பெயர்) வரும்; வழக்கிடை - (இம்மரபு) உலக வழக்கத்தில் ஆம்; செய்யுட்கு—செய்யுளில், ஏற்புழி (நியதியில்லாமல்) வேண்டியவாறே வரப்பெறும்; (எ - று)

(உதாரணம்.)

(க) நம்பிவந்தான். அவனுக்குச் சோறிடுக என்றும்; எருது வந்தது, அதற்குப் புல்லிடுக என்றும்; சாத்தன் வந்தான் அவனுக்குச் சோறிடுக, சாத்தன் வந்தது, அதற்குப் புல்லிடுக என்றும் முறையே மூவகைப் பெயர்களோடும் வினை வரும்பொழுது சுட்டுப்பெயர் பின்னே வந்தன.

(உ) நம்பி அவன், அவன் நம்பி என்றும். குதிரை அது, அது குதிரை என்றும்; சாத்தன் இவன், இது சாத்தன் என்றும் பெயர்க்குப் பின்னும் முன்னும் சுட்டுப்பெயர் வந்தன. இவை - உலகவழக்கு.

(௩) "வாயவனை யல்லது வாழ்த்தாது கையுலகந் தாயவனை யல்லது தாந்தொழா," "தந்த மூரிய லவர்வைத்த தயிர் பால் வெண்ணெயட்டா மற்குந்தி யுரலின் மிசையேறி யிளங்கோவியர் முன் கூத்தாடி" எனச் செய்யுளில் வினைவந்தபொழுதும், அவன் அவர் என்ற சுட்டுப் பெயர்கள், 'உலகந்தாயவனை', 'கோவியர்' என்ற பெயர்களின் முன் வந்தன. (௪௩)

[அடுக்குத்தொடர்.]

† ௩௯௫. அசைநிலை பொருணிலை இசைநிறைக் கொருசொல்
இரண்டு மூன்று நான்கெல்லை முறை அடுக்கும்.

(இ - ள்.) அசைநிலை - அசைநிலைக்கும், பொருணிலை-(விரைவு கோபம் மகிழ்ச்சி அச்சம் துன்பம் முதலிய) பொருள்களின் நிலைக்கும், இசை நிறைக்கு - இசையை நிறைப்பதற்கும், ஒருசொல்—, இரண்டு மூன்று நான்கு எல்லை - இரண்டு மூன்று நான்கு அளவும் முறை அடுக்கும் - முறையே அடுக்கி நிற்கும்: (எ - று.)

'முறை' என்றதனால், அசைநிலைக்கு - இரண்டும், பொருணிலைக்கு - இரண்டும் மூன்றும், இசை நிறைக்கு-இரண்டும், மூன்றும் நான்கும் அடுக்கு மென்றதாயிற்று.

(உதாரணம்.)

(க) அன்றே அன்றே . .. அசைநிலை.

(உ) பொருணிலை.
(க) உண்டேன் உண்டேன்; போ போ போ விரைவு.
(உ) எய் எய்; எறி எறி எறி .... .. ...கோபம்
(௩) வாழ்க வாழ்க; வருக வருக வருக .. . ...மகிழ்ச்சி,
(௪) பாம்பு பாம்பு; தீத் தீத் தீ... . . . .... ..அச்சம்.
(௫) உய்யேன் உய்யேன்: வாழேன் வாழேன் வாழேன்-துன்பம்.

(௩) இசைநிறை.
'ஏ ஏ இவளொருத்தி பேடியோ''
''நல்குமே நல்குமே நல்குமேநாமகள்''
''பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ''

(நல்கும்-அருள்செய்யும். பாடுகோ-பாடுவேனோ]

அசைநிலை யடுக்கில் இரண்டுக்கும் பொருளில்லை யென்றும், இசைநிறை யடுக்கில் ஒன்றுக்குப் பொருள் உண்டென்றும் வேறுபாடு அறிக.

ஒரு சொல்லைப் பலகால் சொல்லுதல் வழூஉவாயினும், இன்ன இடங்களில் ஆமென்றல் - வழூஉவமைதியும், இவ்வெல்லைகடவாதென்றல் - வழூஉவாமற் காத்தலுமாம். (௬௪)

[இரட்டைச்சொல்.]

† ௩௯௬. இரட்டைக் கிளவி இரட்டிற் பிரிந்திசையா.

(இ - ள்.) இரட்டைக் கிளவி-இரட்டைச் சொற்கள்,—இரட்டின்-அவ்விரட்டிப்பினின்றும், பிரிந்து இசையா-[தனித்து] பிரிந்தொலியா; (எ - று.)

எனவே-வலிந்து பிரித்துக்கூறின் இரட்டைச் சொல்லானபோதுள்ள பொருள் படாதென்பதும், இரட்டித்துக் கூறுதலே மரபென்பதுமாயிற்று.

(உ-ம்.) ''சலசல மும்மதம்பொழிய,'' ''கலகல, கூவுந்துணையல்லால்,'' ''கள கள உதிர்ந்தது,'' ''குறு குறு நடந்து,'' ''துடி துடித்துத் துள்ளிவரும்'' என வரும். துடிதுடித்து என்பதில், பின்னையது துடித்து எனப்பிரிந்திசைக்குமாயினும், முன்னையது பிரிந்திசையாமையால் இரட்டைச்சொல்லேயாம்.

அடுக்குத்தொடர்க்கும் இரட்டைக்கிளவிக்கும் வேறுபாடு:—அடுக்குத் தொடரும் இரட்டைக்கிளவியும் வந்ததுவே மீண்டும் வருதலால் ஒக்குமாதலின் இவையிரண்டிற்கும் வேறுபாடு என்னவென்றால்—அடுக்குத்தொடர் - மக்களிரட்டையும் விலங்கிரட்டையும் போல வேறுபட்டுத் தனித்தனி பொருள் கொடுத்து நிற்கும்; இரட்டைக்கிளவி - இலையிரட்டையும் பூவிரட்டையும் போல வேறுபடாமல் ஒன்றுபட்டுத் தனித்தனி பொருள்கொடாமல் நிற்கும் என்று அறிக. அன்றியும், இரட்டைக்கிளவி இரண்டுதரத்துக்கு மேல் வந்து வரப்பெறாது.

இச்சூத்திரம், * தொல்காப்பியத்தினின்று எடுத்துக் கொள்ளப்பட்டது.

[ஒருபொருளின்மேல் வரும் பலபெயர்கள்]

௩௬௭. ஒருபொருட் பலபெயர் பிரிவில வரையார்.

(இ - ள்.) ஒருபொருள் - ஒருபொருளின்மேல், பல பெயர் - பலபெயர் சொல்லும்போது, பிரிவு இல - (அப்பொருளினின்றும்) பிரிதலில்லாதவற்றை, வரையார் - நீக்காமற் கொள்வர், (புலவர்); (எ - று.)

எனவே, பிரிவுள்ளவற்றை நீக்குவரென்றதாயிற்று.

(உ - ம்.) 'ஆசிரியன் பேரூர்கிழான் சாத்தன் வந்தான்,' 'பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி வந்தான்' என்பன - பிரிவிலவாய், பல பெயரும் ஒருபொருளின்மேற் சென்று, கேட்போர்க்குச் சொல்லுவான் குறித்த பொருளை விளக்கி நின்றன.

"பகையியல்பாயிலி படைக்கை மறவன்," 'எழுத்தறி விலலோ னிலக்கண நிறைகடல்" என வக்கால், பகை இயல்பாகவே இல்லாதவனைப் படைக்கைமறவ னென்றலும், எழுத்தறிவில்லாதவனை இலக்கண நிறைகடலென்றலும் கூடாமையால், பிரிந்து வழுவா மென்க.

இனி, இச்சூத்திரத்திற்கு ஒருபொருளையே குறித்து வரும் பலபெயர்கள் வேறுபடாமல் அப்பொருளையே சுட்டாய் நின்று உணர்த்துமாயின், அவற்றை நீக்காமல் கொள்வர் என்றும் பொருள் கொள்ளலாம்; (உ - ம்.) "நறும்பூங் கழலான் இருதிங்கள் நயந்த வாறும், தறபாடழித்த கனமாமணித் துணைசெய தோளான் வெற்பூடறுத்து விரைவின் நெறிக் கொண்டவாறும்" என்ற இடத்தில், 'கழலான்' என்னும் பொருட்பெயரையே பின் 'தோளான்' என்பது குறித்து, சொல்லுவான் குறிப்பால் அவன் என்னுஞ் சுட்டுப்பெயரின் தன்மையாய் நின்றவாறு காண்க. (சசு)

[ஒருபொருள் குறித்து வரும் பலசொற்கள்]

‡ ௩௬௮. ஒருபொருட் பன்மொழி சிறப்பினின் வழா.

(இ - ள்.) ஒரு பொருள் பல் மொழி - ஒருபொருளைக்குறித்து வருகிற பலசொற்கள்,—சிறப்பினின் - (அவ்வாறு வருவதற்கு ஒருகாரணம் இல்லையாயினும்,) சிறந்து நிற்கையால்,—வழா - (அவை) மரபுவழுவென்று நீக்கப்படாவாம்; (எ - று.)—வழுவமைதி யென்று கொள்ளப்படுமென்க

* தொல்காப்பியம் - சொல்லதிகாரம் - கிளவியாக்கம் - சஅ.

சிறந்து நிற்கை - செவிக்குச் சொல்லின்பம் தோன்ற நிற்றல்.

(உ - ம்.) மீ மிசை ஞாயிறு, புனிற்று நிராங் கனறு, நா கிளங் கமுகு, உயர்ந் தோங்கு பெரு வரை, துழீந் தாழ்ந்த கணை, வெங் கோடும் போா.

இனி, இரட்டுறமொழிதலால, சிறப்பினின எனபதற்கு சிறப்புப பொருளை தருதலால எனறுமபொருள கொளளலாம. இங்குககாட்டிய உதாரணங்களுள முறையே மிகவும மேலிடததிலுள்ள, மிகவும இளமையான, மிகவும் உயாநத, மிகவும் உள்ளடஙகிய, மிகவும கொடிய எனப் பொருள் படுதலும் காணக. (மீ - மேல். மிசை - மேல. புனிறு - இளமை. நாகு - இளமை.)

இது வாயபாடுபற்றி, 'மீமிசைச்சொல்' எனவும படும. (௬௭)

[முற்றும்மை வேண்டும் இடம்.]

† ௩௯௯. இனைததென் றறிபொரு ளுலகி னிலாப்பொருள
வினைப்படுத துரைபபி னுமமை வேண்டும.

(இ - ள்.) இனைதது என்று அறி பொருள் - இவவளவெனறு அளவறியப்பட்ட பொருளையும், உலகின் இலா பொருள் - (எககாலததும) எவ்விடததும இலலாத பொருளையும், வினை படுதது உரைபபின - முடிககுஞ் சொலலோடு கூட்டிச சொலலுமபோது, (அவை), உமமை வேணடும - முற்றும்மையை வேண்டி நிற்கும்; (எ - று.)

(உ - ம்.) (க) 'இருவினையும் சேரா', தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார', 'வேதம் நான்கும் அறிந்தான்'—இனைததென்று அறி பொருள்கள் முற்றும்மை வேண்டி நின்றன.

(உ) 'முயற்கோடு ஆகாயப்பூ என்றும் இலலை,' 'ஒளிமுன் இருள் எங்கும் இலலை'—உலகில இலாப்பொருளகள, முற்றுமமை வேண்டின. இவ்வுமமை சிலவிடதது 'இருதோள் தோழர் பற்ற,' 'ஒண்டுதொழு ஒன்றேலகி' எனச செய்யுள விகாரததால தொககு நிற்பதும உணடு.

இனி, உலகில நிலலாத பொருளெனறும பிரிதது உரைககலாம.

'வினை' என்றது முடிககுஞசொல் எனற மாததிரமாய் நிறபதனால், கண் இரண்டும் குருடு, எருது இரண்டும் கிழம எனப பெயாகொணடு முடியும போதும உமமை பெறுமெனக கொளக.

ஐந்தலைநாகம், நான்மறை முதல்வா என்ற இடங்களில், இனைததென்று அறிந்த பொருளாயினும, வினைப்படுததி உரையாமல், உம்மை வேண்டாவாயின வென அறிக. (௬௮)

[செயப்படுபொருள முதலியவற்றைக் கருத்தாவாகக் கூறுதல்.]

† ௪௦௦. செயபபடு பொருளைச செய்தது போலத்
தொழிற்படக கிளத்தலும வழக்கினு ளுரித்தே.

(இ - ள்.) செயப்படுபொருளை—, செய்தது போல - கருததாவைப் போல வைதது, தொழில் பட கிளததலும் - அதன்மேல் அககருததாவின வினையை ஏற்றிக் கூறுதலும, வழக்கினுள்-வழக்கததிலே, உரிதது-உரியது

(உ - ம்.) இம்மாடு யான் கொண்டது, இச்சோறு அவன் கொடுத்தது, இவ் வெழுத்து நீ எழுதியது என வரும்.

'செய்யப்படுபொருளைச் செய்ததுபோலத் தொழிற்படக் கிளத்தலும்' என்ற எச்ச உம்மையால் கருவி நிலம் செயல் காலங்களைக் கருத்தாவாகக் கூறுதலும் சிலவிடத்து உண்டென்று கொள்க. அவை வருமாறு:—இவ் வெழுத்தாணி யான் எழுதியது - கருவி; இவ்வீடு அவன் இருந்தது - நிலம்; இத் தொழில் நீ செய்தது - செயல்; இந்நாள் அவர் பிறந்தது-காலம். (௪௱)

[அடை அடுத்துவரும் மொழிகள்.]

௪௱௧. பொருண் முத லாறு மடைசேர் மொழியின
முள்ளவு மில்லவு மாமிரு வழக்கினும்.

(இ - ள்.) பொருள்முதல் ஆறு ஆம் - பொருள் முதலிய ஆறாகிய, அடை - அடைமொழிகளால், சேர் - அடுக்கப்பட்ட, மொழி - சொற்கள்,— இருவழக்கினும் - (உலகவழக்குச் செய்யுள்வழக்கு என்னும்) இரண்டிடத்தும், இனம் உள்ளவும் - இனமுள்ளனவாயும், இல்லவும் - (அன்றி) இன மில்லாதனவாயும், ஆம் - வரும்; (எ - று.)

அடை - அடுத்துவரும் மொழி; அடையெனினும், விசேஷணமெனி னும் ஒக்கும். இவ்வடைமொழியால் அடுக்கப்படும் மொழி - அடைகொளி எனப்படும்; அடைகொளியெனினும், விசேஷ்யமெனினும் ஒக்கும், சொல் லப்படும்பொருளுக்கு இனமாயுள்ளபொருளை விலக்கும் இனமுள்ள அடை - பிறிதினியைபு நீக்கிய விசேஷணமெனவும், சொல்லப்படும்பொருளின் இன த்தை விலக்குதலில்லாமல் வரும் இனமில்லாத அடை - தன்னோடு இயை பின்மை நீக்கிய விசேஷணமெனவும் பெயர்பெறும்; இவற்றை முறையே வடநூலார் அந்யயோகவ்யவச்சேதம் அயோகவ்யவச்சேதம் என்பர்.

(உ - ம்.)

| இனமுள்ளன. | இனமில்லன | |
|---|---|---|
| நெய்க்குடம், பாற்குடம் | உப்பளம் | —பொருள். |
| துளநெல், வயல்நெல் | ஊர்மன்று | — இடம். |
| கார்த்திகைவிளக்கு, தைவிளக்கு | நாளரும்பு | — காலம். |
| பூமரம், காய்மரம் | இலைமரம் | — சினை |
| செந்தாமரை, வெண்டாமரை | செம்போத்து | — குணம் |
| ஊன்றுகோல், ஊதுகோல் | தோய்தயிர் | — தொழில். |

என வழக்கிடத்து வந்தன. அளமெனவே உப்பென்பதும், மன்றென வே ஊரென்பதும், அரும்பெனவே நாளென்பதும், மரமெனவே இலையென் பதும் போத்தெனவே செம்மையென்பதும், தயிரெனவே தோய்தலென்ப தும் தாமே வந்து இயைதலால், அளமுதலியன அடையில்லாமலும் இப் பொருளாதியாவற்றையும் உணர்த்தும். உப்பில்லாத அளமும், ஊரில்லாத மன்றும், நாளில்லாத அரும்பும், இலையில்லாத மரமும், செம்மையில்லாத போத்தும், தோய்தலில்லாத தயிரும் இல்லையாதலால், இவை இனமில்லன வாயின. இவை இயற்கையடைமொழி யெனவும் படும்.

இனி, முற்கூறிய செய்கூட்டம் முதலிய இனமுள்ளவற்றை அடைகொடாமற் கூறின், குறித்தபொருளை விளக்காமல் பொதுவாய்நிற்கு மாதலால், அவற்றிற்கு அடைகொடுத்துக் கூறுதலே மரபாயிற்று.

செய்யுள்வழக்கில் வருமாறு.

| இனமுள்ளன. | இனமில்லன. |
|---|---|
| "போர்நட்பெண்டிர்"—பொருள் | "பொற்கோட்டிமயம்;"—பொருள். |
| "கான்யாறு"—இடம், | "வடவேங்கடம்"—இடம். |
| "முந்நாட்பிறை"—காலம் | "வேனிற்கோங்கின்பூ"—காலம். |
| "கலவமாமயில்"—சினை. | "சிறகர்வண்டு"—சினை. |
| "சிறுகோட்டுப்பெரும்பழம்"—குணம் | "செஞ்ஞாயிறு"—குணம். |
| "ஆடரவு"—தொழில். | "முழங்குகடல்"—தொழில் |

இனமுள்ளவற்றை அடைகொடுத்துக் கூறுதல் வழாநிலையும், இனமில்லாதவற்றை அடைகொடுத்துக் கூறுதல் வழுவமைதியுமா மெனக் (௫0)

[அடைமொழி மரபுவழுவாமற் காத்தல்]

௪0௨. அடைமொழி இனமல்லதுந் தருமாண் டுறின.

(இ - ள்) அடைமொழி - (முன்சொல்லப்பட்ட) அடைமொழிகள்,—இனமஅல்லதும் தரும் - (இனத்தைக்தருதலேயன்றி அதனோடு) இனமல்லாததையும் தரும்; ஆண்டு உறின - அவ்விடத்துக்குப் பொருந்துமாயின.

(உ - ம்) பாவஞ்செய்தால் நரகம் புகுவான் என்றால், அது - புண்ணியஞ்செய்தால் சுவர்க்கம்புகுவான் என இனத்தைத் தருதலமாத்திரமேயல்லாமல, அவன் இதுசெய்தால் இதுவருமென்னும் அறிவு இல்லாதவன் என்னும் இனமல்லாததையும் தந்தது. மேலைச்சேரிச்சேவல் அலைத்தது என்றால், அது - கீழைச்சேரிச்சேவல் அலைக்கப்பட்டது என இனத்தைத் தருதலமாத்திரமே யல்லாமல அச்சேவலையுடையார்க்கு வெற்றியாயிற்று என்னும் இனமல்லாததையும் தந்தது

குடங்கொண்டவன் விழுந்தான் என்றால் குடங்கொள்ளாதவன் விழுந்தானல்லன் என்னும் பொருளைத் தராமல, குடம்விழுந்தது என்றும்; கோழி கூவிற்று என்றால் மற்றைப்பறவைகள் கூவவில்லை என்னும் பொருளைத் தராமல் பொழுது விடிந்தது என்றும் இவ்வாறு இனத்தைத் தருதலில்லாமலே இனமல்லாததைத் தருதலும் இங்கேயே அமைத்துக்கொள்ளப்படும். இவற்றையெல்லாம் வடநூலார் அர்த்தாபத்தியுள் அடக்குவர். (௫௧)

[அடைமொழிகள் முதல்சினைகளை அடுத்துவருதல்]

௪0௩. அடைசினை முதல்முறை யடைதலும் ஈரடை
முதலோ டாதலும் வழக்கியல் ஈரடை
சினையொடு செறிதலும் மயங்கலும் செய்யுட்கே

(இ - ள்.) அடை சினை முதல் முறை அடைதலும் - அடைமொழியும் ஒருசினையும் ஒருமுதலுமாய் முறையே ஒன்றை ஒன்று விசேடித்து வருதலும், ஈர் அடை முதலோடு ஆதலும் - இரண்டு அடைமொழி ஒருமுதலை

விசேடித்து வருதலும், வழக்கு இயல் உலகவழக்கமாம்; ஈர் அடை சினையொடு செறிதலும் - இரண்டு அடைமொழி ஒருசினையை விசேடித்து வருதலும், மயங்கலும் - இவ்வரம்புகடந்து வருதலும், செய்யுட்கு - செய்யுளுக்கு உரிய வழக்கமாம்; (எ - று.)

வழக்கு: (க) வேற்கை முருகன், செங்கால் நாரை, முழங்குதிரைக் கடல் —இவை, ஓர் அடைமொழியும் ஒருசினையும் ஒருமுதலு மாகி ஒன்றையொன்று விசேடித்து வந்தன; வேல - கையையும், கை - முருகனையும் விசேடித்தல் காண்க.

(வேல் - அடைமொழி. கை - சினை. முருகன் - முதல்)

இவை - சிறுபான்மை கைவேல்முருகன், காலசெங்நாரை, திரைமுழங்கு கடல் என இம்முறை மாறிவருதலும் உண்டு.

(உ) மனைச் சிறுகிணறு, சிறுகருங் காக்கை—இவை, இரண்டு அடைமொழி முதலை விசேடித்து வந்தன.

செய்யுள் (க) "சிறு பைந் தூவி," "கரு நெடுங் கண்"—இவை, இரண்டு அடைமொழி சினையை விசேடித்து வந்தன

(உ) "பெருந் தோட் சிறு மருங்குற் பேரமர்க்கட் பேதை," "சிறு நுதற் பேரமர்க்கட் செய்யவா பையநுண்ணிடையாய"—இவை இவ்வரம்பு கடந்து வந்தன.

இச்சூத்திரத்துக் கூறிய நான்கு விதிகளுள், அடை சினை முதல் முறை அடைதல் மாத்திரம் மரபு வழுவாமற் காத்தலும், மற்றை மூன்றும் மரபு வழுவமைதியுமாம் (௫௨)

[இயற்கைப்பொருள் மரபுவழுவமைதி]

௪௦௪ இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல.

(இ - ள்.) இயற்கை பொருளை - (இயற்கைப்பொருள் செயற்கைப்பொருள் என இருவகைப்படும் பொருள்களுள்) இயற்கைப்பொருளை, இற்று என கிளத்தல் - (ஆக்கமும் காரணமும் கொடாமல்) இத்தன்மையதென்று சொல்லுக; (எ - று.)

இயற்கைப்பொருள் - தனக்குப் பின் தோன்றாமல் தான் தோன்றிய போது உடன் தோன்றிய தன்மையையுடைய பொருள். செயற்கைப்பொருள் தனக்குப் பின் தோன்றிய தன்மையையுடைய பொருள். இயற்கை - அவிகாரம். செயற்கை - விகாரம்.

(உ - ம்.) நிலம் வலிது, நீர் தண்ணிது, தீ வெய்து, மயிர் கரிது, பால் வெள்ளிது, பயிர் பசியது, மெய் உள்ளது, பொய் இல்லது; உயிர் உணரும்.

இயற்கைப்பொருளை இத்தன்மையதென்று வரும் வினையாற் கூறுதலின், இது வழுவமைதி யாயிற்று. நிலம் முதலியவற்றுடனே வலிமை முதலியனவும் இயல்பில் தோன்றியிருத்தல் காண்க.

இச்சூத்திரம் ஆசிரியவசன மென்று அறிக [தொல்காப்பியம் *] (௫௩)

---

* தொல்காப்பியம் - சொல்லதிகாரம் - கிளவியாக்கம் - ௧௧.

[செயற்கைப்பொருள் மரபுவழுவாமற் காத்தலும், வழுவமைதியும்]

௪0௫. காரண முதலா ஆக்கம பெற்றும
காரண மின்றி ஆக்கம பெற்றும
ஆக்க மின்றிக காரண மடுத்தும
இருமையு மின்றியும இயலும செயபொருள்.

(இ - ள்.) செயும் பொருள் - செயற்கைப்பொருள்,—காரணம முதல் ஆ ஆக்கம பெற்றும - காரணச்சொல் முன்வரவும ஆக்கச்சொல்பின்வரவும் பெற்றும, காரணம இன்றி ஆக்கம பெற்றும - காரணச்சொல் தொக்கு நிறக ஆக்கச்சொல் வரப்பெற்றும், ஆக்கம இன்றி காரணம அடுத்தும் - ஆக்கச சொல் தொக்குநிறகக காரணச்சொல்வரப் பெற்றும், இருமையும இன்றியும்- இவவிருவகைச சொல்லும தொக்குநிறகவும், இயலும நடக்கும; (எ - று.)

(உதாரணம)

(க) கைபிழியெண்ணெய் பெற்றமையால, மயிர நல்லவாயின; எருப்பெய்து களைபறித்து நீர பாய்ச்சியதனால, பயிர் நல்ல வாயின—இவை, முன் காரணச்சொல்லும, பின ஆக்கச சொல்லும பெற்றன.

(உ) மயிர் நல்ல வாயின, பயிர நலல வாயின—இவை, காரணச்சொல் லின்றி ஆக்கச சொல் பெற்றன

(௩) கைபிழியெணணெய் பெற்றமையால், மயிர நல்ல; எருப்பெய்து களை பறித்து நீர பாயச்சியதனால, பயிர நல்ல—இவை, ஆக்கச்சொல் லின்றிக் காரணச்சொல் பெற்றன.

(௪) பிறபபு நல்ல, இறப்பு நல்ல—இவை, காரணச்சொல் ஆக்கச்சொல் ஆகிய இரணடும தொககு நிற்கப்பெற்றன.

இநநானகு விதிகளுள், காரணமுதலா ஆக்கம் பெறுதல் மாத்திரம் மரபு வழுவாமற்காததலும, மறறை மூன்றும மரபுவழுவமைதியுமாம். (௫௪)

[விடைமரபு வழுவாமற காத்தல்.]

௪0௬. தமபா லிலல திலலெனி னினனாய
உளளது கூறி மாறறியு முள்ளது
சுட்டியு முரைபபா சொறசுருங குதற்கே.

(இ - ள) தம்பால இல்லது - தம்மிடதது இலலாதபொருளை, இல் எனின் - இலலையென்று சொல்லபபுகுந்தால்,—இனன் ஆய் உள்ளது கூறி - (வினவப்பட்டதற்கு) இனமாயத தமமிடதது உள்ள பொருளைச சொல்லி, மாற்றியும் (அசசொல்லைக்கொணடு அதனை) இல்லை யென்று சொல்லியும்,—உள்ளது சுட்டியும் - உள்ளபொருளாயின் இவ்வளவு உணடென்றும்,—உரைப்பா - சொலலுவா,—சொல சுருஙகுதறகு - (வினாவும விடையுமாகிய) சொற்களை சுருஙகுதறபொருட்டு; (எ - று.)

குன்றக்கூறல முதலிய குறறஙகளை நீக்கிச சுருஙகச்சொல்லல முதலிய அழகோடு கூறல் வழஙகிறகும வேணடுமென்பா, 'சொற்சுருஙகுதற்கு' என்றார்.

(உ - ம) (க) 'பயறு உள்ளதோ வணிகரே?' எனறவாககு, அது இல்லையெனபவா, 'உழுநது உணடு,' 'உழுநதும துவரையுமுணடு' என அதன் இனததைச சொல்லககடவா. இந்த இன மொழிகள் பயறில்லை யெனனும விடைப்பொருளைத தருதலே யன்றி, மேலே 'உழுநது உளளதோ? துவரை உள்ளதோ?' என்னும வினுக்களும் அவறறின விடைகளும பெருகாமற் காததல் காணக

(உ) 'பயறு உளளதோ வணிகரே? எனறவாககு, அது உணடு என்பவா இருகலம உணடு' 'இருதூணி உணடு' என அதன அளவைசசொல்லககடவா. இக்க அளவைமொழிகள் பயறுணடெனனும் விடைபபொருளைத தருதலே யனறி. மேலே 'எவ்வளவு உண்டு' என்னும் வினவும, அதன விடையும பெருகாமற காததல காணக. ()

[ஈ தா கொடு என்பன.]

† சoஎ. ஈ தா கொடு எனு மூன்று முறையே
இழிநதோ னொப்போன் மிககோ னிரபபுரை.

(இ - ள.) ஈ தாகொடு எனனும மூன்றும - இமமூனறு சொற்களும,— முறையே—, இழிநதோன - இழிந்தவனும, ஒப்போன் - ஒப்பவனும, மிககோன் உயாந்தவனும, இரப்புஉரை-இரததறகு வரும சொறகளாம்; (எ-று)

எனவே ஈ என்பது - இழிந்தவன் தன்னின உயாந்தவனிடதது ஒன்றை இரககும்போது, தா எனபது - ஒபபோன் தனககு ஒப்பவனிடதது ஒன்றைவேணடும போதும, கொடு எனபது - உயர்நதவன தன்னின் இழிநதவனிடதது ஒனறைபபெற விருமபுமபோதும வருமெனக கொளக. இது, முறைநிரனிறைப் பொருள்கோள

(உ - ம) தந்தையே ஈ - இழிந்தோ னிரப்பு; தோழா தா - ஒப்போனிரப்பு, மைநதா கொடு - உயாநதோ னிரபபு

முன "கொடை செலல் சாரும் படாககை" என்று கூறியிருததலால் இஙகுக் கொடு என்பது தன்மைககு வருதல் வழுவமைதி யெனககொள்க.

இசசொற்கள ஏவலிலமாததிரமே இவ்வேறுபாடு உணாதது மென்பா, சேனுவரையர்.

இனி இமமூன்று சொற்களும இமமுறை தவறி வருமாயின் அவறறை "புதியனபுகுதலும வழுவல" * எனவரும புறனடையால அமைததுககொள்க.

[மரபுவழுவமைதி குறிபபாற பொருளதருதல்]

சoஅ முன்னததி னுணருங கிளவியு முளவே.

(இ - ள) முன்னதின்-(வெளிபபடையாலன்றி) குறிபபினல், உணரும் - பொருளறியபபடுகிற, கிளவியும - சொறகளும, உள - (சில) உணடு.

அவையாவன - 'ஒனறெழி பொதுசசொல" என்னுஞ் சூததிரததில 'இன்னபிறவும' என்றதனுற கொள்ளபபட்டவை.

* இநநூலின ஈறறுச சூததிரம.

"குழைகொண்டு கோழியெறியும் வாழ்க்கையர்" என்றவிடத்து, (கோழியெறிவா ரென்பது தலைமைப்பொருளாகாமல்) பெருஞ்செல்வ வாழ்க்கையர் என்பது குறிப்பினால் உணரப்படுதல் காண்க.

கேட்பவர்களுக்கு வருத்தப்படாமற் பொருள் விளங்கச் சொல்லுதல் மரபாதலால், இது வழுவமைதி யாயிற்று.

இச்சூத்திரம், ஆசிரியவசனமென்று உணர்க; [தொல்காப்பியம்*] (ருஎ)

[அஃறிணையை உயர்திணைபோல வைத்துக் கூறுதல்]

† சoகூ. கேட்குந போலவுங் கிளக்குந போலவும்
இயங்குந போலவு மியற்றுந போலவும்
அஃறிணை மருங்கினு மறையப் படுமே.

(இ-ள்.) கேட்குந போலவும்-(கேளாதவற்றைக்) கேட்பதைப்போலவும், கிளக்குநபோலவும்-(பேசாதவற்றைப்) பேசுபவைபோலவும், இயங்குநபோலவும் - (நடவாதவற்றை) நடப்பவைபோலவும், இயற்றுந போலவும் - (இவையல்லாத வேறு தொழில்களைச் செய்யாதவற்றைச்) செய்பவைபோலவும்,—அஃறிணைமருங்கினும் - அஃறிணையிடத்தும்,—அறையப்படுமே - (உயர்திணை போலவைத்துச்) சொல்லப்படுமே, (எ - று.)—இது - வழுவமைதி.

(உதாரணம்)

(க) "நன்னீரை வாழி அனிச்சமே"—கேட்பதுபோலச் சொல்லப்பட்டது.
(உ) "பகைமையைக் கண் உரைக்கும்"—பேசுவதுபோலச் சொல்லப்பட்டது.
(ங) "இவ்வழி அவ்வூர்க்குப்போகும்"—நடப்பதுபோலச் சொல்லப்பட்டது.
(ச) "தன் நெஞ்சே தன்னைச்சுடும்"—செய்வதுபோலச் சொல்லப்பட்டது.

[உருவகத்திலும் உவமையிலும் திணைகள் மாறிவருதல்.]

சசo. உருவக உவமையிற் றிணைசினை முதல்கள்
பிறழ்தலும் பிறவும் பேணினர் கொளலே.

(இ - ள்.) உருவகம் - உருவகவணியிலும், உவமையில் - உவமை யணியிலும், திணை - உயர்திணை அஃறிணைகளும், சினை முதல்கள் - அவயவமும் அவயவியும், பிறழ்தலும் - தம்முள் மாறிவருதலையும், பிறவும் - இவ்வியலுள் சொல்லாதொழிந்தவற்றையும், பேணினர் கொளல்-பாதுகாத்துக்கொள்க.

உருவகமாவது ஒற்றுமையினாலாவது, செய்கையினாலாவது உபமேயத்தில் [illegible] மானத்தைப் பேதமின்றி ஏற்றிச்சொல்லுதல். உவமையாவது-தொழில் பயன் வடிவு நிறம் முதலிய காரணங்களால் இரண்டுபொருள்களுக்கு ஒப்புமை விளங்கச் சொல்வது. உருவகம்-ரூபகம். உவமை - உபமா.

[illegible]யற்த நீ (உதாரணம்.)

ஆழ என் [illegible]ராசனாகிய சிங்கத்திற்குப் பகைவர்கூட்டமாகிய யானைகள் அஞ்சி [illegible]' என, உருவகத்தில் உயர்திணை அஃறிணையோடு மயங்கிற்று. [illegible] செல்வி மங்கையை நல்லோர்விரும்புவர்' என, அஃறிணை உயர்திணை [illegible]டு மயங்கிற்று.

---

† தொழில் தொல்காப்பியம் - சொல்லதிகாரம் - எச்சவியல் - கூங.

உ. 'அவனுக்குத் தம்பியர் இருவரும் இரண்டு தோள்கள்' என, உயர்திணை முதல் உயர்திணைச் சினையோடு மயங்கிற்று. 'தோளாகிய மலை' என உயர்திணைச்சினை அஃறிணை முதலோடு மயங்கிற்று.

(உ) க. 'மயில்போலும் மங்கை' என, உவமையில் உயர்திணை அஃறிணையோடு மயங்கிற்று 'நெற்பயிர்கள் கல்வியுடையோர்போல் வணங்கி காய்த்தன' என அஃறிணை உயர்திணையோடு மயங்கிற்று.

உ. 'கயல்போலும் கண்' என, உயர்திணைச்சினை அஃறிணைமுதலோடு மயங்கிற்று. 'தளிர்போலும் மேனி' என உயர்திணைமுதல் அஃறிணைச்சினையோடு மயங்கிற்று.

இனி, 'பிறவும்' என்றதனால் - 'இவன் சரசுவதிக்கு ஒப்பானவன்' எனப் பால் மயங்கக் கூறுதலும்; செங்கோல், வீரக் கழல் என ஒரு பொருளின் தன்மையை மற்றொரு பொருளின்மேல் வைத்துக் கூறுதலும் [உடையானுடைய செம்மையும், வீரமும் - கோலின்மேலும், கழலின்மேலும் வைத்துக் கூறப்பட்டன]; ஈந்தான் என்பதற்கு - அருளினான் என ஒரு வினையை மற்றொரு வினையாகக் கூறுதலும்; அரசு வேந்து அமைச்சு தூது ஒற்று என உயர்திணையை அஃறிணைவாய்பாட்டாற் கூறுதலும் பிறவும் கொள்க. (ருக)

## பொருள்கோள்.

### [பொருள்கோள்களின் பெயரும் தொகையும்.]

† சகக. யாற்றுநீர் மொழிமாற்று *நிரனிறை விற்பூண்
தாப்பிசை அளைமறி பாப்புக் கொண்டுகூட்டு
அடிமறிமாற் றெனப் பொருள்கோ ளெட்டே.

(இ - ள்.) யாறு நீர் - யாற்றுநீர்ப்பொருள்கோளும், மொழிமாற்று - மொழிமாற்றுப் பொருள்கோளும், நிரல் நிறை - நிரனிறைப் பொருள்கோளும், வில் பூண் - விற்பூட்டுப் பொருள்கோளும், தாம்பு இசை - தாப்பிசைப் பொருள்கோளும், அளை மறி பாம்பு - அளைமறிபாப்புப் பொருள்கோளும், கொண்டுகூட்டு - கொண்டுகூட்டுப் பொருள்கோளும், அடி மறி மாற்று - அடிமறிமாற்றுப் பொருள்கோளும், என - என்று, பொருள்கோள் —, எட்டு - எட்டு வகைப்படும்; (எ - று.)—பொருள்கோள் - சொற்கள் பொருளைக் கொள்ளும் விதம். பொருள்கோளெனினும், அந்வயமெனினும் ஒக்கும். (கூ०)

### [க. யாற்றுநீர்ப் பொருள்கோள்]

† சகஉ. மற்றைய நோக்கா தடிதொறும் வான்பொருள்
அற்றற் றொழுகுமஃ தியாற்றுப் புனலே. ↄ, உண

(இ - ள்.) மற்றைய நோக்காது - (மொழிமாற்று முதலிய) உண்டு. பொருள்கோள்கள் போல மாறிச் செல்லவேண்டாமல், அடி தோறும் (செய்யுளின்) அடிகளிலெல்லாம், வான் பொருள் - சிறந்த பொரு

* 'நிரைநிறை' என்றும் பிரதிபேதம்.

அற்று ஒழுகும அஃது - அமைந்து அமைந்து நடப்பதாகிய அப்பொருள் கோள்,—யாற்றுப் புனல - யாற்றுநீரப பொருளகோளாம; (எ - று.)

யாற்றுநீர்ப பொருளகோள் - திருமபாமலே ஒரே முகமாக ஓடுகின்ற ஆற்றுநீரின் ஓட்டமபோல, சொறகளை முன்பின்னாக மாறாமல் நேராகவே பொருள கொள்ளப்படுவது. எனவே, இது உவமைபற்றிவந்த பெயரென்க. பூட்டுவில், தாப்பிசை, அளை மறிபாப்பு என்பனவும இவ்வாறே.

(உ - ம்.) "சொல அருஞ் சூற் பசுமபாமபின் தோற்றம்போல, மெல்ல வே கருவிருந் தீன்று மேலலாா, செலவமேபோல தலைநிறுவித தோநத நூற், கல்விசோ மாந்தரி னிறைஞ்சிக் காயததவே"—இப்பாட்டினுள், சொல் எனனும எழுவாயினை முதல எடுதது, அதனை தொழிலாகிய இருநதது, ஈனறு, நிறுவி, இறைஞசி எனனும வினைபெசசஙகளை ஒன்றை ஒன்றுகொள் ளுமபடி இடையிலே முறைபாக வைதது, காயதத என்னும் பயனிலையை இறுதியிலே நிறுதநி முடிததவாறு காணக.

(இதன்பொருள —சொல் - நெறபயிாகளானவை, அருஞ் சூல் பசும் பாம்பின் தோறறம போல் - (கருவுணடென்று அறிதறகு) அரிய கருக கொணட பசசைபபாமபின வடிவமபோல, மெல்லவே கரு இருநது - நாள டைவிலே கருககொணடு தஙகி,—ஈன்று-பினபு கதிாவிட்டு,—மேல் அலார் செலவமே போல் - மேனமைககுணமுடையரல்லாத கீழ்மககட்குச செல்வம (நேர்ந்தால் அவர்கள் செருககினல் வணககமின்றித தலைநிமிாந்து நிறபது) போல, தலை நிறுவி - தமது தலை வணஙகாமல நேரே நிறுததி நின்று,— (பின்பு கதிாமுறறியதனுல்), தேர்நத நூல் கல்வி சோ மாந்தரின் - மெயப பொருளை யாராய்ந்து கூறுகினற சாஸ்திரஙகளைக கற்றல் பொருந்திய மனி தாகள (மிககவணககமுடையராதல்) போல, இறைஞசி-மிகவும வளைந்து,— காயதத - விளைநதன எனககாணக. ஏ - ஈறறசை ) (சுக)

[உ. மொழிமாற்றுப் பொருளகோள்.]

† சகரு. ஏறற பொருளுக கியையு மொழிகளை
மாறறி யோரடியுள் வழங்கல மொழிமாற்றே.

(இ - ள்) ஏற்ற பொருளுககு ஏறற இரணடு பயனிலைகளுககு, இயை யும - பொருந்ததககக, மொழிகளை - சொறகளை, மாறறி - (ஏலாதபயனிலை களுககுத) தனிததனி கூட்டி, ஓா அடியுள் வழஙகல் - ஓா அடியினுள்ளே சொல்வது, மொழிமாற்று - மொழிமாறறுப் பொருள்கோளாம; (எ - று.)

(உ - ம.) "சுரை ஆழ அம்மி மிதப்ப வரையனைய, யானைக்கு நீத்து முயற்கு நிலை யென்ப, கானக நாடன் சுனை"—இப்பாட்டினுள், முதலடியில் ஆழ என்னும் பயனிலைக்கு இயைாத அம்மி என்னும் மொழியை மிதப்ப என்னும் பயனிலைககும, மிதப்ப என்னும பயனிலைக்கு இயைந்த சுரை என் னும மொழியை ஆழ என்னும பயனிலைககுமாக மாற்றிவைததவாறும; இரண்டாமடியில நீதது என்னும பயனிலைககு இயைந்த முயல் என்னும் மொழியை நிலை என்னும பயனிலைககும, நிலை என்னும் பயனிலைக்கு

இயைந்த யானை யென்னும் மொழியை நீத்து என்னும் பயனிலைக்குமாக மாற்றி வைத்தவாறும் காண்க.

(இதன்பொருள்:—காடுகள் சூழ்ந்த நாட்டையுடைய அரசனது மலைச் சுனையானது, சுரைக்காய் மிதக்க அம்மி அமிழ மலைபோன்ற யானைக்குக் கால் நிலைக்கத்தக்க ஆழமும் முயலுக்கு நீந்தத்தக்க தன்மையது மாகுமென்று கூறுவா (அறிந்தோர்) எனக் காண்க.) (சுஉ)

[ரு. நிரனிறைப் பொருள்கோள்]

† சசச. பெயரும் வினையுமாஞ் சொல்லையும் பொருளையும்
வேறு நிரனிறீஇ முறையினு மெதிரினும்
நேரும் பொருள்கோள் நிரனிறை நெறியே.

(இ - ள்) பெயரும் வினையுட் ஆம்-பெயர்ச் சொல்லும் வினைச்சொல்லு மாகிய, சொல்லையும் - சொற்களையும், பொருளையும் - (அவைகொள்ளும் பெயரும் வினையுமாகிய) பயனிலைகளையும், வேறு-வேறுவேறாக, நிரனிறீஇ-வரிசைப்பட நிறுத்தி,—முறையினும் - முறையாகவாயினும், எதிரினும் - முறை மாறுபடவாயினும், நேரும் - இதற்கு இது பயனிலை யென்பது படக் கூறுகிற, பொருள்கோள்—,—நெறி - வழிப்பட்ட, நிரல் நிறை-நிரனிறைப் பொருள்கோளாம்; (எ - று.)

(உதாரணம்.)

(க) "உடுத்ததுவும் மேய்த்ததுவு மும்பர்கோன் றனனால், எடுத்ததுவும் பள்ளிக் கியையப்—படுத்ததுவும், அந்நாளெறிந்ததுவு மன்பி னிரந்ததுவும், பொன்னா வரை யிலை காய் பூ"—இது - உடுத்தது பொன், மேய்த்தது ஆ, எடுத்தது வரை, படுத்தது இலை, எறிந்தது காய், இரந்தது பூ எனப் பெயர்களும் பெயர்ப்பயனிலைகளுமாய் நின்ற முறைநிரனிறை. ('உடுத்தது' முதலியன - வினையாலணையும் பெயர். வரை - மலை பூ - பூமி; வடசொல்.)

(இதன் பொருள்.—தேவாதிதேவனான திருமாலினால் அரையில் உடுக்கப்பட்டது பீதாம்பரமென்னும் பொற்பட்டாடை, (கிருஷ்ணாவதாரத்தில்) மேய்க்கப்பட்டது பசு, குடையாக எடுத்துப் பிடிக்கப்பட்டது கோவர்த்தன கிரி, (பிரளயகாலத்தில்) சயனத்துக்கு இயையப் படுக்கையாகக் கொள்ளப்பட்டது ஆலிலை, (கிருஷ்ணாவதாரகாலத்தில் கன்று கொண்டு) எறியப்பட்டது விளங்காய், (பாண்டவர்க்காகத் துரியோதனனிடம் தூதுசென்று) அன்போடு இரக்கப்பட்டது பூமி எனக் காண்க.)

(உ) "காதுசேர் தாழ்குழையாய் கனிந்த துரைச்சேர்ப்ப, போதுசேர் தாரமார்ப போர்ச்செழிய—நீதியாள, மண்ணமிர்த மங்கையர் தோள் மாற்றாரையேற்றார்க்கு, நுண்ணிய வாய்பொருள்"—இதில் 'கா து சோ தாழ் குழை ஆய' என்னும் ஆறும் முன்னிலை ஏவல் வினைச் சொற்களாதலால், கா மண், து அமிர்தம், சோ மங்கையர்தோள், தாழ் மாற்றாரை, குழை ஏற்றார்க்கு, ஆய் நுண்ணியவாய்பொருள் என வினைப்பயனிலைகளும் பெயர்களுமாய் நின்ற முறைநிரனிறை: [து - உண் தாழ் - கீழ்ப்படுத்து, குழை - மனமிரங்கு, ஆய - ஆராய்ந்துபார்.]

(இதன்பொருள் — கன்னி துறை சேர்ப - கன்னியாகுமரி யென்னுந் துறைமுகத்தையுடைய கடற்கரைக்குத் தலைவனே! போது சேர் தார் மார்ப - மலர்களினால் தொடுக்கப்பட்ட மாலையைத் தரித்த மார்பை யுடையவனே! போர் செழிய-போர் செய்யவல்ல பாண்டியனே! (நீ), நீதியால் - முறையே, மண்-பூமியை, கா - பாதுகாப்பாய்; அமிர்தம் - இனிய உணவை, து - உண்பாய்; மங்கையர் தோள் - உரிய மகளிர்களின் தோள்களை, சேர் - சேர்வாய்; மாற்றாரை - பகைவர்களை, தாழ - தாழச்செய்வாய்; ஏற்றார்க்கு - இரப்பவர்களுக்கு, குழை - மனம் நெகிழ்வாய்; நுண்ணிய ஆய பொருள் - நுட்பமான பொருள்களை, ஆய் - ஆராய்வாய் எனக் காண்க.)

(௩) "வானமுகிலும் மின்னும் வருநிலத்து வீழ்ந்தது போல, தானும் குழலும் தனி வீழ்ந்தாள்" — இது - முகில்போலக் குழலும், மின் போலத் தானும் என மாறவேண்டுமாதலின், பெயர்களும் பெயர்ப்பயனிலைகளுமாய் நின்ற எதிர்நிரனிறை

(இதன்பொருள். — வானத்திலுள்ள மேகமும் மின்னலும் வெறுந்தரையிலே விழுந்திட்டாற்போலத் தலைவிரி கோலமாய்த் தான் (தமயந்தி) தனியே விழுந்திட்டாள் எனக் காண்க)

(௪) "ஆடவாக ளெவ்வா றகன்றொழிவார் வெஃகாவும், பாடகமு மூரகமும் பஞ்சரமா நீடியமால், நின்றா னிருந்தான் கிடந்தா னிதுவன்றோ, மன்றார் மதிற்கச்சி மாண்பு" — இது - வெஃகா கிடந்தான், பாடகம் இருந்தான், ஊரகம் நின்றான் என்ப பெயர்களும் வினைப்பயனிலைகளுமாய் நின்ற எதிர்நிரனிறை.

(இதன்பொருள் — நீண்ட திருமால் வெஃகா, பாடகம் ஊரகம் என்ற தலங்களைத் தனக்கு இடமாகக் கொண்டு அவற்றில் முறையே கிடந்தான், இருந்தான், நின்றான்; பலசபைகள் நிறைந்ததும், மதில்சூழ்ந்ததுமான காஞ்சிபுரியின் பெருமை இதுவன்றோ? இப்படிப்பட்ட கச்சிப்பதியை, மனிதர்கள் எங்ஙனம் விட்டு நீங்குவர்? எனக்காண்க பஞ்சரம் - இடம் வெஃகா, பாடகம், ஊரகம் என்பன - காஞ்சிநகரத்திலுள்ள திருமால் திருப்பதிகள். திருமால் அவற்றுள் வெஃகாவில் பள்ளிகொண்ட திருக்கோலமாகவும், பாடகத்தில் வீற்றிருந்த திருக்கோலமாகவும், ஊரகத்தில் நின்ற திருக்கோலமாகவும் எழுந்தருளியிருக்கின்றனன் ஆதலால், இச்செய்யுளில், முறையே கொள்ளாமல் மாற்றி இயைத்துப் பொருள்கொள்ளவேண்டியதாயிற்று. திருவெஃகா - யதோக்தகாரிசந்நிதி யென்றும், திருப்பாடகம் - பாண்டவதூதர்சந்நிதி யென்றும், திருவூரகம் - உலகளந்த பெருமாள்சந்நிதி யென்றும் வழங்கும்.) (௬௩)

[௪. பூட்டுவிற் பொருள்கோள்]

† ௪௧௫. எழுவா யிறுதி நிலைமொழி தம்முள்
பொருள்நோக் குடையது பூட்டுவில் லாகும்.

(இ - ள்.) எழுவாய் - (செய்யுளின்) முதலிலும், இறுதி - ஈற்றிலும், நிலை - நிற்கிற, மொழி- சொற்கள், தம்முள் - தமக்குள்ளே, பொருள்நோக்கு

உடையது - பொருளை நோக்குதலுடையது —பூட்டு வில் ஆகும் - விற்பூட்டுப் பொருள்கோளாம்; (எ - று ,—இங்கே, எழுவாய் - முதல்.

பூட்டுவிற் பொருள்கோள் - இருகோடிகளிலும் நாணி பூட்டப்படுதலை யுடைய விற்போலச் செய்யுளின் முதல் மொழியும் இறுதிமொழியும் பொருளிற் பொருந்துவது.

(உ - ம) திறந்திடுமின் தீயவை பிற்காண்டும் மாதா, இறந்து படிற்பெரிதாமேதம்—உறந்தையர்கோன், தண்ணார மார்பன்தமிழர் பெருமானைக் கண்ணாரக் காணக் கதவு"—இதில், திறந்திடுமின் கதவு என நோக்கிறது.

(இதன் பொருள் —தீயவை பின் காண்டும் - (எவையேனும்) தீங்குகள் நேருமாயின் (அவற்றிற்குப் பரிகாரம்) பின்பு பார்த்துக்கொள்வோம்; மாதர் இறந்துபடின் பெரிது ஆம் ஏதம்-(சோழனைக் காணுதற்கு மிக்க ஆசை கொண்டுவந்துள்ள) மகளிர் (அவனைக்காணாமையாலாகிய வருத்த மிகுதியால்) இறந்தொழிந்தால் (பெண் கொலையாகிய) பெரும் பாவம் விளையும்; (ஆதலால் ,—உறந்தையர் கோன் - உறையூரிலுள்ளார்க்கு அரசனும், தண் ஆரம் மார்பன் - குளிர்ந்த முத்துமாலையைத்தரித்த மார்பையுடையவனும், தமிழர் பெருமானை-தமிழ் வல்லார்க்குத் தலைவனுமாகிய சோழனை, கண் ஆரக் காண - கண்கள்களிக்க (இம்மகளிர்) காணும்படி, கதவு திறந்திடுமின் - கதவைத் திறந்துவிடுங்கள் எனக் காண்க.) (சுச)

[ரு தாப்பிசைப் பொருள்கோள் ]

† சகசு. இடைநிலை மொழியே ஏனையீரிடத்தும்
நடந்து பொருளை நண்ணுதல் தாப்பிசை.

(இ - ள் ) இடை நிலை மொழி - (செய்யுளின்) நடுவில் நிற்கிற மொழி, ஏனை ஈரிடத்தும்-ஒழிந்த முதலிலும் இறுதியிலும், நடந்து - சென்று, பொருளை நண்ணுதல் - பொருளைக் கூடுவது,—தாம்பு இசை - தாப்பிசைப் பொருள்கோளாம்; (எ - று )—இதனை, மத்திமதீபம் என்பர் வடநூலார்.

தாப்பிசை என்பதற்கு - ஊஞ்சற்கயிறுபோல நடுவில் நின்று இருபக்கத்திலும் செல்லும் சொல் என்பதுபொருள்; (தாம்பு - கயிறு.)

(உ - ம.) "உண்ணாமையுள்ள துயிர்நிலை யூனுண்ண, அண்ணாத்தல் செய்யா தளறு"—இதில, நடுவில் நின்ற 'ஊன்' என்ற சொல் - ஊனுண்ணாமை என முன்னும், ஊனுண்ண எனப் பின்னும் சென்று கூடுதல் காண்க.

(இதன்பொருள்—உயிர் நிலை - சில உயிர்கள் உடம்பிலே நிற்றல் (அல்லது உயிர் நற்கதியடையும் நிலைமை,) ஊன் உண்ணாமை உள்ளது - மாமிச போசனஞ் செய்யாமை யென்கிற தருமத்திலே யுள்ளது; (ஆதலால்), ஊன் உண்ண - (அந்நிலை குலைய ஒருவன்) மாமிசத்தைப் புசிப்பானாயின், அளறு அண்ணாத்தல் செய்யாது - (அவனை உட்கொண்ட) நரகம், (பின்பு ஒருகாலும் அவனை வெளிவிடுதற்கு) வாய் திறவாது எனக் காண்க ) (சுரு)

[சு அளைமறி பாப்புப் பொருள்கோள்.]

† சஎஎ. செய்யு ளிறுதி மொழியிடை முதலினும்
எய்திய பொருள்கோ ளளைமறி பாப்பே.

(இ - ள்) செய்யுள் - செய்யுளில், இறுதி - நிற்கின்ற, மொழி - சொல், இடை - நடுவிலும், முதலினும்-(அதன்பின்பு) முதலிலும், எய்திய - சென்று இயைந்த, பொருள்கோள் —, — அளை மறி பாப்பு - அளைமறிபாப்புப் பொருள்கோளாம்; (எ - று)

புற்றிலே தலைவைத்து மடங்கும் பாம்புபோல முன்பின்னாக அந்வயிக்கப்படுதலால், இப்பெயர் பெற்றது (அளை - புற்று. மறிதல் மடங்குதல்.) பாம்பு புற்றில் தலைவைத்து நுழையுமளவிலே தலை மேலாம்படி கிலைமாறுதல் இயல்பு; அவ்வாறே, செய்யுளின் இறுதியிலிருந்து சொற்களை யெடுத்துக் கூட்டிப் பொருள் கொள்வது, இதன் இலக்கணம்

(உ - ம.) "சூழ்ந்த வினை யாக்கை சுடவிளிந்து நாற்கதியிற் சுழல்வார் தாமும், மூழ்ந்த பிணிநலிய முன்செய்த வினையென்றே முனிவார் தாமும், தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து தண்டூன்றித் தளர்வார் தாமும், வாழ்ந்த பொழுதினேவா னெய்து நெறிமுன்னி முயலாதாரே—"—இதில், வாழ்ந்தபொழுதினே வானெய்து நெறிமுன்னி முயலாதார் தாழ்ந்த உணர்வினராய்த் தாளுடைந்து தண்டூன்றித் தளர்வார், மூழ்ந்த பிணிநலிய முன் செய்த வினையென்றே முனிவார், சூழ்ந்த வினையாக்கை சுட விளிந்து நாற்கதியிற் சுழல்வார் எனத் தலைகீழாய் இடையிலும் முதலிலும் சென்று கூடுதல் காண்க.

(இதன்பொருள் —வாழ்ந்த பொழுதினே - தாம்வலிமையோடு) உயிர் வாழ்ந்திருந்தகாலத்திலே, வான் எய்தும் நெறி முன்னி முயலாதார்-(பின்பு) முத்தியைப்பெறும் வழியைக் குறித்து முயற்சி செய்யாதவர்கள்,—தாழ்ந்த உணர்வினர் ஆய் தாள் உடைந்து தண்டு ஊன்றி தளர்வார்தாமும்-(முதுமையில்) அறிவுமழுங்கியவர்களாய்க் கால்வலிமைகுன்றித் தடியை ஆதாரமாக ஊன்றிக்கொண்டு தளர்பவர்களும், மூழ்ந்த பிணி நலிய முன் செய்த வினை என்றே முனிவார்தாமும் - (உடம்பில்) அழுந்திய நோய்கள் வருத்துதலால் முன்பு செய்த கருமத்தின் பயன் இதுவென்று வெறுப்புக்கொள்பவர்களும், சூழ்ந்த வினை யாக்கை சுட விளிந்து நால் கதியில் சுழலவார்தாமும் - (தம் உயிரை) விடாது சூழ்ந்த கருமம் உடம்பை யொழித்தலால் இறந்து (மக்கட்கதி தேவகதி நரககதி விலங்குகதி யென்னும்) நால்வகைக் கதிகளுள்ளும், மாறிமாறிப்பிறந்து அலைபவர்களு மாவர் எனக் காண்க.) (சுசு)

[எ கொண்டுகூட்டுப் பொருள்கோள்]

† சஎஅ யாப்படி பலவினுங் கோப்புடை மொழிகளை
ஏற்புழி இசைப்பது கொண்டு கூட்டே.

(இ - ள்.) யாப்பு அடி பலவினும் - செய்யுளின் அடிகள் பலவற்றிலும், கோப்பு உடை - கோக்கப்பட்டுக் கிடக்கின்ற, மொழிகளை - சொற்களை,

ஏற்பு உழி-(பொருளுக்கு) ஏற்ற இடத்தில், இசைப்பத்து - எடுத்துக்கொண்டு கூட்டுவது,—கொண்டுகூட்டு-கொண்டுகூட்டுப் பொருள்கோளாம்; (எ - று.)

சிதர்ந்துகிடந்த சொற்களை எடுத்து வரிசைப்பட அந்வயித்துப் பொருள் கொள்வது, கொண்டுகூட்டுப் பொருள்கோள்.

மொழிமாற்றுப் பொருள்கோளுக்கும், கொண்டு கூட்டுப்பொருள் கோளுக்கும் வேறுபாடு —இவ்விரண்டும் சொற்களை முன்பின்னாக மாற்றப் படுதலால் ஒப்புமையுடையனவாயினும் ஓரடியில் உள்ள சொற்களை முன் பின்னாக மாற்றுவது மொழிமாற்றுப் பொருள்கோள் என்றும், பல அடி களிலும் நின்ற சொற்களை ஏற்றபடி கொண்டு கூட்டுவது-கொண்டுகூட்டுப் பொருள்கோள் என்றும் அறிக.

(உ - ம்.) "தெங்கங்காயபோலத் திரண்டுருண்ட பைங்கூந்தல், வெண் கோழி முட்டை யுடைத்தன்ன மாமேனி, அஞ்சனத் தன்ன பசலை தணி வாமே, வங்கத்துச் சென்றார் வரின்"—இதில், வங்கத்துச் சென்றார்வரின் அஞ்சனத்தன்ன பைங்கூந்தலை யுடையாளது மாமேனிமேல் தெங்கங்காய போலத் திரண்டுருண்ட கோழிவெண்முட்டை யுடைத்தன்ன பசலை தணி வாமே எனக் கொண்டு கூட்டுக.

(இதன்பொருள்.—வங்கத்துச் சென்றார் வரின்-(பொருள்தேடும் பொருட்டு) மரக்கலத்திலேறிச்சென்ற தலைவர் வந்தால்,—அஞ்சனத்து அன்ன பைங்கூந்தல் - மையைப்போன்ற கரிய கூந்தலையுடைய இத்தலைவியினது, மாமேனி - அழகிய மேனியிற் காணப்படுகின்ற, தெங்கங்காயபோல திரண்டு உருண்ட வெண் கோழிமுட்டை உடைத்து அன்ன பசலை தேங்காயபோலத் திரண்டு உருண்ட வெண்மையான கோழிமுட்டையை யுடைத்தாற்போன்ற பசலைநிறம், தணிவாம் - நீங்கப்பெறுவோம் எனக் காண்க. பசலை - காமத் தாலுண்டாகும் நிறவேறுபாடு தணிவு ஆம் எனப்பிரித்து, நீங்கிவிடுமென்று கொள்ளினும் அமையும். இது, தோழிவார்த்தை.) (கூஎ)

[ஆ. அடிமறிமாற்றுப் பொருள்கோள்]

† சகக. ஏற்புழி யெடுத்துடன் கூட்டுறு மடியவும்
யாப்பீ றிடைமுத லாக்கினும் பொருளிசை
மாட்சியு மாறா வடியவு மடிமறி

(இ - ள்) ஏற்புஉழி - (பொருளுக்கு) ஏற்றவிடத்து, எடுத்து—, உடன் கூட்டுறும் - நீங்காமற் கூட்டுகின்ற, அடியவும் - அடியை யுடையவையும், யாப்பு ஈறு இடைமுதல் ஆக்கினும் - (யாதாயினும் ஓரடியை எடுத்து) அச் செய்யுளின் இறுதி நடு முதல்களில் யாதாயினும் ஓரிடத்துக் கூட்டினாலும், பொருள் இசை மாட்சியும் மாறா அடியவும் - பொருளோடு செய்யுளோசை மாட்சியும் செய்யுளோசையொழியப் பொருள்மாட்சி மாத்திரமும்வேறுபடாத அடியையுடையவையும்,—அடிமறி - அடிமறிமாற்றுப் பொருள்கோளாம்.

எனவே-ஏற்புழிக்கூட்டும் அடிமாற்று, மாறா அடிமாற்று என அடிமறி மாற்றுப் பொருள்கோள் இருவகைப்படுமென்றும்; அவற்றுள், பின்னது- -

பொருளிசைமாட்சிமாறு அடிமாற்று. பொருண்மாட்சிமாறு அடிமாற்றுஎன இருவகைப்படுமெனறும கொள்க. [இசையெனினும செய்யுளோசையெனினும ஒக்கும] அடிமறி மாற்று - மொழிமாற்றும கொண்டு கூட்டும் போல அடியிலுள்ள சொற்களை முன்பின்னாக மாற்றுவதல்லாமல் அவ்வடிகளையே முழுவதும எடுத்து முன்பின்னாக மாற்றிவைப்பது.

(உதாரணம)

(க) "நடுக்குற்றுத தற்சேர்ந்தார் துன்பந்துடையார், கொடுத்துத்தான் துய்ப்பினு மீண்டுங்காலீண்டும், விடுக்குற்றுப பற்றினும நிலலாது செலவம், விடுக்கும வினையுலந்தக்கால்"—இதில், கொடுத்துத தான் துயப்பினும் ஈண்டுங்கால ஈண்டும, விடுக்கும வினை உலந்தக்கால மிடுக்குற்றுப் பற்றினும நிலலாது செலவம; (இதனை அறியாதவர்) நடுக்குற்றுத தற்சேர்ந்தார் துன்பந் துடையார என அடிகளைப பொருளுக்கு ஏற்ற விடத்து எடுத்துக கூட்டல் காணக. இது, ஏற்புழிக்கூட்டும் அடிமறிமாற்று.

(இதன்பொருள் —(செலவம), கொடுத்து தான் துயப்பினும - (பிறர்க்கும்) கொடுத்துத தானும் அனுபவித்து வந்தாலும், ஈண்டும் கால ஈண்டும - (நலவினையால்) வளரவேண்டுங காலத்து வளரும, விடுக்கும வினை உலந்தக்கால் - (முறபிறப்பிற செய்து குறையாக) விட்ட அநநல்வினை முடிந்துவிட்டால, மிடுக்கு உற்று பற்றினும நிலலாது செலவம் - இறுக்கிப பிடித்தாலும் செலவம நிலைபெறுமற போயவிடும; (இதனையறியாத பலர) நடுக்கு உற்று தன் சேர்ந்தார் துனபம துடையார - (வறுமையினால்) நடுக்குதலையடைந்து தம்மைச சேர்ந்தவரது துன்பத்தை (அவர வேண்டின கொடுத்துப்) போக்கார எனக காணக.)

(உ) க. 'மரகத மணிப்பணி செய மாளிகைகளொருசார, அரிமணியழுத்தியன ஆலயமதொருசார, எரிமணியழுத்தியன வில்லினவிதமொருசார. தருணமணிமுத்தினியலுஞ் சதன மொருசார"—இதில, எந்த அடியை எங்கே கூட்டினும பொருளும் ஓசையும வேறுபடாமை காணக. இது, பொருளிசைமாட்சி மாற அடிமறிமாற்று.

(இதனபொருள —மரகதரத்தினங்களால் வேலை செய்யப்பட்ட வீடுகள ஒருபக்கத்திலும, செந்நிறமான பதுமராகக கற்களைப பதித்துக கட்டிய வீடுகள் ஒருபக்கத்திலும், மிக விளங்குகிற நீலமணிகளைப் பதித்தனவான வீடுகளின் வகைகள ஒருபக்கத்திலும, முதிர்ந்த அழகிய முத்துக்களினாலமைந்த வீடுகள ஒருபக்கத்திலும (உள்ளன) எனக்காணக.)

உ. "அலைப்பான பிறிதுயிரை யாக்கலுங குற்றம, விலைப்பாலில் கொண்டூனமிசைதலுங குற்றங், சொலற்பாலவல்லாதசொல்லுதலுங குற்றங், கொலைப்பாலுங குற்றமேயாம்"—இதில்,—ஈற்றடியொழிந்த மூன்றடிகளுள் எந்த அடியை எங்கே கூட்டினும பொருளும ஓசையும வேறுபடாமையும், ஈற்றடியை யெடுத்து யாதாயினு மோரிடத்துக் கூட்டினால் ஓசை வேறுபடுப பொருள வேறுபடாமையும காணக. இது பொருள்மாட்சி மாற அடிமறிமாற்று.

(இதன்பொருள் —கொலலுதற்பொருட்டு வேறோருயிரை வளாததலும் பாவம், விலைக்கு வாஙகி மாமிசததைப் புசிததலும பாவம; சொலலததகாத வாாததைகளைச சொலலுதலும பாவம, கொலலுதலும்பாவம எனககாணக)

போதுவியல் முற்றிற்று.

---

# ச. இடையியல்.

இடைசசொலலின இலககணஙகளை உணாததும இயல.

## [இடைச்சோல்லின் இலக்கணம்.]

‡ சஉ0 வேற்றுமை வினை சாரியை ஒபபு உருபுகள
தத்தம பொருள இசைநிறை அசைநிலை
குறிபபெ னெணபகுதியின தனித்திய லின்றிப
பெயரினும வினையினும பின்முன் ஓரிடத்து
ஒன்றும் பலவும வந தொன்றுவ திடைச்சொல்.

(இ - ள்.) வேற்றுமை - (ஐ முதலிய) வேற்றுமை யுருபுகளும, வினை - (விகுதி முதலிய) வினையுருபுகளும, சாரியை-(அன் ஆன் முதலிய) சாரியை யுருபுகளும, ஒபபு உருபுகள் - (போல முதலிய) உவமையுருபுகளும், தம தம பொருள - தம தமககு உரிய பொருளை உணர்ததி வருகிற ஏ ஓ முதலியவை யும், இசைநிறை-(வேறு பொருளிலலாமல) செயயுளிசை நிறைததற்கே வரு பவையும, அசைநிலை - அசையாய வருதலே பொருளாக நிற்பவையும, குறி ப்பு - (வெளிப்படையாய் வரும இவைபோலாமல) குறிபபினுற் பொருளுண ாததி வருபவையும, என் - எனகிற, எண பகுதியின் - இவ்வெட்டு வகையை உடையனவாய,—தனிதது இயல் இன்றி-தனிதது நடக்கும தனமையிலலா மல்,—பெயரினும வினையினும - பெயாசசொலலினிடததும வினைசசொல்லி னிடததும், பின் முன் (அவறறின்) பினனேயாயினும முனனேயாயினும, ஓா இடதது - ஒருஇடததில, ஒனறும பலவும-ஒன்றுயினும பலவாயினும, வந்து—, ஒன்றுவது - ஒனறு பட்டு நடப்பது,—இடைசசொல்—; (எ - று.)

தனிதது நடக்கும் ஆற்றலிலலாமல் பெயாவினைகளோடு சோந்து அவ ற்றினிடமாக நடததலால், 'இடைசசொல்' எனப்பட்டன. [இடம, இடை என்பன-ஒருபொருட் சொறகள.] இனி, பெயாசசொலலும வினைசசொல லும ஆகாமல் அவற்றினும வேறுமாகாமல் நடுகதன்மையாய நிற்கையால, இடைசசொல் எனப்பட்டன எனினும அமையும; இனி, முனனும பின்னும வருமாயினும, பெரும்பாலும் இடையிலே வருதலால, இடைசசொல என் பது ஆசிரியா கருததென்பாரும் உளா.

'உருபுகள்' எனபதை, வேற்றுமை வினைசாரியை எனபவற்றோடும கூட்டுக

அசைததல் - ஒருபொருளையும் உணாததாமல பெயாசசொல வினைச சொற்களோடு சாாததிச சொலலப்படுதல். இசைநிறை அசைநிலை எனனும் இரணடும் வேறுபொருளை உணாததாதன வாயினும், இசைநிறை - செய்யு

னில் ஓசையை நிறைப்பதென றும அசைநிலை - பெயர் வினைகளோடு சார்த்திச்சொல்லப்படுவ தென்றும வேறுபாடு அறிக.

வேற்றுமையுரு பிடைச்சொற்கள் - பெயரியலிற சொல்லப்பட்டன.

வினையுருபிடைச்சொற்கள்-பதவியலிற சொல்லப்பட்டன. பின்-'சாரியை'எனச்சொல்லுதலால, வினையென்றது-அதுநீங்கலான மற்றையவற்றை.

சாரியை யிடைச்சொற்கள் - உருபு புணரியலிற சொல்லப்பட்டன.

ஒப்புரு பிடைச சொற்கள் - பொதுவியலில''போலப் புரைய'' என்னும சூத்திரத்திற சொல்லப்பட்ட எச்சங்களின பகுதிகள்.

தமதம பொருள் உணாததுவனவும, இசைநிறையும, அசைநிலையும ஆகிய இசைச்சொற்கள் - மேல இவ்வியலிற் சொல்லப்படுவன.

குறிப்பாற பொருளுணாததும இடைச்சொற்கள வருமாறு.—கோவென சோவென, துடுமென, ஒலலெனை, கஃறென, சுஃறென, கடகடென, களகளென, திடுதிடென,நெறுநெறென, படபடென, என்றாற்போலவன-ஒலிக் குறிப்புப்பொருளைத தரும இடைச சொற்கள். துணணென, துணுக்கென, திட்கென, திடுக்கென என்றாற போலவன -அச்சக்குறிப்புப்பொருளைத்தரும இடைச்சொற்கள. பொளளென, பொருக்கென, ஞெரேலென என்றாற போலவன - விரைவுக்குறிப்புப பொருளைத தரும இடைச்சொற்கள.

குழையன், அது மற்றம்ம—பெயரின் முன் ஒன்றும பலவுமவநதன.

ஓ சாத்தன், இனி மற்றென்று—பெயரின்முன ஒன்றும்பலவும் வந்தன.

உண்ணூய், நடநதனனே—வினையின பின ஒன்றுமபலவும் வநதன.

அம்மா பெரிது, சீ சீ போ—வினையின்முன் ஒன்றும்பலவும் வந்தன. (க)

[இடைச்சொல்லின் பொருள்கள்.]

† ௪௨௧. தெரிநிலை தேற்றம் ஐயம் முற்று எண் சிறப்பு
எதிர்மறை எச்சம வினு விழைவு ஒழியிசை
பிரிப்புக கழிவு ஆக்கம இன்னன இடைப்பொருள்.

(இ - ள்.) தெரிநிலை - தெரிநிலையும, தேற்றம - தெளிவும, ஐயம் - சந்தேகமும, முற்று - முற்றும், எண - எண்ணும, சிறப்பு - சிறப்பும, எதிர்மறை- எதிர்மறையும, எச்சம - எச்சமும, வினு - வினுவும, விழைவு - விருப்பமும், ஒழியிசை - ஒழிந்தசொல்லும, பிரிப்பு - பிரிநிலையும், கழிவு - கழிதலும, ஆக்கம - ஆக்கமும, (என்னும பதிநான்கும்), இன்னன - இவை போல்வன பிறவும்,—இடை - ('தத்தம பொருள்' என்ற) இடைச சொற்களினுடைய, பொருள் - பொருள்களாம; (எ - று.)—உவை - மேற் காட்டப்படும.

'இன்னன' என்றதனுல் சில வருமாறு:—

அ, இ, உ—சுட்டுப்பொருளைத தருவன; அவன், இவன், உவன்.

எ, யா, ஆ, ஓ, ஏ,—வினுப்பொருளைததருவன; எவன்,யாவன், பொன் னை, சாத்தனே, ஏது.

முன், பின்,—இடப்பொருளும் காலப்பொருளும் தருவன; முன் செய், பின் இரு.

இனி என்பது-கால இடங்களின் எல்லைப்பொருளைத் தருவது; இனிச் செய்வேன், இனி எம் ஊர்.

தொறும், தோறும்—தொழில் இடங்களின் பன்மைப்பொருளைத் தருவன; செய்தொறும், ஊர்தோறும்.

ஆவது, ஆதல், ஆயினும்; தான்—விகற்பப் பொருளைத்தருவன; பத்தாவது எட்டாவது கொடு, (பிறவும் இவ்வாறே காண்க.)

அந்தோ, ஐயோ, ஆ முதலியவை—இரக்கப் பொருளைத் தருவன; இழந்தான.

அம்மா, ஆ, ஓ, முதலியவை—வியப்புப் பொருளைத் தருவன; அம்மா பெரிது

வாளா, சும்மா, வாளனே—பயனின்மைப் பொருளைத் தருவன; வாளா இருந்தான்

சீ, சிச்சீ முதலியவை—இகழ்ச்சிப்பொருளைத் தருவன; சீ சீ போ.

'ந' என்பது—உயர்வுப் பொருளைத் தருவது; நப்பின்னை, நக்கீரன.

மற்றும் இப்படிவருகின்றவற்றை ஆராய்ந்து அறிந்து கொள்க. (உ)

[ஏகார யிடைச்சொல்]

௪உஉ. பிரிநிலை வினா எண் ஈற்றசை தேற்றம்
இசைநிறை என ஆறு ஏகாரம்மே.

(இ - ள்.) ஏகாரம்- ஏகாரஇடைச்சொல்,—பிரிநிலை-பிரிநிலையும், வினா-வினாவும், எண் - எண்ணும், ஈற்றசை - ஈற்றசையும், தேற்றம் - தெளிவும், இசைநிறை - இசைநிறைதலும், என-என்று, ஆறு - ஆறு பொருள்தரும்.

(உதாரணம்.)

(க) அவர்களுள் இவனே கொண்டான்—இதில், ஒரு கூட்டத்திலிருந்து ஒருவனைப் பிரித்து நிற்றலால்; பிரிநிலை.

(உ) நீயேகொண்டாய்?—இதில் நீயா கொண்டாய் என வினவுதற் பொருளைத் தருமிடத்து, வினா.

(ங) நிலமே நீரே தீயே—இதில், நிலமும் நீரும் தீயும் என எண்ணுதலால், எண்.

(௪) "இயம்புவனெழுத்தே"—இதில், வேறுபொருள் இல்லாமல் இறுதியில் நிற்றலால், ஈற்றசை.

(ரு) உண்டே மறுமை—இதில், தெளிவுப்பொருளைத் தருதலால், தேற்றம்.

(சு) "ஏயே இவளொருத்தி பேடி!"—இதில், வேறு பொருளில்லாமல் செய்யுளில் இசையை நிறைத்து நிற்றலால், இசைநிறை.

இனி, நானே கொண்டேன்? எனச் சிலவிடத்து, நான் கொண்டிலேன் என்று வினாவுகையில் எதிர்மறைப் பொருள்பட நிற்றலும்; ஏ ஏபேதை! என இகழ்ச்சிப் பொருள்பட நிற்றலும் முதலியவற்றை "புதியன புகுதல்" என்பதனுல் கொள்க. (ங)

[ஓகார இடைச்சொல்]

‡ ௪௨௩. ஒழியிசை வினாச் சிறப்பு எதிர்மறை தெரிநிலை
கழிவு அசைநிலை பிரிப்புஎன எட்டு ஓவே.

(இ - ள்) ஓ-ஓகார இடைச்சொல்,—ஒழியிசை - ஒழியிசையும், வினா - வினாவும், சிறப்பு - சிறப்பும், எதிர்மறை - எதிர்மறையும், தெரிநிலை - தெரிநிலையும், கழிவு - கழிவும், அசைநிலை - அசைநிலையும், பிரிப்பு - பிரிநிலையும், என - என்று, எட்டு - எட்டுப் பொருளைத் தரும்; (எ - று.)

சிறப்பு-உயர்வுசிறப்பு, இழிவுசிறப்பு என இருவகைப்படும். ஒருபொருளினது உயர்வின் மிகுதியை விளக்குவது - உயர்வுசிறப்பு இழிவின் மிகுதியை விளக்குவது - இழிவுசிறப்பு.

(உதாரணம்)

(க) படிக்கத்தானோ வந்தான்—இதில், படிக்கதற்கன்று; விளையாடுதற்கு வந்தான் என ஒழிந்தசொற்களைத் தருதலால் ஒழியிசை.

(உ) குறறியோ மகனோ?—இதில், குற்றியா மகனா என வினவுதற்பொருளைத் தருதலால், வினா.

(௩) ஓ ஓ பெரியன்!—இதில், ஒருவனது பெருமையின் மிகுதியைக் காட்டுதலால், உயர்வுசிறப்பு. ஓ ஓ கொடியன்!—இதில், ஒருவனது கொடுமையின் மிகுதியைக் காட்டுதலால், இழிவுசிறப்பு.

(௪) அவனோ கொண்டான்—இதில், அவன் கொண்டிலன் என்னும் பொருளைத் தருமிடத்து, எதிர்மறை

(௫) அலியை நோக்கி, 'ஆணோ அதுவும் அன்று; பெண்ணோ அதுவும் அன்று' என்றதில், அத்தன்மையில்லாமையைத் தெரிவித்தலால், தெரிநிலை.

(௬) நன்மையறியாமற் கெட்டவர்களை 'ஓஓ தமக்கு ஒருநன்மை உணரார்' என்றதில்' கழிந்ததற்கு இரங்குதலால், கழிவு

(எ) "சொல்லுவன் கேண்மினோ"—இதில், சொல்லுவேன் கேளுங்கள் எனப் பொருள்பட்டு ஓகாரம்வேறுபொருளில்லாமல் நிற்றலால், அசைநிலை.

(அ) அவர்களுள் இவனோ கொண்டான்—இதில், பலரினின்று ஒருவனைப் பிரித்து நிற்றலால், பிரிநிலை.

இனி, சிலவிடத்து, பத்தோ பதினொன்றோ என ஐயப்பொருள் படவருதல் முதலியனவும் கொள்க. (௪)

['என,' 'என்று' என்னும் இடைச்சொற்கள்]

‡ ௪௨௪. வினை பெயர் குறிப்பு இசை எண் பண்பு ஆறினும்
எனவெனும் மொழி வரும் என்றும் அற்றே.

(இ - ள்.) என எனும் மொழி - என என்னும் இடைச்சொல்,—வினை - வினையும், பெயர் - பெயரும், குறிப்பு - குறிப்பும், இசை - இசையும், எண் - எண்ணும், பண்பு - பண்பும், (ஆகிய), ஆறினும் - ஆறுபொருளினும், வரும்;

சேர்ந்து வரும்; என்றும் - என்று என்னும் இடைச்சொல்லும், அற்று - அப்படியே (ஆறுபொருளிலும் வரும்); (எ - று.)

(க) மகன் பிறந்தா னென்று தந்தை மகிழ்ந்தான்—இதில், வினையோடு இயைந்தது.

(உ) "அழுக்கா றென ஒருபாவி"—இதில் பெயரோடு, இயைந்தது.

(ங) "பொள்ளென வாங்கே புறம் வேரார்"—இதில் குறிப்போடு இயைந்தது; இது - விரைவுக்குறிப்புமொழி

(ச) ஒலலென ஒலித்தது—இதில, இசையோடு இயைந்தது. [இசை ஒலி;]

(ரு) நிலமென நீரென நெருப்பென—இதில, எண்ணோடு இயைந்தது.

(சு) வெள்ளென விளைந்தது - இதில, பண்போடு இயைந்தது.

'என்று' என்பதையும, இவவாறே இவற்றோடு ஒட்டிக்கொள்க இனி, 'புலி பாய்ந்தெனப் பாய்ந்தான' என உவமையோடு இயைதலும் கொள்க.

## ['உம' என்னும இடைச்சொல்]

சஉரு. எதிர்மறை சிறப்பு ஐயம எச்சம முற்று அளவை
தெரிநிலை ஆக்கமோடு உம்மை எட்டே.

(இ - ள்.) உம்மை - உம என்னும இடைச்சொல,—எதிர்மறை - எதிர்மறையும், சிறப்பு-(இருவகைச) சிறப்பும, ஐயம - சந்தேகமும், எச்சம - எச்சமும, முற்று-முற்றும. அளவை - எண்ணும, தெரிநிலை - தெரிநிலையும, ஆக்கமோடு - ஆக்கமும ஆகிய, எட்டு-எட்டுப்பொருளைத் தரும்; (எ - று.)

எச்சம - இறந்தது தழுவிய எச்சமும, எதிரது தழுவிய எச்சமும என இருவகைப்படும. எச்சம - குறைந்துநின்ற பொருளைக் காட்டுவது.

(உதாரணம.)

(க) சாத்தன வருதற்கும உரியன—இதில், வாராமைக்கும உரியன எனப் பொருள் படுதலால, எதிர்மறை.

(உ) குறவரும அஞ்சும குன்று—இதில், குறவா முகமாகக் குன்றின் உயாவை விளக்குதலால், உயர்வுசிறப்பு
'புலையனும விரும்பாத யாக்கை'—இதில, புலையன முகமாக உடம்பின் இழிவை விளக்குதலால், இழிவுசிறப்பு.

(ங) பத்தாயினும எட்டாயினும கொடு—இதில், ஒன்றைத் துணிந்து சொல்லாமையால், ஐயம்.

(ச) சாத்தனும வந்தான—இதில, முன் கொற்றன் வந்ததல்லாமல் என்னும பொருளைத் தந்தால், இறந்ததுதழுவியஎச்சம். இனிக் கொற்றனும வருவான் என்னும பொருளைத் தந்தால், எதிரது தழுவியஎச்சம்.

(ரு) தமிழ்நாட்டு மூவரசரும் வந்தார்—இதில், குறை வில்லாமைப் பொருளைத் தருதலால், முற்று.

(சு) சேரனும பாண்டியனும்—இதில், எண்ணிநிற்றலால, எண்.

(எ) அலியை நோக்கி 'ஆணுமன்று, பெண்ணுமன்று' என்றால்—இதில, இன்னதெனத் தெரிவித்து நிற்றலால், தேரிநிலை.

(அ) பாலும் ஆயிற்று என்றால்—இதில், அதுவே மருந்தும ஆயிற்று என்னும பொருளைத் தருமிடத்து, ஆக்கம்.

இனி, சிலவிடத்து இசைநிறை அசைநிலைகளில் வருதலும கொள்க.

[முற்றும்மைக்குச் சிறப்புவிதி.]

சஉகூ. முற்றுமமை ஒரோவழி எச்சமு மாகும்.

(இ - ள்.) முற்று உமமை - (மேற்சொன்ன பொருள்களில்) முற்றுப் பொருளில் வரும் உமமை, ஒரோவழி - சில இடங்களில், எச்சமும ஆகும - எச்சப்பொருளைத் தருவதுமாம; (எ - று)

ஏற்புழிக்கோடலால், எச்சப்பொருள்பட நிற்பது பெரும்பாலும் எதிர மறையில் எனக் கொள்க.

(உ - ம.) 'எல்லோரும் வந்திலா' என்பதில், சிலா வந்தாரென்றும்; 'அவர் பத்தும கொடார' என்பதில, சில கொடுப்பா ரென்றும, 'முழுவதும் அறிந்தி லன்' என்பதில், 'சில அறிந்தான்' னென்றும பொருள படுதல காண்க. (எ)

[எச்சவும்மைக்குச் சிறப்புவிதி]

† சஉஎ. செவவெண் ணீற்றதா மெச்ச வுமமை.

(இ - ள்.) எச்ச உம்மை - எச்சப்பொருளில வருகிற உம்மை,—செவ்வெண-செவ்வெண்ணிலே வருமாயின, ஈற்றது ஆம்-ஈற்றிலேவரும; (எ-று.)

செவவெண்ணாவது - பெயா வினைகளிலே எண்ணிடைச்சொல் தொக்கு நிற்க எண்ணிநிற்பது.

(உ - ம.) கல்வி செலவம ஒழுக்கம் குடிப்பிறப்பும் பெறுவாரு முளர்—இங்கு, இவரறுள் சில பெறுவாருமுளா எனப்பொருள்படுகிற எச்சவும்மை, செவ்வெண்ணின் ஈற்றில் வந்தமை காணக. (அ)

[சில எண்ணிடைச்சொற்களுக்கு இலக்கணம்.]

சஉஅ. பெயாசசெவவெண் ஏ என்று எனா எண்
நான்குந் தொகைபெறும் உமமை என்று என ஒடு
இந்நான் கெணணு மஃதின்றியு மியலும

(இ - ள்.) பெயா செவவெண - பெயாகளிடத்தே எணணிடைச்சொல் தொக்கு வருகிற செவ்வெண்ணும், ஏ என்று எனா எண (தொகாமல் வருகிற) இம்மூன்று எணணிடைச சொறகளும, நான்கும் - ஆகிய இந்நான்கு எணகளும், தொகை - (இத்தனை என்று கணக்கிடும்) தொகைச்சொல்லை, பெறும - பெற்றுவரும்; உமமை என்று என ஒடு இந் நான்கு எண்ணும - உம முதலிய இந்த நான்கு எண்ணிடைச சொறகளும, அஃது இன்றியும் - அத தொகை பெறாமலும, இயலும - வரும; 'எ - று )—('இன்றியும்' என்ற உம் மையால், பின்கூறிய நான்கும தொகைபெற்றும் வரும.)

(உ-ம்.) சாத்தன் கொற்றன் இருவரும் வந்தார்
சாத்தனே கொற்றனே இருவரும் வந்தார்
சாத்தனென்று கொற்றனென்று இருவரும் வந்தார்
சாத்தனொடு கொற்றனொடு இருவரும் வந்தார் } தொகை பெற்றுவந்தன.

இவை - வழக்கில் சிறுபான்மை தொகை பெறாமல் வந்தால் அதனை இசையெச்சமாகவும், செய்யுளில் தொகைபெறாமல் வந்தால் அதனைத் தொகுத்தல் விகாரமாகவும் கொள்க.

(உ-ம்.) சாத்தனும், கொற்றனும் இருவரும் வந்தார்
சாத்தனென்று கொற்றனென்று இருவர் உளர்
சாத்தனெனக் கொற்றனென இருவர் உளர்
சாத்தனொடு கொற்றனொடு இருவர் உளர்
சாத்தனும் கொற்றனும் வந்தார்
சாத்தனென்று கொற்றனென்று உளர்
சாத்தனெனக் கொற்றனென உளர்
சாத்தனொடு கொற்றனொடு உளர் } தொகைபெற்றும், பெறாமலும் வந்தன.

பெயர்ச்செவ்வெண்ணுக்கும் உம்மைத்தொகைக்கும் வேறுபாடு — இவ்விரண்டும் பெயர்ச்சொற்களில் எண்ணிடைச்சொல் தொக்கு நிற்பன வாயினும், செவ்வெண் - தொடர்மொழிபோல விட்டிசைத்தும், உம்மைத் தொகை - ஒருமொழிபோல விட்டிசையாமலும் வருமெனக் காண்க. (௯)

[சில எண்ணிடைச்சொற்களுக்குச் சிறப்புவிதி.]

௪௨௯ என்று மெனவு மொடுவு மோரோவழி
நின்றும் பிரிந்தெண் பொருள் தொறும் நேரும்.

(இ - ள்.) என்றும் எனவும் ஒடுவும் - என்று என ஒடு என்னும் இம் மூன்று எண்ணிடைச் சொற்களும், ஓரோவழி நின்றும் - (எண்ணப்படும் பொருள்தோறும் நில்லாமல்) ஓரிடத்தில் நின்றும், பிரிந்து - (தான் நின்ற இடத்தினின்றும்) பிரிந்து, எண்பொருள் தொறும் - எண்ணப்படுகின்ற பொருள்கடோறும், நேரும் - போய்ப்பொருந்தும்; (எ - று.)

(உ - ம்.) க. "வினை பகை யென்று இரண்டு"
உ. "பகை பாவ மச்சம் பழி யென நான்கும்"
௩. "பொருள் கருவி காலம் வினை யிடனொடு ஐந்தும்"

இவற்றுள் - வினையென்று, பகையென்று எனவும்; பகையென, பாவமென, அச்சமென, பழியென எனவும்; பொருளொடு, கருவியொடு, காலமொடு, வினையொடு இடனொடு எனவும் எண்ணிடைச்சொல் நின்றவிடத்துப் பிரிந்து பிறவிடத்தும் சென்று பொருந்துதல் காண்க. (௧௦)

[எண்ணிடைச்சொற்கள் வினையோடும் வருதல்]

௪௩௦ வினையொடு வரினுமெண் ணினைய வேற்பன.

(இ - ள்.) ஏற்பன - பொருந்துவனவாகிய, எண் - சில எண்ணிடைச் சொற்கள் —, வினையொடு வரினும் - வினைச்சொல்லோடு வந்தாலும், இனைய - (பெயரோடு வந்த) இவை போலவனவாம்; (எ - று.)

(உ-ம்.) மயிலாடக் குயிலவாட மாமுகில் எழுந்தது—செவ்வெண்
கற்றும் கேட்டும் கற்பனை கடந்தார் —உம்மை
உண்ணவென்று உடுக்கவென்று வந்தான்—என்று
உண்ணவென உடுக்கவென வந்தான் —என
உண்ண உடுக்க வென்று வந்தான்—பிரிந்து கூடும் எண்
} வினையோடு வந்தன. (கக)

['தில்' என்னும் இடைச்சொல்]

சஙக. விழைவே காலம் ஒழியிசை தில்லே.

(இ-ள்.) தில் - தில் என்னும் இடைச்சொல்,—விழைவு - ஆசையும், காலம் - காலமும், ஒழியிசை ஒழிந்தசொல்லும் ஆகிய மூன்றுபொருள்தரும்.

(உதாரணம்.)

(க) "அரிவையைப் பெறுகதில் லம்ம யானே"—இதில், அரிவையை [பெண்ணை]ப்பெறவேண்டுமென்கிற ஆசையை உணர்த்துதலால் விழைவு.

(உ) "பெற்றாங் கறிகதில் லம்ம இவ்வூரே"—இதில் பெற்ற காலத்தில் அறிக எனக் காலத்தை உணர்த்துதலால், காலம்.

(ங) "வருகதில் லம்ம எஞ்சேரி சேர"—இதில் வந்தால் இன்னது செய்வேன் என்னும் ஒழிந்தசொல்லை உணர்த்துதலால், ஒழியிசை. (கஉ)

['மன்' என்னும் இடைச்சொல்]

சஙஉ. மன்னே அசைநிலை ஒழியிசை ஆக்கம்
கழிவு மிகுதி நிலைபே றாகும்.

(இ-ள்.) மன் - மன் என்னும் இடைச்சொல்,—அசைநிலை-அசைத்து நிற்றற்பொருளிலும் ஒழியிசை ஒழிந்தசொற் பொருளிலும், ஆக்கம்-ஆக்கப் பொருளிலும், கழிவு - கழிதற்பொருளிலும், மிகுதி - மிகுதிப்பொருளிலும், நிலைபேறு நிலைபெறுதற்பொருளிலும், ஆகும் - வரும்; (எ-று.)

(க) 'அதுமன் கொண்கன் தேரே'—இதில், வேறுபொருளின்றிச் சார்த்தப் பட்டு நிற்றலால், அசைநிலை

(உ) 'கூரியதோர் வாள்மன்'—இதில் இப்பொழுதது ஒடிந்துவிட்டது என்னும் ஒழிந்த சொல்லை உணர்த்துதலால், ஒழியிசை.

(ங) 'பண்டு காடுமன்'—இதில் இன்று வயலாயிற்று என்னும் பொருளை உணர்த்துதலால், ஆக்கம்

(ச) 'சிறியகள் பெறினே எமக்கீயு மன்னே'—இதில், இப்பொழுது அவன் இறந்ததனால் எமக்குத் தலகழிந்ததுஎனப்பொருள்படுதலால், கழிவு.

(ரு) 'எந்தை எமக்கு அருளும் மன்'—இதில், மிகுதியும் அருளுவா னென்னும் பொருளைத் தருதலால் மிகுதி

(சா) 'மன்னா உலகத்து மன்னியது புரிமோ'—இதில், இவ்விடைச்சொல் லடியாகப் பிறந்த வினைகள், நிலைபெறாத உலகத்தில் நிலைபெற்றதைச் செய் என்னும் பொருளைத் தருதலால், நிலைபேறு. (கங)

['மற்று' என்னும் இடைச்சொல்]

‡ சஙஙு. வினைமாற் றசைநிலை பிறிதெனு மற்றே.

(இ - ள்.) மற்று மற்று என்னும் இடைச்சொல,—வினைமாற்று - வினை மாற்றப் பொருளையும், அசைநிலை - அசைத்து நிற்றற் பொருளையும், பிறிது எனும் - வேறென்னும் பொருளையும் தரும்; (எ - று.)

(உதாரணம்)

(க) "மாற்றறிவாம நலவினை யாமிளைய மென்னாது"—இதில், நல்வினை யை விரைந்தறிவாம என்னும் வினையை மாற்றி இனிமேல் விரையாமல் அறி வாம் மென்னும் வினையைத் தருதலால, வினைமாற்று

(உ) 'மற்றென்னை ஆள்க"—இதில், வேறுபொருளின்றி நிற்றலால், அசைநிலை.

(ங) "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று, சூழினும் தான் முந்து றும்"—இதில, மற்றொன்று என்பது - ஊழ்வினைக்கு மாறுதலை யாவதோர் உபாயமென்ப் பொருள் தருதலால், பிறிது என்பது.

இனி, மற்று என்பது - பின் என்னும் பொருளிலும் வரும்.

(உ - ம்) "மற்றிவனும் கோறகணணனாரக்கும் குனிந்து." (கச)

['மற்றை' என்னும் இடைச்சொல்.]

‡ சஙச மற்றைய தென்பது சுட்டிய தற்கினம்.

(இ - ள்) மற்றையது என்பது - மற்றையது என (ப்பெயாக்கு முத னிலையாய) வரும் மற்றை என்னும் இடைச்சொல், சுட்டியதற்கு இனம்-முன் சுட்டினபொருளை ஒழித்து அதற்கு இனமான பொருளைக் குறிக்கும்; (எ-று.)

(உ - ம்.) இரண்டு ஆடை உள்ளவிடத்து ஒன்றைக்கண்டு வேண்டாத வன 'மற்றையது கொண்டுவா' என்றால, அதற்கு இனமாகிய ஆடையையே குறித்து நிற்றல் காண்க.

ஒடு ஒடு என்பனபோல மற்று மற்றை என்பனவும் வெவ்வேறு தனிச சொற்களாம்; ஒன்று மற்றொன்றின் விகார மன்று. (கடு)

['கொல்' என்னும் இடைச்சொல்.]

‡ சஙரு. கொலவேஐயம் அசைநிலைக் கூற்றே.

(இ - ள்.) கொல் - கொல் என்பது,—ஐயம் ஐயப்பொருளிலும், அசை நிலை-அசைநிலைப்பொருளிலும் வருகிற, கூற்று-(இடைச்)சொல்லாம்; (எ-று.)

(உதாரணம்.)

(க) அவன் சாத்தன்கொல் கொற்றன் கொல—இதில், சாத்தனோ கொற்றனோ என்னும் பொருளைத் தருதலால், ஐயம்

(உ) "கற்றதனா லாய பயனென்கொல்"—இதில், வேறு பொருளில்லா மல் நிற்றலால், அசைநிலை.

இனி, ஒரோவிடத்து 'நீகொலசெய்தாய்' என்பதில், நீயோ செய்தாய்? என வினாப்பொருளைத் தருதலும் கொள்க. (கசு)

[‘ஒடு’ ‘தெய்ய’ என்னும் இடைச்சொற்கள்.]

௪௯௬. ஒடுவுந் தெய்யவும் இசைநிறை மொழியே.

(இ - ள்.) ஒடுவுந் தெய்யவும்-ஒடு தெய்ய என்கிற இரண்டும்,—இசைநிறை - இசைநிறைப்பொருளைத் தருகிற, மொழி - இடைச்சொற்களாம்.

(உ - ம்.) "விளைக்குறு கட்டில் போதொடு போதுள" எனவும்,

"சொல்லேன தெய்ய நின்னொடும் பெயர்த்தே" எனவும் வரும். (கஎ)

[‘அந்தில்’, ‘ஆங்கு’ என்னும் இடைச் சொற்கள்.]

௪௯எ. அந்திலாங் கசைநிலை இடப்பொருள் ளவ்வே.

(இ ள்.) அந்தில் ஆங்கு-இவ்விரண்டு சொல்லும், அசைநிலை இடப்பொருள்-அசைநிலைப்பொருளனவாயும் இடப்பொருளனவாயும் வரும்; (எ - று)

(உதாரணம்.)

(க) "அந்தில்கழலினன் கச்சினன்"—இதில், வேறுபொருள் இல்லாததனால், அசைநிலை; (உ) "வருமே சேயிழை அந்தில் கொழுநற்காணிய"—இதில், அவ்விடத்து என்னும் பொருளைத் தருதலால், இடம்.

(க) "ஆங்கத்திறனல்ல யாமழப்ப"—இதில், வேறுபொருள் இல்லாததனால் அசைநிலை; (உ) "ஆங்காங் காயினுமாக"—இதில், அவ்விடத்துஎன்னும் பொருளைத் தருதலால், இடம். (கஅ)

[‘அம்ம’ என்னும் இடைச்சொல்.]

௪௯அ. அம்ம உரையசை கேண்மின் என்றாகும்.

(இ - ள்.) அம்ம - அம்ம என்னும் இடைச்சொல்,—உரையசை - உரையசைப்பொருளதாகியும், கேண்மின் என்று - (ஒன்றுசொல்வேன்) கேளும் என்ற ஏவற்பொருளதாகியும், ஆகும் - வரும்; (எ - று.)

* உரையசையை 'வாக்யாலங்காரம்' என்பர் வடநூலார்.

(உதாரணம்.)

(க) 'அதுமற்றம்ம'—இதில், வேறுபொருளில்லாமல் கட்டுரையில் வருதலால், உரையசை. [கட்டுரை - பேச்சு.]

(உ) 'அம்ம வாழி தோழி'—இதில், ஒன்றுசொல்வேன் கேள் என்னும் ஏவற்பொருளதாய் வந்தது. (கக)

* 'சிறிது பொருளுணர்த்துவனவற்றை உரையசை யென்றும், பொருளுணர்த்தாது சொற்களை அசைத்து நிற்பனவற்றை அசைநிலை யென்றும் கூறுதல் ஆசிரியர் கருத்தாதலை இரண்டதிகாரத்தும் கண்டுகொள்க என்பது, தொல்காப்பியம் நச்சினார்க்கினியம்.

['மா' என்னும் இடைச்சொல்.]

௪௩௯. மாவென் கிளவி வியங்கோ ளசைச்சொல்.

(இ - ள்.) மா என் கிளவி - மா என்னுஞ் சொல்,—வியங்கோள்-வியங்கோளிடத்து வருகிற, அசைச்சொல் - அசைச்சொல்லாகும்; (எ - று)

(உ - ம்) 'புற்கை யுண்கமா கொற்கையோனே'—இதில், உண்க என்னும் வியங்கோளை அடுத்து அசையாய் வந்தது காண்க.

இனி, உரையிற்கோடலால் - இவ்விடைச்சொல் 'ஓகமா தோழி', 'ஒக்கல் வாழ்க்கை தட்குமா காலே' என வேறுவினையை அடுத்தும்; தேவமாதத்தன், விசயமாதேவி, உலோகமாபாலன், பாலமா குமரன் எனப் பெயர்களின் இடையிலும் இசைநிறைப் பொருளதாய் வருதலும் கொள்க

இது - * தொல்காப்பியச் சூத்திரம். (௨௦)

[முன்னிலை அசைச்சொற்கள்.]

௪௪௦ மியா யிக மோ மதி அத்தை இத்தை
வாழிய மாள ஈ யாழ முன்னிலையசை.

(இ - ள்.) மியா. .யாழ - இப்பத்து இடைச்சொற்களும்,—முன்னிலை - முன்னிலையிடத்து வருகிற, அசை - அசைச்சொற்களாம்; எ - று.)

(உ - ம்.) மியா —சொல்மியா | இத்தை — நீயொன்று பாடித்தை.
இக —காணிக | வாழிய —காணிய வாழிய.
மோ —மொழிமோ | மாள —தவிராதீகமாள
மதி —செலமதி | ஈ —சென்றீ பெரும
அத்தை —சொல்லியரத்தை | யாழ —நீயே செலவயாந்தியாழ.

மா + இரு=மாயிரு என்றாற்போல, மியா + இக=மியாயிக எனப் புணர்ந்தது, "இடையுரி வடசொலின" என்னும் சூத்திரவிதியால். (௨௧)

[எல்லாவிடத்தும் வரும் அசைச்சொற்கள்]

௪௪௧. யா கா பிற பிறக்கு அரோ போ மாது இகும்
சின் குரை ஒரும் போலும் இருந்து இட்டு
அன்று ஆம் தாம் தான் கின்று நின்று அசைமொழி.

(இ ள்.) யா. ....நின்று - இவ்விருபது இடைச்சொற்களும், அசைமொழி - (எல்லாவிடங்களிலும் வருகிற) அசைச்சொற்களாம்; (எ - று.)

(உதாரணம்.)

யா —யா பன்னிருவர் மாணாக்கர். | அரோ—குயிலாலுமரோ.
கா —இவள் காணடி கா. | போ —வாழி'தென் போ
பிற —ஆயனை யல்ல பிற | மாது —விளிந்தன்று மாதோ.
பிறக்கு—பிறக்கதனுட்செல்லான் | இகும் —காணடிகுமல்லமோ.

* தொல்காப்பியம் - சொல்லதிகாரம் - இடைச்சொல்லியல் - ௨௫.

| | | | |
|---|---|---|---|
| தின் | —என்றிசின் | அன்று | —சோறது மன்றே. |
| குரை | —பலகுரைத்துனபம. | ஆம | —பனியுமாவென்றும். |
| ஓரும | —அருசுவ தோரு மறனே. | மாம | —சீதாம. |
| போலும | —மகிழ்ந்தனே போலும. | தான | —நீதான |
| இருந்து | —எழுந்திருந்தேன. | கின்று | —ஆசைபபட்டிருக்கின்றேன். |
| இட்டு | —பிளந்திட்டான | நின்று | —துணையாய நின்றான |

ஆசைப்பட்டிருக்கின்றேன என்பது-ஆசைபபட்டேனென்றும, துணையாய்நின்றான் என்பது-துணையானனென்றும பொருள்படும்,இடத்து, கின்று, நின்று - அசைநிலைகள். (உஉ)

[இடையியல் முற்றிறறு.]



# ரு. உரியியல்.

உரிச்சொல்லின இலக்கணங்களை உணர்த்தும இயல்.

[உரிச்சொல்லின் பொது இலக்கணம்.]

சசஉ. பல்வகைப பண்பும் பகர் பெயராகி
ஒருகுணம பலகுணந் தழுவிப பெயர்வினை
ஒருவா செய்யுட்கு உரியன உரிச்சொல்.

(இ - ள்) பல் வகை-(குணமும தொழிலும ஆகிய) பலவகைப்பட்ட, பண்பும (பொருள்களின்) பண்புகளெல்லாம, பகர்பெயர் ஆகி-தெரிவிக்கிற பெயராகி,— அவ்வாறு தெரிவிக்குமபோது), ஒரு குணம் - ஒருகுணத்தையும், பல குணம - பலகுணங்களையும தழுவி - தெரிவிப்பவையாய,— பெயர் வினை ஒருவா - பெயர்ச்சொல வினைச்சொற்களைவிட்டு நீங்காதவையாய,—செய்யுட்கு - செய்யுளுக்கு, உரியன - உரியவையாய (ப்பொருளுக்கு உரிமை பூண்டு) வருபவை,—உரிச்சொல் - உரிச்சொற்களாம; (எ - று.)

(இவவாறு வருவதை இனிக்காட்டும உதாரணங்களுள காணக.)

இவை - பண்புப்பெயராயினும், மற்றைப பெயர் வினைகளை விட்டு நீங்காமையால் 'உரிச்சொல்' என வேறு ஓதப்பட்டன வென்றும், பெயர்வினைகளின் பண்பை உணர்த்தி அவற்றுக்கு உரிமை பூண்டு நிற்பதனால் 'உரிச்சொல்' எனக்காரணப்பெயர் பெற்றனவென்றும அறிக இனி, செய்யுளுக்கே உரியனவாய்வருதலால, உரிச்சொல்லெனப் பெயர்பெற்றதென்பாருமஉளர்.

[பண்பின் இலக்கணம்.]

சசரு. உயிருயி ரல்லதாம பொருட் குணம பண்பே.

(இ - ள்.) உயிர் - உயிருடையதும, உயிர் அல்லது - உயிருடையதல்லாததும், ஆம - ஆகிய இருவகையுள் அடங்குகின்ற, பொருள் - (உலகத்திலுள்ள) பொருள்களினுடைய, குணம் - குணங்கள்,—பண்பு பண்புகளாம.

[உயிருடையபொருள்.]

சசச. மெய்ந்நா மூக்கு நாட்டஞ் செவிகளின்
ஒன்றுமுத லாகக்கீழ்க் கொண்டுமே லுணர்தலின்
ஓரறி வாதியா உயிரைந் தாகும்.

(இ - ள்.) மெய் - மெய்யும், நா - நாக்கும், மூக்கு-மூக்கும், நாட்டம் - கண்ணும், செவிகளின்-காதும் ஆகிய ஐந்து இந்திரியங்களிலும், (முறையே ஸ்பரிசம் ரசம் கந்தம் ரூபம் சப்தம் என்னும் ஐம்புலன்களையும் அறியுமிடத்து), ஒன்று முதல் ஆ-(தேகத்தால் ஸ்பரிசத்தை அறியும்அறிவு)ஒன்று முதலாக, கீழ்கொண்டு - கீழ்போன புலனையும் கொண்டு, மேல் - மேல் வரும் புலன்களை, உணர்தலின் - (ஒவ்வொன்றாக) அறிதலால்,—ஓர் அறிவு ஆதி ஆ - ஓரறிவுயிர் முதலாக ஐந்து ஆகும் - ஐந்துவகையாம்: உயிர்-அவ வுயிருடைய பொருள்,(எ - று.)—அவை, முறையே மேற்கூறப்படும்.

முறையே மெய் வாய் மூக்கு கண் செவி என்னும் ஐம்பொறிகளின் உணர்ச்சியாகிய பரிசம் ரசம் கந்தம் ரூபம் சப்தம் என்னும் ஐம்புலன்கள் ஊறு சுவை நாற்றம் ஒளி ஓசை எனப்படும். (௩)

[ஓரறிவுயிர்கள்.]

சசரு. புல் மரம் முதல் உற்றறியு மோரறிவுயிர்.

(இ - ள்.)புல்-புல்லும், மரம் - மரமும், முதல் - முதலியவை,—உற்று அறியும் - தேகத்தால் ஸ்பரிசிக்கப்பட்டு ஸ்பரிசத்தை அறிகிற, ஓர் அறிவு உயிர் - ஓரறிவுடைய உயிர்களாம்; (எ - று.)

முதல்—புதல், கொடி, புழு முதலியன. பயில்தொடுதோல் புலருமாதலின்,இவற்றுக்கு ஓரறிவு உண்மை உணர்க. (௪)

[ஈரறிவுயிர்கள்]

சசசு. முரள் நந் தாதி நாவறிவொ டீரறிவுயிர்.

(இ - ள்.) முரள் - சிப்பியும், நந்து - சங்கும், ஆதி - முதலியவை,—நா அறிவொடு-(கீழ்ப்போன ஓரறிவுடனே) நாவினால் ரசத்தையும் அறிகிற அறிவோடு, ஈர் அறிவு உயிர் - இரண்டறிவுடைய உயிர்களாம்; (எ - று.)

ஆதி—கிளிஞ்சில் முதலியன. இவை பிறிதொன்று தாக்கியவழி அறிதலும், இரைசுவைக்கொள்ளுதலு முடைமையின், மெய்யுணர்வோடு நாவுணர்வும் உடையனவாம். (௫)

[மூவறிவுயிர்கள்.]

சசஎ. சிதலெறும் பாதி மூக்கறிவின் மூவறிவுயிர்.

(இ - ள்.) சிதல் - செல்லும், எறும்பு - எறும்பும், ஆதி முதலியவை,—மூக்கு அறிவின் - (கீழ்ப்போன இரண்டறிவுகளுடனே) மூக்கினால் கந்தத்தையும் அறிகிற அறிவோடு, மூ அறிவு உயிர்-மூன்றறிவுடைய உயிர்களாம்.

ஆதி—ஈயல், மூதா, அட்டை முதலியன இவை உற்றுணாநது மீளு தலும, நாசசுவை கொள்ளுதலும, இரையுள்வழி மோநதறிதலும என மூன் றறிவினை யுடையவாறு கணடுகொளக. (சு)

[நாலறிவுயிர்கள்.]

சசஎ. தும்பி வண் டாதி கண்ணறிவி னாலறிவுயிர்.

(இ - ள.) துமபி - தும்பியும, வணடு - வணடும், ஆதி-முதலியவை,— கண அறிவின்-(கீழ்பபோன மூன்றறிவுகளுடனே) கணணால் ரூபததையும அறிகிற அறிவோடு, நால் அறிவு உயிா நானகறிவுடைய உயிாகளாம;(எ-று)

தும்பி - வணடுகளில் ஒரு சாதி ஆதி—நணடு,தேனீமுதலியன. இவை மெயயுடைமையின் ஊற்றுணாவும இரைகொளளுதலின நாவுணாவும, நாற றங்கொளளுதலின மூககுணாவும, கண உடைமையின கணணுணாவும உடையனவாயின. சிறுபானமை துமபிககுச செவியறிவும உணடென்பா

[ஐயறிவுயிாகள.]

சசஅ. வானவர் மககள் நரகா விலங்கு புள்
ஆதி செவியறிவோடு ஐயறி வுயிரே.

(இ - ள்.) வானவா - தேவரும, மககள - மனிதரும, நரகா - நரகரும், விலஙகு - மிருகஙகளும், புள - பறவைகளும, ஆதி - முதலியவை,—செவி அறிவோடு-(கீழ்பபோன நாலறிவுகளுடனே) செவியால சப்ததததையும அறி கிற அறிவோடு, ஐ அறிவு உயிா - ஐநதறிவுடைய உயிாகளாம; (எ - று)

ஆதி—பாமபு முதலியன. 'நாகா' என்றும பாடஙகொளளலாம் இபபிராணிகள ஐநதறிவுயிராதல், வெளிப்படை. (அ)

[உயிருடையனவல்லாத பொருளகள்]

சரு0. உணாவிய லாமுயி ரொனறு மொழிதத
உடல முத லனைத்தும உயிரல பொருளே.

(இ - ள) உணாவு இயல ஆம-அறிவுமயமாகிய, உயிா ஒன்றும - சீவன் ஒனறையும், ஒழிதத - நீககியுளள, உடல முதல் உடமபு முதலாகிய, அனைத தும - (உலகததுப) பொருள்களெலலாம,—உயிா அல பொருள் - உயிருடை யனவலலாத பொருள்களாம; (எ - று) (க)

[முன் சூததிரத்திறகுப் புறனடை.]

சருக. ஒற்றுமை நயததி னொனறெனத தோன்றினும
வேறறுமை நயத்தின வேறே உடலுயிா.

(இ - ள்.) ஒறறுமை நயததின் - (உயிா தான் அடைந்த உடமபின் மய மாய் நிறகிற) ஒருமைப்பாட்டின தனமையால், ஒன்று என - (உடமபும உயி ரும) ஒனறுபோல, தோனறினும-தோனறினும,—வேறறுமை நயததின - (உயிா சிததாகியும உடமபு அசிததாகியும நிறகிற) வேறுபாட்டின் தனமை யால்,—உடல உயிர் - உடலும உயிரும, வேறே - வேருகும; (எ - று.)

சித்து - அறியுந்தன்மையுள்ளது. அசிதது - சடம அறியுந்தன்மையிலலாதது.

[உயிருடைப் பொருள்களின் குணப் பண்பு.]

சருஉ. அறிவு அருள் ஆசை அச்சம் மானம்
நிறை பொறை ஓர்ப்புக் கடைப்பிடி மையல்
நினைவு வெறுப்பு உவப்பு இரக்கம் நாண் வெகுளி
துணிவு அழுக்காறு அன்பு எளிமை எய்த்தல்
துன்பம் இன்பம் இளமை மூப்பு இகல்
வென்றி பொச்சாப்பு ஊக்கம் மறம் மதம்
மறவி இனைய உடல்கொள் உயிர்க் குணம்.

(இ - ள்.) அறிவு - புத்தியும், அருள் - கிருபையும், ஆசை - விருப்பமும், அச்சம்-பயமும், மானம் - மானமும், நிறை - மன அடக்கமும், பொறை - (பிறர்செய்த குற்றங்களைப்)பொறுத்தலும், ஓர்ப்பு - ஆராய்ந்து தெளிதலும், கடைப்பிடி - மறவாமல் உறுதியாய்ப் பிடித்தலும், மையல் - (காம) மயக்கமும், நினைவு - எண்ணமும், வெறுப்பு - வெறுத்தலும், உவப்பு-மகிழ்ச்சியும், இரக்கம் - மனம் இரங்குதலும், நாண் - வெட்கமும், வெகுளி - கோபமும், துணிவு - தைரியமும், அழுக்காறு - (பிறர் செல்வம் முதலியவற்றைக் கண்டு) பொறாமையும், அன்பு - அன்பும், எளிமை - எளியனாந்தன்மையும், எய்த்தல் - தளர்ச்சியும், துன்பம் - துக்கமும், இன்பம் - சுகமும், இளமை - இளந்தன்மையும், மூப்பு - முதுமையும், இகல் - பகைமையும், வென்றி - சயமும் பொச்சாப்பு - மறத்தலும், ஊக்கம் - மனவெழுச்சியும், மறம் - வீரமும், மதம் - களிப்பும், மறவி - மறந்து செய்யுங்குற்றமும், (என்கிற முப்பத்திரண்டும்), இனைய - இவைபோல்வன பிறவும்,—உடல் கொள் உயிர் - உடம்போடு கூடிய உயிர்களினுடைய, குணம் குணப்பண்புகளாம்; (எ - று.)

அருள் ஒருவகைச் சம்பந்தமும் இல்லாமல் உண்டாவதென்றும், அன்பு - சம்பந்தம்பற்றி உண்டாவதென்றும் வேறுபாடு அறிக. பொச்சாப்புக்கும் மறவிக்கும் வேறுபாடு, பதவுரையால் விளங்கும். மானம் தன்னிலையினின்று தாழாமை.

உடலோடுகூடாவிடின் உயிர்க்குணங்கள் வெளிப்படாவாதலின், 'உடல் கொளுயிர்க் குணம்' என்றார்; மேலும் 'உடலுயிர்த் தொழிற்குணம்' என்பர். இவைபோல்வன பிறவாவன ; கற்பு மடமை, நடுவுநிலைமை முதலியன.

[உயிருடைப்பொருள்களின் தொழிற்பண்பு]

சருங. துய்த்தல் துஞ்சல் தொழுதல் அணிதல்
உய்த்த லாதி உடலுயிர்த் தொழிற்குணம்.

(இ - ள்.) துய்த்தல்-அனுபவித்தலும், துஞ்சல் - தூங்குதலும், தொழுதல் - வணங்குதலும், அணிதல் - தரித்தலும், உய்த்தல் - செலுத்துதலும், (என்கிற ஐந்தும்), ஆதி - முதலானவை,—உடல் உயிர் - உடம்போடுகூடிய உயிரினுடைய, தொழில் குணம் - தொழிற்பண்புகளாம்; (எ - று.)

'ஆதி' என்றதனால்-வாழ்த்தல் அரற்றுதல், உரைதல், முதலியன கொள்க.

[உயிரில்லாப் பொருள்களின் குணப் பண்பு]

௩௱௫௪. பல்வகை வடிவு இருநாற்ற மைவண்ணம்
அறுசுவை யூறெட் டுயிரல் பொருட்குணம்.

(இ - ள்) பல வகை வடிவு - (வட்டம் முக்கோணம் சதுரம் முதலிய, பலவகைப்பட்ட வடிவுகளும், இரு நாற்றம் - (நறுநாற்றம் தீநாற்றம் என்னும்) இருவகை நாற்றங்களும், ஐ வண்ணம் - (வெண்மை செம்மை கருமை பொன்மை பசுமை என்கிற) ஐவகை நிறங்களும், அறுசுவை-(கைப்பு புளிப்பு துவர்ப்பு உவர்ப்பு இனிப்பு கார்ப்பு என்கிற) அறுவகை ருசிகளும், ஊறு எட்டு-வெம்மை தண்மை மென்மை வன்மை நொய்ம்மை சீர்மை இழுமெனல் சருச்சரை என்கிற) எட்டுவகை ஸ்பரிசங்களும்,—உயிர் அல் பொருள் - உயிருடையனவல்லாத பொருள்களினுடைய, குணம் - குணங்களாம்; (எ - று.)

(நொய்ம்மை - கனமில்லாமை, இலேசு. சீர்மை - கனமாயிருத்தல். இழுமெனல் - வழுவழுத்தல்; இதற்கு எதிர் - சருச்சரை.) (௩௩)

[இவ்விருபொருள்களுக்கும் பொதுவாகிய தொழிற்பண்பு]

௩௱௫௫. தோன்றல் மறைதல் வளர்தல் சுருங்கல்
நீங்கல் அடைதல் நடுங்கல் இசைத்தல்
ஈதல் இன்னன இருபொருள் தொழிற்குணம்.

(இ - ள்.) தோன்றல் ...ஈதல்-இவ்வொன்பதும், இன்னன - இவை போல்வன பிறவும்,—இரு பொருள் - (உயிர்ப்பொருளும் உயிரல் பொருளும் ஆகிய) இரண்டுக்கும் பொதுவாகிய, தொழில் குணம் - தொழிற்பண்புகளாம்; (எ - று.)

இசைத்தல் ஒலித்தல். இவைபோல்வன பிறவாவன - அசைதல் முதலியன. (௩௪)

[ஒருகுணங்குறித்த பல உரிச்சொல்]

௩௱௫௬. சால உறு தவ நனி கூர் கழி மிகல்.

(இ - ள்) சால ...கழி - இந்த ஆறும்,—மிகல் - மிகுதியாகிய ஒரு குணத்தை உணர்த்தும் உரிச்சொற்களாம்; (எ - று)

| | |
|---|---|
| (உ-ம்.) சால—சாலப்பலர் | நனி—நனிபேதை. |
| உறு—உறுபுகழ். | கூர்—களிகூர்மனம் |
| தவ—தவப்பல | கழி—கழிபெருங்காதல். |

சால என்பது - சால என்னும் உரிச்சொல்லடியாகப்பிறந்த குறிப்பு வினையெச்சம். சால என்ப பண்படியாகச் சூத்திரஞ்செய்யாமல், 'சால' என வினையெச்சமாகச் சூத்திரஞ் செய்தது, இவ்வுரிச்சொல்லினடியாக மற்றை வினை விகற்பங்களெல்லாம் தோன்றுமென்றற்கு. சால - 'சீசால கத்தியன்.' (௩௫)

[பலகுணங்குறித்த ஓர் உரிச்சொல்.]

௩௱௫௭. கடியென் கிளவி காப்பே கூர்மை
விரைவே விளக்கம் அச்சம் சிறப்பே.

விரைவே மிகுதி புதுமை ஆர்த்தல்
வரைவே மன்றல் கரிப்பின் றாகும்.

(இ - ள்.) கடி என்கிளவி-கடி என்னும் உரிச்சொல், காப்பு-காவலும், கூர்மை - கூர்மையும், விரை-வாசனையும், விளக்கம்-பிரகாசமும், அச்சம்-பயமும், சிறப்பு-உயர்வும், விரைவு-வேகமும், மிகுதி-மிகுதியும், புதுமை புதுமையும், ஆர்த்தல் - ஒலித்தலும், வரைவு-நீக்கலும், மன்றல்-கலியாணமும், கரிப்பின் கரிப்பும் ஆகிய பதின்மூன்று குணங்களிலும், ஆகும்-வரும்; (எ-று.)

(உ-ம்.) காப்பு-கடிநகர்.
கூர்மை-கடிவேல்.
வாசனை-கடிமாலை.
விளக்கம்-கடிமார்பன்
அச்சம்-கடிப்பேய்.
சிறப்பு-கடியரண்.
விரைவு கடிசென்றான்.
மிகுதி-கடிகாற்று.
புதுமை-கடிமணம்
ஆர்த்தல்-கடிமுரசு.
வரைவு-கடிமது
மன்றல் கடிவினை.
கரிப்பு கடிமிளகு.

முன்தேற்றப்பொருளில் வருதல், பழையன கழிதலால் விலக்கப்பட்டது. கடி என்பது-கடிமான கடும்பகல், கடுவகால் எனத் திரிந்தும் வரும். (௬௬)

[ஒருகுணந்தழுவிய பல உரிச்சொல்]

௩௭௰ மாற்றம் நுவற்சி செப்பு உரை கரை நொடி இசை
கூற்றுப் புகறல் மொழி கிளவி விளம்பு அறை
பாட்டுப் பகர்ச்சி இயம்பல் சொல்லே.

(இ - ள்.) மாற்றம் . . இயம்பல் இப்பதினாறும், சொல் - சொல் என்கிற ஒரு குணத்தை உணர்த்துகின்ற உரிச்சொற்களாம், (எ - று.)

(உ-ம்.) மாற்றம்—வாய்மாற்றம்
நுவற்சி —அறிந்துநுவல
செப்பு —செப்பலுற்றேன்.
உரை —உரைப்பவை.
கரை —அறங்கரைநா
நொடி —ஆயிழைநொடியும
இசை —இசையெனப்புக்கு.
கூற்று —நாமக்கள் கூற.
புகறல்—புகன்ற அன்றியும
மொழி—கண்டதுமொழிமோ.
கிளவி—கிளந்தகிளைமுதல.
விளம்பு—விளம்பினர் புலவர்.
அறை—அறைகுவன் சொல்லே.
பாட்டு—அறம்பாடின்று.
பகர்ச்சி—பகர்ந்தனர் புலவர்.
இயம்பல்—இயம்பலுற்றேன்.

இச்சூத்திரத்தையும் வருஞ்சூத்திரத்தையும் "சால உறு தவ" என்னுஞ் சூத்திரத்தினபின் வைக்காமல் இங்கே வைத்தது, இவை அவை போலன்றிப் பெயர்களை விட்டு நீங்கியும் நடக்குமென்பது தோன்றுதற்கு (௬௭)

[இதுவும் அது]

௩௭௧. முழக்கு இரட்டு ஒலி கலி இசை துவை பிளிறு இரை
இரக்கு அழுங்கு இயம்பல் இமிழ் குளிறு அதிர் குரை
கனை சிலை சும்மை கௌவை கம்பலை
அரவம் ஆர்ப்போடு இன்னன ஓசை.

(இ - ள்.) முழக்கு . . ஆர்ப்போடு - இவ்விருபத்திரண்டும், இன்னன - இவைபோல்வன பிறவும்,—ஓசை ஓசை என்கிற ஒரு குணத்தை உணர்த்துகின்ற உரிச்சொற்களாம்; (எ - று.)

| | |
|---|---|
| (உ-ம்) முழங்கு — முழங்குகடல் | இமிழ — இமிழ்கடல். |
| இரட்டு — குடிஞையிரட்டும். | குளிறு — குளிறுமுரசம். |
| ஒலி — ஒலிபுனலூரன | அதிர — அதிர்ந்ததிருங்கார். |
| கலி — கலிகெழுமூதூர். | குரை — குரைபுனலாறு. |
| இசை — பறையிசையருவி. | கனை — கனைகடல். |
| துவை — பல்லியந்துவைப்ப. | சிலை — சிலைத்தார்முரசம். |
| பிளிறு — பிளிறுவார்முரசு. | சும்மை — சும்மைமிகுநாடு |
| இரை — இரைக்கும்புனல். | கௌவை — கௌவைக்கடல். |
| இரங்கு — இரங்குமுரசினம் | கம்பலை — வினைக்கம்பலை. |
| அழுங்கு — மாரிபழுங்கினமூதூர் | அரவம் — அரவத்தானை. |
| இயம்பல் — முரசமியம்ப | ஆர்ப்பு — ஆர்த்தபல்லியம். |

இவைபோல்வன பிறவாவன-அமலை, துழனி, ஓதை, கரை முதலியன.

[இவ்வியலுக்குப் புறனடை.]

சசு0. இன்னது இன்னுழி இன்னணம் இயலும்
என்றிசை நூலுள் குணகுணிப் பெயர்கள்
சொல்லாம் பரத்தலிற் பிங்கல முதலா
நல்லோர் உரிச்சொலில் நயந்தனர் கொளலே.

(இ - ள்.) இன்னது - (பெயர் வினை இடை உரி என்கிற நால்வகைச் சொற்களில்) இன்னசொல், இன்னஉழி (தன்மை முன்னிலை படர்க்கைகளிலும் வழக்குச் செய்யுள்களிலும்) இவ்விடத்தே, இன்னணம் - இவ்விலக்கணமுள்ளதாய், இயலும் - வரும், என்று —, இசை - சொல்லக் கடவதாகிய, நூலுள் - இந்நூலுள், குண குணிப் பெயர்கள் - (உரிச்சொல்லாகிய) பண்புப் பெயர்களையும் (அக்குணத்தையுடைய) பண்பிப்பெயர்களையும், பரத்தலின் - (விவரித்துச் சொன்னால் மற்றொன்று விரித்தல்' என்னுங் குற்றம் நேரிடும்படி) பரந்திருத்தலால், சொல்லாம் - (வேண்டியமட்டும் சொல்வதல்லாமல் நிகண்டிற்போல விரித்துச்) சொல்லக்கடவோ மல்லேம்; (ஆதலால், அவை முழுதையும் அறியவேண்டுபவர்,) பிங்கலம் முதல் ஆம் - பிங்கலத்தை முதலிய, நல்லோர் உரிச்சொலில் - நல்லறிவுடைய புலவரால் (கூறப்பட்ட நூல்களுள்ளே) உரிச்சொல்தொகுதியுள், நயந்தனர் கொளல் - விரும்பிக் கண்டறிந்து கொள்க, (எ - று.)

இப்படிச் சொல்லவே - பெயரியலுள் பெயர்ச்சொல் தொகுதியையும், வினையியலுள் வினைச்சொல் தொகுதியையும், இடையியலுள் இடைச்சொல் தொகுதியையும் விரிக்காமைக்கும் இதுவே புறனடையா மென்று கொள்க.

[சொல்லதிகாரத்துக்குப் புறனடை]

சசுக. சொற்றொறும் இற்றிதன் பெற்றியென் றனைத்தும்
முற்ற மொழிகுறின் முடிவில வாதலின்
சொற்றவற் றியலான் மற்றைய பிறவும்
தெற்றென வுணர்தல் தெளிவோர் திறனே. *

---

* 'ஒருமொழி முடிபிலக்கணம் ஆசிரியர் கூறாமைக்குன்றக் கூறலாம். பிற எனின்' இந்நூற்குப்பிருகற்பதி ஓதவழு இவை முழுவில்லன என்வட

(இ - ள்.) சொல்தொறும் - சொற்கள்தோறும், இதன் பெற்றி - இதன் இலக்கணம், இற்று - இத்தன்மையது, என்று—, அனைத்தும் - முழுதும், முற்ற-நிறைய, மொழிகுறின் - சொல்லப்புகுந்தால், முடிவு இல - வரம்பில்லாதனவாம் ஆதலின்-ஆகலால், சொற்றவற்று இயலான்—எடுத்துச்சொல்லப்பட்ட சொற்களினுடைய இலக்கணங்களைக்கொண்டு, மற்றைய பிறவும் சொல்லப்படாதவற்றின் இலக்கணங்களையும், தெற்றென உணர்தல்-(ஒப்புமைபற்றி இதுவும் அது வென்று) தெளிவாக அறிந்து கொள்ளுதல்,—தெள்ளியோர் திறன் - நூலோதித் தெளிந்தற்கு உரிய மாணாக்கரது கடமையாம்.

இதற்கு உதாரணம், முன்வந்தவற்றில் ஆங்காங்குக்கண்டுகொள்க. (உ०)

[இந்நூலுக்குப் புறனடை]

௪௬௨. பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையி னானே

(இ - ள்) பழையன கழிதலும் - முற்காலத்து உள்ள இலக்கணங்களுள் சில பிற்காலத்து ஒழிதலும் புதியன புகுதலும் - முற்காலத்து இல்லாத சில பிற்காலத்து இலக்கணமாக வருதலும், வழு அல - குற்றமல்லவாம். கால வகையினான் - காலவேறுபாடு பற்றிய தாதலால், (எ - று.)

இதற்கும் உதாரணம், முன்வந்தவற்றுள் கண்டுகொள்க. (உ௧)

உரியியல் முற்றிற்று.

---

"இருதிணை மூவிட நான்மொழி யைம்பா லறுதொகை யேழ்
அருவழு வெட்டுரு போர்பாற் றொகாநிலை யாய்ந்தவெச்சம்
ஒருபது கோளெட்டு முப்பொழு தீரட மொழியியல்பாய்
வருமொழி மூன்று முணரச்சொல் வண்மை வருந்திருவே"

சொல்லதிகாரம் முற்றுப்பெற்றது

---

நன்னூல் காண்டிகையுரை
முற்றிற்று.

---

மொழிகளைத் தனித்தனி யெடுத்து ஓதலுற்றார்க்கு, தெய்வயாண்டில் ஆயிரம் யாண்டு சென்றது; சென்றும் சொற்கள் முடிந்தில என மாபாடியத்துள் ஆசிரியர் பதஞ்சலியார் எடுத்தோதினார்; தமிழ்மொழியும் அவ்வாறு பெருகிக் கிடத்தலின், அவற்றை இவைவழு இவைவழுவில்லன வெனத்தனித்தனி யெடுத்து ஓதப்புகின் முடிவுபெறாது; ஆசிரியர்க்கு ஒருவாற்றான் முடிவுபெறினும், சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினோர் அவற்றைக் கற்பதற்கே ஆயுள் போதாவாம்; ஆகவே, அவற்றைக்கற்றுப் பலருடன் பயின்று பிறர்க்கு உரைத்துக் கலவிசிறப்புமாறு இல்லை; ஆகலான், அவ்வாறு கூறாது, சிலவற்றைப் பொதுவிதியானும், சிலவற்றைச் சிறப்பு விதியானும், சிலவற்றை எடுத்தோத்தானும், சிலவற்றை இலேசானும், சிலவற்றைப் புறனடையானும், சிலவற்றை யுத்திவகையானும், உணர்ந்துகொள்ளுமாறு தொகுத்து நூல்செய்தார் ஆசிரியராகலின், ஆகாதெனக்' என்று தொல்காப்பியச் சூத்திரவிருத்தியில் உரைத்தது காண்க.

# நன்னூல் சூத்திர முதற்குறிப்பகராதி.

நன்னூற சூத்திர முதற்குறிப்பகராதி முற்றிற்று.

---

# பரீக்ஷைக்கு உரிய வினாக்கள்.

நன்னூலாசிரியரது பெயர், இடம், சாதி, மதம், காலம், தந்தை பெயர், இந்நூல்செய்த காரணம், இந்நூலின் முதனூல்—இவை யாவை?

இந்நூலில் 'மொழியியல்' என்னாது 'பதவியல்' என்று பெயர் வைத்தற்கும் பொதுவியலை இடையில் நிறுத்தியதற்கும் காரணம் என்ன?

"இடுகுறி காரணப்பெயர்" என்ற சூத்திரத்தைப் பெயரியலில் வைக்காமல் எழுத்தியலில் வைத்தது ஏன்?

எழுத்தியலிலும் பதவியலிலும் சொன்ன முதனிலை இறுதிநிலை இடைநிலைகள்; பெயரிடைநிலை, வினையிடைநிலை, தழுவுதொடர், தழாத்தொடர்; புணர்ச்சிவிகாரம், செய்யுள்விகாரம் தொகுத்தல்விகாரம், முதல் இடைகடைக்குறைகள்: முன்னிலைவினை, ஏவல்வினை; தொழிற்பெயர்; வினையாலணையும்பெயர்; ஆகுபெயர், அன்மொழித்தொகை; முதல் வேற்றுமைக் கருத்தா, மூன்றாம்வேற்றுமைக் கருத்தா; போலி, இலக்கணப்போலி; ஏவல், வியங்கோள்; அடுக்குத்தொடர், இரட்டைக்கிளவி; மொழிமாற்று; கொண்டுகூட்டு அடிமறிமாற்று என்னும் பொருள்கோள்கள்; தற்சமம், தற்பவம்—இவற்றின் பேதத்தை நன்றாக விளக்கி ஒவ்வோர் உதாரணமும் காட்டுக.

இருவழி, நாற்கணம், நால்வகைஅளவை, நால்வகைப்பண்பு, நால்வகை உவமை, பொருள்முதலாறு, செயவெனெச்சாதி அறுபொருள்—இவை எவை? ஆய்தம், உடம்படுமெய், அன்மொழி, திரிசொல் - இவைகட்குப் பொருள் என்?

எவ்விடங்களில் எழுத்துக்கள் அளவுகடந்து நீண்டு ஒலிக்கும்?

ஆய்தம் அளபெடுத்தலை ஒற்றளபெடையிற் சேர்த்தது எதனால்?

குற்றியலிகரத்துக்கும் ஆய்தக்குறுக்கத்துக்கும் உபயோகமான புணரியற் சூத்திரங்கள் எவை?

மொழி முதல் இடை கடைகளில் நிற்கிற எழுத்துக்களை அறிகிறதனால் பயன் யாது? காரணவிடுகுறிப்பெயராவது என்ன?

தன்வினைப்பகுதிகளை எவ்வெவ் வகையால் பிறவினை யாக்கலாம்?

இடைநிலை யில்லாமல் காலங்காட்டும் வகைகளையெல்லாம் எழுதுக.

விகற்பம், பொருள்கோள்—இவற்றைவிளக்கி வேறுபெயர் குறிக்க.

பல்வகைப் பெயரினெச்சமெவை? பாலபகா அஃறிணைப்பெயரென்றாலென்ன?

'பலவகைப்பெயரினெச்சமுற்று.' 'அல்வழி ஆமாமியாமுற்று' என்றவற்றில் முற்றெவை? முற்றெச்சம், எச்சத்திரிபு—இவற்றைவிளக்குக.

'பெயரினெச்சமுற்றாறனுருபே,' 'மூன்றாறுருபெண்' இங்கு ஆறனுருபு எவை?

ஒற்றிடையின்மிகா நெடிலுயிர்த்தொடர், விதியுயிரீறு, விரவுப்பெயர், ஒருமொழிபொதுச்சொல், திரிபினுக்கம், ஒற்றுமைக்கிழமை, இடுகுறி மரபு, உபலக்ஷணம், இடைப்பிறவரல்—இவற்றை உதாரணத்தோடு விளக்குக.

இயல்புவழக்கு தகுதிவழக்குகளுள் குறிப்பு எது? வெளிப்படை எது?

நீக்கல், கருத்தா, ஒப்பு, காரணம், எல்லை, கிழமை—இப்பொருள்கள் எவ்வெவ்வேற்றுமைக்கு உரியன? உருபுமயக்கமாவது என்ன?

எவ்வெவ்வேற்றுமைகள் எவ்வெச்சொற்களைக் கொண்டுமுடியும்?

வினைகொண்டுமுடியாத வேற்றுமையைக் குறிக்க.

முதலவேற்றுமையில மாத்திரம்வரும் பெயர்களும், உருபேற்கையில் திரியும் பெயர்களும் எவை? வழு, வழாநிலை, வழுவமைதி—யாவை?

விளியேலாத பெயர்கள் எவை? இருதிணைக்கும் பொதுவினைகள் எவை?

ஐம்பால் மூவிடத்துக்கும் பொதுவான குறிப்பு வினைமுற்றுக்கள் எவை? செய்யுமென்முற்று எந்த திணைபாலிடங்களில் செல்லும்?

பசு, பலாசு, இறும்பூது, எழு, புணர்வு, சார்பு, சுணணும்பு, தாலு இவற்றுள் குற்றுகரங்களுக்குத் தொடரும், முற்றுகரங்களுக்குக் காரணமும் எழுதுக.

கைம்மாறு, நளவெண்பா, பயிலவுழி, மாயிரு, பாலசுரந்து, குரங்கினம், துக்ஷா, பைம்பொன்—இப்புணர்ச்சிகளைப்பிரித்து, விதி யெழுதுக.

"ஈறுபோதல்" என்ற சூத்திரத்தில் 'ஆதிநீட' லுக்கு ஐந்து குறிலும் நீண்டு வருதற்கு உதாரணம் கொடுக்க.

---

## அநுபந்தம்.

உபசாரவழக்கு—காரணம் காரியமாகவும், காரியம் காரணமாகவும், குணம் குணியாகவும், குணிவினை குணவினையாகவும், ஒருபொருளின் வினை மற்றொரு பொருளின் வினையாகவும், இடத்து நிகழ் பொருளின் தொழில இடத்தின்மேலாகவும், சினைவினை முதல்வினையாகவும், உடையானது தன்மை உடைமையின் மேலாகவும் ஒருபொருளின் இயல்பு மற்றொருபொருளின்மேலாகவும் இவ்வாறு ஒன்றினதன்மை மற்றொன்றின் மேல ஏற்றிக் கூறப்படுதல; இது, ஆகுபெயரென்ற இலக்கணக்கு இனமெனத்தக்கது: இதனை வடநூலார் 'ஔபசாரிக ப்ரயோகம்' என்பர்.

(உ - ம.) "தீவினையே னுந் செருக்கு" என்றது - தீவினையால் வரும் மயக்கமென்ற பொருள்படுமிடத்து, காரணம் காரியமாகவும்; "பிறப்பென்னும் பேதைமை" என்றது - பிறப்புக்குக்காரணமாகிய அவித்தையெனப் பொருள்படுதலால, காரியம் காரணமாகவும்; "இல்லவள்மாண்பானல்" என்றது - மனைவி நற்குண நற்செய்கை யுடையவளானால் எனப் பொருள படுதலால், குணம் குணியாகவும்; "இடுக்கண் களைவதாம் நட்பு" என்றது - துன்பந் தீர்ப்பவர் நண்பர் எனப் பொருள்படுதலால், குணிவினை குணவினையாகவும்; "பின்னோக்காச்சொல்" என்றது-பின் வருங் குற்றத்தை நோக்காத சொல எனப் பொருள்பட்டுச் சொல்பவனது தொழிலாகிய நோக்குதல சொல்லின்மே லேற்றப்படுதலால், ஒருபொருளின்வினை மற்றொருபொருளின் வினையாகவும்; 'இந்தப்பானை நாழி

யரிசி பொங்கும்' என்றது - பொங்குகாகு இடமாமெனப் பொருள்படு தலால், இடகதுசிசழ்பொருளின் தொழில இடகதின் மேலாகவும்; 'வணடி அசசு மூறியும்' என்றதில், அசசு என்னுஞ் சினையின் வினையாகிய முறிக லென்பது, வணடியென்னும முதலின் மேலாகவும; 'சினவாள்' என்றதில், உடையவனது குணம் உடைமையின் மேலாகவும; "செவிகைப்ப," "நாற்றம கேட்பினும," "கணணிறாற் பருகும" என்றவை - பண்பு புலன் மாறுபா டாகவும வருதல் காணக.

சாதியொருமை—ஒருசொல் ஒருமையீறு தோன்றநின்றும், தோன் றாது நின்றும், பின்ஒருமை பனமை வினையீறுகளைந்து முடிக்குஞ் சொல் உளதாகவும், இலதாகவும் தானே பன்மைப்பொருளுணாததுவது; இதனை, வடநூலார், ஜாதயேகவசநம' என்பா

(உ - ம.) ' தென்புலத்தார் தெய்வம்" என்றதில், 'தெய்வம' என் பது தேவரெனப பொருளபடுதல காண்க.

எதிர்மறையிலக்கணை —ஒருசொல் தனக்கு எதிரமறையான பொருளை உணர்த்துவது.

(உ - ம்.) எல்லாப்பொருள்களும நிரமபுதலென்று பொருள்படும் 'நிரமபு' என்றது - ஒருபொருளும இல்லாமையாகிய வறுமையையும; குற்றததை நீககுதலென்னும பொருளதரும 'அழுககறுததல்' என்றது - பெருங்குற்றமாகிய பொறாமைப்படுதலையும்; "உடம்போ டுயிரிடைநட்பு" என்றதில், 'நட்பு' என்றது - நட்பின்மையையும் 'புணபஜநம' என்றது-பாப ஜநமாகிய அரககரையும உணர்ததுதல காணக.

தந்திதாந்தம் —ஒருவடசொல் சிறிதுமாறித தன்னோடு இயைபுடைய பொருளையாயினும, தன்பொருளையாயினும உணாததுவது.

(உ - ம) தசரதன மகன - தாசரதி, ஜநகன மகள - ஜாநகி, பாணடு வின் மககள - பாணடவா, குருகுலததவா - கௌரவா, குசாமபனது நகரம கௌசாமபி, ருஷிகள செயத நூல - ஆரஷம, இநதிரன்செயத நூல் - ஐந் தரம, வேதசமபந்தம - வைதிகம, கோசலநாட்டிற பிறநதவள்-கௌசல்யை, விதாப்பதேசததை ஆளபவன் - வைதாப்பன, நிஷததேசததை யாண டவனைப் பற்றிய நூல - நைஷதம், விஷ்ணுபக்தன - வைஷ்ணவன் என றற்போலவன, தன்னோடு இயைபுடைய பொருளை உணாததின.

த்ரிலோகி - தரைலோகயம் என்றாற்போல்வன, தன்பொருளை உணா ததுவன.

பாயிரம் = Preface
இயல் = Chapter.
அதிகாரம் = Section.
சூத்திரம் = Verse.
எழுத்ததிகாரம் = Orthography.
குறில் = Short vowels.
நெடில் = Long vowels
சுட்டெழுத்து = Demonstrative letters.
வினாவெழுத்து = Interrogative letters.
வல்லினம் = Hard Consonants. (Surds.)
மெல்லினம் = Soft Consonants (Nasals)
இடையினம் = Medial Consonants. (Liquids.)
குற்றியலிகரம் = Shortened இ.
குற்றியலுகரம் = Shortened உ.
பொதுவிதி = General rule
சிறப்புவிதி = Special rule
புறனடை = Exception or remark.
மாத்திரை = Quantity.
முதனிலை = Initial letters.
ஈற்றுநிலை = Radical letters
இடைநிலை = Middle particle
வினை இடைநிலை = The particle showing the tense
பகாப்பதம் = Indivisible words.
பகுபதம் = Divisible words.
பகுதி = Root.
பெயர் = Noun
பண்புப்பெயர் = Abstract noun.
வினை = Verb.
பிறவினை = Causative verb
ஏவல்வினை = Imperative verb.
விகுதி = Termination.
விகாரம் = Change.
காலம் = Tense
இறந்தகாலம் = Past Tense.
நிகழ்காலம் = Present Tense.
எதிர்காலம் = Future Tense.
புணர்ச்சி = Combination.
தொகைநிலைத் தொடர்கள் = Elliptical expressions.
தொகாநிலைத் தொடர்கள் = Unelliptical phrases.
வேற்றுமைப்புணர்ச்சி = Casal Combinations.
இரட்டித்தல் = Re-duplication.
திணை = Caste.
எண்ணுப்பெயர் = Numerals.
தொழிற்பெயர் = Verbal Noun
சாரியைகள் = Euphonic particles.
சொல்லதிகாரம் = Etymology.
பால் = Gender.
ஆண்பால் = Masculine Gender
பெண்பால் = Feminine Gender.
பொதுப்பால் = Common Gender.
ஒன்றன்பால் = Neuter singular.
பலவின்பால் = Neuter plural
தன்மை = First person
முன்னிலை = Second person.
படர்க்கை = Third person
எண் = Number.
ஒருமை = Singular
பன்மை = Plural.
சொற்களின் வகை = Parts of Speech.
இடக்கரடக்கல், மங்கலம் = Euphemism
பல பொருள் குறித்த ஒரு சொல் = Homonyms
ஒரு பொருள் குறித்த பல சொற்கள் = Synonym.
வினையாலணையும் பெயர் = Verbal-noun.
ஆகுபெயர் = Metonomy.
வேற்றுமை = Case.
உருபேறாத பெயர்கள் = Indeclinable nouns
எழுவாய் வேற்றுமை = Nominative case.
இரண்டாம் வேற்றுமை = Accusative case
மூன்றாம் வேற்றுமை = Instrumental case.
நான்காம் வேற்றுமை = Dative case.
ஐந்தாம் வேற்றுமை = Ablative case.
ஆறாம் வேற்றுமை = Genitive case.
ஏழாம் வேற்றுமை = Locative case
விளிவேற்றுமை = Vocative case
வேற்றுமையுருபு = Case-ending.
வினைமுற்று = Finite verb.
குறிப்புவினை = Symbolic verb.
பெயரெச்சம் = The adjectival participle.
வினையெச்சம் = The adverbial par-

முக்காலத்துக்கும் பொதுவான வினை
எச்சம்=Infinitive Mood.
எதிர்கால வினையெச்சம்=Subjunctive Mood
எச்சம்=Participles and Infinitives
வியங்கோள்=Optative verbs
வழக்கு=Grammatical expressions
மரபு=Usage, Idiom
ஒருபொருட் பன்மொழி=Redundant words
எழுவாய்=Subject.
பயனிலை=Predicate.
செயப்படுபொருள்—Object.
செய்வினை=Active verb.
செயப்பாட்டுவினை=Passive verb.
செயப்படுபொருள் குன்றா வினை=Transitive verb
செயப்படுபொருள் குன்றிய வினை=Intransitive verb.
அடைமொழி=Epithet.
உடன்பாடு=Affirmation.
எதிர்மறை=Negation.
உவமை=Simile.
உருவகம்=Metaphor.
பொருள்கோள்=Prose order.
இடைச்சொற்கள் = Conjunctions and Particles.
அசைநிலை இடைச்சொல்=Expletive Particles.
ஒலிக்குறிப்பு=Onomatopoeia
உரிச்சொல்=Attributive.
பெயருரிச்சொல்=Adjective.
வினையுரிச்சொல்=Adverb.
முற்றிலக்கணம், சொல்லிலக்கணம்=Parsing.
யாப்பிலக்கணம்=Prosody.
அசை=Metrical Syllable.
அணியியல்=Rhetoric.
அணி=Figure of speech.
வஞ்சப்புகழ்ச்சி=Hyperbole.
உயர்வுநவிற்சி=Irony.

---

## பொருளிலக்கணச் சுருக்கம்.

பொருளாவது - சொல்தொடர் கருவியாக அறியப்படுவது; அது - அறம் பொருளின்பமும், அவற்றின் நிலையின்மையும் அவற்றின் நீங்கிய வீடுபேறும் என விவரிக்கப்படும்.

அகப்பொருள் - அகப்பொருளும், புறப்பொருளும் என இருவகைப்படும்

### க. அகப்பொருள்.

அகப்பொருளாவது - ஒத்த அன்பினராகிய தலைவனும் தலைவியும் உள்ளத்து உணர்வால் அனுபவிக்கும் இன்பம்

அது - கைக்கிளைத்திணையும், ஐந்திணையும், பெருந்திணையும் என எழுவகையியல்புடையது கைக்கிளை - ஒருதலைக்காமம் ஐந்திணை - அன்புடைக்காமம், பெருந்திணை - பொருந்தாக்காமம்."

ஐந்திணை - மருதம், குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல் என்பன.

இவை - முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்ற மூன்று வகையால் உரைக்கப்படும்.

அவற்றுள், முதற்பொருள் - நிலமும், பொழுதும்.

மருதத்துக்கு - நாடும் நாடுசார்ந்த இடமும், குறிஞ்சிக்கு - மலையும் மலை சார்ந்த இடமும், பாலைக்கு - சுரமும் சுரஞ்சார்ந்த இடமும், முல்லைக்கு - காடும் காடுசார்ந்த இடமும், நெய்தற்கு - கடலும் கடல்சார்ந்த இடமும் நிலமாம்.

பொழுது பெரும்பொழுது, சிறுபொழுது என இருவகைப்படும்.

பெரும்பொழுது - அறுவகைப்பருவங்கள்; [பருவம் - இருது;] பன்னிரண்டு மாசங்களுள், சித்திரையும் வைகாசியும் - இளவேனில் [வசந்தகாலம்], ஆனி ஆடிகள் - முதுவேனில் [கிரீஷ்மகாலம்], ஆவணி புரட்டாசிகள் - கார் [வர்ஷாகாலம்]. ஐப்பசி கார்த்திகைகள் - கூதிர் [சரத்காலம்], மார்கழியும் தையும் - முன்பனி [ஏமந்தகாலம்], மாசி பங்குனி - பின்பனி [சிசிரகாலம்]

சிறுபொழுது - மாலை, யாமம், வைகறை, காலை, நண்பகல், எற்பாடு என ஆறுபிரிவாம். இவை, சூரியாஸ்தமன காலமுதல் ஒவ்வொன்று பப்பத்து நாழிகையாக முறையே அமையும்.

இவற்றில் மருதத்துக்கும் நெய்தலுக்கும் - அறுவகையிருதுவும்; குறிஞ்சிக்கு - கூதிரும் முன்பனியும்; முல்லைக்கு - காரும்; பாலைக்கு இருவகை வேனிலும், பின்பனியும் உரிய பெரும்பொழு தென்றும்; மருதத்திற்கு - வைகறை காலைகளும், குறிஞ்சிக்கு - யாமமும், முல்லைக்கு - மாலையும், நெய்தற்கு எற்பாடும், பாலைக்கு - நண்பகலும் உரிய சிறு பொழுதென்றும் அறிக.

கருப்பொருள் - தெய்வம், உணவு விலங்கு, மரம், பறவை, பறை, செய்தி, யாழ், பண் முதலியன.

மருதத்துக்கு—தெய்வம் - இந்திரன். உணவு - நெல். விலங்கு எருமை, நீர்நாய். மரம் - வஞ்சி, காஞ்சி, மருதம். பறவை - நாரை, நீர்க்கோழி, தாரா. பறை - மணமுழா, நெல்லரிகிணை. செய்தி - நெல்லரிதல், வைக்கோல் துவைப்பித்தல், களைபறித்தல் யாழ் - மருதயாழ் பண் - மருதம் தலைமகன் - ஊரன், மகிழ்நன் தலைமகள் - கிழத்தி, மனைவி பூ - தாமரை, செங்கழுநீர், குவளை. நீர் - மனைக்கிணறு, பொய்கை யாறு ஆடவர் - கடையர், உழவர். மகளிர் - கடைசியர், உழத்தியர் ஊர் - பேரூர், மூதூர்.

குறிஞ்சிக்கு—தெய்வம் - முருகன் உணவு - மலைநெல், தினை. விலங்கு - புலி, கரடி, சிங்கம், பன்றி, யானை மரம் - அகில், சந்தனம், தேக்கு, வேங்கை, காந்தள். பறவை - கிளி, மயில். பறை - வெறியாட்டு, தொண்டகம். செய்தி - தேனழித்தல், கிழங்கு எடுத்தல், குன்றமாடுதல், கிளிகடிதல் யாழ் - குறிஞ்சி யாழ். பண் - குறிஞ்சி. தலைமகன் - சிலம்பன், வெற்பன், பொருப்பன். தலைமகள் - கொடிச்சி, குறத்தி பூ குறிஞ்சி, காந்தள், வேங்கை, சுனைக் குவளை நீர் - அருவிநீர், சுனைநீர். ஆடவர் - குறவர், குன்றவர். மகளிர் - குறத்தியர். ஊர் - சிறுகுடி.

பாலைக்கு—தெய்வம் - துர்க்கையும், சூரியனும். உணவு - வழிபறித்தனவும், ஊர்க்கொள்ளையடித்தனவும். விலங்கு - வலியழிந்த யானை, புலி, செந்நாய்கள் மரம் - இருப்பை, ஓமை, பாலை. பறவை - கழுகு, பருந்து. பறை - போர்ப்பறை, ஊரெறிபறை, நிரைகோட்பறை. செய்தி - நிரைகொள்ளுதல், சுரத்தெறிதல், சூறையாடுதல். யாழ் - பாலையாழ். பண் - பஞ்சுரம். தலைமகன் - மீளி, விடலை, காளை தலைமகள் - எயிற்றி, பேதை. பூ - மராம், குராம், பாதிரி நீர் - வற்றின கிணறும், வற்றின சுனையும். ஆடவர் - எயினர், மறவர். மகளிர் - எயிற்றியர், மறத்தியர் ஊர் - கொல்குறும்பு

முல்லைக்கு—தெய்வம் - வாசுதேவன். உணவு - வரகு, சாமை. விலங்கு - முயல், சிறுமான். மரம் - கொன்றை, காயா, குருந்து. பறவை-கானங்கோழி, மயில். பறை - ஏறுகோட்பறை. செய்தி - வரகு களைபறித்தல், நிரைமேய்த்தல், குழலூதல். யாழ் - முல்லையாழ். பண் - சாதாரி. தலைமகன் - குறும்பொறை நாடன், தோன்றல். தலைமகள் - கிழத்தி, மனைவி. பூ - முல்லை, தோன்றி. நீர் - கான்யாறு. ஆடவர் - இடையர், ஆயர். மகளிர் - இடைச்சியர், ஆய்ச்சியர். ஊர் - பாடி, சேரி.

நெய்தற்கு—தெய்வம் - வருணன். உணவு - மீன்விலையும், உப்பு விலையும். விலங்கு - சுறா, முதலை. மரம் - புன்னை, தாழை. பறவை - அன்னம், நீர்க்காக்கை, அன்றில். பறை - மீன் கோட்பறை, நாவாய்ப்பறை. செய்தி - மீன் விற்றல், உப்புவிற்றல், அவற்றையீட்டல். யாழ் - விளரியாழ். பண் - செவ்வழி. தலைமகன் - துறைவன், கொண்கன், சேர்ப்பன். தலைமகள் - நுளைச்சி, பரத்தி. பூ - தாழை, நெய்தல். நீர் - மணற்கிணறும், உவர்க்கழியும். ஆடவர் - பரதர், நுளையர். மகளிர் - பரத்தியர், நுளைச்சியர். ஊர் - பட்டினம், பாக்கம்.

பிறவும் பொருந்துவனவெல்லாம் கொள்க. இவை சிறுபான்மை மாறும்.

உரிப்பொருள் அந்தந்த நிலங்களுக்கு உரிய நிகழ்ச்சிகள்.

ஊடலும், ஊடல்நிமித்தமும் - மருதம்; புணர்தலும், புணர்தல் நிமித்தமும் - குறிஞ்சி, பிரிதலும், பிரிதல் நிமித்தமும் - பாலை; இருத்தலும், இருத்தல் நிமித்தமும் - முல்லை; இரங்கலும், இரங்கல் நிமித்தமும் - நெய்தல் என்க.

"போக்கெல்லாம் பாலை புணர்தல் நறுங்குறிஞ்சி
ஆக்கஞ்சேர் ஊட லணிமருதம்—நோக்குங்கால்
இல்லிருக்கை முல்லை இரங்கல் நறுநெய்தல்
சொல்லிருக்கு மைம்பாற் றுறை."

என்னுஞ் செய்யுளால் அறிக.

## ௨. புறப்பொருள்.

புறப்பொருளாவது - மேற்கூறிய ஒத்த அன்புடையாரேயன்றி எல்லாராலும் அனுபவித்து அறியப்பட்டு இது இவ்வாறு இருந்ததெனப் பிறர்க்குக் கூறப்படும் பொருள்; அது - அறமும், பொருளும்.

அது - வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என, ஏழு திணைகளாக வகுக்கப்படும்.

வெட்சி - பகைவருடைய பசுக்களைக் கவர்தலும், கவர்ந்த பசுக்களை மீட்டலும் இவற்றில், மீட்டல் தனியே கரந்தை எனவும் படும்.

வஞ்சி - பகைவருடைய நாட்டைக் கைப்பற்ற எண்ணி அவர்மேற் போர்க்குச் செல்லுதல்.

உழிஞை-பகைவருடைய மதிலை வளைத்துக்கொள்ளுதலும், தம் மதிலைக் காத்துக்கொள்ளுதலும். இவற்றில் மதில்காத்தல் - தனியே நொச்சியெனவும் படும்

தும்பை - பகைவரோடு போர்செய்தல்.

வாகை - பகைவரை வெல்லுதல்; அவரவர் தம்தம் இயல்பை மிகுதிப் படுத்திக் கூறுதலு மென்பர்.

காஞ்சி-போர்க்குவந்த பகைவர்க்கு எதிர்சென்று ஊன்றுதல்; வீடு பேறு நிமித்தமாகப் பலவகைநிலையாமையைச் சான்றோர் கூறுவதென்றுங் கொள்வர்.

வெட்சி முதலியவற்றிற்கு அந்தந்தப் பூமாலை சூடுதலும் உரியது.

"வெட்சி நிரைகவர்தல் மீட்டல் கரந்தையாம்
வட்கார்மேற் செல்வது வஞ்சியாம்—உட்கா
தெதிரூன்றல் காஞ்சி எயில்காத்தல் நொச்சி
அதுவளைத்த லாகு முழிஞை—யதிரப்
பொருவது தும்பையாம் போர்க்களத்து மிக்கோர்
செருவென்றது வாகையாம்"

என்னுஞ் செய்யுளால், வீரர்கள் இன்னின்னசமயத்தில் இன்னின்ன மலர்மாலை யணியக்கடவ ரென்பதை யறிக.

பாடாண் - ஒருவனுடைய கீர்த்தி வலிமை கொடை முதலிய வற்றை ஆராய்ந்து சொல்லுதல்.

கைக்கிளை, பெருந்திணை என்பன - அகப்புற மென்றும்; வாகை, பாடாண், பொதுவியல் என்பன - புறப்புற மென்றும் கூறப்படும்.

இவை - பலதுறைகளாகப் பகுக்கப்பட்டு நூல்களிற் பயிலும்.



# யாப்பிலக்கணச் சுருக்கம்.

யாப்பாவது—பலவகைச் சொற்களைக்கொண்டு பொருட்கு இடமாகக் கற்றுவல்ல புலவர்களால் அணிபெறப் பாடப்படுவது.

இதற்கு எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடையென உறுப்பு ஆறும். எழுத்தாவன—முதலெழுத்தும் சார்பெழுத்துமாகிய அக்ஷரங்கள். அசையாவது—எழுத்தினாலாக்கப்பட்டுச் சீர்க்கு உறுப்பாய் வருவது. அது நேரசை, நிரையசை என இருவகையாம்.

நேரசையாவது—ஒரு குறிலாவது ஒருநெடிலாவது தனித்தாயினும், ஒற்றடுத்தாயினும் வருவது.

(உதாரணம்) முறையே 'ஆ ழி' என்பதில் நெடிலும் குறிலும் தனித்தும், 'சொல் வான்' என்பதில் குறிலும் நெடிலும் ஒற்றடுத்தும் நேரசையாயின.

நிரையசையாவது—குறிலிணையாவது குறில்நெடிலாவது தனித்தாயினும் ஒற்றடுத்தாயினும் வருவது.

(உ-ம்.) 'அணி'-குறிலிணை தனித்தும், 'கலம்' குறிலிணை ஒற்றடுத்தும்; 'நிலா'-குறில்நெடில் தனித்தும், 'படாம்'-குறில்நெடில் ஒற்றடுத்தும் நிரையசையாயின.

('அ ஆ' என்பதுபோல விட்டிசைத்தாலல்லது, தனிக்குறில் சீரின்முதலில் நேரசையாகாது)

சீராவது—அந்த அசைகள் சிறுபான்மை தனித்தும், பெரும்பான்மை இரண்டுமுதல் நான்குவரையில் தொடர்ந்தும் வருவது.

அது-ஓரசைச்சீர், ஈரசைச்சீர், மூவசைச்சீர், நாலசைச்சீரென நான்காம்.

ஓரசைச்சீராவது—நேரசையாயினும் நிரையசையாயினும்தனித்து நின்று சீராய்வருவது உதாரணவாய்பாடு நேர்—நாள்; நிரை—மலர் இவைபெரும்பாலும் வெண்பாவினீற்றில்வரும். இவற்றை, 'அசைச்சீர்' என்பர்.

ஈரசைச்சீராவது—நேர்நேர், நிரைநேர், நிரைநிரை, நேர்நிரையென இரண்டு அசை கூடிவரும் இந்நான்குமாம்.

| | | | |
|---|---|---|---|
| (உ-ம்) நேர்நேர்—தேமா | இவை மாச்சீர். | நிரைநிரை—கருவிளம் | இவை விளச்சீர் |
| நிரைநேர்—புளிமா | | நேர்நிரை—கூவிளம் | |

இவை இயற்சீர் எனவும், அகவற்சீர் எனவும், ஆசிரியவுரிச்சீர் எனவும்படும்.

மூவசைச்சீராவது—மேற்சொல்லப்பட்ட ஈரசைச்சீர் நான்கின் இறுதியிலும் நேரசையும் நிரையசையும் தனித்தனி கூடிவருதலாலாகியஎட்டாம்

| | | | |
|---|---|---|---|
| நேர்நேர்நேர்-தேமாங்காய் | [illegible] | நேர்நேர்நிரை-தேமாங்கனி | [illegible] |
| நிரைநேர்நேர்-புளிமாங்காய் | | நிரைநேர்நிரை-புளிமாங்கனி | |
| நிரைநிரைநேர் கருவிளங்காய் | | நிரைநிரைநிரை-கருவிளங்கனி | |
| நேர்நிரைநேர்-கூவிளங்காய் | | நேர்நிரைநிரை-கூவிளங்கனி | |

இவை உரிச்சீர் எனவும், இவற்றுள் காய்ச்சீர்கள்-வெண்சீர் எனவும், கனிச்சீர்கள்-வஞ்சிச்சீர் எனவும் படும்.

நாலசைச்சீராவது—அம்மூவசைச்சீர் எட்டின் இறுதியிலும் நேரும் நிரையும் தனித்தனி அடுத்துவருதலாலாகிய பதினாறாம்; (உ-ம்.)

| | |
|---|---|
| நேர்நேர்நேர்நேர் - தேமாந்தண்பூ | நேர்நேர்நேர்நிரை - தேமாந்தண்ணிழல் |
| நிரைநேர்நேர்நேர் - புளிமாந்தண்பூ | நிரைநேர்நேர்நிரை - புளிமாந்தண்ணிழல் |
| நிரைநிரைநேர்நேர் - கருவிளந்தண்பூ | நிரைநிரைநேர்நிரை - கருவிளந்தண்ணிழல் |
| நேர்நிரைநேர்நேர் - கூவிளந்தண்பூ | நேர்நிரைநேர்நிரை - கூவிளந்தண்ணிழல் |
| நேர்நேர்நிரைநேர் - தேமாநறும்பூ | நேர்நேர்நிரைநிரை - தேமாநறுநிழல் |
| நிரைநேர்நிரைநேர் - புளிமாநறும்பூ | நிரைநேர்நிரைநிரை - புளிமாநறுநிழல் |
| நிரைநிரைநிரைநேர் - கருவிளநறும்பூ | நிரைநிரைநிரைநிரை - கருவிளநறுநிழல் |
| நேர்நிரைநிரைநேர் - கூவிளநறும்பூ | நேர்நிரைநிரைநிரை - கூவிளநறுநிழல் |

(இவை, வெண்பாவில் வாரா, கலிப்பாவிலும், ஆசிரியப்பாவிலும், சிறுபான்மை குற்றியலிகரவுகரங்கள் வந்த இடத்து வரும்; வஞ்சிப்பாவில் வருதல் பெரும்பான்மை.)

(பொருளியைபுக்கு ஒவ்வாமல் சீர்பிரிவது வகையுளி யெனப்படும்.)

தளையாவது—நின்றசீரின் ஈற்றசையோடு வருஞ்சீரின் முதலசை ஒன்றியாயினும் ஒன்றாமலாயினும் கூடிநிற்பது. ஒன்றுதலாவது - நேர்முன் நேரும், நிரைமுன் நிரையும் வருவது; ஒன்றாமையாவது - நேர்முன் நிரையும், நிரைமுன் நேரும் வருவது.

அத்தளை - நேரொன்றாசிரியத்தளை, நிரையொன்றாசிரியத்தளை, வெண்சீர் வெண்டளை, இயற்சீர் வெண்டளை, ஒன்றியவஞ்சித்தளை, ஒன்றாவஞ்சித்தளை, கலித்தளை என ஏழுவகைப்படும்.

நேரொன்றாசிரியத்தளை - மாமுன் நேர்வருவது; (நாள்முன் நேர்வருவதும் அது)

நிரையொன்றாசிரியத்தளை - விளமுன் நிரை வருவது; (மலர்முன் நிரை வருவதும் அது)

வெண்சீர் வெண்டளை - காய்முன் நேர்வருவது (பூமுன் நேர்வருவதும் அது)

இயற்சீர் வெண்டளை - மாமுன் நிரையும், விளமுன் நேரும் வருவன; (நாள்முன் நிரை வருவதும், மலர்முன் நேர்வருவதும் அது.)

ஒன்றியவஞ்சித்தளை - கனிமுன் நிரைவருவது, (நிழல்முன் நிரைவருவதும் அது.)

ஒன்றாவஞ்சித்தளை - கனிமுன் நேர்வருவது; (நிழல்முன் நேர்வருவதும் அது.)

கலித்தளை - காய்முன் நிரைவருவது; (பூமுன் நிரைவருவதும் அது.)

அடியாவது—மேற்சொல்லிய தளைகள் ஒன்றும் பலவும் அடுத்துவருவது.

அவ்வடி - குறளடி, சிந்தடி, அளவடி, நெடிலடி, கழிநெடிலடி என ஐந்துவகைப்படும். குறளடி - இருசீராலும், சிந்தடி - முச்சீராலும், அளவடி - நாற்சீராலும், நெடிலடி - ஐஞ்சீராலும், கழிநெடிலடி - ஆறு முதலிய சீர்களாலும் வருவன. (அளவடி - நேரடி யெனவும் படும்)

தொடையாவது—பல அடிகளிலாயினும், பலசீர்களிலாயினும் எழுத்துக்கள் ஒன்றிவரத் தொடுப்பது.

அது - எதுகை, மோனை, முரண், அளபெடை, இயைபு என்பவற்றால் ஐந்து வகைப்படும். அந்தாதித்தொடை யென்றுமொன்றுஉண்டு.

எதுகைத்தொடையாவது—அடிதோறும் முதலெழுத்து அளவொத்து நிற்க இரண்டுமுதலிய எழுத்துக்கள் ஒன்றிவரத்தொடுப்பது. சிறுபான்மை இனவெழுத்துக்களும் எதுகையாம்.

சில அடிகளில் எதுகைச்சொல்லின் முதலெழுத்துக்குமிரண்டாமெழுத்துக்கும் இடையே பிறிதொரு மெய் பெற்றுவருவது, 'ஆசிடையிட்ட

எதுகை' எனப்படும்; (உ-ம) 'ஆவேறு', 'பால்வேறு' என்ற விடத்து லகரவொற்றும், 'காயமாண்ட,' 'பூமாண்ட' என்றவிடத்து யகரவொற்றும் போல்வன.

மோனைத்தொடையாவது—பல அடிகளிலாவது ஓரடியின் பலசீர்களிலாவது முதலெழுத்து ஒன்றுமைப்பட்டுவரத் தொடுப்பது. அ ஆ ஐ ஔ, இ ஈ எ ஏ யா, உ ஊ ஒ ஓ, ஞ ந, ச த, ம வ இவை ஒன்றற்கு ஒன்று மோனையாய் வருதலும் உண்டு. சிறப்பான்மை இனவெழுத்துக்களும் மோனையாம். ஓரடியின் சீர்களிலெல்லாம் மோனைவந்தால் முற்றுமோனை யெனப்படும்.

முரண்தொடையாவது—சொல்லாலும் பொருளாலும் மறுதலைப் படத் தொடுப்பது.

அளபுத்தொடையாவது—உயிரளபெடையாயினும், ஒற்றளபெடையாயினும் ஒன்றிவரத் தொடுப்பது.

இயைபுத்தொடையாவது—ஈற்றெழுத்து ஒன்றிவரத்தொடுப்பது.

(இத்தொடைகள் அமையாதிருப்பது, செந்தொடையெனப்படும்.)

அந்தாதித்தொடையாவது—முன்னின்ற பாட்டின் இறுதியிலுள்ள எழுத்தாயினும் அசையாயினும் சீராயினும் அடியாயினும் பின்வரும் பாட்டின் முதலாக அமையப் பாடுவது. இங்ஙனமாமே நூலின் இறுதிச் செய்யுளின் அந்தமே முதற்செய்யுளின் ஆதியாக அமைவது, மண்டலித்தல் எனப்படும்.

இவ்வுறுப்புக்களைப் பெற்றுவருகின்ற பா - வெண்பா, ஆசிரியப்பா கலிப்பா, வஞ்சிப்பா என நால்வகைப்படும். 'மருட்பா' என்பதும் ஒன்று உண்டு. இப்பாக்களினிற்குத் துறை, தாழிசை விருத்தம் என இனம் மூன்று; இவற்றுள்,

வெண்பாவாவது—ஈற்றடி முச்சீரடியாகவும் மற்றையடி நாற்சீரடியாகவும் பெற்று காய்ச்சீரும் மாச்சீர் விளச்சீர்களும் இருவகை * வெண்டளைகளுங்கொண்டு மற்றைச்சீரும் தளையும் பெறாமல் நாள் மலர் என்ற ஓரசைவாய்பாடுகளுள் ஒன்றிலாவது காசு பிறப்பு என உகரவீற்று ஈரசைவாய்பாடுகளுள் ஒன்றிலாவது முடிந்து, ஒருவிகற்பத்தாலாயினும் இருவிகற்பத்தாலாயினும் வருவது. [ஒருவிகற்பமாவது - பல அடிகளும் ஓர் எதுகையாய் வருவது; இருவிகற்பமாவது - அவ்வடிகள் இருவகை எதுகையாய் அமைவது.]

அவ்வெண்பா - குறள்வெண்பா, சிந்தியல்வெண்பா, நேரிசைவெண்பா, இன்னிசைவெண்பா, பஃறொடைவெண்பா என ஐந்துவகைப்படும்.

குறள்வெண்பா - இரண்டடியாய் வருவது.

சிந்தியல்வெண்பா மூன்றடியாய் வருவது.

நேரிசைவெண்பா-நான்கு அடிகளாய் இரண்டாம் அடியின் இறுதிச்சீர் முதலிரண்டு அடிகளின் எதுகையையுடைய தனிச்சொல்லாய் வரப் பெற்றிருப்பது.

இன்னிசைவெண்பா—நான்கு அடிகளாய்த் தனிச்சொல் இன்றி வருவது (தனிச்சொற்பெறாதும், பலவிகற்பத்தால்வரின், இன்னிசை வெண்பாவேயாம். இரண்டாம் அடியொழிந்த அடிகளில் தனிச்சொற் பெற்றுவருவதும் இதுவே.)

---

* "காயமுன் நேரும் மாமுன் நிரையும், விளமுன் நேரும் வருவது வெண்டளை"

**பஃறொடைவெண்பா** - ஐந்து - அடிமுதலாகப் பன்னிரண்டு அடியளவும் வருவது. (பன்னிரண்டடிக்கு மேற்படின், கலிவெண்பாவாம்.)

**ஆசிரியப்பாவெனினும், அகவற்பாவெனினும் ஒக்கும். இதில்பெரும்** பாலும் ஈரசைச்சீர்கள் பயிலும்.

**நேரிசையாசிரியப்பா** - ஈற்றயலடி முச்சீரடியும், மற்றையடிகளெல்லாம் நாற்சீரடிகளுமாக வருவது.

**நிலைமண்டிலவாசிரியப்பா** - எல்லாவடிகளும் நாற்சீரடிகளாய் வருவது

**ஆசிரியவிருத்தம்** - அளவொத்த கழிநெடிலடி நான்கினால் வருவது அளவொத்தலாவது - ஓரடியில் எந்தச்சீரெவ்வகைச்சீராக அமைந்துள்ளதோ, அந்தச்சீர் அவ்வகைச்சீராகவே எல்லா அடிகளிலும் அமைவது

**கலிப்பா** - காய்ச்சீர்கள் மிகப்பெற்று நாற்சீரடிகளால் வரும்

**தரவுகொச்சகக்கலிப்பா** - நாற்சீரடிகளால் தனித்துவருவது.

**கலிவிருத்தம்** - அளவொத்த அளவடி நான்கினால் வருவது

**கலித்துறை** - அளவொத்த நெடிலடி நான்கினால் வருவது; இவை - கலிநிலைத்துறையென்றும், காப்பியக்கலித்துறையென்றும், விருத்தக்கலித்துறையென்றும், வழங்கப்படும்.

**கட்டளைக்கலித்துறை** - பெரும்பாலும் முதல் நான்குசீர்கள் ஈரசைச்சீர்களும் ஐந்தாஞ்சீர் விளங்காய்ச்சீருமான நெடிலடி நான்குகொண்டு, அடிதோறும் வெண்டளை பிறழாமல், நேரசைமுதலாயின் ஓரடிக்கு ஒற்றொழிந்த எழுத்துப் பதினாறும், நிரையசைமுதலாயின் அவ்வெழுத்துப் பதினேழுமாய் ஏகாரவீற்றதாய் வருவது.

**வஞ்சிப்பா** - இருசீரடிகளாலும், முச்சீரடிகளாலும் வரும்.

**வஞ்சிவிருத்தம்** - முச்சீரடி நான்கு கொண்டு வரும்

**வஞ்சித்துறை** - இருசீரடி நான்கு கொண்டு தனித்துவரும்

**இதுவே ஒருபொருள்மேல் மூன்றடுக்கிவந்தால் வஞ்சித்தாழிசையாம்.**

**மருட்பா** - வெண்பாவாகத் தொடங்கி ஆசிரியப்பாவாக முடிவது

குற்றியலிகரம் குற்றியலுகரம் அளபெடை என்பவை, இடத்துக்கு ஏற்ப அலகுபெறாமலும் நிற்கும் ஆய்தவெழுத்து - சிலவிடத்து உயிராகவும் சிலவிடத்து மெய்யாகவும் இடத்துக்கு ஏற்பக் கருதப்படும் ஐகார ஔகாரக் குறுக்கங்கள் - இடத்துக்கு ஏற்பக் குற்றெழுத்தேபோலக்கொண்டு அலகிடப்படும். சிறுபான்மைமெய்யெழுத்துக்களை ஒழித்து அலகிடுதலும் உண்டு. அளபெடைகள், மாத்திரைக்கு ஏற்ப அலகுபெறும்.

மற்றவை சிறுபான்மையன. அவற்றின் இலக்கணங்களையெல்லாம் தொல்காப்பியம், இலக்கணவிளக்கம், யாப்பருங்கலக்காரிகை, யாப்பருங்கலம் முதலிய பரந்தநூல்களிற் கண்டுகொள்க.

---

## அணியிலக்கணச் சுருக்கம்.

**அணியாவது** - செய்யுட்கு அழகுசெய்துநிற்பது; [அலங்காரம்]. அது **சொல்லணி, பொருளணி** என இருவகைப்படும்.

யமகம், திரிபு, பிராசம் முதலாகச் சொற்பற்றி நிகழ்வன சொல்லணிகளாம்; [சப்தாலங்காரம்.] (யமகம் எனினும், மடக்கு எனினும் ஒக்கும்)

**யமகமாவது** - பல அடிகளிலாயினும் ஓரடியில் பல இடங்களிலாயினும் வந்த எழுத்துத்தொடர்களே மீண்டும்வந்து பொருள்வேறுபடுவது.

திரிபாவது-ஒவ்வோரடியிலும் முதலெழுத்து வேறுபட்டிருக்க, இரண்டு முதலிய பல எழுத்துக்கள் ஒன்றிநின்று பொருள் வேறுபடுவது.

பிராசமாவது - வந்த எழுத்துக்களே மீண்டும் வருவது

பொருளணி - உவமையணி முதலாகப் பலவாறு பொருள்பற்றி நிகழ்வனவாம்; [அர்த்தாலங்காரம்.]

உவமையணி - இரண்டு பொருள்களுக்கு ஒப்புமைவிளங்கச்சொல்வது; [உபமாலங்காரம்.] உபமானம் உபமேயம் பொதுத்தன்மை உவமவுருபு என்னும் நான்கும் விரிந்துநிற்பது விரிவுவமை (உ - ம்.) 'அமுதம் போலுமின் சொல்' பொதுத்தன்மையும் உவமவுருபும் தொக்குவரின், தொகையுவமையாம் 'அமுதம்போலுஞ் சொல,' 'அமுத வின்சொல்.' 'அமுதச்சொல்' என்றற்போலக் காண்க.

உலகத்திலஇல்லாத பொருளை உவமைகூறின், இல்பொருளுவமையணியெனப்படும்; [அபூதோபமாலங்காரம்] (உ-ம்.) சிங்கத்தை யானைகள் வளைந்தாற்போல, இராமனை அரக்கர் சூழ்ந்தனர்.

எடுத்துக்காட்டுவமையணி - உபமானத்தையும் உபமேயத்தையும் தனிவாக்கியங்களாக நிறுத்தி இடையில் உவமவுருபுகொடாமற் கூறுவது; [திருஷ்டாந்தாலங்காரம்.] (உ - ம்.) "அகரமுதல வெழுத்தெல்லாம் ஆதி, பகவன் முதற்றே யுலகு"

இயைபின்மையணி - ஒருபொருளையே உபமானமும் உபமேயமுமாகச் சொல்வது; [அநந்வயாலங்காரம்] (உ-ம்.) "தானேயுவமை தனக்கு."

எதிர்நிலையணி - பிரசித்தமாகிய உபமானஉபமேயங்களை மாற்றிச் சொல்வது, [பிரதீபாலங்காரம்.] (உ-ம்) முகம்போல மதிதோன்றிற்று

உருவகவணி - உபமேயத்தினிடத்து உபமானத்தின் தன்மையை ஏற்றிக் கூறுவது; [ரூபகம்.] (உ-ம்) சேனையாகிய கடலை வீமனாகிய மந்தரம் கலக்கியது ஒருபகுதியை உருவகப்படுத்தி, மற்றொருபகுதியை உருவகப்படுத்தாதுவிடின், ஏகதேசஉருவகமாம்; (உ-ம்) இவன் பகைவாகுச்சிங்கம். இங்கு, இவனைச் சிங்கமென்று கூறிப்பகைவரையானையென்னுமை காண்க.

தற்குறிப்பேற்றவணி-இயற்கையாகவுள்ள ஒருபொருளினிடத்துக் கவி தனது கற்பனையையேற்றிக்கூறுவது; [உத்பிரேக்ஷாலங்காரம்.] (உ - ம்) சீதையின் முகத்தினழகுக்குத் தோற்றுச் சந்திரன் மறைந்தான்.

உயர்வுநவிற்சியணி - ஒருபொருளினிடத்து மிகுதியான தன்மையைக் கூறுவது; [அதிசயோக்தி.] (உ-ம்) 'இம்மாடம் சூரியனைத்தடுக்கின்றது' என்றாற்போலச் சம்பந்தமில்லாதிருக்கச்சம்பந்தங் கற்பித்துக்கூறின், தொடர்புயர்வுநவிற்சியணியும் [சம்பந்தாதிசயோக்தி]; 'இராமனம்பும் அரக்கர்திரளும் ஒருங்கு நாணகன்றேடின' என்றாற்போலக் காரணகாரியநிகழ்ச்சியை ஒருங்கேகூறினால், முறையிலுயர்வுநவிற்சியணியும் [அக்ரமாதிசயோக்தி]; 'அம்புபடுமுன் தலைதுணிந்தது' - என்றாற்போலக் காரியத்தைமுன்னும் காரணத்தைப்பின்னும் நிகழ்ந்தனவாகக் கூறினால் மிகையுயர்வுநவிற்சியணியும் [அத்யந்தாதிசயோக்தி] ஆம். (பின்னிரண்டும் விரைவு விளக்குவன.)

ஒப்புமைக்கூட்டவணி - பலபொருள்களைப் பொதுவாகிய ஒருதன்மையில் முடித்தல்; [துல்யயோகிதாலங்காரம்] (உ-ம்) சூரியனுதிக்கையில் அந்தணர் கைகளும் ஆம்பலும் குவிந்தன.

விளக்கணி - உபமான உபமேயங்களை ஒருதன்மையில் முடித்தல்; [தீபகாலங்காரம்,] (உ-ம்.) நிலவால் சந்திரனும், புகழால் அரசனும் விளங்கும்.

"கையாலுமொரு சாபம் [சாபம் - வில்] காலாலுமொரு சாபம்" [சாபம் - அகலிகையின் சபிப்பு] என்றுபோல, வந்த சொல்லே மீண்டும் வேறுபொருளில் வந்தால் சொற்பின்வருநிலையும் [சப்தாவ்ருத்திதீபகம்]; "பாண்டியனும் முதுகிட்டான் பாஞ்சாலர்புறமிட்டார்" என்றுபோலச் சொல்வேறுபட்டு வந்தபொருளே மீண்டுவந்தால் பொருட்பின்வருநிலையும் [அர்த்தாவ்ருத்திதீபகம்], "மகிழ்ந்தனர்தேவர் மகிழ்ந்தனர்மாந்தர்" என்றுபோல ஒருசொல் வந்த பொருளிலேயே மீண்டும் வந்தால் சொற்பொருட்பின்வருநிலையும் [உபயாவ்ருத்திதீபகம்] ஆம்.

காட்சியணி - உபமான உபமேயங்களுக்கு ஐக்கியத்தைச் சொல்லுதல்; [நிதர்சநாலங்காரம்] (உ-ம்.) "கற்றதை மறந்துமேலுங் கற்றல், கைப்பொருளை யிழந்து மேலுமீட்டுதல்," 'முகமசந்திரனழகைக்கொண்டது' என்றுபோல உபமான உபமேயங்களுள் ஒன்றில் மற்றொன்றின் தன்மையையேற்றிக்கூறுதலும், 'சூரியன்முன் இருள் அழிவது, வலியார்முன் எளியார் அழிவரென்பதைக் காட்டும்' என்றுபோலத் தன்செய்கையால் ஒருபொருளைத் தெரிவித்ததாகக் கூறுதலும் இவ்வணியே.

பிறிதுமொழிதலணி - உபமானமகூறியமாத்திரத்தால் உபமேயம்பெற வைத்தல்; [அப்ரஸ்துதப்ரசம்ஸாலங்காரம்] உ-ம்.) "எலிப்பகை நாகமுயிர்ப்பக்கெடும்," இவ்வுபமானத்தால், வீரனொருவன் எழுந்தமாத்திரத்தில் வீரரல்லாதார்பலர் அழிவாரென்ற உபமேயம் தோன்றுதல்காண்க.

ஐயவணி - ஒப்புமையினால் ஓர் உபமேயத்தைப் பலபொருளாகச்சந்தேகித்தல்; [சந்தேகாலங்காரம்] (உ-ம்.) "காவியோ கயலோவெனுங்கண்".

மயக்கவணி - ஒப்புமையினால் ஒருபொருளை மற்றொருபொருளாக அறிதல்; [ப்ராந்திமதலங்காரம்) (உ-ம்.) 'மகளிர்விழியை வண்டுபெடையென மருவும்.'

நினைப்பணி - ஒன்றைக்கண்டு ஒப்புமையினால் மற்றொரு பொருளை நினைத்தல், [ஸ்மருதிமதலங்காரம்] (உ-ம்) 'கமலமலர் கண்ட மனம் காதலி முகம் கருதிற்று.'

வேற்றுமையணி - உபமான உபமேயங்களுள் ஒன்றுக்கு விசேஷங்கூறுதல்; [வ்யதிரேகாலங்காரம்] (உ-ம்) "திங்களுஞ்சான்றோரும் ஒப்பர்; திங்கள் மறுத்தாங்கும், சான்றோர் அது தாங்கார்."

சிலேடையணி - ஒருதொடரில் பலபொருள்கள் விளங்க அமைத்துக்கூறுதல்; 'செங்கரங்களால் இரவுதீர்க்கும்' இது-சிவந்தகிரணங்களால் (சூரியன்) இருளையொழித்தலையும் அழகியகைகளால் (அரசன் தானஞ்செய்து) ஏழைமையை ஒழித்தலையும் குறிக்கும். செம்மை - ஒருநிறம், அழகு;

*காம் - கிரணம், கை - இரவு இராதகிரி, இரதத்தல இது - சொல் வெவ்வேறு வகையாகப் பிரியாததனால,* **செம்மொழிச்சிலேடை.** *'கணணும மொழியும் கரும்பிணையாம' என்பதில, கருமபிணை யெனபது - கரு பிணை எனப் பிரிநது கரியபெணமான விழியையும், கரும்பு இணை எனப்பிரிந்து கருப்பஞ்சாற்றோடு ஒததது என்பதையும குறிததலால,* **பிரிமொழிச்சிலேடை**

**பிறிதினவிற்சியணி** - *ஒன்றை இயலபாககூறாமல வேறுவகையாற்கூறுவது; [பாயாயோகதாலஙகாரம] (உ - ம) 'மகப்பெறறான' என்ற பொருளை 'புத என்னும நரகின் கொடுமையைககடநதான்' எனறாற்போலச சொல்வது*

**வஞ்சப்புகழ்ச்சியணி** - *பழியபினறிப் புகழ்ச்சியாவது, புகழ்ச்சியாற பழிப்பாவது தோனறக கூறுதல; [வயாஜஸ்துதி] (உ-ம) கஙகாநதியே! உனககு விவேகமேது? நீ மகாபாவிகளுககும சுறகதிதருகின்றாயன்றோ' எனறதில் பழிப்பாற புகழ்ச்சியும [நிநதாஸதுதி], 'பெறறகலவியைத துரோகஞ் செயயாமல் குருவுககே ஒபபிததிட்டான்' என்றதில புகழ்ச்சியாற பழிப்பும [ஸதுதிநிநதை] தோன்றுமாறு அறிக.*

**முரண்விளைந்தழிவணி**-*மேல்நோககில ஒன்றுக்கு ஒனறு மாறுபாடாகவும, உளநோககில் அமமாறுபாடிலலாமலும் அமையககூறுதல்: [விரோதாபாஸாலஙகாரம] (உ - ம) "செய்யாள் பலநலமும செயவள" என்பதில, 'செயயாள', 'செயவள்' என்பன-ஒன்றொடொனறு சொல்லால முரணபடுதலும செயயாள என்பது - இலககுமியெனப்பொருளபட்டு, அவள எல்லாநன்மையும் செயவளெனககருததால் முரணபடாமையும காணக.*

**நிரனிறையணி**-*வரிசையாகச்சொலலப்பட்ட பொருள்களுக்குச சமபநதமுளளவைகளையும அமமுறைப்படியே சொல்லுதல; [யதாஸஙக்யாலஙகாரம, கரமாலஙகாரம எனவுமபடும.] (உ - ம்.) 'பகைவர்ககும் நணபாககும் துனபமும இனபமும செயவான.'*

**ஒழித்துக்காட்டணி**-*ஒருபொருளை ஓரிடததில இலலையென ஒழிததுககாட்டுதல; [பரிஸஙகயாலஙகாரம] (உ-ம) அயோததியில் மகளிா சிலமபுகளே காலகளிறபடடு முறையிடுவன, எனறது, அவ்வூரில ஒருவா கால்களில் விழுநது தமகுறையைககூறி முறையிடவேணடியவா இலலையென்ற பொருளைத தருதல காணக.*

**தொடர்நிலைச் செய்யுட் பொருட்பேறணி** - *ஒருபொருளைக கூறியதனால் மறறொருபொருள எளிதிறசிததிககக கூறுவது; [காவயாாததாபததியலஙகாரம] (உ-ம. 'இராவணனை வென்றிட்ட வாலியை வதைததவனுககு இராவணன எவ்வளவு?'*

**வேற்றுப்பொருள்வைப்பணி** - *பொதுப்பொருளாற சிறபபுப்பொருளையும, சிறப்புப்பொருளாற பொதுப்பொருளையும சாதிததல்; [அாததாநதரநயாஸாலஙகாரம்] (உ - ம.) 'அனுமன கடல கடநதான, பெரியோாககு அரியது யாது?'*

**தன்மைநவிற்சியணி** - *ஒருபொருளின இயல்பைச சமதகாரந்தோனற உள்ளபடி கூறுதல; [ஸவபாவோகதி.] (உ - ம.) தோயும் வெணதயிா மததொலி துளளவும, ஆய வௌவளை வாயவிட்டாற்றவும, தேயு நுணணிடை சென்று வணஙகவும, ஆயமஙகையா அஙகை வருநதுவாா.'*

**வீறுகோளணி** - *செலவம முதலியவறறின் மிகுதியைக கூறுவது; [உதாததாலஙகாரம) (உ - ம.) 'குழைகொணடு கோழியெறியும வாழ்ககையூா' இது, செலவமிகுதி கூறியது.*

**கருத்துடையடைமொழியணி** - கருத்தோடுகூடிய விசேஷணத்தைச் சொல்லுதல்; [பரிகராலங்காரம்] (உ-ம்.) நான்கு கைகளையுடையதிருமால் நான்கு உறுதிப்பொருள்களையும் அருள்வன்.

**கருத்துடையடைகோளியணி** - கருத்தோடுகூடிய விசேஷ்யத்தைச் சொல்லுதல்; [பரிகராங்குராலங்காரம்] (உ-ம்.) 'இராமன் மகிமை நான்முகனாலுஞ் சொல்லற்கு அரிது'

**உடனிகழ்ச்சியணி** - கற்றோரைமகிழ்விக்கும் உடனிகழ்ச்சிசொல்லுதல்; [ஸஹோக்தி யலங்காரம்.] (உ-ம்.) 'அரசனே! நின்பகைவரினத்தோடு நின்புகழ் நெடுந்தூரம் ஓடிற்று' இதற்கு, ஒடு ஓடு உடனென்னும் மூன்றும் வேற்றுமையுருபு வரும்.

**பிரிநிலைநவிற்சியணி** - ஒருபெயர்க்கு இயல்பானபொருளொழிய மற்றொருபொருளைத் தருதலையுடையது: [நிருக்தியலங்காரம்](உ-ம்) 'வீரனே போரில் தோல்கள் தோல்களாயின;' இதில் 'தோல்' என்ற யானைப்பெயரைக் கற்பனைப்பொருள்படக் கூறியவாறு காண்க.

எள்ளும் அரிசியும்போலவேறுபாடு விளங்கும்படி பல அணிகள் ஒருசெய்யுளில் சேர்ந்துவருவது - **சேர்வையணி** [ஸம்ஸ்ருஷ்டியலங்காரம்] எனவும், பாலும் நீரும்போல வேறுபாடு விளங்காதபடி ஒன்றுக்கு மற்றது உறுப்பாகுமாறு பலஅணிகள் ஒருசெய்யுளிற் கலந்துவருவது - **கலவையணி** [ஸங்கராலங்காரம்] எனவும் படும். அவற்றை இடம்நோக்கி அறிக.

மற்றும் அணியிலக்கணப் பரப்பையெல்லாம் தொல்காப்பியம், தண்டியலங்காரம், இலக்கணவிளக்கம், வீரசோழியம், மாறனலங்காரம் முதலிய விரிந்தநூல்களில் கண்டுகொள்க.

## காப்பியவிலக்கணம்

தொடர்நிலைச்செய்யுளெனினும், காவியமெனினும் ஒக்கும்.

அது - சொல்தொடர்நிலை, பொருள்தொடர்நிலை என இருவகை

**சொல்தொடர்நிலையாவது** - அந்தாதிச்செய்யுள்களாலாகிய நூல்.

**பொருள்தொடர்நிலையாவது** - பெருங்காப்பியமென்றும், சிறுகாப்பியமென்றும் இரண்டுவகைப்படும்.

**பெருங்காப்பியமாவது** - வாழ்த்து, தெய்வவணக்கம், தலைமைப்பொருளுரைத்தல் எனகிற மூன்றுவகை மங்கலங்களுள் ஒன்றை முதலிற் பெற்று, அறம் பொருள் இன்பம் வீடு எனனும் - நாற்பொருளையும் தருந்தன்மையதாய், சிறந்த ஒருதலைவன்மேலதாய், நாடு நகரம் மலை கடல் காலம் சந்திர சூரியர் உதய அத்தமனம் விவாகம் முடிசூடுதல் பொழில்விளையாட்டு நீர்விளையாட்டு மதுபானம் மக்கட்பேறு கலவியிற்களித்தல் புலவியிற் புலத்தல் மந்திரம் தூது போர்ச்செலவு போரிடல் வெற்றி முதலிய பலவகை வருணனைகளையுடையதாய், சருக்கம் இலம்பகம் பரிச்சேதம் முதலான பாகுபாடு பொருந்தி, வீரம் முதலிய சுவைகளும் அவற்றை விளக்கும் கருத்துக்களும் விளங்க, காதுக்கு இனிய ஒருதிறப் பாட்டாலாயினும் பலதிறப் பாட்டாலாயினும் கட்டுரையாலாயினும் கற்றோராலியற்றப்பட்டு நிற்பதாம். இங்குக் கூறியவருணனைகளுள் சிலகுறைந்துவரினும் குற்றமில்லை; இங்ஙனம் கூறியதனால், இது ஒருகதையின்மேலதென்றதாயிற்று.

மேற்கூறியவாறுபலவருணனைகளைப் பெரும்பாலும் அறம்பொருள் இன்பம் வீடெனனும் நான்கினுள் ஒன்றும்பலவும்குறைந்தும் வருவன,—சிறுகாப்பியமென்றும், காப்பியமென்றும் கூறப்படும்; அவை-உலா, பரணி, ஆற்றுப்படை, பிள்ளைத்தமிழ், கோவை, கலம்பகம், அந்தாதி, மாலை முதலியன.




எழுத்து.
முதல் - ௩0.
சார்பு - ௩௬௯
உயிர் - ௧௨
மெய் - ௧௮.
குறில். ௫
நெடில். ௭
வலி. ௬
மெலி ௬
இடை. ௬
உயிர்மெய் ௨௧௬
முற்றாய்தம். ௮
உயிரளபெடை. ௨௧
ஒற்றளபெடை. ௪௨
குற்றியலிகரம். ௩௭
குற்றியலுகரம ௩௬
ஐகாரக் குறுக்கம். ௩
ஔகாரக் குறுக்கம். ௧
மகரக் குறுக்கம். ௩
ஆய்தக் குறுக்கம். ௨
நெடிற்றொடர் - ௭.
ஆய்தத்தொடர் - ௧.
உயிர்த்தொடர் - ௧௧.
வன்றொடர் - ௬.
மென்றொடர் - ௬.
இடைத்தொடர் - ௫.


பதம்.
பகாப்பதம்.
பகுபதம
பெயர்.
வினை.
இடை.
உரி.
பெயர்.
வினை.
பொருள்.
இடம்
காலம்.
சினை.
குணம்.
தொழில்.
தெரிநிலை
குறிப்பு.


சொல்.
பெயர்
வினை.
இடை.
உரி
இயற்சொல்.
திரிசொல.
இயற்சொல.
திரிசொல.
இயற்சொல்.
திரிசொல்.
இயற்சொல
திரிசொல்.



புணர்ச்சி.
எழுத்துப்புணர்ச்சி
இயல்பு. (புணர்ச்சி) விகாரம் ௩.
தோன்றல் திரிதல் கெடுதல்
செய்யுள் விகாரம்
கடைக்குறை.
இடைக்குறை.
முதற்குறை
தொகுத்தல்
விரித்தல்.
குறுக்கல்
நீட்டல்
மெலித்தல்
வலித்தல்.
பொருட்புணர்ச்சி
அல்வழி - ௧௪.
விரி - ௯.
தொகை-௫.
அடுக்குத்தொடர்
உயிர்சொல்தொடர்.
இடைச்சொற்றொடர்.
குறிப்புவினைமுற்றுத்தொடர்.
தெரிநிலைவினைமுற்றுத்தொடர்.
வினையெச்சத்தொடர் - ௨.
பெயரெச்சத்தொடர்-௨.
விளித்தொடர்.
எழுவாய்த்தொடர்.
அன்மொழித்தொகை-௫.
உம்மைத்தொகை-௪.
உவமைத்தொகை-௪.
இருபெயரொட்டுப்பண்புத்தொகை.
பண்புத்தொகை.
வினைத்தொகை.
வேற்றுமை - ௭
விரி-௭
தொகை-௭.
(உருபு வேற்றுமை முதல் ஏழாம் வேற்றுமை வரையில்.)


பெயர்ச்சொல்
இடுகுறி.
(காரணவிடுகுறி.)
காரணம்.
ஆக்கம்.
மரபு.
ஆக்கம்.
மரபு.
பொது
சிறப்பு.
பொது.
சிறப்பு.
பொது.
சிறப்பு
பொது
சிறப்பு.
வினைச்சொல்.
தெரிநிலை.
குறிப்பு.
தன்வினை
பிறவினை.
செயப்படுபொருள் குன்றியவினை.
செயப்படுபொருள் குன்றாவினை.
செய்வினை.
செயப்பாட்டுவினை.
வினைமுற்று.
பெயரெச்சம்.
வினையெச்சம்
தொழிற்பெயர்.
வினையாலணையும்பெயர்.